ஓம் குஹேசாயநம :

# பரிபூரணாநந்தபோதமும்,

## சிவசூரியப்பிரகாசமெனுமுரையும்.



ஸ்ரீமத் - குமரகுருதாச சுவாமிகள் ;

பாம்பன்.

உ

சிவமயம்.

ஓம் குஹப்ரஹ்மணே நம:

# பரிபூரணானந்தபோதமும்,

## சிவசூரியப்பிரகாசமெனுமுரையும்.

திருத்தேவையெனுந் திருவிராமேச்சுரத்தைச் சார்ந்த

பாம்பன்:

ஸ்ரீமத் - குமரகுருதாச சுவாமிகளால்

அருளிச்செய்யப்பட்ட

மூலமும், விசேடவுரையும்,

**First Edition—500 Copies.**

விருத்தாசலம் : தியாகராஜ கவிராயர் குமாரர்

வி. கலியாணசுந்தரம்பிள்ளை (B. A.) பி. ஏ. அவர்களால்

இயற்றப்பட்ட

பொழிப்புரையுமாக வுள.

இவை

சென்னை : மவுண்ட்ரோட் வைஜயந்தி அச்சுக்கூடத்தில்

அச்சிடப்பட்டன.



1914

இதன்விலை ரூபாய் 2.

உ

குமரகுருதாஸகுருப்யோநம ஃ

# முகவுரை.

(உரைச்சிறப்புப் பாயிரம்)



அகண்டாகார வியாபக சச்சிதானந்த தஹராகாசப் பொருளாயிராநின்ற ஸ்ரீமத் - சுப்பிரமணிய பரமான்மாவினது பெருங்கருணையிற் சிறுவயசு தொடங்கி அப் பரமான்மாவின்பேரிலேயே பாடு நியமங்கொண் டவ்வாறுபாடுந் தகைமை வாய்ந்து, கல்வி யறிவொழுக்கங்களிற் சிறந்து, அத்தியாச்சிரம வைதிகசைவ சித்தாந்த பானுவாய் விளங்கும் பாம்பன் : ஸ்ரீமத் - குமரகுருதாச சுவாமிகள் தாம் துறவறநிலைபுக்க வாண்டிற் கடுத்துறு மாண்டிற்றானே ஸ்ரீ சிதம்பர மஹா க்ஷேத்ர வெல்லைப்பாட்டிற் குயவன்பேட்டையிற் சில மாசங்களாக வாசஞ்செய்து வருஞான்று பதி பசு பாச யதார்த்தவிளக்கப்படலம், துறவறவிளக்கப்படலமெனும் இருகூற்றினையும்,— சற்சீடன் கடாவுக்குச் சற்குரு விடையிறுக்கத்தொடங்கல், வத்து நிச்சயம், பதி பசு பாசங்க ளுளவெனற்கு வேதாகமங்களின் சம்மதம், மூர்த்திபேத நிச்சயம், பஞ்சகிருத்திய நிச்சயம், பஞ்சபாச விவரம், கன்மத்திரய ஆசங்கை நிவர்த்தி, முத்தியினு மும்முதல்க ளுளவெனற்கு வேதாகமங்களின் சம்மதம் ; சார்பறுத்தல், வக்கிரநிருவிகற்பவசன கண்டனம், மெய்த்துறவில் மூலமல நிவிர்த்தியிலார் பெறும்பலம், சாத்திர படனஞான சரதம், சற்சீடன் வெளிப்பற்றகற்றி வினுதல், கபட ஞான கண்டனம், உட்டுறவின் மானவு, நிமலஞான நிட்டானுபவ நியதி, உபாய நிட்டை விவரம், சற்சீடன் சுவானுபூதி யடைதலெனும் கஅ - ப் பொருணிலைகளையும்,— பாயிரமுட்பட உ௱௰ - செந்தமிழ்ச் செய்யுள்களையு முடைத்தாய பரிபூரணானந்தபோத மெனும் பெயரிய சாத்திரத்தை உலோகோபகாரமா யியற்றியருளினர். அக்காலமெக்காலமோவென் றையுறுவண்ணம் நூலின் ஈற்றுச்செய்யுட் கண்ணேயே அது குறிக்கப்பட்டுளது. அஞ்ஞான்றுகாறும் ஒன்றரைவருடம் மௌனமாயிருந்த ஸ்ரீமத் - சுவாமிகள்—அச்சாத்திரத்

தின்பொருளை யறிவா னவாவிய மெய்யன்பர்கட் கப்பொருள் செவி யறிவுறுத்தற் பொருட்டன்றே தமது மௌனத்தை வரைந்து பரங் கரை நாவான் மொழிந்தருள்வாராயினர். அங்ஙனங் கேட்டாரனை வருங் கழிபேருவகை கூர்ந்தனர்.

சொற்சுவை பொருட்சுவை தொனிச்சுவை மேற்கோட்சுவை உவமானச்சுவைமுதலிய சுவையெலாந் துறுமியுள்ள அத்திறநூலின் மூலத்திற்குக் கல்வி யுணர் வொழுக்கங்களிற் சிறந்து (B. A.) பி. ஏ., பட்டம் பெற்றுச் சித்தாந்தசாத்திர வுணர்ச்சியும் பிறநூல் களினுராய்ச்சியு மிக்குள்ளவரும், (Accountant General's Office, Madras.) மதராஸ் - அக்கவுண்டெண்ட் ஜெனரல் ஆபீஸ் உத்தி யோகத்தி லமர்ந்திருந்து உபகாரவேதனம் பெற்றுச் சுகஜீவியா யிருப்பவரும், ஸ்ரீமத் - சுவாமிகள் உருடு - செந்தமிழ்ச் செய்யுள் களி லருளிச்செய்த ஜீவயாதனு வியாசத்திற்கு இனிய பொழிப் புரை யியற்றினவரும், விருத்தாசலம் : தியாகராஜ கவிராயர் குமா ரருமாகிய ஸ்ரீமான் - வி. கலியாணசுந்தரம்பிள்ளையவர்களாற் பதப் பொருளென்பதூஉம் விடுபடாதேய்ந்து நிற்குமாறு ஓரரிய பொழிப் புரை யியற்றப்பட்டது. [ ] இவ்வித அடையாளத்தினுட்பட்ட விசேடவுரை ஸ்ரீமத் - சுவாமிகளாலேயே அருளிச் செய்யப்பட்டது. சுருங்கச்சொல்லல், விளங்கவைத்தல், நவின்றோர்க்கினிமை, நன் மொழிபுணர்த்தல், ஓசையுடைமை, ஆழமுடைத்தாதல், முறையின் வைப்பு, உலகமலையாமை, விழுமியதுபயத்தல், விளங்குதாரணத் தாத லென்னும் அழகுகள் வாய்ந்த உயரிய செந்தமிழ் நடையி லுள்ள இவ்விருதிற வுரைகளின் பெயரே சிவசூரியப்பிரகாசம் என நூலிற்றிகழ்ந்துகொண்டிருக்கிறது. இப்பிரகாசத்தா னொழிக்கப் படாத அந்தகாரம் உள்ளுமின்று வெளியுமின்றெனல் விவேகிகட் குப் புலனுவதொன்றாகலின், இஃதுலகினர்க்குப் பெரிதும் பயன்படு மென்பதில் ஒ ரையமுமின்று. இந்நூலின் துறவற விளக்கப்பட லத்து உஎ - ன் உரையில்—

"வேதாந்தத் தீதில் பொருள்கொண் டுரைக்குநூல் சைவம்"

"வேதாந்தத் தெளிவாஞ் சைவசித் தாந்தம்"

"வீடு வைதிகசைவம் பகரும்"

என வெடுத்துக் காட்டப்பட்ட சித்தாந்த சாத்திரக் கிளவி களின்படி இவை வைதிகசைவசித்தாந்த சாத்திரங்களென அவை

யற்றைப்படித்தோர் கூறிக்கொள்வதே யன்றி, அந்த வைதிகநூன் மொழிகளையேனும் உரிய ஆகம மொழிகளையேனுஞ் செவ்வனே இன்றுகாறு மெடுத்துக்காட்டிப் பொருள்செய்திருக்கு நூலொன் றேனுங் கண்ணுற்றதின்றென்பது தெள்ளிது; தெள்ளிது.

பண்டையார் வழக்கிற் பிரமாணமாக நிலவும் இருக்கு, தைத் திரியம், சாமம், அதர்வம், சிக்ஷை, கற்பம், வியாகரணம், நிருத்தம், சந்தோபிசிதம், சோதிடம், புராணம், நியாயம், மீமாஞ்சை, மிருதி யெனும் வித்தை கச - ற் பிரதானமான சுருதிகளையே அதிகமுமுட் கொண்டு பிறங்காநின்ற மேலைச் சிவசூரியப்பிரகாசத்திற் பிரமா ணிக்கப்பட்டுள்ள பிரமாணங்களையே இனி, ஆய்ந்தாய்ந்தெடுத்து வேண்டுழி வேண்டுழிக் காட்டிக் கோடலும் என்போல்வார்க் கெளி தேயாம். இதனை யெறுழுறுத்திநுவலற்குச் சுவாமிக ளருளிச்செய்த பன்னூல்களுட் சின்னூல்களிலுள்ள உபநிடதப்பிரமாணங்களுள் ளும், உவமானம் உரை முதலியவற்றுள்ளுஞ் சிற்சில — தங்களா லாய்ந்தெடுத் தெழுதப்பட்டன போலவிருக்குமாறு தத்தம் இலி கிதங்களுணைழச் சிலர் வரைந்துள்ள வரிகளு முளவே.

எவ்வாற்றானும் பொன்னேபோற் போற்றத்தக்க இச்சாத் திரத்தை இஞ்ஞான்றச்சிட்டு வெளியிடுமாறு திருவருள்பாலித்த திருவருளை நல்லார் யாவரே மறந்திருப்பர்; மறவாரென்க.

இந்நூற்றமிழில் ஏற்புடைமை கருதி வடமொழி வழக்கிற் கியையவுந் தென்மொழி வழக்கிற்கியையவுஞ் சில வடசொற்கள் தெரிக்கப்பட்டுள.

இங்ஙனம் :

ஸ்ரீமத் - சுவாமிகளுடைய

22 - 7 - 1914. சீடர்களுளொருவன்

தி. உ.

குமாரகுருப்யோநம:

# நூலாசிரிய ரதுரைப்பாயிரம்.

---



பரிபூரணானந்தபோதமெனும் பெயரிய நூலின் மூலத்திற்கு உரையாயுள்ள சிவசூரியப்பிரகாசத்தே [ ] இவ்வித அடையாளங்களினுட்பட்ட விசேடவுரை நூலாசிரியராய எம்மாலேயே செய்யப்பட்டது. தன்னூலுக்குத் தகுமுரை செய்தோன் எனும் பொருளினே "தகுமுரைகாரன்" என வரூஉம் விதியைத் தழுவுதற்கும், நவில்வோர்க்கினிமை பயக்குமாறு மூலத்தை விதந்து கிளக்க வேண்டுழி வேண்டுழி அவ்வாறு கிளத்தற்குமே அவ்வுரை பிறரொருவராற் செய்யப்பட்டதுபோல நிகழ்த்தப்படுவதாயிற்று. தன்னைத்தானே பிறன்போற் கூறிக்கோட லென்னுமொரு நியாயமும்—

"அருநெறியமறைவல்லமுனியகன்பொய்கையலர்மேய
பெருநெறியபிரமாபுரமேவியபெம்மானிவன்றன்னை
ஒருநெறியமனம்வைத்துணர்ஞானசம்பந்தன்னுரைசெய்த
திருநெறியதமிழ்வல்லவர்தொல்வினைதீர்தலெளிதாமே."

எனவரு திருஞானசம்பந்தப்பெருமானது திருவாக்காகிய திருமறைநெறித்தன்றே. திவாகரர் முதலாயினாரும் இந்நியாயங் கொண்டுளாரே. மூலஞ் செய்தோனே யுரையுஞ்செய்தல் வடநூலார் வழக்காம். இதனை, "வடநூலார் தாமே பதிகமு முரையுஞ் செய்வார்" எனப் பிரயோகவிவேக நூலுடையார் கூறுதல் கொண்டு மறியலாம். (பதிகம்=பாயிரம்.)

(ஶிவாமாவிரோயெ௩ ஶாஸ்த்ரஂஸவ௰ஂவ்யவஸ்தி தம் !)

"சிவாகமாவிரோதேநசாஸ்த்ரம் ஸர்வம்வ்யவஸ்திதம் !"

என்னும் பௌஷ்கராகமப் பிரமாணபடல வசனம்— "சிவாகமத்திற்கு அவிரோதத் தன்மையினால் எல்லாச் சாத்திரமும் உறு

திப்படும்" எனுமொண்பொருளையும், நான்முற்படலத்து ககரு - ன் உரையிலும் பிற்படலத்து உள - ன் உரையிலு மெடுத்துக்காட்டப் பட்ட,

(வேதாந்தார்த்தமிதம்ஜ்ஞானம் ஸித்தாந்தம்பரமம்சுபம் ।)

"வேதாந்தார்த்தமிதம்ஜ்ஞானம் ஸித்தாந்தம்பரமம்சுபம் ।"

என்னும் மகுடாகம வசனம் — "இவ்வேதாந்தப் பொருளாய ஞானம் பரமசுபமாகிய சித்தாந்தம்" எனு நன்பொருளையும், (ஸித்தாந்தம் வேதஸாரத்வாத்) "ஸித்தாந்தம் வேதஸாரத்வாத்" என்னும் ஸுப்ரபேதாகம வசனம்— "சித்தாந்தம் வேதசாரமாயிருக்கின்றமையின்" எனு மின்பொருளையும் பயக்கின்றமையின் மூலமுமுறையுமாயுள்ள இந் நூலகத்தே சித்தாந்தானுபவ நிச்சயார்த்தமாக வெடுத்துக் காட்டப்பட்ட வேத முதலிய பிரமாணங்களனைத்தும் அச் சித்தாந்த நெறியுடையாரால் வைதிகசைவ சித்தாந்தானுபவப் பிரபலப் பிரமாணங்க ளிவைகளேயென வொருங்கு கொளக்கிடக்கின்றன. நூ லருளிச்செய்த காரண முதலியன நூற்பாயிரத்தும், அதனுரையகத்து முணருமா றுள.

இம் மெய்ந்நூலைப் பத்தியோடும் படித்துணர்வார்க்கு எம்மை ஆண்டருள் பரம்பொருளாங் குகப்பிரமம் எல்லாநலனு மீந்தருளுக.

**ஸுப்ரஹ்மண்யோம்.**

இங்ஙனம் :

குமரகுருதாசசுவாமிகள் ;

பாம்பன்.

இந்நூல்—சென்னை: திருவல்லிக்கேணி வீரராகவமுதலி தெரு 135 - வது வீட்டில் ம-ள-ள-ஸ்ரீ V. இராஜாபாதர் முதலியார், சென்னை: வைத்தியநாதமுதலி தெரு 44 - வது வீட்டில் ம-ள-ள-ஸ்ரீ C. ஆதிகேசவ முதலியார், இவர்களிடத்திற் கிடைக்கும். இந்நூலாசிரியராய ஸ்ரீமத் - சுவாமிகளா லருளிச்செய்யப்பட் டச்சிடலான வேறு நூல்களுங் கிடைக்கும். விவரம் பெரிய நோட்டீசுகளி லறியற்பாற்று.

# பரிபூரணானந்தபோத மூலத்திலு முரையிலும் போந்த விடயங்களும், அவை நிலைபெற்ற பக்கங்களும்.

---

சுத்தாத்துவிதம்; அத்துவிதம் ப - கஉடு - முதல் கஙு - வரையிலும்.

சும்மாவமர்தல், சின்முத்திரை } ப-கஉடு, கஉசு, கூ0, கசு0, கசுக, கசுகூ, கஅடு, கஅசு.

சமவாயம் ப - கஙக.

அந்யோந்யாபாவம் ப - கஙக.

ஆன்மா சதசத்திலக்கண முடைத்து ப - கஙடு.

சச்சிதானந்த லட்சணமானது துவிதம், ஏகம், அத்துவிதமெனு மூன்றற்கும் பொருந்துமாயினும் ஏகமென்பதனாலேற்படு தோடமும், துவிதமென்பதனாலேற்படு தோடமுந் துலக்கல் ப - கஙஎ, கஙஅ.

ஐக்கியமென்பதன் பொருள் ப-கஙகூ.

துவிதவாதம், ஏகவாதம், அத்துவித சித்தாந்தமெனு மூன்றும் அரிசி, குழைகூழ், பதமானசோறு என்பவற்றை யொக்குமென்பது ப - கசுக, கசுஉ.

வேதாகம மகாவாக்கியங்களும், பொருள்களும் ப-கசுஉ - முதல் கசுசு- வரையும்.

கருடோகம்பாவனை; சோகம்பாவனை } ப-கசுசு,கசுஎ, உடுஅ, உடுகூ.

அகங்காரமும் போதமுமொன்று ப - கசுஎ, கசுஅ, ஙங, எஅ, சுங, சுசு, கடுக, ககூங, உசுடு.

மனம் இனைத்தெனல் ப - கசுகூ, எஉ, கடு0, உடுஅ, உடுகூ.

திரிபுடி ப - கடு0, உசுசு, உசுடு.

சடந்தம் ப - கடுஉ, கடுசு.
சித்தாந்த மென்பதன் பொருள் ப - கடுசு.

வேதபூர்வபக்கம் ஆகமபூர்வபக்கம் } ப - கடுஉ.

அருளை யடியாகக்கூறல் ப - கடுசு, கடுடு, எ.

சிவசாமிய முத்தி இனைத்தெனல். — பரமுத்தர் படைப்புமுதலிய பஞ்சகிருத்தியங்கள் செய்யார்; தினசிருட்டியும், அவாந்தர சிருட்டியும், மகாசிருட்டியும், பிரதம மகாசிருட்டிபோல்வனவல்ல; பிரமா கீடநியாயம் } ப - கடுடு முதல் கசு0 - வரையிலும்.

(கூ) சார்பறுத்தல் ப - கசுக.

க. தக்ஷிணாயனமார்க்கமெனுந் தூமாதி மார்க்கம் (பித்ருயாணம்); பஞ்சாக்கினிவித்தை—
உ. உத்தராயண மார்க்கமெனும் அர்ச்சிராதிமார்க்கம் (தேவயாணம்)—
ங. க, உ, மார்க்கங்கட்கு வேறாய நரகவழி—
ச. க, உ, ங - மார்க்கங்கட்கும் வேறாய் ஒல்லையிலொல்லையி லிறந்து பிறத்தல்—
டு. மீளாக்கதியாகிய திருவருட்பிரகாச சிவஞான சாயுச்சியம்— } ப-கசுக- முதல் கஎஉ - வரையிலும்.

கந்தன் என்பதன்பொருள் ப - கஎங.

சாமுசித்திகம், வைநயிகம், பிராக்கிருதம் } ப - கஎசு, கஎடு.

துறவறம் மறுபிறப் பெனப்படும்; துறவியே துவிஜனென்பது ப - கஎசு, கஎஎ.

தாதுவிருத்தியினால் விருத்தியாம் பிரபோதமானது தாதுவிருத்தியைக் கெடுக்கும் பெண் நசையாற் குன்றுகின்றதென்பது ப - கஎஅ, கஎகூ.

விடய நுகர்ச்சியையும், அந் நுகர்ச்சி பொருந்தா வீடுபேற்றையும் விரும்பு மாந்தர் வக்கிரமான அற்பமதியினரை யொப்பாரென்பது முதலியன ப - கஎகூ.

ஆசாரியன், சாத்திரம் ஆகிய மார்க்கத்தி லுறுதியா யிருவெனல் ப - உ௮க, ௫௬, ௫எ, ௫௮, எ௪, எ௫, எ௬.

ஆத்மதீர்த்தம் மஹாதீர்த்தம் ப - உ௮க.

சிவவழிபாட்டினுஞ் சிவனடியவர்வழிபாடு சிறந்தது ப - உ௮உ, உ௮௩.

(க௮) சற்சீடன் சுவானுபூதி யடைதல் ப - உ௮௩.

நின்மல சாக்கிரம் முதலியன ப - உ௮௪.

ஞானிகளுஞ் சிவத்துதிமுதலிய செய்வர் ப - உ௮௫, க௫௮.

வாழ்த்து ப - உ௮௫ - முதல் உ௮௮ - வரையும்.

மூவகை மங்கலம் ப - உ௮௬.

தவசின் பெருமை (விரதம்) ப-உ௮௬, உ௮எ.

க-ம் யுகத்தில் எலும்பிலும்,
உ-ம் யுகத்தில் தசையிலும்,
௩-ம் யுகத்தில் உதிரத்திலும்,
௪-ம் யுகத்திற் சோறு முதலியவற்றிலும்உயிரிருக்கும்
} என்பது ப-உ௮எ.

"சற்சீடன் கடாவுக்குச் சற்குரு விடையிறுக்கத் தொடங்கல்" என்பதாதியாகவுள்ள க௮ - ப் பொருணிலைகளுட் பொருந்திய விடயங்கள் பலவற்றுள்ளுஞ் சில—இயைபுபற்றி வேறுவேறு பொருணிலைப்பக்கங்களோடும், நூற்பாயிரப் பக்கங்களோடுஞ் சேர்ந்திருக்கும்படி இதன்கட் குறிக்கப்பட் டுள்ளன.

அநந்தச்ருதிஸ்ம்ருதி புராணேதிஹாஸ முதலிய
பிரமாணங்களோடு விளங்காநின்ற
இவ்வரிய பெரிய வனுபூதிநூன் மூலத்திலு முரையிலு
மெடுத்துக் காட்டப்பட்ட

## மேற்கோட் பனுவல்களின் பெயரும், பிரயோகிக்கப்பட்டுள்ள பக்கங்களும்.

---

### நூற்றெட்டுபநிஷதக்கோவையைச்சேர்ந்த உபநிஷதங்கள்.

## வேத பாகங்கள்.



## ஆகமங்கள்.

## ஸ்ம்ருதிகள்.

க. கிரதுஸ்ம்ருதி— ப - உ0அ.
உ. பராசரஸ்ம்ருதி— ப - உஅஎ.
ங. மநுஸ்ம்ருதி— ப - கக, உ0அ, உ0கூ, உக0, உஎசு.

## புராணேதிஹாஸங்கள்.

க. கூர்மமஹாபுராணம்— ப - கரு, கருஉ, கருங.
உ. சைவமஹாபுராணம் —
கைலாஸஸம்ஹிதை ப - உங, உச, கசகூ, கசுஅ, உகக.
வித்யேச்வரஸம்ஹிதை ப - உஉஎ.
வாயு சங்கிதை ப - ங, உசு, ஙஎ, கருசு, உ0உ, உருங.
ங. ஸ்காந்தமஹாபுராணம்— ப - கூ.
சம்பவகாண்டம் ப - ங, ச, சு, அரு, ககசு, கஎங.
யுத்தகாண்டம் ப - ரு.
ஸூதஸம்ஹிதை ப - கருங.
ச. சூதசங்கிதை (தமிழ்மொழி பெயர்ப்பு) ப- எஅ, கஉஎ, கஅஉ, ககூஎ.
ரு. கந்தபுராணம் ப - கசு, கஎங.
சு. கந்தபுராணச்சுருக்கம் ப - உச0.
எ. காசிகாண்டம் (தமிழ்மொழி பெயர்ப்பு)— ப - உகங, உகசு.
அ. ஸநத்குமாரஸம்ஹிதை ப-கருங.
கூ. பிரஹ்மபுராணம்— ப - உ0அ.
க0. சிவரகசியம் (மஹேதிகாஸம்)— ப - கஅஉ.
கக. ரிபுகீதை உஅ - ம் அத்தியாயம் (சிவரகசியத்து சு - ம் அமிசத்தது)— ப - கசகூ.
கஉ. மஹாபாரதம்— ப - உக0.
கங. பாரதம் (தமிழ்)— ப - உசசு.
கச. வான்மீகராமாயண உத்தரகாண்டம்— ப - சு.
கரு. அனுமப் படலம் (ஒட்டக்கூத்தர்)— ப - உ0ரு, உசுஎ.
கசு. திருப்பரங்கிரிபுராணம்— ப - உஎரு.
கஎ. திருவாதவூரர்புராணம்— ப - கஅங, கஅச, ககூசு, உஅக.
கஅ. பெரியபுராணம்— ப - உ0ச.

## தமிழ்மறைகள்.

க. திருஞானசம்பந்தசுவாமிகள் ப - உ0, உக, உகூ, ஙகூ, ருஉ, அரு, க0சு, கசக, கசுஅ, கஅரு, உ00, உ0எ, உஉசு, உசு0, உஎசு.
உ. திருநாவுக்கரசு சுவாமிகள்—ப- உகூ, ருஅ, சுஅ, க0க, க0ச, க0சு, கங0, கஙக, கஎகூ, கஅ0, உ0ங, உருங, உசு0, உஎங, உஎஅ.
ங. சுந்தரமூர்த்தி சுவாமிகள்— ப - ஙசு, அஉ, கசுஅ, உஎ0, உஎசு.
ச. மாணிக்கவாசக சுவாமிகள்—ப - கங, கரு, கஅ, ககூ, ங0, ஙசு, ஙஎ, ருச, சுசு, சுகூ, அஉ, அரு, கஉரு, கஙஅ, கரு0, கருஅ, கசுசு, கஎஉ, உ00, உகசு, உசுக, உசுரு, உஎஅ, உஅஉ, உஅசு.

## பதினுன்கு, சித்தாந்தசாத்திரக் கோவையைச்சேர்ந்த நூல்கள்.

க. சிவஞானபோதம் - (மெய்கண்டதேவநாயனுர்) ப - கக, ருஅ, சுக, சுச, சுசு, எரு, அஅ, கூச, க0உ, ககஉ, கஉசு, கங0, கசஎ, கசகூ, கருரு, ககூரு, உ0ச, உருஅ, உசுரு, உசுஎ.
உ. சிவஞானசித்தியார்— ப - ங0, ஙரு, சுசு, அகூ, கஙச, கருச, கருசு, ககூஉ, உ0க, உ0உ, உகச, உஉசு, உஎக.

நிகண்டுகள்.



## ஆட் பனுவல் - கஎக.

கO, உரு, ருச, சுO - ஆம் எண்களிலுள்ள நான்குமே ச - மகாவாக்கிய உபநிடதங்கள்.

மைத்ராயண்யுபநிஷத். இது, வங்காளதேசத்துப் பிரதி. இதன்பெயர் “ மைத்ர்யுபநிஷத் ” எனவும் வழங்கப்படுகிறது.

ஈண்டுக் காட்டப்பட்ட பக்கங்களுட் சிலவற்றிற் பிரமாணிக்கப்பட்ட யாதொரு பனுவலின் யாதொரு பிரமாணத்திற்கு வேறுயுள்ள அப்பனுவற் பிரமாணம் பலவும் அச் சிலபக்கங்களிலும், யாதோ ரியையுபற்றி யாதொரு பக்கத்தே காட்டப்பட்ட பிரமாண வாக்கியந்தானே பிறிதியையுபற்றி வேறு சில பக்கங்களிலுங் காட்டப்பட் டுள.

வட நூல்களின் பெயர்முதற்கண்ணுள்ள மெய்யெழுத்துக்கள் தமிழ் வழக்கிற்கியைய உயிர்மெய்யெழுத்துக்களாக வரையப்பட்டன.

பரிபூரணானந்தபோதச்

# செய்யுண் முதற்குறிப்பகராதி.

செய்யுண் முதற்குறிப்பகராதி முற்றிற்று.

---

இந்நூ லச்சிடுமாறு முன்பணமாக
சூ - ரூபாய்க்குக் குறையாதளித்த
## சிவநேயச்செல்வர்கள் பெயர் விவரம்:—

| ம - ா - ா - ஸ்ரீ | ரூ. | அ. |
|---|---|---|
| (1) திவான்பகதூர் - சா. ராம. மு. இராமசாமிச் செட்டியாரவர்கள்; சிதம்பரம். | 6 | 0 |
| (2) N. சுப்பிரமணியபிள்ளை; பெர்ஹாம்பூர் கவர்ண்மெண்ட் டெல்லகிராப் மாஸ்ட்டர். | 6 | 0 |
| (3) C. S. சதாசிவம்பிள்ளை; சண்முகசுந்தர விலாசம் பிரஸ் புரோப்ரைட்டர், மிராசுதார், சிதம்பரம். | 6 | 0 |
| (4) பி. வ. இரத்தினசாமிப்பிள்ளை; சிதம்பரந்தாலூகா பின்னத்தூர் - ஸ்ரீ மாணிக்கவாசகேச்வரமென்னுஞ் சிவாலய நிரூபண பரிபாலன தர்மகர்த்தா, மிராசுதார். | 6 | 0 |
| (5) ரா. ஜகந்நாதபிள்ளை; மிராசுதார், பின்னத்தூர். | 6 | 0 |
| (6) பொ. சிவராமபிள்ளை; மிராசுதார், பின்னத்தூர். | 6 | 0 |
| (7) தி. உடையநாயகம்பிள்ளை; கண்டிராக்ட்டர், மிராசுதார், பிரப்பன்வலசை (இராமநாதபுரம் ஜில்லா). | 15 | 0 |
| (8) ஸ்ரீ பாலஸுப்ரஹ்மண்ய பக்தஜந சபையார்; இராயப்பேட்டை (சென்னை). | 12 | 0 |
| (9) V. கலியாணசுந்தரம்பிள்ளை (B. A.) பி. ஏ; சென்னை. | 12 | 0 |
| (10) செ. கோவிந்தராஜமுதலியார்; கவர்ண்மெண்ட் டெல்லகிராப் ஆபீஸ் கிளர்க், சென்னை (வைத்தியநாத முதலித் தெரு). | 6 | 0 |
| (11) கா. ஆதிகேசவ முதலியார்; உத்தியோகம், (சென்னை வைத்தியநாதமுதலித் தெரு). | 6 | 0 |
| (12) P. அரங்கநாத முதலியார்; (Messrs Gordon Woodroffe & Co. Madras.) சென்னைக் கொண்டலையர் தெரு. | 6 | 0 |
| (13) குஹப்ரஹ்மதாஸர்; சுகஜீவனம், சென்னை. | 6 | 0 |
| (14) சண்முகப்பிரமமெனும் பெயரிய க. இராஜமுத்துப்பிள்ளை; உத்தியோகம், திருவல்லிக்கேணி (சென்னை). | 6 | 0 |
| (15) குமாரமூர்த்தியெனும் பெயரிய நல். கண்ணப்ப முதலியார்; உத்தியோகம், திருவல்லிக்கேணி (சென்னை). | 6 | 0 |
| (16) குமாரச்சிவமெனும்பெயரிய தா. வேங்கடாசல முதலியார்; உத்தியோகம், திருவல்லிக்கேணி (சென்னை). | 6 | 0 |

| | | | |
|---|---|---|---|
| (17) | குமாரபரமேச்வரனெனும் பெயரிய வெ. இராஜாபாதர் முதலியார்; உத்தியோகம், திருவல்லிக்கேணி (சென்னை). | 6 | 0 |
| (18) | சுப்பிரமணியதாசரெனும் பெயரிய பு. சின்னச்சுவாமி முதலியார்; பிரபல சோதிடர், திருவல்லிக்கேணி (சென்னை). | 6 | 0 |
| (19) | ஆ. ஞானசாகர முதலியார்; உத்தியோகம், புதுப்பாக்கம் (சென்னை). | 7 | 8 |
| (20) | மு. அப்பாவு பிள்ளையாகிய பால்வண்ணம் பிள்ளை; Drawing Master, பெரியகுளம் (மதுரை ஜில்லா). | 6 | 0 |
| (21) | தே. பொன்னுச்சாமி நாடாள்வார்; டின்ஷாப், பெரியகுளம் (மதுரை ஜில்லா). | 6 | 0 |
| (22) | வேலாயி அம்மாள்; பெரியகுளந் தென்கரைக்கணக்கு மிராசு, பெரியகுளம் (மதுரை ஜில்லா). | 6 | 0 |
| 23) | S. சரவணப்பெருமாள்பிள்ளை; Retired Revenue Inspector, சிக்க நரசையன்கிராமம் (திருநெல்வேலிப் பாலம்). | 10 | 8 |
| (24) | S. ஐயாச்சுவாமிப்பிள்ளை; சிவகிரி கர்ணம், சிவகிரி (திருநெல்வேலி ஜில்லா). | 6 | 0 |
| (25) | T. J. சாமிநாதபிள்ளை; Tax Collector, Ballappa's Garden B. Street, Chicka Bazaar Street cross Cantonment, Bangalore. | 6 | 0 |
| (26) | C. S. ஏகாம்பரமுதலியார்; Director Saiva Siddhanta Maha Samajam, (Agent S. & T. Corps 9th (Sec'bad) Dn.) | 6 | 0 |
| (27) | ஏ. ஆண்டாளம்மாள் எனப்பெயரிய மங்கையர்க்கரசியார்; சைவசித்தாந்த மஹாசமாஜத்தின் வனிதை வகுப்புக் காரியதரிசி. | 6 | 0 |
| (28) | வே. வீ. ஆறுமுகபக்தர்; மிராசுதார், குயவன்பேட்டை வரகூர். | 6 | 0 |
| (29) | தெ. வி. வெற்றிவேல் நாயனார்; மிராசுதார், குயவன்பேட்டை. | 6 | 0 |
| (30) | கெ. மு. பூலோகநாயனார்; தெய்வப்புலமை - ஒப்பிலாமணிப்புலவர் வமிச சோதிடர், நெல்லிக்குப்பம். | 6 | 0 |

---

சிவமயம்.

குஹப்ரஹ்மணே நமஃ

திருச்சிற்றம்பலம்.

# பரிபூரணானந்தபோதமும், சிவசூரியப்பிரகாசமெனுமுரையும்.

## பாயிரம்.

### ஓங்காரதேவ வணக்கம்.

நேரிசைவெண்பா.

*சீரேறு நான்மறையுஞ் செப்பரிய தந்திரமும்*
*ஏரேறு நூல்பலவு மேசறவே—நாரோ*
*டுணர்ந்தா ருளத்திலில கோங்கார தேவின்*
*தணந்தா ளிணை நினைவாஞ் சார்ந்து.*

உரை.

*சிறப்புற்றோங்கியுள்ள நான்கு வேதங்களையும், எடுத்துக்கூறற்கரிய (பதி பசு பாசமெனுந் திரிபதார்த்த வுண்மைக ளினிதமைந்த) ஆகமங்களையும், ஞான சூக்குமங்களை யெடுத்துக் கூறும் பொலிவினையுடைய பலநூல்களையும், ஐயந் திரிபறியாமைக ணீங்கி அவ்வாறு உணர்ந்தோருடைய வுள்ளத்தின்கண் கம்பீரத்துடன் வீற்றிருக்கும் ஓங்கார வுருவத்தினராகிய விநாயகக்கடவுளின் ஆனந்தானுபவக் குளிர்ச்சியுடன் கூடிய இரண்டு சரணங்களின் நீழலிற் பிறவிக்கோடையின் வெப்பந் தீரும்படி சார்ந்து எடுத்துக்கொண்ட விந்நூல் இடையூறின்றி யினிது முடியுமாறு அச்சரணங்களைத் தியானிப்பாம்.*

*[இது, வேத மூலமான ஓங்கார தெய்வத்திற்கு வணக்கங் கூறியவாறும். விநாயகக்கடவுளும் ஓங்கார வுருவத்தின ரென்பதை, " த்வம்மூலாதாரே ஸ்திதோஸிநித்யம்।" என்றும், " த்வம் ப்ரஹ்ம*

பூர்புவஸ்ஸுவரூப ஓம் |" என்றும், "ககார: பூர்வரூபம் | அகாரோ மத்யமரூபம் | அநுஸ்வாரச்சாந்த்யரூபம் | பிந்துருத்தரரூபம் | நாதஸ் ஸந்தாநம் ||" என்றும் அதர்வணவேத கணபத்யுபநிஷத் கூறிச் சேறலி னறிக.

நூல் - ஆகுபெயர். யாமென்னும் எழுவாய் எஞ்சிநின்றது.] (க)

## ஆனந்தவத்து வணக்கம்.

### கலிவிருத்தம்.

சத்தெ னச்சொலுந் தாவில் சிவத்திலுஞ்
சித்தெ னச்சொலுந் தேவி யிடத்திலும்
புத்தி ரப்பெயர் பூண்டில கானந்த
வத்து வின்கழல் வாழ்த்தி வணங்குவாம்.

எஞ்ஞான்று மொரே பெற்றித்தா யிருக்குந் தன்மை நோக்கிப் பிரபலச் சுருதிகளாற் சத்து என்றோதப்படுஞ் சிவபரம்பொருளினிடத்தும், அகண்ட ஞானமே தன் சொரூபமாக வுடையளாதலிற் சித்து என்று அத்திறச்சுருதிகளா னெடுத்துக் கூறப்படுந் தேவியினிடத்தும் புத்திரப் பெயர்கொண்டு பிரகாசிக்குந் தன்மையினதாகிய ஆனந்த வத்துவின் வீரக்கழலார்ந்த சீபாதங்களைத் துதித்து வணங்குவாம்.

[இது, ஸ்ரீ சுப்பிரமணிய மூர்த்திக்கு வணக்கங் கூறியவாறும். சிவம் சத்தென்றோதப்படுதலை, "ஸதேவஸோம்யே தமக்ர ஆஸீ தேகமேவாத்விதீயம்" என்னும் ஸாமவேத சாந்தோக்யோபநிஷத்தின் சு - ம் பிரபாடகத்து உ - ங் கண்டத்து வசனத்தி னறிக. பொருள் :—"சோமியனே! இதற்குமுன் (=பிரபஞ்சசிருட்டிக்கு முன்னே) அத்விதீயமாயுள்ளபொரு ளொன்றே யிருந்தது: அது (ஸத்) சத்தே" எனவாம். இந்தச் சத்து—சிவபரம்பொருளே யென்பதை (஋ூ ஋ெஷாவெ௫ ஋ஃ ஜூ ஊ நஹோ நஜொ நஃ |) "புருஷோவைருத்ரஸ்ஸந்மஹோநமோநம: |" எனுந் தைத்திரீயாருணசாகை நாராயணவசனம் வலியுறுத்துதலு மறிக. தமிழ் :—"புருடனுவான் மகானுகிய சத்தெனப்படும் உருத்திரனே; நமற்காரம்! நமற்காரம்!!" எனவாம்.

சிவசத்தியாகிய தேவி சித்தென் றோதப்படுதலை, "ப்ரஜ்ஞாநம்ப்ரஹ்ம" என்னும் ருக்வேத ஐதரேயோபநிஷத் வசனத்தினறிக.

பொருள் :—"பெரியஞானமே சொரூபமாக வுள்ளது பிரமம்" எனவாம். பிரமம்=பெரியபொருளாயுள்ள சிவம். இங்கே ஞான மெனப்பட்டதே அந்தச் (சித்) சித்து. இதனை, "ப்ரேக்ஷோபலப் திச் சித்ஸம்வித்ப்ரதிபத் ஜ்ஞப்திசேதநா।" என்று நிகண்டு - அமரஸிம்ஹங் கூறுதல்கொண்டு மறிக. ஞானம் சிவசத்தி யென் பதை "மந்த்ராணும் மாத்ருகாதேவீ சப்தாநாம் ஜ்ஞாநரூபிணீ। ஜ்ஞாநாநாம் சிந்மயாதீதா" என்னும் அதர்வணவேத தேவ்யுபநிஷத் வசனத்தினறிக. கூறிப்போந்த சிவமுஞ் சிவசத்தியும் அக்கினியுஞ் சூடும்போலக் குணகுணித் தன்மையினை யுடையரென்பதும் "அப ரேது பராசக்திச் சிவஸ்ய ஸமவாயிநீ। தாதாத்ம்ய மநயோர்ந்நித் யம் வஹ்நிதாஹகயோரிவ। அதஸ்தத்தர்ம்ம தர்ம்மித்வாத் பரா சக்திஃ பராத்மநஃ॥" என்னும் வேதோபப்பிருங்கண சைவமஹா புராணத்து வாயுசங்கிதை வசனங்களி னறியப்படுகின்றமையின், அதன்பொருள் :—"பராசத்தி சிவனுக்குச் சமவாய சம்பந்தத்தோ டுற்றவள் : அக்கினியுஞ் சூடும்போலப் பராசத்தியும் பரமான்மாவுங் குணகுணித் தன்மையினையுடையர்" எனவாதலின் ஸ்ரீ சுப்பிர மணியமூர்த்தியைச் சிவகுமாரனென்பதூஉம், சிவசத்திகுமாரனென் பதூஉம் ஏற்புடையன வென்க. ஆதலினன்றே "ஸ்கந்தமாதரம், ஸரஸ்வதீமதிதிந் தக்ஷதுஹிதரம் நமாமஃ பாவநாக்சிவாம்।" என்று போந்த தேவ்யுபநிஷத்தும், "பிராமணர்கட்கு அல்லது வேதங்கட்கு யாம் முக்கியதெய்வமாகலின் யாம் பிரமணியமாவோம் : பிரிய நாயகீ! நங் குமாரன் அங்ஙனம் விசேடணுகலிற் சுராசுரர்களால் வந்திக்கத்தக்க சுப்பிரமணிய னெனப்படுகின்றனன்" என்று பர மன் பார்வதியம்மைக்குப் பகர்ந்த விவரமாக வேதோபப்பிருங்கண ஸ்காந்தமஹாபுராண சம்பவகாண்டத்து ௩௫ - ம் அத்தியாயத்து ௨0 - ஞ் சுலோகமுங் கூறுவனவாயின.

சுப்பிரமணியம் ஆனந்தமென் றோதப்படுதலை, "ஆநந்தம் ப்ரஹ்ம" எனும் யஜுர்வேத தைத்திரீயோபநிஷத் ஆநந்தவல்லி வசனத்தானும், "கந்தசுவாமி மகாதேவரது தோண்மிசை யேறி யிருந்தனர் ; அஞ்ஞான்று மகாதேவர் அளவற்ற ஆனந்தசொரூபி யாயினுந் தம்முடைய உத்தமபுத்திரனும் ஆனந்தசாகரத்தினது திரு மேனி பரிசித்தலாய அளப்பறு மமிர்த ஜலத்திடை யமிழ்வாராயி னர்" எனும் பொருளைத் தரத்தக்க மேலைச் சம்பவகாண்டத்து ௩௪ - ம் அத்தியாயத்து ௪, ௫ - ஞ் சுலோகங்களானு மறிக.

சச்சிதானந்த மெனப்படுமாற்றுனே பரம்பொருளின் இலக்கணம்—சத்து, சித்து, ஆனந்தமென முத்திறப்படுதலின் அந்தச் சத்தையும் சித்தையும் எஞ்ஞான்றும் நீங்காது நிலவுகின்ற ஆனந்த விலக்கண வத்துவுக்கு வணக்கங் கூறினரென்பதை யீண்டறிந்து கோடற்கு—"தேவாதிதேவஸர்வஜ்ஞ ஸச்சிதாநந்தலக்ஷண। உமாரமணபூதேச ப்ரஸீதகருணாநிதே॥" என்னும் யஜுர்வேத சுகரஹஸ்யோபநிஷத் வசனமும், "சச்சிதானந்தரூபியாய், சதசற் பிரபஞ்சத்திற்கு அன்னியமாய், வியாபியாயுள்ள சிவன் பிரம சத்தத்திறைற் பகரப்படுகின்றனன்" என்னும் பொருள் பயக்கத் தக்க "ஸச்சிதாநந்தரூபீயஸ் ஸதஸத்வ்யக்திவர்ஜித:। ஸசிவஸ்ஸர்வகஸ்ஸத்பிர்ப்ரஹ்மசப்தேந சப்திக:॥" என்னும் அஜிதாகமச் சுலோகமும், "அநந்தாநந்த சச்சித் பரப்ரஹ்மமானது இவ்வாறு அதியலங்காரமான ஒரு குழவித்தன்மை (=குமாரப்பான்மை) வகித்து ஸ்ரீ பார்வதி பரமேசுவரர்களின் பக்கலினின்று திருவிளையாடல்கள் பலபுரிந் தலங்கரித்து வந்தது" எனுமருத்தந் தரத்தக்க மேலைச்சம்பவகாண்டத்து உகூ-ம்அத்தியாயத்து கூ-ஞ்சுலோகமும், "ஓங்காரத்தின் பொருள் சதாசிவன்" "ஓங்காரத்தின் பொருள் சுப்பிரமணியன்" எனுமருத்தத்தில் "ஸதாசிவோம்" என்று கூறிக்கொண்டு "ஸுப்ரஹ்மண்யோம் ஸுப்ரஹ்மண்யோம் ஸுப்ரஹ்மண்யோம்" என்று மும்முறைமொழியுஞ் சாமவேதசுரமும், இச்சுருதிக்கு உபப்பிருங்கணமாக "வேதத்தில் ஸுப்ரஹ்மண்யோம் என்றுள்ளபடி நீயும் ஸதாசிவோம் என்றுள்ளபடி யாமுமே அந்தப் பிரணவப்பொருளாகின்றேமென அறிபவர்களெவர்களோ அவர்கள் எமக்குச் சமானமாவார்கள்" என்று குமாரமூர்த்தி முன்னிலையிற் பரமசிவன் பகர்ந்தனனென்பதை வெளியிடும் மேலைய சம்பவகாண்டத்து கூச-ம் அத்தியாயத்து உகூ, கூ0-ஞ் சுலோகங்களும், "மகேசுரனுமவர், உமையுமவர், விநாயகனுமவர், கந்தனுமவர்" என்னு மருத்தத்தில் "யச்சமஹேச்வர:। யாசோமா। யச்சவிநாயக:। யச்சஸ்கந்த:॥" எனும் அதர்வசிரோபநிஷத் வசனங்களும், பிறவும் பிரமாணங்களாகும். சிவபிரான் தனக்கும் உமாதேவிக்கும் இடையிலே குமாரமூர்த்தியும் விளங்குமாறிருக்குந் திருக்கோலமே 'ஸோமாஸ்கந்தமூர்த்தம்' ஆம். அதுவுஞ் சச்சிதானந்த விலக்கணத்தை விளக்கும். அது—"விஞ்சதிர்விக்நப்ரஸாத: ஸோமாஸ்கந்த ததபரம்।" என்னும் வாதுளோத்தரசுத்தாக்ய வசனத்தினுல் மகேசுரமூர்த்தம் உரு - ல் உக - வதாக அறியப்படுமென்க. நீளம், அகலம், கனமெனு

மூன்றிலக்கணத்தோடுள்ள யாதொரு பொருளானது அந்நீளம் முதலிய சொன்மாத்திரையாய்ப் பிரிக்கப்படுமேயன்றிப் பொருண் மாத்திரையாய்ப் பிரிக்கப்படுவதன்றென்பதை யறிகுநர்—சத்து, சித்து, ஆனந்தமெனும் இலக்கணத்தோடுள்ள பரம்பொருளுஞ் சொன்மாத்திரையாய் உருவமாத்திரையாய்ப் பிரிக்கப்படுமேயன்றி உண்மையிற் பொருண்மாத்திரையாய்ப் பிரிக்கப்படுவதன் றென்பதையு மறிவர். இணையற்ற இவ்வுவமான வுவமேயங்களை இந்நூலாசிரியர் தமது திருவலங்கற்றிரட்டின் பல்சந்தப் பரிமளமாகிய உ - ங் கண்டத்தில் "எதிலே நீளமோ" என்றற் றொடக்கத்துச் செய்யுட்கண் விளக்கிய வோரருமைப்பாடும் அத்தெள்ளியோர்க்கே புலப்படுமென்க.] (உ)

குகப்பிரம வணக்கம்.

ஒன்றி ரண்டென வோதற் கிடங்கொடுத்
தொன்றி ரண்டென வோதவெண் ணாததாய்
நின்ற சஞ்சல நின்மல மாய்மிளிர்
பொன்றி டாக்குகப் பிரமத்தைப் போற்றுவாம்.

அபேதவாதி யொன்றென்றும், பேதவாதி யிரண்டென்றுங் கூற இடங்கொடுத்தும், ஒன்றே யென்றும் இரண்டே யென்று முரைப்பதற் கியையாத சுத்தாத்வைத நிலையினதாய் நின்றும், அசைவற்றதாய் இயல்பாகவே பாசங்களினின்று நீங்கியதாய்ப் பிரகாசிக்கும் அழியாத் தன்மையுள்ள குகப்பிரமத்தைத் துதிப்பாம்.

[மேலே கூறியவாறு சுப்பிரமணியத்துக்கு மூர்த்தநிலை வணக்கங்கூறிய ஆசிரியர் அமூர்த்தநிலை வணக்கமுங் கூறினரென்பதை இது காட்டுகின்றது. என்னை? இங்கே குகப்பிரம மெனப்பட்டது ஆன்மாக்களின் இருதய குகைதோறும் உயிர்க் குயிராயிருக்கும் அந்தரியாமியாகலின். இதனை, "ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரம்ஹ யோவேதநிஹிதம் குஹாயாம் பரமேவ்யோமந்।" எனுந் தைத்திரீயோபநிஷத் ஆநந்தவல்லி வசனத்தானும், சுப்பிரமணியத்தைக் குறித்துச் "சச்சிதாநந்த பரமாத்மாவாகிய குஹன்" எனு மருத்தத்தில் வெளிப்படும் ஸ்காந்தமஹாபுராண யுத்தகாண்டத்து ௩௩-ம் அத்தியாய வசனத்தானும், "வேத வேதாந்தங்களில் தஹராகாசமானது குஹையென்று கூறப்படு மன்றோ: சகலப்பிராணிகளின் இருதய கமலங்களாகிய அந்தக் குஹைகளில் வசித்திருப்போன் நின்மலனாகலின் அவன் குஹனெனப்படுகின்றனன்" என்று உமா

காந்தன் உமாதேவியை நோக்கி நுவன்றனனென்னு மருத்தத்தினுள்ள மேலயபுராண சம்பவகாண்டத்து ௩௫-ம் அத்தியாய வசனத்தானுமுணர்க. போந்த ஆநந்தவல்லி வசனமானது "பிரமம் எஞ்ஞான்று மொருபடித்தாயுள்ளது; அறிவாகவுள்ளது; முடிவில்லாதது; இருதய குகையின் பரமாகாசத்திலுள்ள அதனை யெவனறிகின்றனனோ" எனு மருத்தத்தைப் பயக்கும். 'அநந்தம்' என்றதற்குப் பரிச்சேதமில்லாததெனும் பொருளே சங்கரபாஷ்யத்தும் வரையப்பட்டது. பரிச்சேதம் = முடிவு.] (௩)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

காமம் வெகுளி மயக்கமெனக்
கழறு முக்குற் றங்கடிந்து
சாம மறையின் சிரப்பொருளைச்
சங்கை யறவே யுய்த்துணர்ந்த
சேம வறிஞர் பெறும்பேருய்ச்
சிறியேற் கருளுந் தைவதமாய்
ஓமெய்ப் பொருளாங் குகப்பிரமந்
தன்னை யுள்ளத் துள்வைப்பாம்.

காமம் வெகுளி மயக்கமெனக் கூறப்படு முக்குற்றங்களையொழித்து அது நீ ஆகின்றனை யெனப்படுஞ் சாமவேத மகாவாக்கியார்த்தத்தைச் சந்தேகமற நன்குணர்ந்த சம்பத்துவாய்ந்த அறிவுடைப் பெரியோர் பெறும் பேருகி, கிஞ்சிஞ்ஞனுகிய அடியேனுக்கும் இரங்கியருளுந் தெய்வமாகி, ஓங்காரத்தி னுண்மைப்பொருளுமாயிருக்குங் குகப்பிரமத்தை யுள்ளத்தினுள்ளே தங்கியிருக்கும்படி இடையறுது தியானிப்பாம்.

[குகப்பிரமம்—ஓங்காரத்தின் உண்மைப்பொருளாக விருத்தற்குரிய பிரமாணங்கள் ௨-ன் உரைக்கண்ணேயே காட்டப்பட்டன. தைவதம்= தெய்வம். இதனை, வான்மீக ராமாயண உத்தரகாண்டத்து ௧௨௧-ஞ் சர்க்கத்தில் "ஆராதய ஜகந்நாதமிக்ஷ்வாகுகுலதைவதம்।" என வருதல்கொண்டுமறிக. "சூரே யணங்கு கடவுள் தெய்வதம்" என்பது பிங்கலநிகண்டு.] (௪)

மரணஞ் சனனம் பொருந்தார்நன்
மதிசே ராக்கம் பெறுவானுண்
பொருணன் கார்ந்த திருப்புகழ்தான்
புகன்ற வெந்தை யருட்கடலாம்

அருண கிரியா னகத்தமர்ந்த
வகண்ட வரிய குகப்பிரமப்
புரண வடியை யெஞ்ஞான்றும்
போற்றிப் பரவி வழிபடுவாம்.

மறப்பும் நினைப்பும் பொருந்தாத நல்ல ஞானத்தைச் சேர்ந்தோர் அந்த ஞானசெல்வத்தை யடையும்படி யமைந்துள்ள அனுபவ நுட்பங்கள் பிரகாசிக்குந் திருப்புகழென்னுந் திவ்வியப்பிரபந்தத்தை யருளிச்செய்த எங்கள் பிதாவுங் கருணைசாகரமுமாகிய **அருணகிரிநாத மூர்த்தியின்** உள்ளப்பெருங்கோயிலில் வீற்றிருக்கும் அகண்டசொரூபியாயும் அறிதற்கரிய பொருளாயுமிருக்குங் குகப்பிரமத்தின் எங்கும் வியாபித்துள்ள திருவருளாய திருவடியை யெக்காலத்தும் மனமொழி மெய்களாற் சிந்தித்துந் துதித்தும் வணங்கியும் வழிபடுவாம்.

[மறப்பு மரணத்தையும், நினைப்புச் சனனத்தையு முணர்த்தி நிற்பனவாகலின் அவை 'மரணம் சனனம்' எனப்பட்டன. போற்றல்=வணங்கல். பரவல்=துதித்தல்; பிங்கலநிகண்டு காண்க.] (கு)

பரமகுரு வணக்கம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஐந்துகுறிப் பினின்மூன்றை நீத்தி ரண்டை
யகலாது சேர்த்தறுவ ருணரக் காட்டி
ஐந்துமுகத் தவற்கினிய தார வுண்மை
யன்றருளி யின்றெனையு மாண்டு ளான்மா
வைந்தனநேர் கூச்சிரங்கொண் மொய்ம்பு மன்னும்
பரமவடி விலங்கியவு ளம்பி கைக்கு
மைந்தனெனுங் குமரகுரு வென்றன் றீர்த்தன்
மலரடியைப் பரசியிதை வழங்க லுற்றேன்.

சின்முத்திரை யானது இற்றென வுணர்த்துமாறு அபிநயமாகக் காட்டப்படும் ஐந்து விரல்களில் மூன்றை மற்றிரண்டினுடன் சேராதுவைத்து, அவ்விரண்டனையும் ஒன்றைவிட் டொன்று நீங்காமற் சேரவைத்திருந்து அதன் பொருளை, (தப்தர், அனந்தர், நந்தி, சதுர்முகர், சக்ரபாணி, மாலியாகிய) பராசர மாமுனிவருடைய புத்திரர்க ளறுவரு முணரும்படி யுபதேசித்து, பஞ்சமுகத்தினராகிய சிவபெருமானுக்குப் பொருளினேற்றத்தால் யாவர்க்கும்

இனிதாகிய பிரணவத்தின் உண்மைப்பொருளை அக்காலத் துபதே சித்து இக்காலத்து ஒன்றற்கும் பற்றாத வென்னையும் ஆண்டருளி னோனும்; பெரிய பைம்பொற்பிழம்பொத்த கூ எனப்படு மண்ணுஞ் சிரமெனப்படும் விண்ணுமாயுள்ள பல்லாயிரகோடி அண்டங்களுந் தன்னுடைய பாதாதிகேசபரியந்தமுள்ள உரோமங்களிலடங்கி நிற்கு மாறுகொண்ட வலிவாய்ந்த மகா விசுவரூபத்திருமேனியாம் பார மேசுரவடிவோடு பிரகாசிக்குங் கடவுளும்; பார்வதி நந்தனனெனப் படுங்குமாரசற்குருவுமா யுள்ளவனே யென்னுடைய பரமாசாரியன்: அவனுடைய தாமரை மலரொத்த திருவடிகளையே ஆசாரிய திரு வடிகளாவுங்கொண்டு துதித்து இந்நூலைக் கூறலாயினேன்.

[பராசரமுனி புத்திரராறுவர்க்கு முபதேசித்தருளிய தெவ்வுழி யென்னின்,—அது பாண்டிநாட்டின் கண்ணதாய திருப்பரங்கிரியுழி யென்க.

"ஐந்து குறிப்பினின் மூன்றைநீத் திரண்டையகலாது சேர்த் தறுவ ருணரக்காட்டி" என்பதே "ஐந்துக்கிரண்டு பழுதில்லை" என வுலகவழக்கிலும் வழங்கப்படுவதாயிற் றென்பதை இந்நூ லாசிரியரே அறிவுறுத்துவான் திருவலங்கற்றிரட்டின் உ - ங் கண் டத்தில்—

"அந்தத் திணையுமிடை. தன்னையு மறிதற் குரியமதி யொன்றிலா
மந்தர்க் கணுகுபல னல்குமிம் மகியிற் பழமறை விளம்புமா
றைந்திற் கிரண்டுபெழு தில்லையென் றறையப் படுமதனி லென்னைநீ
பந்திப் பொழியனனி பந்தியே பரமற் கினியகுக சம்புவே."

என்றும் பாடுவாராயினர். குறிப்பின் பொருள்:—"சும்மா விராது" என்றற்றொடக்கத்துச் செய்யுளுரைக்கண் விளக்கப்படும். குமாரமூர்த்தியின்பாற் சிவபிரான் பிரணவார்த்தங்கேட்டு நின்ற மூர்த்தம் சிஷ்யபாவ மெனப்படும். இதனை, சிவபிரானுடைய அட் டாட்ட விக்கிரகலீலா மூர்த்தங்களி லொன்றென்ப. அவ்வாறர்த்தங் கேட்டு நின்றது.—திருமால், இந்திரன், பிரமன், உபமனியன், தப னன், நந்தி, சுப்பிரமணியனெனுஞ் சத்தகுரவர்களுட் சுப்பிரமணி யனே பரமாசாரியனாகவு முள்ளானாகலின் இம்மூர்த்தியை வழிபடுக வென்று அந்தப்பிரமன் முதலியதேவர்க்கும் பிறர்க்கும் அறிவுறுத்து தல் அது பலப்படுதல் முதலிய பலகாரணங்களைக் கொண்டுளதென்க. திருவடிகளின் உட்புறங்களிற் சத்தகுலாசல பர்வதங்களும், புறவடிகளிற் சமுத்திராதிகளும், நகவிரல்களில் நக்ஷத்திர கிரகங்

களும் மின்னல்களும், பரடுகளில் வருணன் சூரியன் சந்திரன் முதலினோரும், கணைக்கால்களிற் சிந்தாமணியும் ஆரிடரும், முழந்தாள்களில் விஞ்சையரும், தொடைகளில் இந்திரனும் இந்திரகுமார ஜயந்தனும், இடையிற் காலனும் இயமனும், முதுகில் அசுரர்களும், பாரிசங்களிற் சிறந்த கடவுளர்களும், அபானத் துவாராதிகளில் நாகர்களும், ஆண்குறியிற் சருவபுவனோற்பத்தியும், மார்பகத்திற் கலைஞானங்களும், முப்புரிநூலிற் பிரகாசிக்கும் ஞானமும், பாதாதிகேசாந்தமுள்ள உரோமங்களிற் பல்லாயிரகோடி யண்டங்களும், அங்கையில் அகிலபோகங்களும், புயங்களிற் பிரமனும் விட்டுணுவும், விரல்களிற் சரச்சுவதி இலக்குமி முதலிய தேவ மங்கையரும், கண்டத்திற் சருவ சத்தங்களும், வாய் நடுவிற் சதுர்வேதங்களும், தந்தங்களிற் சகல அக்கரங்களும், நாவிற் சிவாகமங்களும், அதரத்திற் சத்தகோடி மகா மந்திரங்களும், நாசியில் வாயுதேவனும், விழிகளிற் சூரிய சந்திரர்களும், செவிகளிற் றிசைகளும், நெற்றியிற் குடிலைப்பொருளும், சிரசிற் பரமசிவமும் நிலைபெறீஇ யிருக்கவுள்ளது குமாரக் கடவுளது மகா விசுவரூபத் திருமேனி யெனப்படுமென்பதை வடமொழி ஸ்காந்தமஹாபுராணத்தி னறிக.

"கூநின் றளந்த குறள்" என்ற பொன்முடியார் கூற்றனும் கூ - மண்ணெனப்படுதல் காண்க. பூமியின் பரியாயப் பெயரிலுள்ள கு - கூவென நீட்டல்விகார முற்றது. சிரம் = தலை; இது விண்ணெனப்படுதலை, "தலமென்பதிலை புவிப்பேர் தலை யிடந் தலைவிண் ணுதி" எனும் லகரவேதுகைக் கூற்றுழைக் காண்க. "இலங்கியவுள்" என்றதிலுள்ள இயவுள் = தெய்வம்.] (சு)

### நூலருளிச்செய்த காரணம்.

*அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.*

இக்கெனு மொழியைத் தானே
யிரும்பஞ்ச தாரை யென்று
நக்கிய நினைவைப் போல
ஞானநூ லோதித் தேய்ந்த
பொக்கர்கள் புகலுங் கூற்றைக்
கணித்துநான் பொருமி லிங்ஙன்
திக்கெலாஞ் சுடர விந்தத்
திருமுறை விளம்பா நின்றேன்.

கரும்பையன்று; கரும்பென்று கூறுமொரு மொழியைத் தானே சிறந்த சருக்கரையாகக்கொண்டு அதனையும் நாவால் நக்கிய

தாக வில்லாமல் நக்கினதாக நினைக்கும் நினைவைப்போல ஞானநூல் களிற்பயின் றெவ்வாற்றானு மொருபலனையுமடையாமல் வாளா நாம் பிரமமென உள்ளமு முடம்புந்தளர்வுறும்படி செய்துகொண்ட குற்ற முடையார் கூறுங்கூற்றை யளவிட்டுப் பொருதவனாகிய யான், குற்ற மற்ற ஞானமானது திக்கனைத்திலும் பரவியொளிருமாறு, இப்போது இத்திருமுறையைக் கூறுகின்றேன்.

[பொக்கு=குற்ற மாகலிற் குற்ற முடையாரைப் பொக்க ரென்றார். "பொக்கரைக் காணுகண்" என்றார் திருமாளிகைத்தேவரும். இந்த - இகரச் சுட்டின் மரூஉ; ஈற்றிலுள்ள அகரத்தைச் சிலர் பெயரெச்சமாகக் கோடல் அடாது.] (எ)

நூற்பொருள்.

முந்தைய நூல்க ளென்று
  மொழியரு மறைக்கும் யாணர்த்
தந்திரந் தனக்கு முள்ள
  சமரசப் பொருளைக் கூறி
அந்தமி லாத மோக்க
  மடைதிற மார்க்க மெல்லாஞ்
சுந்தர மாக விந்தத்
  துகளினூல் விளக்கா நிற்கும்.

பண்டைக்காலத்து நூல்களென்று கூறப்படும் அருமையான வேதத்திற்கும், நல்ல ஆகமத்திற்கும் அவிரோதமாகவுள்ள சமரசப் பொருளைச்சாற்றி, அழியாத்தன்மையினதாகிய முத்திவந்து பொருந் தும் மேலான மார்க்கங்களை யெல்லாம் இந்தக் குற்றமற்றநூல் அழ காக விளக்கிக் காட்டும்.

[அசுரௌத ஆகமமல்லாத சுரௌத ஆகமமென்ப தறிவுறுத்தற்கே யாணர்த்தந்திர மென்றார். யாணர்=நன்மை.] (அ)

நூற்பயன்.

அங்கியை யணுகி னார்க்குக்
  குளிருமா வம்பன் மாறிக்
கங்குலிற் சென்றா ருக்குக்
  கதிரவன் றோற்றத் தாலே
பங்கமா மருட்டு மாய்ந்த
  பண்புபோ லிந்த நூலே

மங்கிடா மதியிற் றேர்வார்
மனமய றீர்ந்துய் வாரே.

அக்கினியருகிற் சென்றோர்க்குக் குளிரும், இராத்திரிகாலத்திலே திசைமாறிச் சென்றோர்க்குச் சூரியனுடைய உதயத்தாலே பங்கப்பட்டுப் போகக்கூடிய மயக்கமும் ஒழிந்த தன்மைபோல, இந்நூலைக் கூர்த்த புத்தியால் ஆராய்வார் தங்கள் மனத்தின்கண்ணுள்ள மயக்கம் நீங்கப்பெற்று வாழ்வர். (கூ)

நூற்சிறப்பு.

பலமலர் தோறுங் கள்ளைச்
சிறையளி பருகு மாபோல்
இலகுமெய்ஞ் ஞான நூல்கள்
பலவுளு மெடுத்த சாரம்
சொலுமுறை பொலிந்து நிற்பச்
சுருக்கமாச் சொற்ற தாலே
மலர்மடற் கைதை யாகா
வகுளம தாகு மிந்நூல்.

இறகுகளோடுங்கூடிய வண்டுகள் பல மலர்கடோறுஞ்சென்று தேனைமட்டுங் கிரகிப்பதுபோல, விளக்கமுள்ள மெய்ஞ்ஞான சாத்திரங்கள் பலவற்றுள்ளும் ஆராய்ந்தெடுக்கப்பட்ட சாரமும், (அறிந்த வழி யிப்போது) உரைக்குமொழுங்கும் இனிது வெளிப்பட்டு நிற்கச் சுருக்கமாகச் சொல்லப்பட்டது இந்நூல்: ஆகலின் இது, பெருத்த மடலுறு மலர்களையுடைய தாழையை யொத்ததன்று. உருவத்தாற் சிறுத்துக் கந்தத்தான் மேம்பட்டுள்ள மகிழமலரை யொத்ததாகும்.

["ஆகாது" என்னுந் துவ்வீறு விகாரத்தாற் றொக்கது; சிவஞானபோத முனிவர் "காட்டிய கண்ணே தனைக்காணு" என்றாற்போல. "வகுளமது" என்பதில், அது - பகுதிப்பொருள்விகுதி.] (க0)

நூற்பெயரும், நூற்கதிகாரியும்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்; சந்தம் வேறு.

சீர்பெற்ற சுருதிபதி யாகம புராணமிரு
திகளாதி முறைகளோரற்
கேர்பெற்ற வுலகிலுள மக்களி லபேதநிலை
யெய்தமுயல் வார்தத்துவப்

போர்பெற் றுறுங்களி விளக்கலா லீதுபரி
பூரணா னந்தபோதப்
பேர்பெற்ற தாகுமிது பெத்தருட் டீவிரம்
பெருகறி வுளர்க்காகுமே.

(ஆதிநூலென்னுஞ்) சிறப்பினைப்பெற்ற வேதம், இறைவனூலாயுள்ள ஆகமம் புராணம் மிருதிகள் முதலிய நூல்களை யாராய்ந்தறிதற்குரிய மதியூகமுள்ள உலகத்து மாந்தர்களுள், திரிபுடிரகித முத்தியை இம்மையிலேயே அடைய முயல்பவர்கள், தத்துவயுத்தம் புரிந்து வெற்றியுற்ற ஞான்று பொருந்தும் பிரமானந்த நிலையைப் பிரகாசப்படுத்திக் காட்டுதலால், இந்நூல் **பரிபூரணானந்தபோத**மென்னும் பெயரினைப்பெற்றதாகும். இது, பெத்தநிலையிலுள்ள (மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரமெனும் நால்வகைப்) பக்குவான்மாக்களுள் உயர்ந்த தீவிரதர சத்திநிபாத மேதாவியருக்கே பயன் றருவதாகும்.

[" மாநுடஆனந்தம் பலகூடி யொன்றாயுள தெதுவோ அஃதொரு மநுடனுயிருந்து தவசு முதலியவற்றாற் கந்தருவனுய்ச் சென்றனது மநுட கந்தருவானந்தமாம். அது பலகூடியொன்றாயுள தெதுவோ அஃதொரு தேவகந்தருவானந்தமாம். அதனின் மேம்பட்டது பன்னாள் உறுதியாயிருக்கும் பிதிர்தேவதானந்தமாம். அதனின் மேம்பட்டது தேவானந்தமாம். இவ் வானந்தமே வைதிக கன்மங்களாற் றேவர்களையடையுங் கன்மதேவானந்த மெனப்படும். இதனின் மேம்பட்டது தேவலோகத்திற் றேவதைகளாய்ப் பிறந்துள்ள சுவபாவதேவானந்தம். அதனின் மேம்பட்டது இந்திரனது ஆனந்தம். அதனின் மேம்பட்டது பிருகற்பதியானந்தம். அதனின் மேம்பட்டது (=௧௦௦ - கொண்டது) * பிரஜாபதியானந்தம். அஃதொரு † பிரமானந்தம் " எனும்பொருள் பயப்பனவாய்,

" தேயேசதம் மாநுஷா ஆநந்தா ஃ। ஸஏகோ மநுஷ்ய கந்தர்வாணாமாநந்த ஃ। ‡ ச்ரோத்ரியஸ்யசாகாமஹதஸ்ய। தேயேசதம் மநுஷ்ய கந்தர்வாணாமாநந்தாஃ। ஸஏகோ தேவகந்தர்வாணாமாநந்த ஃ। ச்ரோத்ரியஸ்யசாகாமஹதஸ்ய। தேயேசதம் தேவகந்தர்வாணாமாநந்தா ஃ। ஸஏகய ஃ பித்ரூணாம் சிரலோகலோகாநாமாநந்த ஃ। ச்ரோத்ரியஸ்யசாகாமஹதஸ்ய। தேயேசதம் பித்ரூணாம்

* பிரஜாபதியை விராட்புருடனென்றனர் சில பாடியகாரர்.

† பிரமானந்தம் - சிவலோகத்தின் பாலது.

‡ " ச்ரோத்ரியஸ்ய சாகாமஹதஸ்ய " என்பது ' ஆசையையறுத்த வேதவித்துவானுடைய ' எனும் பொருளுடைத்து.

சிரலோக லோகாநாமாநந்தா ꞉ || ஸஏக ஆஜாநஜாநாம் தேவாநாமாநந்த꞉ | ச்ரோத்ரியஸ்யசாகாமஹதஸ்ய | தேயேசத மாஜாநஜாநாம் தேவாநாமாநந்தா ꞉ ஸஏக ꞉ கர்மதேவாநாம் தேவாநாமாநந்த ꞉ | யேகர்மணு தேவாநபியந்தி | ச்ரோத்ரியஸ்ய சாகாமஹதஸ்ய | தேயேசதம் கர்மதேவாநாம் தேவாநாமாநந்தா ꞉ | ஸஏகோ தேவாநாமாநந்த ꞉ | ச்சோத்ரியஸ்ய சாகாமஹதஸ்ய | தேயேசதம் தேவாநாமாநந்தா ꞉ || ஸஏக இந்த்ரஸ்யாநந்த ꞉ | ச்ரோத்ரியஸ்ய சாகாமஹதஸ்ய | தேயேசதமிந்த்ரஸ்யாநந்தா ꞉ | ஸஏகோ ப்ருஹஸ்பதேராநந்தா ꞉ | ச்ரோத்ரியஸ்ய சாகாமஹதஸ்ய | தேயேசதம் ப்ருஹஸ்பதேராநந்தா ꞉ | ஸஏக ꞉ ப்ரஜாபதேராநந்த ꞉ | ச்ரோத்ரியஸ்ய சாகாமஹதஸ்ய | தேயேசதம் ப்ரஜாபதேராநந்தா ꞉ | ஸஏகோ ப்ரஹ்மண ஆநந்த ꞉ || "

என்று கூறப்படுவனவாயுள்ள வசனங்களைத் தைத்திரீயோபநிஷத் ஆநந்தவல்லி தருமாற்றானே ஆனந்த நிரல்கள் பல காணப்படுதலின், எவற்றினும் மேம்பட்டதொரு பிரமானந்தம் பல பரிபூரணமாதலின், அது தமிழ்மறையாகிய திருவாசகத்தும் "பந்தம் பறியப் பரிமேற்கொண் டான்றந்த—அந்தமிலா வானந்தம் பாடுதுங்காணம்மானாய்" என்று கூறப்படுதலின் அதனைப் போதிக்கும் இந்நூற்குப் பரிபூரணானந்தபோத மெனும்பெய ரிட்டமையும், இதற்கதிகாரி தீவிரதர பக்குவமுடையாரென்றமையும் பெரிதுஞ் சால்புடையன வென்க. தீவிரதர பக்குவர்க்குச் செயப்படு முபதேசம் மெல்லிய பஞ்சிலே தீயூட்டலொக்குமாகலின் அத்திறமுடையாரையே இத்தெருணூலிற் கதிகாரியாக்கினர். பக்குவ ரிலக்கணத்தை இந்நூலாசிரியரது காசியாத்திரையில் "மந்ததர மந்தமுயர் தீவிரம தன்றரமே—னிந்நாற் பக்குவர்கண் ணேற்றறிவு—கந்தெருளும்—வாழைத்தண் டீர மரநன் குலர்ந்தவிற—கேழைப்பஞ் சிற்றீயிடல்." என வரூஉம் வெண்பாவினைக்கொண்டு மறிக. பரிபூரணானந்த மென்பதில் முதற்கண்ணுள்ள பரி - எல்லாமெனும் பொருள் பயப்பான் வருமொரு வடசொல்.] (கக)

## அவையடக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம் ; சந்தம் வேறு.

இந்நூலுக் கறிவிலிக ளேசுரைக்க
  வேலாதுள் ளீடுள் ளோராய்ப்
பன்னூலுந் தேரறிஞர் களும்பழுது
  பகரார்கள் பாலர் தாமே
தந்நேயத் தந்தைமுனர் வழுவுடைய
  குதலைமொழி சாற்றுஞ் செவ்வி

இன்னேறு மமுதமெனக் கொள்வார்க
ளதுபோல விதையுங் கொள்வார்.

நுண்ணறிவில்லாதார் இந் நூலுக்குக் குற்றங்கூறத் துணிவ ரேல் அது சாத்திபப்படுவதன்று. பல நூல்களேயு மாராய்ந் துண்மை யுணர்ந்த நுண்ணறிவுளரும் இந் நூலிற்கொரு குற்றங் கூறுர். என்னே? தம்மிடத் தன்புள்ள தந்தைக்கெதிரிற் சொற்பொருளமை தியில்லா மழலைச்சொற்களைக் கூறுங்கால், இனிய தேவாமுதமாக அச் சொற்களை அத் தந்தை கொள்ளுந் தன்மையேபோல இந் நூலையு மங்கிகரித்துக்கொள்ளுந் தன்மையின ராகலின்.

[இன் - இன்னென்னுஞ் சொல். அஃதேறுமொழி 'இன் னமுதம்' எனக் கோடற்பாற்று.] (கஉ)

ஆக்கியோன் பெயர்.

சமரநெடு வேற்றடக்கை வேந்தரெலாந்
தன்னடியைத் தாழ்ந்து போற்ற
அமரர்தவர் வாழ்த்தெடுப்பப் பெருஞ்சீர்த்திப்
பெருந்தகையா யமர்கா குத்தன்
மமதையிலா ரகம்போல வனைந்ததிருச்
சேதுவிடை வயங்கு பாம்பன்
குமரகுரு தாசனிதைக் குயிற்றினன்
குமரகுரு தகவான் மன்னே.

போரி லுபயோகிக்கப்படும் நீண்ட வேலைத்தாங்கிய விசால மான கையினையுடைய வேந்தரனைவரும் வந்து தமதடியில் வணங் கித் துதிக்க, தேவர்களும் இருடிகளும் ஆசிகள்கூற, பெருத்தகீர்த் தியுடன் இவர் புருடோத்தமனே யெனும்படியமர்ந்திருந்த இராம மூர்த்தியானவர் அகங்காரத்தை வேருடனகழ்ந்தெறிந்த பெரியோ ருளத்தை யொத்தொளிரும்படி சமதளமாக நன்கு செய்தருளிய சேதுவின்கண் விளங்குவதாய பாம்பனெனுந் திருநகரத்தையே சின் னாள் தமது வாசஸ்தானமாகப்பெற்ற குமரகுருதாசசுவாமிகளென்னுஞ் சிறப்புப்பெயருடையார் என்று மொருபடித்தான குமரரூபமும், தம்மையடைவார்க்கு உண்மையினை யுபதேசித்தருளுந் தன்மையு முள்ள காரணத்தாற் குமரகுரு வென்னுந் திருப்பெயர்பெற்ற முருக வேளின தனுக்கிரக விசேடத்தால் இந்நூலை யியற்றியருளினர்.

[முருகவேளினைக் குமரனென்பது—"குமரன்றன் றாதைக்கே யுந்தீபற" என்னுந் திருவாசகத்தினும், "நாதா குமரா நமவென் றரனார்" என்னுங் கந்தரனுபூதியினும் பெறலாம். குமரரூபமானது பதினறு வயதுடைத்து. இதனை, "பதினு றாட்டைக் குமரனுஞ் சிறந்த—பன்னீ ராட்டைக் குமரியு மாகி" எனப் பிங்கலநிண்டு இல்லணிவகையி லியம்பிடுதலி னறிக. கூறிப்போந்த சு - ன் உரைக்கண் விளக்கியுள்ளபடி சிவபெருமான், குருவெனக் கொண்டுகாட்ட விளங்கிய தன்மையானும்; திருமால் முதலிய சத்தகுரவர்களுளொருவனேயாயினனேனும், அங்ஙனம் பரமகுரவனாக விளங்குந் தன்மையானும், கூர்மமஹாபுராணங் கூறுமாறு துந்துபி, சதரூபர், இருசீகர், கேதுமான், விசோகர், விகேசர், விசாகர், சாபநாசனர், சுமுகர், துன்முகர், துர்த்தர், துரதிக்கிரமர், சனகர், சனாதனர், சனந்தனர், தாலப்பியர், மகாயோகி, தருமான்மா, மஹேளஜஸர், சுதாமா, விரஜர், சங்கவாணி, அஜர், சாரசுவதர், மோகர், தனவாஹர், சுவாஹனர், கபிலர், அசுரி, வோடு, பஞ்சசிகர், பராசரர், கர்க்கர், பார்க்கவர், அங்கிரர், சலபந்து, நிராமித்திரர், கேதுச்சிருங்கர், தபோதனர், இலம்போதரர், இலம்பர், விக்குரோசர், இலம்பகர், சுகர், சர்வஞ்ஞர், சமபுத்தி, சாத்தியர், அசாத்தியர், சுதாமா, காச்சியபர், வசிட்டர், வரிஜர், அத்திரி, உக்கிரர், சிரவணர், சுவைத்தியகர், குணி, குணிபாஹு, குசரீரர், குநேத்திரர், கச்சியபர், உசனர், சியவனர், பிருகற்பதி, உச்சாசியர், வாமதேவர், மகாகாலர், மகானிலி, வாஜச்சிரவா, சுகேசர், சியாவாச்சுவர், சுபதீசுவரர், இரண்ணியநாபர், கௌசில்லியர், அகாக்ஷு, குதுமிதர், சுமந்தவர்ச்சசு, வித்துவான், கபந்தர், குஷிகந்தரர், பிலக்ஷர், தர்வாயணி, கேதுமான், கௌதமர், பல்லாசி, மதுபிங்கர், சுவேதகேது, தபோதனர், உஷிதா, விருஹத்திரக்ஷர், தேவலர், கவி, சாலகோத்திரர், அக்கினிவேச்சியர், யுவனுச்சுவர், சரத்துவசு, குண்டலர், குண்டகர்ணர், குந்தர், பிரவாஹகர், உலூகர், வித்தியுதர், சாத்திரகர், ஆசுவலாயனர், அக்ஷபாதர், குமாரர், உலூகர், வஸுவாஹனர், குணிகர், கர்க்கர், மித்திரகர், ருரு என்னும் ககஉ - பெயர்கட்குங் குருவாயிருந்த சுவேதர், சுதாரர், மதனர், சுகோத்திரர், கங்கர், லௌகாக்ஷி, மகாமாயர், ஜைகீஷவ்யர், ததிவாகர், இடபர், உருத்திரர், அத்திரி, சுபாலகர், கௌதமர், வேதசிரர், கோகர்ணர், குகாவாசி, சிகண்டி, ஜடாமாலி, அட்டகாசர், தாருகர், இலாங்கலி, மகாகாலர், சூலி, தண்டிமுண்டி, சஹிஷ்ணு, சோம

சர்மா, நகுலீசுவரரென்னும் பெரிய யோகாசாரியர் * உஅ-ப் பெயர்கட்கும் பிறர்க்குங் குருவெனும்படி பிரகாசிக்கின்றமையானுஞ் சுப்பிரமணியப்பெருமாற்குக் குருவெனும்பெயர் போந்ததென்பதும் ஈண்டுணரற்பாற்றே. அற்றாகலினன்றே "ஸ்வாமீ கஜமுகாநுஜ:" என்று அமரஸிம்ஹமும், "கடம்பன் சாமி கார்த்திகேயன்" "பாவகி யாசான்" என்று பிங்கலநிகண்டுங் கூறுகின்றன.

"ஆயிர முகத்தா னகன்ற தாயினும்—பாயிர மில்லது பனுவ லன்றே" என்பவாகலின் ஆக்குவய முரைத்தனர். "தோன்று தோற்றித் துறைபல முடிப்பினுந்—தான்றற் புகழ்த றகுதி யன்றே" என்பது விதியாயிருப்பவும், ஆசிரியர் தாமே பாயிரம்பகர்த லமை வுடைத்தாங்கொ லெனின்,—வடநூல் விதிபற்றியும், சமயாசாரியர், சந்தானசாரியர், பிரயோக விவேகத்தார், கந்தபுராணத்தார் முதலிய ஆசிரியர்கள் கூறினமைகண்டுஞ் செய்தன்ராகலின் முரணன் றென்க. இங்ஙனம் பாயிரமுறை வந்தமை காண்க.

குமரகுரு=குமரனாகியகுரு; இருபெயரொட்டுப் பண்புத்தொகை.](கரு)

பாயிர முற்றிற்று.



* இந்த உஅ-ப் பெயர் விவரம்—சைவமஹாபுராண வாயுசங்கிதையின் உத்தரபாகத்திலுண்டு.



சற்சீடன். பரிபூரணாநந்தபோதோபதேசம். சதாசாரியப்பெருந்தகை.

## நூல்.

# பதிபசுபாசயதார்த்தவிளக்கப்படலம்.

## க. சற்சீடன் கடாவுக்குச் சற்குரு விடையிறுக்கத் தொடங்கல்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருமலிந்த மகிதலத்தின் மானு டர்க்குட்
சிறப்புடைய வொருமனுடன் முன்னை நோன்பாற்
கருமலிந்த பிறப்புநோய்க் கஞ்சி நல்ல
கல்வியொடு தவப்பேறு முதிர்ந்து மின்னும்
அருண்மலிந்த வோரிறைவன் றன்னைக் கண்டெம்
மையபொழி லண்ட நிரை களையு மூத்தை
உருமலிந்த வுயிர்களையுந் தந்தோ ரேவ
ருரைத்தியென வக்குரவ னுவந்து கூறும்.

மனத்தைக் கவரும் இலக்கணங்கள் பலவமைந்துள்ள இப்பூமியின்கண் ணுதித்த சீவர்க ளனேகருள் ஆன்றோராற் சிறந்த குணங்களாக வங்கீகரிக்கப்பட்ட நற்குணங்க ணிரம்பியிருக்குஞ் சிறப்பினையுடைய ஒருத்தம புருடன், முற்போந்த சனனங்களிற் செய்த தபோபலத்தால் இருவினையொப்பு மலபரிபாக சத்திநிபாதமுற்ற தன்மையால் எண்ணிறந்த மாதுர் கர்ப்பவாச சம்பந்தமுடைய பிறவியாம் பெரும்பிணிக்கு அஞ்சி, (அதனை யொழிக்க வேண்டுமென்னும் எண்ணத்துடன் ஞானுசாரியரைத் தேடி வருங்கால்) பூரணமான வித்தையும் அதுகாரணமாக நிகழுந் தபோ பலமும் அதன் முதிர்ச்சியா லுண்டாகும் அருட்பிரகாசமும் பெற்று விளங்குமொரு ஞானதேசிகரைக்கண்டு, எம் ஆன்மநாயகனே! அனேகவுலகங்களைத் தம்மு ளடக்கிக்கொண்டிருக்கும் பல்லாயிர கோடி அண்டவடுக்குகளையும், (அவைகளில் வசிப்பனவாகி) அசுத்த மல பாண்டங்களாகிய வுடல்களுடன் கூடியிருக்குஞ் சீவர்களையும் உண்டாக்கினவர் யாவர்? இச்சந்தேகத்தை யொழித்தருளல் வேண்டுமென விண்ணப்பிக்க; அவ்வாசாரியர் சீடனது தரத்தை நோக்கிக் களிப்புற்றவராய்க் கூறுவா ராயினர்.

[ஞானபோதகஞ் செய்வார் உலகர் எளிதிலுணருமாறு, அன்னோர்க்குறும் ஐயங்களையுங் கடா விடைகளாக இனிதுணர்த்திச் சேறல் தொன்னெறியாகலின் இவ்வாசிரியரும் அது நோக்கிச் சீடனென்பானொருவனை முன்னிலைபாக்கிக்கொண்டு கூறினமை தெளிக.

ஒடு - எண்ணின்கண் வந்தது. "ஊத்தை" என்றது புலாலழுக்கினை யுணர்த்துவதாயிற்று. "யோகமே யூத்தையேன் றனக்கு" என்று கூறும் திருவாசகம்—(பிடித்தபத்து). என = என்று சொல்ல; சொல்லெச்சம்; இனி வருவனவற்றிற்கும் இவ்வெச்சங் கொள்க. குரவனுவந்து கூறும் - செய்யுமென்னும் முற்று ஆண்பாலுக்கு வந்தது.] (க)

## உ. வத்து நிச்சயம்.

உட்கருவி புறக்கருவி யாகக் கூறு
  முடம்பினுக்கு ளோருயிரே யிருத்தன் மான
மட்பொலிவி னுனிறுவு முலகுக் கெல்லா
  மகத்தாய பரம்பொருளொன் றுளதஃ தேதான்
நிட்கள நி ராலம்ப நிருவி கார
  நிரதிசய தத்துவமா யீறில் லாத
கட்கருவிக் கெட்டாத வகண்ட ஞான
  ககனமென வேயெங்கு நிறைந்து நிற்கும்.

உட்கருவிகள் புறக்கருவிகள் ஆய இவ்விருவகைக் கருவிகளாலாகிய தென்று கூறப்படும் ஒரு தேகத்தினுள் ஓரான்மாவே யிருப்பது போலப் பிருதிவிபூதப் பொலிவினைக் கொண்டு நிறுவப்பட்ட உலகங்கட்கெல்லாம் நிமித்த காரணமாயுள்ள மேலான பொருள் ஒன்றுள்ளது. அப்பொருள் தானே உருவம், பற்றுக்கோடு, விகாரம், சுட்டியறியுந் தன்மை ஆகிய இவற்று ளொன்றுமில்லாத உண்மைப் பொருளாகி, கண்ணாகிய கருவிக்கெட்டாத அழிவில்லாத அகண்ட ஞானாகாசமென்னும்படி யாண்டும் வியாபித்து நிலைபெறுற்றிருக்கும்.

[உட்கருவி, புறக்கருவி உட்டுறவின்மானவில் விளக்கப்படும்.](உ)

இப்பெரிய பரம்பொருளுக் கனாதி யென்று
  மீசனென்றும் பரமபதி யென்றும் யாருஞ்
செப்பரிய பிரமமென்றுங் கடவு ளென்றுந்
  தேவனென்றும் பரமசிவ மென்று மொன்றை

ஒப்பிடற் கொணுதபர தெய்வ மென்று
முணர்வான பரமான்மா வென்று ஞான
விப்பிரர்க ளகத்திலொளிர் சுப்ர மண்ய
மென்றுஞ்சொல் பலபெயரும் விளங்கு மாலோ.

("மஹதோமஹீயாந்" என்று வேதங்களாற் கூறப்பட்ட) மேற்கூறிய பரம்பொருளுக்கே (தோற்ற மின்மையால்) அநாதி யென்றும், (எல்லா ஐசுவரியங்களுந் தனக்கே யுரியனவாய் யாவற்றை யும் ஆளுந்தன்மையால்) ஈசனென்றும், (நரபதி சுரபதி முதலிய பல பதிகளுக்கும் பதியாயிருத்தலாற்) பரமபதி யென்றும், (எப்பொருட்கும் பெரிய பொருளாயிருத்தலாற்) பிரமமென்றும், சீவர்களுடைய இச்சா ஞானக் கிரியைகளை உள்ளிருந்து பிரேரிக்கும் உள்ளமாயிருத்தலாற்) கடவுளென்றும், (ஒளியுரு வுடைமையால்) தேவனென்றும், (மேலான மங்களரூப முடைமையாற்) பரமசிவ மென்றும், (சமானரகிதத்தன்மையாற்) பரதெய்வமென்றும், (சுத்த) சேதன சொரூபியான பரமான்மாவென்றும், பிரமஞானிகளுடைய இருதய குகையின்கண்ணே பிரகாசிக்குஞ் சுப்பிரமணியமென்றுஞ் சொல்லப்படு பல நாமங்களும் விளங்கும்.

[ஆதியில்லாதது அநாதி. ஆதியிருப்பின் மத்தியும் அந்தமு மிருத்தல்வேண்டு மாகலின் ஆதி மத்தி அந்தமில்லாப் பரமசிவம் அநாதி யெனப்பட்டது. இந் நியாயம் பஞ்சருத்ரோபநிஷத்துக்களி லொன்றுப யஜுர்வேத கைவல்யத்தில் (ஆதிமத்யாந்த விஹீநமேகம் விபும்) "ஆதிமத்யாந்த விஹீநமேகம்விபும்" எனவும், தமிழ் மறையில் "ஆதிகுண மொன்று மில்லா னந்தமிலான் வரக் கூவாய்" எனவும் வருவனவற்றிற் பெறுக. "அப்ரமேயம் அநாதி" என்று யஜுர்வேத அம்ருதபிந்தூபநிஷத்துங் கூறுகின்றது. இந்த அநாதி க்கு ஈசனெனும் பெயர் போந்துளதை "ஓம் - ஈசாவாஸ்யமிதக் ஸர்வம்பக்திஞ்ச ஜகத்யாம் ஜகத்!" என்று யஜுர்வேத ஈசாவாஸ் யோபநிஷதங் கூறுதலினறிக. இப்பெயர் சிவனுக்கே யுரியதென, "சம்புரீச: பசுபதிச்சிவ:" என்று நிகண்டு - அமரஸிம்ஹமுங் கூறுவதாயிற்று. பரமபதியெனவே பதி, பசுபதி யென்பனவும் போதரும். பதி=தலைவன். பசுபதி=பசுக்களாகிய ஆன்மாக்கட்குத் தலைவன். பஞ்சருத்ரோபநிஷத்துக்களி லொன்றுப யஜுர்வேத சுவே தாச்வதரம்—"காலகாலோகுணீ ஸர்வவித்ய:, ப்ரதாந க்ஷேத்ரஜ்ஞ

பதிஃ" என்று கூறுதலும் அது. பொருள் :— "அவன் காலகாலன், குணி, சருவவித்தியன், பிரதானத்துக்கும் க்ஷேத்திரஞ்ஞனுக்கும் பதி" எனவாம். பிரதானம்=பிரகிருதிமாயை. க்ஷேத்திரஞ்ஞன்= சீவான்மா. ஸாமவேத ஜாபால்யுபநிஷத்திற் சீவர்களைப் பசுக்களென வும், ஈசனைப் பசுபதியெனவுங் கூறுங்காரண மென்னைகொலோ வென்று கடாவ ; ஆண்டு நிகழ்ந்த விடை—

(ய஥ாத்ருணாஶிநோவிவேகஹீநாஃ பரப்ரேஷ்யாஃ
க்ருஷ்யாதிகர்மஸுநியுக்தாஸ்ஸகலது:கஸஹாஸ்ஸ்வ
ஸ்வாமிபத்யமாநாஃ கவாதயஃ பஶவஃ । ய஥ாதத்ஸ்வாமிந இவ
ஸர்வஜ்ஞ ஈஶஃ பஶுபதிஃ ॥)

" யதாத்ருணசிநோ விவேகஹீநாஃ பரப்ரேஷ்யாஃ
க்ருஷ்யாதி கர்மஸு நியுக்தாஸ் ஸகலதுஃக ஸஹாஸ் ஸ்வ
ஸ்வாமி பத்யமாநா கவாதயஃபசவஃ । யதாதத் ஸ்வாமிந இவ
ஸர்வஜ்ஞ ஈசஃ பசுபதிஃ ॥ "

எனும் வசனங்களே. பொருள் :— " புல்லைப் புசிப்பனவும், விவேக ஈனமுடையனவும், பிறனாற் கிருஷ்யாதி கருமங்களில் ஏவப் படுவனவும், துக்கமுடையனவும், இயமானனாற் கட்டப்படுவனவுமா யுள்ளன பசுக்கள். அன்னணமே பாசபந்த சீவர்களாகிய பசுக்களும், முற்றுணர்விற்கும் ஈச சத்தத்திற்குமுரிய பசுபதியும்" எனவாம். தமிழ் மறையில், " பண்ணார் பாட லாட லறாத பசுபதி யீச னோர் பாகம்—பெண்ணா ணாய வார்சடை யண்ணல் பேணு பெருந்துறை யே" எனத் திருஞானசம்பந்தசுவாமிகளது திருவாக்குளதுமோர்க. (ஸ்வதஶ்ஶிவஃபஶுபதிஃ) "ஸ்வதச்சிவஃ பசுபதிஃ" என்றும், (ஸ்வயம் பஶுபதிஃ) "ஸ்வயம் பசுபதிஃ" என்றும் அதர்வணவேத பாசுபதப்ரஹ்மோபநிஷத்துங் கூறுகின்றது. இவற்றாற் சிவனுக்குப் பசுபதி நாமம் ஆகந்துகம் (=இடையிலெய்துற்றது) என்பார்கூற்று மறுக்கப்படுதலோடு மேலை நியாயம் வலியுறுதலுங்காண்க. ஆகந்துக மென்பதுளதாயின் அது திரிமூர்த்திகட்கும் மேலாய்த் திகழுஞ் சிவ னுடைய உரு நாமங்களைத் தாங்கிய உருத்திரன்பாற் படுமென்க. யஜுர்வேத பைங்கலோபநிஷத்திற் சொல்லப்பட்ட சத்துவாதிக்கிய ஆவரணசத்தியிற் பிரதிபலித்த ஈசுவரசைதன்னியமும், விராட்டு இரணியகருப்பனென்பாரோடு சேர்த்துக் கூறப்பட்ட மாயோபாதி ஈசுவரனும் இவ்வுருத்திரனே யாகலின் இப்பொருள்கள் வேறெவ்

வெச்சுருதிகளிற் காணப்படினும் அவைபற்றிற்கெல்லாம் திரிமூர்த்திகளி லொருவனுன் இவ்வுருத்திரனே யருத்தமென்பது மறியத்தக்கது. உருத்திரர் பலருளரென்ப தறிவுறுத்துவான் திருஞானசம்பந்தசுவாமிகள் "உருத்திர பல்கணத்தார்க்—கட்டிட்டல் காணுதே போதியோ பூம்பாவாய்" என வேதங் கூறியாங்குக்கூறி "நல்வினைப்பய னுன்மறை யின்பொருள்—கல்வி யாய கருத்த னுருத்திரன்—செல்வன் மேய திருமழ பாடியை" என விளக்கியிருத்தலும் ஈண்டுணரத்தக்க தன்றே.

(உமாபதயெ வஶுபதயெ நமோநமஃ,
ருதம் ஸத்யம் பரம்ப்ரஹ்ம புருஷம் க்ருஷ்ண பிங்கலம் ।
ஊர்த்வரேதம் விரூபாக்ஷம் விஶ்வரூபாயவை நமஃ ।
ஸர்வோவை ருத்ரஸ்தஸ்மை ருத்ராய நமோ அஸ்து ॥)

"உமாபதயே பசுபதயே நமோநமஃ,
ருதம் ஸத்யம் பரம்ப்ரஹ்ம புருஷம் க்ருஷ்ண பிங்கலம் ।
ஊர்த்வரேதம் விரூபாக்ஷம் விச்வரூபாயவை நமஃ ।
ஸர்வோவை ருத்ரஸ்தஸ்மை ருத்ராய நமோ அஸ்து ॥"

என்று தைத்திரீயாருணசாகை நாராயணங் கூறுமாற்றானே அந்தப் பசுபதியாகிய பரம்பொருட்கு உருத்திரப்பெயரு முண்டெனவோர்க. இப்பெயர்—'சமுசாரத் துன்பமெனுஞ் சாகரத்திற் கிடந்துழிதருமுயிர்களைத் திருவருட்டெப்பத்திலேற்றி முத்திக்கரை சேர்ப்பவன்' எனும் பொருளைத் தரும். மேலைச்சுருதி வசனங்களின் பொருள்:—"உமாபதிக்குப் பசுபதிக்கு நமற்காரம்: சத்தியவசனத்திற் சத்தியமாயுள்ள பரப்பிரமமும், கிருட்டிண பிங்கல நிறத்தோடு கூடிய புருடனும், ஊர்த்துவ ரேதசையுடையவனும், விசுவரூபமுடையவனுமான நெற்றிக் கண்ணனுக்கு நமற்காரம்: எல்லாம் உருத்திரனே அத்திறவுருத்திரனுக்கு நமற்காரம்" எனவாம். இவ்வுருத்திரன் மகாருத்திரனெனவுங் கூறப்படுவனென்பது "மஹாதேவாய மஹாருத்ராய" என்று யஜுர்வேத பஞ்சப்ரஹ்மோபநிஷதங் கூறுதலிற் பெறுக. இப் பசுபதிப்பெயர்க் கடவுள் பிரமமெனப்படுதல் மேலே காட்டப்பட்ட சுருதியினும் வெளிபாயிற்று. இது பற்றிப் பாயிரத்து உ, ரு - ன் உரைக்கட்போந்த பிரமாணங்களையுங் கருதிக்கொள்ளுதுன்று அங்ஙனமே "சிவன் பிரமசத்தத்தினுற் பகரப்படுகின்றனன்" என அஜிதாகம மறைந்திடுதல் காட்டியிருத்தலையுங் கருதிக்கொள்க. 'ப்ரஹ்ம' எனும் வடசொல் (ப்ரஹ்ம)

"ப்ருஹ்ம" என்னுந் தாதுவினின்று தோன்றலால் அது, ப்ருஹத்வ மென்னும் மேன்மையையும், ப்ருஹ்மணத்வமென்னும் பெருத்திருக்குந் தன்மையையு முணர்த்தும். இதனை, (ப்ருஹத்வாத் ப்ருஹ்மணத்வாச்ச ப்ரஹ்மேதி பரிகீர்த்திதம்।) "ப்ருஹத்வாத்ப்ருஹ்மணத்வாச்ச ப்ரஹ்மேதி பரிகீர்த்திதம்।" என்னும் வாதுளோத்தர சுத்தாக்யமெனும் ஆகமவசனத்தானுமறிக. இப்பொருளையேகொண்டு—

(ப்ருஹத்வாத் ப்ருஹ்மணத்வாச்ச சிவோப்ரஹ்மைவ யோகதஃ।)

"ப்ருஹத்வாத் ப்ருஹ்மணத்வாச்ச சிவோப்ரஹ்மைவ யோகதஃ।"

எனவரு பராக்கியை வசனமுங் கவனிக்கத்தக்கது. அருத்தம்:— "மேன்மையினாலும் பெருத்திருக்கு நீர்மையினாலுஞ் சிவனே பிரம மெனப்படுவன்" எனவாம். இன்னும் பல சுருதிப்பிரமாணங்கள் இந்நூலாசிரியரது சைவசமயசரபத்துக் கைவல்லிய காண்டத்து அ - ற் காட்டப்பட்டன; ஆண்டுக்காண்க. "ஒப்பனடவல் கடவ லோச்சல் ......செலுத்த லொருபொருள்" என்று பிங்கலநிகண்டு கூறுமாற்றானே செலுத்தல் கடவலெனப்படும். சீவான்மாக்களின் உள்ளக்குகைதோறு மிருந்து இச்சை ஞானம் கிரியை யென்பவற்றை யியக்கிச்செலுத்தும் உள்ளமாயுள்ள அந்தப் பிரமம் கடவுளெனப்பட்டது. கடவு + உள் = கடவுள். கடவு - வினைத்தொகை. திருவுளமே உள்ளெனப்பட்ட தென்ப.

"செலுத்துத லென்னுஞ் சொல்லே கடவுத லெனச்செந் நூல்கள்
பலத்துட னுரைக்கு மாற்றாற் பசுக்களி னுளத்தே நின்று
செலுத்துள மாங்கு கற்குக் கடவுளென் றிருப்பே ரொன்றெத்
தலத்தரு மிறும்பூ தெய்தத் தமிழினி லேய்ந்த தாமே."

என இந்நூலாசிரியரது சேக்கர்வேள்சேம்மாப்பின் க - ங் காண்டத்துங் கூறப்பட்டது. இதுவேயுமன்றிப் பரம் என்பது குன்ற மென்பதோடியைந்தவழிப் பரங்குன்ற மெனவொன்று வழங்கப்படுமாறு 'கடத்தினுள்ளிருக்கும் உள்ளம்' எனும் பொருளிற் கட மெனும் வடமொழி உள்ளெனுந் தென்மொழியோ டியைந்தவழிக் கடவுளெனுஞ்சொல் லுண்டாயிற் றெனலும் பொருந்துமென்று அங்ஙனங் கூறினமை தாழ்பொருட்டேயாயிற்று. பிற காரணங்கள் விளக்கி முடிப்பார் கூற்றுக்களும் உயர்பொருள வாகா. என்னை? சுகப்பிரமம், அந்தரியாமி, கருமசுதந்திர கருத்தாவென்னும் வட சொற்களுக்கு நேராயும், அரு, உரு வென்பவற்றிற்குப் பொது

மையாயு மிருத்தலின். "(தனது அத்துவிதத் தன்மையாற்) சத்தும், அசித்தும், அமிர்தமுமாயிருப்பவன் தேவன்" என்னும் பொருளைப் பயக்குமாறு (ஸ்ரீ॰ஸஞூ॰ஸஷிமூதஜுயஷ ।) "தேவஸ் ஸதஸச்சாம்ருதஞ்சயத்।" என்று அதர்வணவேத பிரச்னோபநிஷதங் கூறுமாற்றானும், "தேவஏகஃ" என்பதனால் 'தேவன் ஒருவன்' என்று சுவேதாச்வதரத்து ௩-ம் அத்தியாயமும் பிறவும் மொழியுமாற்றானும், (ஶுகாஶ ஸெவாஸஸெவஃ) "ப்ரகாசதேவாஸதேவஃ" என்பதனாற் சிவனைத் தேவனென்று யஜுர்வேத தக்ஷிணாமூர்த்யுபநிஷதங் கூறுமாற்றானும் அக்கடவுள் தேவனெனப்படுதல் காண்க. இந்தத் தேவன் பரமசிவமெனப்படுதற்குரிய பிரமாணங்களும் மேலே வந்துள்ளன. இது—சுருதியாதி பிரமாணங்களாற் பெரிதும் விளக்கப்படுதல் மேலே குறிக்கப்பட்ட சைவசமயசரபத்திற் கண்ணுறலாம். சாந்தோக்யோபநிஷத்தின் ௬-ம் பிரபாடகத்து அ, கங - இக்கண்டங்களில், (வரஸ்யாஂஸெவதா) "பரஸ்யாம்தேவதா" என வருவசனம் பிரமத்துக்குப் பரதேவதையெனும் பெயருறக் கூறுதலின் அது சுருதி இந்தப் பரமசிவத்தைப் பரதெய்வமெனக் கூறியவாறும். தேவ சத்தமே 'தேவதா' எனப்படும்; பர சத்தம் மகத்துவத்தைக் காட்டுமாகலிற் பரதேவதா வென்பது மகாதேவன் மேற்றென்று நீலகண்டபாஷ்யத்தில் வியாகரண விதியோடதற்குப்பொருள் விளக்கப்பட்டுளது. மேற்போந்த கைவல்யோபநிஷதம் (வரஶாதூரஂவஂ ஗ுஹாஶயஂநிஷ்க஌ஜ்விதீயஜ்) "பரமாத்மரூபம் குஹாசயம் நிஷ்களமத்விதீயம்" என்று கூறுதலின் அந்தப் பரதெய்வம் பரமான்மாவெனப்படுதல் காண்க. அருத்தம்:—"இருதய குகையிலுளதும், நிட்களமும், அத்துவிதீயமுமான பரமான்மரூபம்" எனவாம். பஞ்சருத்ரோபநிஷதங்களிலொன்றாய அதர்வசிகையில், "பரமாத்மநி" என்பதுமுண்டு. வேறு சில உபநிஷத்துக்களிலும் இச் சத்தமுளது. இச் சுருதிகட்கு உபப்ரும்ஹணமாயுள்ள சைவமஹாபுராணத்துக் கைலாஸஸம்ஹிதை ௧௦ - (ஶிவஶக்தி ஸஂயோகஃ வரஶாதெதி நிஶ்சிதஜ் ।) "சிவசக்திஸமாயோகஃ பரமாத்மேதி நிச்சிதம்।" என்று கூறுகின்றது. பொருள்:—"சிவமுஞ் சத்தியு மியைந்துளதே பரமான்மாவென நிச்சயப்படுகிறது" எனவாம். ஆகவே அஃதான்மா வென்பதூஉம் போதரும். ஆகலினன்றே (ஆத்மாவா ஐதஜேக ஏவாக்ர ஆஸீத் நாந்யத்கிஂசநமிஷத் ஸஂஈக்ஷத லோகாந்நுஸ்ருஜா இதி ।) "ஆத்

மாவா இதமேக ஏவாக்ர ஆஸீத் நாந்யத் கிஞ்சநமிஷத் ஸஈக்ஷத லோகாந் நுஸ்ருஜா இதி ।" என்று ஐதரேயோபநிஷத்துங் கூறுகின்றது. பொருள்:— "இவ்வுலக சிருட்டிக்கு முன்னே ஆன்மா ஒன்றே யிருந்தது: வேறெவ்விதமான யாதுமின்று: அவ்வான்மா உலகைச் சிருட்டிக்கவேண்டுமென நோக்கிற்று" எனவாம். பிரளய காலத்திற் குணருத்திரன், விட்டுணு, பிரமன் முதலினோர் தொழிலிழந்துந் தூங்கியுங் கிடத்தல்போற் கிடவாது விழித்திருந்தே பெயர்த்துஞ் சிருட்டி தொடங்குஞ் சிவபரம்பொருள் ஒன்றேயாகலின் ஆன்மா ஒன்றே யிருந்ததென்றதென்க. இங்ஙனம்—கருப்ப சிசுவைக் கருப்ப வயிற்றடக்கிக் கூறுமாற்றான் 'ஒருத்தியே யிருந்தனள்' என்ற தொக்குமெனினும் ஏயும். அற்றாகலினன்றே "தஸ்மிந்நேவாகிலம் விச்வம் ஸங்கோசித படவர்த்ததே ।" என்று பைங்கலோபநிஷத்துங் கூறுவதாயிற்று. இதன்றமிழ் :— "அவனிடத்திலேயே எல்லாப் பிரபஞ்சமுஞ் சித்திரபடஞ் சுருட்டப்பட்டமைபோல அடங்கியிருந்தது" எனவாம். இதுவேயுமன்றி (𑌸𑍁𑌬𑍋𑌧𑌾 𑌵𑍃𑌤𑍍𑌤𑌿) "அயமாத்மா ப்ரஹ்ம" என்று கூறிய அதர்வண மாண்டூக்யோபநிஷத்தும்—

(𑌪𑍍𑌰𑌪𑌞𑍍𑌚𑍋𑌪𑌶𑌮𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑌂 𑌶𑌿𑌵𑌮𑌦𑍍𑌵𑍈𑌤𑌂
𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑌂 𑌮𑌨𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌸 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌸 𑌵𑌿𑌜𑍍𑌞𑍇𑌯𑌃 ।)

**"ப்ரபஞ்சோபசமம் சாந்தம் சிவ மத்வைதம்
சதுர்த்தம் மங்யந்தே ஸஆத்மா ஸவிஜ்ஞேய: !"**

என்று கூறுவதாயிற்று. பொருள்:— "பிரபஞ்ச லயத்தான மாயுளதும், சாந்தமாயிருப்பதும், அத்வைதமாயுளதுமாகிய சிவத்தை, (பிரம விட்டுணு உருத்திரர்கட்கு மேம்பட்ட) நான்காவது பொருளாக நினைக்கின்றனர்: அஃது ஆன்மா : அவன் அறியத்தக்கவன்" எனவாம். அயம் - என்பது அண்மைப் பொருள் பயக்கும் 'இந்த' எனுஞ் சுட்டேயாம். (𑌶𑌿𑌵𑌸𑍂𑌤𑍍𑌰𑌾) "சைதந்யம் ஆத்மா" என்னுஞ் (சிவபிரான் றிருவாய்மலர்ந்தருளிய) * சிவசூத்திரத்தின் க - வது சூத்திரமும் ஈண்டுக் கருதத்தக்கதே. இச்சூத்திரார்த்தம்:— "சைதன்னிய மென்பது முற்றுணர்வு முற்றுத் தொழிலாய சுவாதந்திரியமாம் : அதனைச் சுவபாவமாயுடையவனெவனோ அவன் ஆன்மாவெனச் சொல்லப்பட்டனன்" என்று மேற்போந்த கைலாஸ ஸம்ஹிதை க0 - ம் அத்தியாயத்தின்கட் பகரப்பட்டுளது. இவ்வான்மாவைப் பிராணன் என்றும், அதுவே (𑌤𑍍𑌯𑌤𑍍) 'த்யத்'

---

* இந்தச் சிவ சூத்திரத்தில் எஎ - சூத்திரங்கள் காணப்படுகின்றன.

எனும் பிரமமென்றும் யஜுர்வேத பிருஹதாரண்யகோபநிஷத்தின் ரு - ம் அத்தியாயத்து கூ - ம் பிராஹ்மணங் கூறுகின்றது. இது பிராணவாயுவன்றென்பதுணர்த்துவான் "ஆகாசஸ் தல்லிங்காத்" "அத ஏவப்பிராணஃ" என்று பிரஹ்மஸூத்ரமும் பேசிற்று. பொருள்:— "இலிங்கமுண்மையால் அஃது (= பிரமம்) ஆகாயம்." "அதனாற்றான் பிராணன் (பிரமம்)." எனவாம். த்யத் = மறைந்திருப்பது. இந்தப் பரமான்மா, சுப்பிரமணிய மெனப்படுதல் பாயிரவுரைக் கண்ணேயே வந்துளது; கடைப் பிடிக்க. ஸுப்ரஹ்மண்யம் - எனும் வடசொல்லில், ஸு - ஸுகமெனும் ஆனந்தமெனவும், (ஹ) ப்ரஹ்ம - பெரியபொருளெனவும், ந்யம் - வேறு காணப்படுமொன்று அஃதாவது பெரியபொருளினின்றும் வெளிப்பட்டு மிளிர்வது எனவும் பொருள்படுமாற்றானே சுவானுபூதிச் செல்வர்க்கு அவ்வனுபூதிப்பொருளாய்ப் பிரகாசிப்பதுதான் சுப்பிரமணியமென்பதூஉம் அறியக்கிடக்கின்றது. இப் பொருள்விளக்க மெல்லாம் இந்நூலாசிரியரே தமது தகராலயரகசியமெனும் பெயரிய வொருநூற்கண்ணும், பிறநூற்கண்ணும் இனிது கூறியுள்ளார். ந்யம் - எனப்பிரிக்கப்படுவது 'ண்யம்' என வாயவாறென்னையெனின்,—ரகரத்தின் முன் வந்த நகரம் ஒரு மொழிக்கண்ணதாயின் ணகரமாய்த் திரியுமென்னும் வடமொழிமதம் பற்றி யென்க.] (௩)

ஒருதலத்திற் கனந்தம்பே ரிருத்தல் போலவ்
 வொருபொருட்கே யளப்பிலாப் பெயர்க ளுண்டு
வருகையுட னிறுதியிலா வப்பொ ருட்கு
 மார்த்தாண்ட னுழியொளிபோலருளொன்றுண்டு
பிரிதலிலா வவ்வருளுக் கபின்னை யென்றும்
 பிறங்குசிவ சத்தியென்று ஞான மென்றும்
கருதரிய சித்தென்றும் பல்பே ராகக்
 கழறுவகை யினையுநன் மகனே யோர்தி.

ஒரு தலத்திற்குத்தானே அனேக நாமங்க ளிருத்தல் போல் அவ் வொருபரம் பொருளுக்கே எண்ணலளவைக் கெட்டாத பல பெயர்க ளுள. தோற்றம் ஈறில்லாத அப்பொருட்குச் சூரியனிடத்தில் ஒளியிருத்தல்போல அருளென்னப் படுவதொன்று உண்டு. மேற்குறித்த பரம்பொருளைவிட் டகலாத அவ்வருளுக்கு—அபின்னா சத்தியென்றும், பிரகாசிக்குந் தன்மையுள்ள சிவசத்தியென்றும்,

ஞானமென்றும், நினைவுக் கெட்டாத சித்தென்றும் பலபெயர்களா மாறு வழங்குஞ் சம்பிரதாயத்தினையும் நன்மாணக்கனே ஆய்ந்தறி வாயாக.

[" மார்த்தாண்ட னுழியொளிபோல் அருளொன் றுண்டு" என்ற நிச்சயத்தையே—

" கதம ஆத்மேதி । யோயம் சுத்த꞉ பூத꞉ சூந்ய꞉ சாந்தாதி
லக்ஷணோக்த꞉ ஸ்வகைர் லிங்கை ருபக்ருஹ்ய꞉ ॥ தஸ்யை
தத்லிங்க மலிங்கஸ் யாக்நேர் யதௌஷ்ண்யமாவிஷ்டம்"

என்னும் ஸாமவேத மைத்ராயண்யுபநிஷத் வசனத்தினுங் கிர கிக்கலாம். பொருள்:—" ஆன்மாயார்? சுத்தன், நின்மலன், சூனி யன், சாந்தன் முதலிய இலக்கணங்க ளுள்ளவன்றான் ஆன்மா: இயல்பான இலக்கணங்களாலேயே அவனறியத்தக்கவன்: இலக்கண மிலானது இலக்கணம் அக்கினியிற் சூடுபோலச் சேர்ந்திருக்கும்" எனவாம். சிவனாகிய ஆன்மாவை நீங்காச் சிவசத்தியின் இலக்கணம் இத்தன்மைத்தே யென்பதாய் இச்சுருதிக்கு உபப்பிருங்கணமாய் இதனினும் விவரமாயுள்ள பிரமாணம் பாயிரத்தின் உ - ன் உரைக் கண்ணேயே போந்தவாறறிக. " மார்த்தாண்ட னுழியொளிபோல்" என்றதற்கே நேராக—

" ப்ரபயாஹிவிநாயத்வத் பாநுரேஷநவித்யதே।
ப்ரபாசபாநுநாதேந ஸுதராந்ததபாச்ரயா ॥ "

என்று சைவமஹாபுராண வாயுசங்கிதையின் உத்தர பாக வசனமுங் காணப்படுகின்றது. மார்த்தாண்டன், பாநு என்பன சூரியனுடைய பெயர்கள். அர்த்தநாரீச்வர மூர்த்தமும் இவ்வுண் மையை விளக்கவுளதேயாம். அபின்னை முதலிய மற்றைப்பெயர் கட்குமுரிய பிரமாணங்கள் ஈண்டும் ஆண்டுங் காட்டப்பட்டன; அவைகளே சாலும்.

சத்தி - அருளெனப்படுதல் " அருளென்ப கருணை சத்தி" எனுங் கசுர வேதுகைக் கூற்றகத்தும் அறியற்பாற்று. அபின்னை - தொகுத்தல் விகாரம். உண்டு - என்னும் வினைக்குறிப்புமுற்று, ஒருமைக்கேயன்றிப் பன்மைக்கு மாதல் " வேறில்லை யுண்டைம் பான்மூ விடத்தன " என்னுஞ் சூத்திரத்தா னமைக்க; இது " புதியனபுகுதல்" என்னும் விதித்து.] (ச)

அப்பொருளை யகண்டமென நுவலுங் காலை
யாருயிரு மாயையுந்தா மிருத்த லெங்ஙன்

செப்பிடுக வெனவினவுஞ் சங்கை யிங்கே
 செனிக்குமது தீருமா றுரைக்கக் கேட்டி
துப்புடைய வக்கினிபோ லான்மா வாண்டுச்
 சூடதுபோற் சிவந்தேசு போல மாயை
ஒப்புமுறை யாமிவற்றுட் சூடா யுள்ள
 துளுப்புறமும் பிரிவறவே செறியா நிற்கும்.

அந்தப் பொருளைச் சர்வவியாபக முடையதெனக் கூறுமிடத்து, (அதற்குள்ளே தங்கியிருப்பதாகக் கூறப்படும்) சீவர்களும் மாயையும் இருத்த லெப்படி? கூறியருளுகவென்னும் ஆக்ஷேப முண்டாகும். அது தீரும் வழியை யாங் கூறக் கேட்பாயாக; பல முள்ள நெருப்புப் போலச் சீவான்மாவும், அந்நெருப்பின்கண்ணுள்ள சூடுபோலச் சிவமும், ஒளிபோல மாயையும் உவமான முறை யாற் கூறுமிடத்து உளவாகும். குறித்த மூன்றனுள் சூடானது அந்நெருப்பிற்கு உள்ளிடத்தும் வெளியிடத்தும் நீக்கமற்று நிறைந்து நிற்கும்.

[சூடு - சுடு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர்.] (கூ)

அக்கினியாத் தேசாகக் கணிக்கி லந்த
 வழலுக்குப் பூரணமெவ் வாறே யென்று
தர்க்கமிடு வார்க்குநீ நோக்குக் கெட்டாத்
 தாபமெனுஞ் சூடருவ மாத லாலே
சக்கதனுக் கெட்டினவை களினு நீக்கந்
 தானின்றி நிறைந்திருக்கு மச்சூ டின்றி
அக்கினியு மதனொளியுந் துலங்கா விந்த
 வடைவாலே பூரணமென் றதிர்க்க லாமே.

நெருப்பாகவும் ஒளியாகவுங் கணக்கிட்டால் அந்தச் சூட்டிற்குப் பூரணத்துவங் கூறுவ தெப்படியென்று வாதிப்போர்க்குக் கட்பார்வைக் ககப்படாத அழலென்னுஞ் சூடானது அருவப்பொருளாதலிற் கட்பார்வைக் ககப்படும் (அந்தநெருப்பு ஒளியென்னும்) பொருள்களினும் அவினுபாவமாக நிறைந்திருக்கும். அந்தச் சூடில்லாமல் நெருப்பும் அதன் ஒளியும் வெளிப்பட்டுத் தோன்ற மாட்டா. இந்த நியாயத்தாற் சூட்டிற்குப் பூரணத்துவ முண்டென்று கூறுதல் கூடும்.

[இச் செய்யுளில் அழலெனும் "சூடருவம்" என்றும், அது தூலவிழிக் கெட்டாத தென்றும், தூலவிழிக்கெட்டும் பொருள் களிலு நீக்கமின்றி நிறைந்திருக்கு மென்றும் வெளியாகின்றமையால் ரு - ஞ் செய்யுளிற் சொல்லப்பட்ட சூடானது ஐம்பெரும் பூதங்களி லொன்ருய், ஒளி நிறங் காட்டாததாய், அண்டபிண்டங்களி லிருப்ப தாயுள்ள அக்கினிபூதமேயாம். இது, நீரிலுங் காற்றிலுங் கட்டை முதலியவற்றிலுஞ் சூக்குமமாயிருக்குமென்பது பின்வரும் கரு - ஞ் செய்யுளானு மறியப்படும். ஒளி வடிவின்றிச் சூடுமட்டுங் காட்டி யிருத்தலைப் பிண்டமெனு மனிதருடற்கண்ணு மறியலாம். அவ் வாறே அஃதண்டத்தினு மறியற்பாலது. ஈண்டு இச் சூடாம் பூதமே சிவமெனும் பதிக்குவமையாயிற்று. இப் பூதாதாரமாகவே நின்று யாதொரு சடப்பொருளிற் பற்றி யொளியொடு வெளிப் படும் அக்கினியே ஆன்மாவெனும் பசுவுக் குவமையாயிற்று. அவ்வக்கினியை விட்டு நீங்காச் செந்நிறமே அப் பசுவின தனாதி காரண தேகத்திற் குவமையாயிற்று. இருதிற அக்கினியின் குண மான இருதிறச் சூடுமே பதி பசுவெனு மிரண்டின் குணமான இருதிற வறிவுக்கு முவமையாயின. சடப்பொருளனைத்தும் மாயை யேயென நூல்கணுவலினும் ஒளிவடிவான சூரியனையுஞ் சந்திரனை யும் வேறு வேறுவைத் தெண்ணுமாறே சுடுங்குணமுடைய அனைத் தும் அக்கினி பூதமென நூல்கணுவலினும் ஒளிவடிவின்றிச் சூடொன்றேயுள்ளதையுஞ் சூட்டொடு பலபேத ஒளியுமுள்ளதையும் வேறு வேறுவைத் தெண்ணுதலும், அவ்விருதிற அக்கினிகளும் ஒன்றெனற்கும் இரண்டெனற்கும் இயையா அனாதி சம்பந்த அத்து விதமாயுளவெனக் கோடல்வேண்டுமெனலும் இந்நூற்றுணிபென்க. உவமிக்கப்பட்ட இருதிற அக்கினிகளையுஞ் செந்நிறத்தையும் அனாதி யாகவே யிங்குக் கோடல் வேண்டுமென்று அளவை கூறுதலைப் பின் வரு கச - ஞ் செய்யுளகத்துக் காண்க. இருளில் அக்கினி பிரகாசிப் பதுபோலச் செம்பிற் களிம்பென்ன ஆன்மாவிலுள்ள ஆணவ மலாந்த காரத்திலேயே ஆன்மதேகமான மாயை பிரகாசிக்குமெனும் பொரு ளும் ஈண்டுணர்ந்து கொள்க. மற்றும் நூனுழைந்து காண்க.] (சு)

## எ. பதி பசு பாசங்க ளுளவெனற்கு வேதாகமங்களின் சம்மதம்.

**அருவமெனு நிட்களமதன்றி யாது**
**மகண்டமென வமையாது சகள மான**

உருவனைத்துங் கண்டமென வமைத றிண்ண
முரைத்தவழ லாதியொரு மூன்று மொன்றாய்
மருவுமுறை போற்சிவந்தா னுள்ள வன்றே
வளருயிரு மாயையுமுண் டென்று தீர்த்தல்
இருவகைக்கு மொவ்வுதலி னனுதி யென்றீண்
டியம்புவது சரதமென வுணர லாமால்.

அமூர்த்தத் திரவியமாகிய நிட்களபதார்த்தமல்லாத யாதொன்றையும் அகண்டமெனக் கூறல் கூடாது: (நன்றாக யோசிக்குமிடத்துச்) சகளமான மூர்த்தத் திரவியங்களெல்லாங் கண்டப் பொருள்களாக வமைதல் உறுதி. மேற்கூறிய நெருப்பு முதலிய மூன்றும் ஒன்றோடொன்று கலந்திருத்தல் போல எஞ்ஞான்று சிவபரம்பொருளுள்ளதோ அஞ்ஞான்று தொட்டு விருத்தியடையுஞ் சீவனுமுண்டு மாயையுமுண்டென்று முடிவு செய்வதானது (வேத நெறி ஆகம நெறியாகிய) இருதிறத்திற்கும் இயைதலாற் பதி, பசு, பாசமாகிய மூன்றும் அனுதியென்று கூறுதல் உண்மையேயாகுமென வறியலாம்.

[ (𑌅𑌥 𑌪𑌰𑌾 𑌯𑌯𑌾 𑌤𑌦𑌕𑍍𑌷𑌰𑌮𑌧𑌿𑌗𑌮𑍍𑌯𑌤𑍇 । 𑌯𑌤𑍍𑌤𑌦𑌦𑍍𑌰𑍇𑌶𑍍𑌯
𑌮𑌗𑍍𑌰𑌾𑌹𑍍𑌯𑌮𑌗𑍋𑌤𑍍𑌰𑌮𑌵𑌰𑍍𑌣𑌮𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌂 𑌤𑌦𑌪𑌾𑌣𑌿
𑌪𑌾𑌦𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌵𑌿𑌭𑍁𑌂 𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌂 𑌸𑍁𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌂 𑌤𑌦𑌵𑍍𑌯𑌯𑌂
𑌤𑌦𑍍𑌭𑍂𑌤𑌯𑍋𑌨𑌿𑌂 𑌪𑌰𑌿𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌧𑍀𑌰𑌾𑌃)

"அதபராயயாததக்ஷரமதிகம்யதே। யத்ததத்ரேச்ய
மக்ராஹ்ய மகோத்ர மவர்ண மசக்ஷுஃ ச்ரோத்ரம் ததபாணி
பாதம் நித்யம் விபும் ஸர்வகதம் ஸுஸூக்ஷ்மம் ததவ்யயம்
தத்பூதயோநிம் பரிபச்யந்தி தீராஃ"

என்னும் அதர்வணவேத **முண்டகோபநிஷத்** வசனங்கள்.—"அவ்வக்ஷரம் எதனுற் கூறப்படுகிறதோ அது பரையெனு ஞானம்: எது பார்க்கப்படாததாய்ப் பற்றப்படாததாய்க் கோத்திரமிலதாய் வர்ணமிலதாய்க் கண் காது கை கால் இலதாய் நித்தியமாய் விபுவாய் எங்கணு மிருப்பதாய் அதி சூக்குமமாய் அழிவிலதாய் எல்லாப்பூதங்கட்குங் காரணமாயுள்ள அந்த அக்ஷரத்தைப் பெரியோர் காண்கின்றனர்" எனுந் தமிழைத் தருமாற்றானும், **திருஞானசம்பந்தசுவாமிகளது** தமிழ்மறை—"பெண்ணுரு வாணுரு வல்லாப் பிரம புரநகர் மேய—அண்ணல்" என்று கூறுமாற்றானும், **திருநாவுக்கரசுகளது**

தமிழ்மறை—" பெண்ணல்லை யாணல்லை பேடுமல்லை பிறிதல்லை யானு யும் பெரியாய் நீயே......ஒற்றியூ ருடைய கோவே" என்றும், " விற கிற் றீயினன் பாலிற் படுநெய்போன்—மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்" என்றுங் கூறுமாற்றானும், தமிழ்மறைச் சிவபுராணம் " நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுர்வே" " காக்குமெங் காவலனே காண்பரிய பேரொளியே" என்று கூறு மாற்றானும், (ஶிவம்பராத்பரம் ஸூக்ஷ்மம் நித்யம்) " சிவம் பராத்பரம் ஸூக்ஷ்மம் நித்யம்" என்று வாதுளோத்தர சுத்தாக்ய தத்வபேதபடலங் கூறு மாற்றானும், சிவஞானசித்தியார்—

> " மொய்தரு பூத மாதி மோகினி யந்த மாகப்
> பொய்தரு சமய மெல்லாம் புக்குநின் றிடும்பு கன்று
> மெய்தரு சைவ மாதி யிருமூன்றும் * வித்தை யாதி
> **யெய்துதத் துவங்க ளேயு மொன்றுமின் றேம்மி றைக்கே.** "

என்று கூறுமாற்றானும் பார்க்கப்படும் உருவப்பொருளெல்லாஞ் சகளமான கண்டப் பொருளாம்: போந்த செய்யுளில் வெளிப்பட்ட அருவமெனு நிட்களமொன்றே அகண்டப்பொருளாம்: அவ் வகண்டப் பொருளே பரமசிவமென்றல் உறுதியுறுவதாயிற்று. பிரமன், விட்டுணு, உருத்திரன், மகேசனென்னும் உருவநிலை ச - ம்; விந்து, நாதம், சத்தி, சிவமென்னும் அருவநிலை ச - ம்; சதாசிவனென்னும் உருவருவநிலை க - ம் ஆகிய வொன்பது திருமேனியுஞ் சகளமென்பதி லடங்குதலின் இவற்றையெல்லாம் உருவாகவும், சகளமல்லாத நிட்களமொன்றையே அருவாகவுங் கோடல்வேண்டுமென்றல் இந்நூற் குடம்பாடென்பதூஉம்; அஃது " அத்திறத்த இப்புருடன் கலா சம்பந்த மிலாதவன் (= நிட்களன்) : அமிருதனாயிருக்கின்றனன்" என்னும் பொருளை, (ஸஏஷோகலோம்ருதோபவதி) " ஸஏஷோக லோம்ருதோவதி" எனும் பிரச்னோபநிஷத ஈற்று வசனங்களும், " இந்தத் தேவன் (= சிவன்) ஈசானமந்திர சிரமுள்ளோன், தற்புருட மந்திர முகமுள்ளோன், அகோரமந்திர இருதயமுள்ளோன், வாம மந்திர குய்யமுள்ளோன், சத்தியோசாத மந்திர வுடம்புள்ளோனாகலிற் சகளனென்று சொல்லப்படுவன்; அந்தத்தேவனுக்குச் சகளத்துவம் உண்மையிலில்லை : ஆன்மாவுக்குச் சரீரம் எப்படிக் கற்பிக்கப்பட்டதோ (அப்படியேயாம்.)" எனுந் தமிழை—

* **வித்தையாதி யெய்து தத்துவங்கள் = சுத்தவித்தை, ஈசுரம், சாதாக்கியம், சத்தி, சிவமென்னுஞ் சுத்தமாயா தத்துவங்கள்.**

([illegible]
[illegible]
[illegible])

" ஈசாநமூர்த்தாபும்வக்த்ரோ கோர ஹ்ருத்வாம குஹ்யக ꞉ ।
ஸத்யோ மூர்த்திச்சதேவோயம் ஸகல ꞉ பரிபட்யதே ॥
ஸாகல்யந் நார்த்ததஸ்தஸ்ய கல்பநீயம் யதாத்மந ꞉ । "

எனும் பௌஷ்கராகம தந்த்ரமந்த்ரோத்பத்தி படலச்சுலோகங்களும், " ஆன்மா வியாபகமுளது: இவ்வான்மா மூர்த்த மிலியாயிருக்கின்றமையின் வியாபகமுளது : ஆகாயம் எத்தன்மைத்தோ அத்தன்மைத்தே " எனுந்தமிழை—" வ்யாபகாத்மந꞉, வ்யாபகோயமமூர்த்தத்வாத் யதாவ்யோம " எனும் மேலையாகம வாக்கியங்களுந் தருமாற்றான் உறுதிப்படு மென்பதூஉம் பெறுக. இங்ஙனம் ஆன்மாவென அறிவுறுக்கப்பட்டது சிவான்மாவே. அதற்கே உண்மையின் மூர்த்தமின்மை சாதிக்கப்படுதலால் அதனை ஆளும் பதிக்கு அமூர்த்தலக்ஷணங்கூறுதல் ஐயமற்ற முடிபேயாம். போந்த முண்டகச் சுருதிவசனங்களில் அக்ஷரம் - எனவுள்ள சொல், சிவபரம்பொருளையுணர்த்துமென்பது([illegible]) " யதாபச்ய꞉ பச்யதே ருக்மவர்ணம் கர்த்தாரமீசம் புருஷம் ப்ரஹ்மயோநிம் । " என்று அம்முண்டகந்தானே பின்னர்க்கூறிய வசனங்களி லறியக்கிடக்கின்றது. இதன் தமிழ்:—" பச்ய꞉=பசுவானவன் (=சீவன்) எஞ்ஞான்று பொன்வண்ணனும் கருத்தாவாயும் புருடனுயுந் தோற்றங்கட்கெல்லாங் காரணமாயுமுள்ள ஈசனைக் காண்கின்றனனோ " எனவாம். (ஸ்ரீவ[illegible]) " சிவமக்ஷரமவ்யயம் " என்று அதர்வணவேத பஸ்மஜாபாலோபநிஷதம் பகர்தலுங்காண்க. அக்ஷரம்=அழிவில்லாதது. புருட சத்தமுஞ் சிவபரம் பொருளையே குறிக்கின்றதென்பது போந்த வசனத்தானுமறியவுள்ளதே. இதுவேயுமன்றி, " தத்புருஷமந்த்ரம் " என்பதும், " தத்புருஷாய வித்மஹே மஹாதேவாய தீமஹி । தந்நோருத்ர꞉ ப்ரசோதயாத் ॥ " என்னுங் காயத்திரியும் பிறவும் வேதவாக்கியங்களாய் நின்று அதனை யுறுதிப் படுத்துதலுமோர்க.

பாசமென்பதைக் குறிக்குமாற்றான் " மாயை " எனவே இனம்பற்றி ஆணவ கன்மங்களுங் கொள்ளப்படும். " நிட்களமதன்றி " என்பதில் அது -

பகுதிப்பொருள் விகுதி. இவ்வாறு வருவனவற்றிற்கும் இவ்வுரிமை கொள்க. "அன்றே" என்பதில் அன்று - சுட்டடியாப் பிறந்த இடைச்சொல்.] (எ)

கயிறுதனி லரவதுதான் றோன்றல் போலக்
கனபிரம மதின்மூன்றும் பொய்யென் றாலுங்
கயிறான பிரமமது வுள்ள போழ்தே
காணவுள்ள வரவான சகசீ வேச
நியதிகளு மூளவென்று தேர்த லாலிந்
நேர்மைநவின் மறையீறும் பதியு மாசார்
உயிரோடு பாசமது மனுதி யென்றே
யுணர்த்தாக மத்தீறு மொன்றே யன்றே.

**க**யிற்றின் கண்ணே (விவர்த்தமாகச்) சர்ப்பமானது தோன்றுதல்போல மகத்தான பிரமத்தில் (சகசீவபரங்களாகிய) மூன்றும் பொய்யாகத் தோன்றுமென்று சொல்லிக்கொண்டாலும் (அந்தக்) கயிறான பிரம முள்ள பொழுதே தோன்றவிருக்கின்ற (அந்தச்) சகசீவ பரப் பாகுபாடுகளும் உள்ளனவென்று (நாம்) தெளிவுறுதலால், இக் கிரமத்தைக் கூறும் வேதாந்தமும்; பதியும், பாசத்தோடு கூடிய பசுவும், பாசமும் அனுதியென் றறிவுறுக்கும் ஆகமமுடிவும் ஒரு முடிவே.

[" கயிற்றினிடத் துண்டாம் பாம்புத் தோற்றம்போலப் பிரபஞ்சாதாரப் பிரமசத்து மாத்திரமிருக்கின்ற தாதலிற் சகத்தில்லை" எனுமருத்தந் தரத்தக்க—

" ஸர்ப்பாதௌரஜ்ஜுஸத்தைவ ப்ரஹ்ம ஸத்தைவ கேவலம் ।
ப்ரபஞ்சாதார ரூபேண வர்த்ததேதோ ஜகந் நஹி ॥"

என்னுஞ் சுலோகம் ருக்வேத ஆத்மபோதோபநிஷத்திலுளது. இந்த ரஜ்ஜுஸர்ப்ப (=கயிற்றுப்பாம்பு) உவமானம்.—நிராலம்பம், நாதபிந்து, தேஜோபிந்து, யோகசிகை, அந்நபூர்ணை, கடம், ருத்ர ஹ்ருதயமென்னும் உபநிஷத்துக்களிலுங் காணப்படுத லறிக்கியும், "சிதாகாசமாயுள்ள என்னிடத்திற் சீவன் ஈச னென்பார் கற்பிக்கப் பட்டிருக்கின்றனர் (=அன்னோருண்மையி லிலர்)" எனு மருத்தந் தரத்தக்க "ஏவம் மயி சிதாகாசே ஜீவேசௌ பரிகல்பிதௌ ।" என்னும் வசனம் யஜுர்வேத வராஹோபநிஷத்திலுளது நோக்கியும் " இந்நேர்மை நவின் மறையீறும்" என்றார்.

ஈசனென்றதையே பரமென்றுங் கழறுப. ஈச சத்தம் பிரமத்தின்மேற்றென்பதற்காய பிரமாணங்கள் மேலே வந்துள்ளனவாகவின் ஈசனைக் கற்பிதமென்றல் சாலாது. மற்றென்னைகொலென்னின்,—ஈசுரகாரிய மாயையும், அதன் காரணமுமே அவ்வாறு கூறப்பட்டன வென்பது மேலையுபநிஷதமே (ஶாயா தத்கார்யவிலயெ நெஶ்வரத்வம் நஜீவதா ।) "மாயாதத் கார்யவிலயேநேச்வரத்வம் நஜீவதா ।" என்று கூறுமாற்றான் நிலைபெறுதலி னென்க. பொருள்:— "மாயையும் அதன் காரியமும் இலயமடைந்துவிடின் ஈசுவரத்துவமின்று: சீவத்துவமுமின்று" எனவாம். முன்னர்க் கூறிய புரோவாதத்துக்கு இஃது அனுவாதமாகும். இவ்வுண்மையுணராது ஈசுரனென்பது பொய் எனுங்கூற்றெழுமாயின் அதனை,உனதுடம்பிலுள்ள சேதனம் மெய்ப்பொருளாக; ஈசுரசேதனம் மட்டும் பொய்யாதல் யாண்டையதெனக் கடாவிமறுக்க. ஈசுரனது உருவை அவ்வாறு கூறலாமெனின், அதுவும் பாதகமன்று; என்னை? ஈசுரனுக்கு உரு உண்மையிலில்லை யென்பதற்காய பிரமாணங்கள் முற்செய்யுளுரைக்கண்ணேயே வந்துள்ளனவாகலின்: சகமும், உருவுடைச் சீவேசுரர்களுமிருந்தும் முன்னிலைக் குறிபற்ற சுவானுபவத்தின்கண்ணே அவற்றெதுவுந் தோன்றுமே சிதாகாச பூரணமொன்றே வெளிப்பட்டு நிற்றலின். இவ்வனுபவமுள்ள சுத்தான்மாவுக்கு மாயாகாரிய தத்துவங்கள் நீக்கமாகலின் அவைபற்றையும், மாயாகாரணம் வறுக்கப்பட்ட வித்தொக்குமாகலின் அதனையும் இலயமாகச் சுருதி கூறுதலேற்புடைத்தே. சீவனை யின்மைப்படுத் துரைத்தலு மிவ்வழி பிடித்தே யென்றற்கு ஈசுவரத்துவ மின்றென்ற மேலைச்சுருதிதானே அங்ஙனஞ் சீவத்துவமு மின்றென்றதே தகு சான்றாகும். சீவத்துவம்=சீவபோதம்; இதுவே நல்வினை தீவினைகட்குரிய சீவசுதந்திரம். சீவனை வினைவழியே பிரேரிக்கும் ஈசுவரகாரிய மிலதாயின் அப்போதஞ் சீவியாது வினைக் கருவிகளு மியங்காவாகலிற் 'சீவத்துவமுமின்று' என்றதெனப் பொருள் விரித்துக் கொள்க.

இவ் வராஹோபநிஷதம் "சகத்திற்கு விவர்த்த (உபாதான) காரணமெதுவோ அந்தச் சித்து நானென்றெப்பொழுதும் மௌனத்தை ஆச்சிரயித்திரு" எனும் பொருளைப்பயக்குமாறு "சித்விவர்த்த ஜகதோஸ்ய காரணம் தத்ஸதாஹமிதி மௌநமாச்ரய।" எனும் வசனத்தையும் வெளியிடுகின்றது. இவ் விவர்த்தோபாதான காரணமே செய்யுளிற்போந்த கயிற்றரவமாகும். இங்ஙனம் கயிற்றுத்

தானத்திற் பிரமத்தையும், அரவத்தானத்திற் சகசீவபரங்களையுங் கோடல்வேண்டு மென்றுங் கூறுப. அங்ஙனமாயின், அரவுருவனைய கயிறும், அதனிலுள்ள நீட்சி வளைவு முதலிய விகாரங்களுமே அந்தப் போலி அரவு தோன்றுதற்குக் காரணமாமாறு பல்வேறு வகைப்பட்ட விகாரசகந் தோன்றுதற்குப் பிரமமே காரணமாகுமெனுந் தீர்வையு மேற்படும். படவே, பிரமம் எவ்வித விகாரமுமில்லாத நிர்விகாரம், சுத்தமென்றல் வெற்றுரையாமால்: சீவர்களின் நன்று தீதுணர்ந்து நியாயங்கொடுத்தலும் பிரமத்திற் கில்லாது போமால்: முன்னுக்குப்பின் முரணக் கூறுவதுமாமால். மற்றென்னைகொலோ அச்சுருதி வசனத்துக்குப் பொருளென்னின்,—வியாபகப் பிரம சன்னிதானத்தில் வியாப்பிய பதார்த்தமாய்ப் பிரபஞ்ச காரிய விகார காரணமாயுள்ள மாயையே கயிற்றுத் தானமும், பிரபஞ்சமே அரவத்தானமுமெனப் பிரமதரிசனஞ் செய்வார்க்குச் செய்யுஞான்று தோன்றுமென்றல் பொருளாகு மென்க. அங்ஙனமே உயிரிலதாயின் உடம்பழிதல்போல உடங்கியைந்து நிற்கும் ஆதாரப் பிரமமிலதாயின் அம்மாயையு நில்லாதெனுஞ் சிரேட்ட நியாயம் பற்றிப் பிரமத்தையே உபாதான காரணமென்றதெனினுமாம். சேற்றிற் கிடக்குங் கிழங்கினின்றெழுந் தாமரையை அச் சேற்றிற்றோன்றும் பொருளெனச் சொற்றதுபோலச் சொற்றதெனினுமாம். இதனைப் 'பங்கஜ நியாயம்' என்ப. (வஜூ௦) பங்கம்=சேறு. 'மாயையும், அதன்காரியமும்' என்றிந்த உபநிஷதமே கூறினதும் மேலே வந்துளது. அதனானும் உபாதான காரணம் மாயையெனு நியாயம் உறுதிப்படுகின்றது.

" அநாத்மமூலம் மாயா। ஸாசப்ரஹ்மண்யாகாசே
மேகாதிரிவத்ருச்யதே। மாயா நாம அநாதிரந்தவதீ
ப்ரமாணப்ரமாண ஸாதாரணா நஸதி நாஸதீ
நஸதஸத்ய நிர்வாச்யா "

என்னும் யஜுர்வேத ஸர்வஸாரோபநிஷத் வசனங்களும் " ஜடபதார்த்த (= அறிவில்லாத பொருள்) மூலந்தான் மாயை: அவள் ஆகாயத்தின்கண் மேகம் முதலியவற்றைப்போலப் பிரம சன்னிதியிற் காணப்படுகின்றனள்: அம்மாயை அனாதி: முடிவையுடையவள்: பிரமாண அப்ரமாணங்கட்குப் பொதுவாயுள்ளவள்: இருக்கிறவளுமல்லள்: இல்லாதவளுமல்லள்: சத்தியமுமல்லள்: அசத்தியமுமல்லள்; வாக்குக் கெட்டாதவள்" என்னு மருத்தந் தருதலின், இதன்மேல் " யாஙவித்யதே வஸ்துத ஃ ஸாமாயா, தத்ஸ்வரூபமஜ்ஞாநம்।" என வரூஉம் அந்த உபநிஷத் வசனத்திற்கு " எவள் ஞானப்

பொருள் நிலையிலில்லையோ அவள் மாயை: அவளது சுவரூபம் அஞ்ஞானம் (= ஜடம்)" எனும் பொருள் கொள்ள வேண்டி யிருத்தலின் மேலை நியாயமே வலியுறுதல் காண்க. சத்தியமுமல்ல னென்பதற்குக் காரியக்கே டுடைமையும், அசத்தியமுமல்ல னென்பதற்குக் காரண முடைமையும் பொருளெனக் கொள்க. இந் நியாயம்— "காரியங்க ளழியுங் காரணங் கிடக்கும்" என்னுஞ் சிவஞானசித்தியார் உ - ஞ் சூத்திரக் கூற்றகத்தும் பெறலாம். இன்னு மிந்நியாயம்—

(𑌜𑍍𑌞𑌾𑌜𑍍𑌞𑍌 𑌦𑍍𑌵𑌾𑌵𑌜𑌾𑌵𑍀𑌶𑌨𑍀𑌶𑌾𑌵𑌜𑌾 𑌹𑍍𑌯𑍇𑌕𑌾 𑌭𑍋𑌕𑍍𑌤𑍃𑌭𑍋𑌗𑌾𑌰𑍍𑌥
𑌯𑍁𑌕𑍍𑌤𑌾 । 𑌅𑌨𑌨𑍍𑌤𑌶𑍍𑌚𑌾𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌶𑍍𑌵𑌰𑍂𑌪𑍋 𑌹𑍍𑌯𑌕𑌰𑍍𑌤𑌾)

"ஜ்ஞாஜ்ஞௌத்வாவஜாவீசநேசாவஜாஹ்யேகாபோக்தருபோகார்த்தயுக்தா। அநந்தச்சாத்மா விச்வரூபோஹ்யகர்த்தா"

எனச் சுவேதாச்வதரோபநிஷத்தினும், அதர்வணவேத நாரத பரிவ்ராஜகோபநிஷத்தினும் வருமந்திரங்களானும் பெறப்படுகின்றது. பொருள்:—"அறிவுளானெனும் ஞன்னும், அறிவிலானெனும் அஞனுமாமிருவரும் உற்பத்தி யில்லாதவர்களாகிய ஈசனும் அநீசனுமாவர்: உற்பத்தியில்லாத ஒருத்தி (= மாயை), (சீவர்களாகிய) போக்தாக்களுக்குப் போகத்தின்பொருட்டு (தனு கரண புவனங்களாக)க் கூடுகின்றனள்: ஆன்மாக்கள் பல: அவை உலக வடிவுடைமையாற் கருத்தாவல்ல" எனவாம். இம் மந்திரங்களில் 'ஈசனெனும் பதியும், அநீசனெனும் பசுவும் உற்பத்தி செய்யப்படாத அனாதி' எனும் பொருளுறக் கூறிய விடத்தே மாயையும் 'உற்பத்தியில்லாத ஒருத்தி' எனக் கூறப்பட்டமையின் அம்மாயை சடமேயாயினும் ஏனைய இருபொருளையும் போன்ற அனாதிகாரணப் பொருளெனல் பெறப்படுதல் காண்க. இப்பொருள் பற்றியன்றோ "பதி பசு பாச மெனப்பகர் மூன்றிற்—பதியினைப் போற்பசு பாச மனாதி—பதியினைச் சென்றணு காப்பசு பாசம்—பதியணு கிற்பசு பாச நிலாவே." எனத் திருமந்திரமுங் கூறுவதாயிற்று. இச்செய்யுளின் ஈற்றடிக்குப் 'பதிஞானத்தைப் பசுவடைந்தக்கால் ஆணவாதி பாசங்கள் தம் பிரபாவத்தோடு நிற்கமாட்டா. அங்ஙனடங்கிவிடும்' எனும் பொருள் கொள்க. காரியக்கேடு கூறுமிடத்தும் இல்லது வாராது, உள்ளது போகாதென்னுஞ் சற்காரிய வாதத்திற்கேற்ப அஃது அதிசூக்குமமா யுண்டென்றே கோடல்வேண்டும். காரணத்தின் றன்மை காரியத்திற்கு மிருத்தல்வேண்டு மென்பதூஉம் இச்சூக்கும விவகரிப்பிற் சித்திக்கும். இந் நியாயத்தைப் பஞ்சப்ரஹ்மோபநிஷ

தம்—"காரணம் காரியத்தினின்றும் வேறன்று: காரியம் அதன் காரணரூபத்தில் எஞ்ஞான்றும் நிலைபேறுறுகின்றது: இதற்குவேறு கூறுதல் தவறே" எனும் பொருடோன்ற (𑌕𑌾𑌰𑌣𑌾𑌦𑍍𑌭𑌿𑌨𑍍𑌨𑌰𑍂𑌪𑍇𑌣 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂𑌕𑌾𑌰𑌣𑌮𑍇𑌵𑌹𑌿 । 𑌤𑌦𑍍𑌰𑍂𑌪𑍇𑌣 𑌸𑌦𑌾𑌸𑌤𑍍𑌯𑌂 𑌭𑍇𑌦𑍇𑌨𑍋𑌕𑍍𑌤𑌿𑌰𑍍𑌮𑍃𑌷𑌾𑌖𑌲𑍁 ॥) "காரணாபிந்நரூபேண கார்யம்காரணமேவஹி। தத்ரூபேண ஸதாஸத்யம் பேதேநோக்திர் ம்ருஷாகலு॥" என்று கூறுதலின் இனிது பெறுக. ஆயினேல், சிவபரம் பொருளைக் கூறுமிடத்து "ஊனுயுயி ரானுயுட லானுயுல கானுய்—வானுய்நில னுய்கட லானுய்மலை யானுய்" எனச் சுந்தரமூர்த்தி சுவாமிகளது தமிழ்மறையிலும், "வானுகி மண்ணுகி வளியாகி யொளியாகி—யூனுகி யுயிராகி" என மாணிக்கவாசகரது தமிழ்மறையிலும் புக்க மொழிகட்கும், இவைபோன்ற பிறமொழிகட்கும் அருத்த மென்னை கொலென்னின்,—அப் பொருளான அகண்ட விபாபக சித்துக் கண்டப் பொருளா மெவற்றினும் அவ்வப் பொருளளவாகவுங் கூடி ஆதார அந்தர வத்துவாக நிற்றலின் அத்திறமொழிகள் புக்கன வென்க. அன்னண நிற்பினும் அஃது உப்புநீ ருறைமீன் உப்பேறு திருக்குமா றிருக்குமென்க. "மற்றொருவன் கன்மபலத்தை யுண்ணுமற் (சாக்ஷி மாத்திரமாய்ப்) பார்த்துக்கொண் டிருக்கின்றனன்" எனும் பொருளுற (𑌅𑌨𑌶𑍍𑌨𑌨𑍍𑌨𑌨𑍍𑌯𑍋 𑌅𑌭𑌿𑌚𑌾𑌕𑌶𑍀𑌤𑌿) "அநச்நந்நந்யோபி சாகசீதி" என்று சுருதியுங்கூறுகின்றது. இவ்வசனம் சுவேதாச்வதரம், முண்டகமெனும் உபநிஷதங்களிலுளது. இந்நிச்சயம்—ஊனுகி யுயிராகி யெனுமொழிகளைத் தொடர்ந்து "உண்மையுமாயின்மையுமாய்" என வருமொழிகளானும், "கொள்ளும்" என்றற் றொடக்கத்துத் திருவாசகத்தில் "நள்ளுங் கீழுளு மேலுளும் யாவுளு—மெள்ளு மெண்ணெயும் போனின்ற வெந்தையே" என வருமொழிகளானும் உறுதிப்படும். இதுகாறும் விளக்கப்பட் டிதன்மேலும் அட்டமூர்த்தமென விளக்கப்படுமொரு நியாயத்திற்றுனே சில உபநிஷத்துக்களிற் கூறப்பட்ட பிரதிபிம்பம், பிம்பப் பிரதிபிம்பம், ஜலசந்த்ரன், கடஜலபாநு, கடாகாச மஹாகாசம் முதலிய திருட்டாந்த நியாயமெல்லாம் அடங்கிவிடு மென்பதும், அவை பிரமம் எப்பொருளினுமிருந்தும் ஒரு தொடக்குண்ணு திருத்தலைக் காட்டு மென்பது மறிக. பதியை விட்டு நீங்காப் பொருளனைத்தும் பாசம், பசு வென்பவற் றடங்கும். அவை அப்பதிக்குப் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், சந்திரன், சூரியன், சீவான்மா வெனும் அட்

டமூர்த்தங்களாயிருத்தலின், அப்பதியினை எப்பொருளாய்க் கூறினுங் கூறலாம்; அது மேற்கூறப்பட்ட அருத்தத்திலேயே பொருந்தும். இதுவேயுமன்றி, "சிறப்பினும் பொருளினுங் குணத்தினு முண்மை—மறுத்துப் பிறிதுரைப்ப தவநுதி யாகும்" என்னுந் தண்டியலங்காரச் சூத்திரத்தின்படி பொருளின துண்மையை மறுத்துப் பிறிதொன்றாக வுரைத்த பொருளவநுதி யென்னுமோ ரலங்காரமெனினுமாம். "நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்—புலனாய மைந்தரோ டெண்வகையாய்ப் புணர்ந்துநின்றான்" என்னுந் திருவாசகத்தானே அவ் வட்டமூர்த்தங்களை யறிக. (வைதஉாத்ரு ஶிஉமூஸவ௰) "ஐததாத்ம்யமிதக் ஸர்வம்" எனச் சாந்தோக்யோபநிஷத்தின் ௬-ம் பிரபாடகத்து அ-ங் கண்டங் கூறுங் கூற்றும் அது. பொருள்:— "அந்த இச் சத்தான ஆன்மாவையுடையதே இந்த (உலகு) எல்லாம்" என்று உத்தாலகர் தம்முடைய புத்திரனாகிய சுவேதகேதுவுக்குச் சொல்லினர் எனவாம். (ஆத்மாதஸ்யாஷ்டமீ மூர்த்தி: ஶிவஸ்யபரமாத்மந: । வ்யாபிகேதரமூர்த்தீநாம் விஶ்வம் தஸ்மாச்சிவாத்மகம் ॥) "ஆத்மா தஸ்யாஷ்டமீ மூர்த்தி: சிவஸ்யபரமாத்மந: । வ்யாபிகேதர மூர்த்தீநாம் விச்வம் தஸ்மாச் சிவாத்மகம் ॥" என உபப்பிருங்கணமுங் கூறிற்று. இதன் றமிழ்:— "(பிருதிவியாதி ஏழு) இதர மூர்த்திகளிலும் வியாபித்து (=மேம்பட்டு) ள்ள ஆன்மாவானது சிவமாகிய பரமான்மாவினது அ-வது மூர்த்தியாகும்; அதனால் உலகம் சிவமே" எனவாம். இது சைவமஹாபுராண வாயுசங்கிதையின் உத்தரபாகத்தது. நிமித்தகாரண மொன்றுமே சிவத்திற் குரித்து, உபாதான காரணம் உரித்தன் றென்பதாக ஈண்டுரைக்கப்பட்ட நியாயம்—"ஊர்ணநாபி (=சிலந்திப்பூச்சி) யானது எப்படி நூலைச் சிருட்டிக்கின்றதோ, பூமியி லெப்படிப் பல ஓடதிக ளுண்டாகின்றனவோ, புருடன் (=மனிதன்) மேனிமீ தெப்படித் தலைமயிர் உடம்புமயி ருண்டாகின்றனவோ அப்படியே பிரமமாகிய அக்ஷரத்திலிருந்து யாவுமுண்டாகின்றன" என்பதற்காய—

"யதோர்ணநாபிஸ் ஸ்ருஜதே க்ருஹ்ணதேச யதாப்ருதிவ்யா
மோஷதயஸ் ஸம்பவந்தி । யதாஸத: புருஷாத் கேசலோமாநி
ததாக்ஷராத் ஸம்பவதீஹவிச்வம் ॥"

என்னும் முண்டகோபநிஷத் வாக்கியங்களுக்கு முரண்படாதோவெனின்,—படாது. என்னை ? அறியலுறுவார்க்கு அந்நூலும்,

மயிர்களுஞ் சித்தல்லாத அசித்தாயிருத்தலைக் கொண்டே அவை, உடம்பாகிய அசித்திலிருந்து பரிணாமமாக வந்தன : உயிராகிய சித்திலிருந்து வந்தனவல்ல : சித்துப் பரிணமியாதென நனி நிச்சயிக்கப் படுதலின். ஒட்டிவிடயத்தும் இதுவே கோடற் மரபு. குடத்துக்கு மண்ணை உபாதானகாரணம் (= முதற்காரணம்) என்றும், குயவனை நிமித்தகாரண மென்றும், குயவன் றிகிரி முதலியவற்றைத் துணைக் காரணமென்றுங் கூறிக்கொள்ளும் உவமானம் போல்வனவெல்லாம் உவமேயத்தி னினிது பொருந்தமாட்டா. இவ்வூர்ணநாபி யுவமானமே அவ்வாறு பொருந்தவுளது. என்னை? குயவன் மண்ணிற்கு வேறா யோருடம்பினனா யிருக்குமாறு சிவம் இராமே யெப்பொருட்கண்ணும் உடங்கியைந்து வியாபியாய் நிற்றலின் ; தோற்றுவித்த விடத்தே யொடுக்குதலின். ஊர்ணநாபியினுடம்பே உபாதானகாரணமும், அதன்கண்ணுள்ள வுயிரே நூலினைச் செய்யு நிமித்தகாரணமுமெனல் இங்ஙனஞ் சித்திக்கின்றபடி உலகெலாம் விசிட்டமாக வியாபித்து அவற்றை யுடம்பாகக்கொண்டு நிற்குஞ் சிவத்திற்கு உபாதான காரணங் கூறுதலும் ஒருவகைப் போலி நியாய மாமேயன்றி யுண்மையாக மாட்டாது. அந்த வியாபகத்தை, (தெநெடிஉஂவ-ஹணஂ வாரஷெணஸவஂ) "தேநேதம் பூர்ணம் புருஷேணஸர்வம்" என்று கூறிக்கொண்டே மேலே காட்டப்பட்ட வாக்கியங்களை முண்டகோபநிஷதம் மொழிதலின் யான் கூறிய வுண்மை நியாயமே பொருந்தும். வடமொழியின் றமிழ் :—"அந்தப்புருடனால் இவையெல்லாம் வியாபிக்கப்பட்டுள" எனவாம். "ஈசாவாஸ்ய மிதக்ஸர்வம் யத்கிஞ்ச ஜகத்யாம் ஜகத்।" என்னும் ஈசாவாஸ்யோபநிஷதப் பிரதமவசனமும், "விச்வம் பூதம் புவநம் சித்ரம் பஹுதா ஜாதஞ் ஜாயமாநஞ்சயத்। ஸர்வோ ஹ்யேஷருத்ரஸ் தஸ்மைருத்ராய நமோஅஸ்து।" என்னுந் தைத்திரீயாருணசாகை நாராயணவசனமும் இதனை யினிது விளக்கிக் கூறுவனவாயின. முறையே பொருள் :—"உலகத்தில் எஃது எஃது உள, இந்த எல்லாமான வுலகம் ஈசனால் வாசஞ்செய்யப்பட்டுளது (= எல்லாம் ஈசனுடைய வுடைமை)" எனவும் ; "சித்திரமாயும், வித்தாரமாயும், இடமாயும், பலவகையாயும் பிறந்திருக்கின்ற பிறக்கும் உலகமெதுவோ அஃதெல்லாம் உருத்திரனே : அத்தகைய வுருத்திரனுக்கு நமற்காரம்" எனவுமாம். "அந்தச் சத்தாயுளது நான் அனேகமாகத் தோன்றுவேனென்று அக்கினி (= தேஜஸ்) யைச் சிருட்டித்தது : அந்த அக்கினி

நான் அனேகமாகத் தோன்றுவேனென்று அப்புவைச் சிருட்டித்தது" எனுந் தமிழைத்தரத்தக்க "ததைக்ஷதபஹுஸ்யாம் ப்ரஜாயேயேதி தத்தேஜோஸ்ருஜதத்தேஜ ஐக்ஷதபஹுஸ்யாம் ப்ரஜாயேயேதி ததபோஸ்ருஜத" எனுஞ் சாந்தோக்யோபநிஷத்தின் ௬-ம் பிரபாடக வசனத்திற்கு மேற் கூறியவாறு பிரமம் அவ்வப் பொருளளவாகவுங் கூடி ஆதார அந்தர வத்துவாக, நிற்பேனென மாயா காரணத்தினின்று சிருட்டிசெய்யத் தொடங்கிற்றென்பதே பொருளெனக் கொள்வுழிப் பிரமம் உபாதானகாரணமென லேற்படாது. பிரபஞ்சம் ஊர்ணநாபியினுற் செய்யப்பட்ட நூல்வலையையும், பிரபஞ்சத்தை யொடுக்கித் தனி நிற்குநிலை ஊர்ணநாபியையு மொக்கும்.

பசுவாகிய சீவனது பந்தமே பாசமெனப்படுமென்பது கூறிப்போந்த ஜாபால்யுபநிஷத் வசனத்திற் பெறுவதோடு (வஶுவாஶ விமொக்ஷாய) "பசுபாசவிமோக்ஷாய" என்னும் அதர்வசிரோபநிஷத் வசனத்தினும், (வஶுவாஶ விமொவகஂ) "பசுபாச விமோசகம்" என்னும் பஸ்மஜாபாலோபநிஷத் வசனத்தினும், "விளையாதவொர் பரிசில்வரு பசுபாசவேதனை யொண்—டளையாயின தவிரவ்வரு டலைவன்னது சார்வாம் - - - முதுகுன்றடை வோமே" என்னுந் திருஞானசம்பந்தப் பெருமானது தமிழ்மறையினும் பெறுக. பதியைப் போலப் பசுவும் அநுதிநித்திய மென்பதற்காய பிரமாணம் இன்னும் வந்துழி வந்துழிக் காண்க. ஈண்டுப் பல்லாற்றானும் வலியுறுத்தப் பட்டதுதானே எல்லாச் சுருதிகட்கும் உடம்பாடாகும். ஆகலினன்றே "பலகலையா கமவேதம் யாவையினுங் கருத்துப் பதிபசுபாசந் தெரித்தல்" என்று சிவப்பிரகாசமுங் கூறுவதாயிற்று.

"ஆகமத்தீறு" என்றது (சரியை, கிரியை, யோகமென்பவற்றிற்கு மேலாய) ஞானபாதத்தை. எ - ன் உரையின்கண்ணே பௌஷ்கராகம வசனமுங் காட்டப்பட்டது. "எவன் பிரபஞ்சத்தையுஞ் சிவனையும் (சிவசத்திபால் அதுவதுவாய் நின்று) அறிகின்றனனோ அவன் அவ்விரண்டற்கும் வேறாய ஆன்மா" என்னும் அருத்தத்திலே "ப்ரபஞ்சசிவயோர்வேத்தா யஸ்ஸஆத்மாதயோர்ப்ருதக்।" என்று சிவஜ்ஞானபோதமுங் கூறிற்று. வேதாகமாந்தங்கள் இவ்வாறொத்துக் கூறுதலினாற்றான் "மறையீறும், ஆகமத்தீறும் ஒன்றே" என்றனர். வேதம் * மறைபொருளுடைத்தாகலின் மறையெனும் பெயர்த்து.

---

* அ௩ - ஞ் செய்யுளுரையில் இதற்குரிய சுருதி காட்டப்பட்டுளது.

போந்த விவர்த்தோபாதான காரணத்திற்கு வேருய ஆரம்போபாதானகாரணம், பரிணமோபாதானகாரண மென்பனவுங் கூறுப. அவற்றுண் முன்னையது நூல் ஆடையாதல். ஆடையாயினும் பழைய தனது சொரூபத்திலேயே நூலிருக்கின்ற தென்னு மிவ்வுபாதான காரணம்—நூலைப்போன்று பிரத்தியக்ஷமாகப் பிரமமில்லையே யெனு நியாயத்தான் மறுக்கப்படும். பின்னையது பால் தயிராதல். பால் தனது சொரூபம் மாறி மற்றொருவடிவா யிருக்கின்றதென்னு மிவ்வுபாதான காரணம்—யாண்டு மெஞ்ஞான்று மொருபடித்தாய் நிர்விகார சித்தாயுள்ள பிரமம் தயிராதல்போல விகாரசக மாகாது; தயிரும் பின்பு பாலாதல் காணப்படாமைபோலப் பிரமமுந் தனது சொரூபத்தை யடையாதெனு நியாயத்தான் மறுக்கப்படும். குடத்துக்கு முதற்காரணம் மண்ணென்பதூஉம் இவ்வுபாதான காரணமே. இஃது அசுத்தமாயையிற் பொருந்தும். படங்குடிலானுற் போல்வதெனச் சொல்லப்படு சுத்தமாயாவிருத்தியைச் சூக்கும பரிணமமென்ப. ] (அ)

ஆன்மாவுக் கஞ்ஞான மனுதி யென்று
மதுதானே யவித்தையென்றும் பாச மென்றும்
நான்மறையின் முடிவுரைப்ப தானு நன்கார்
ஞானநவி லாகமந்தா னுயிர்க்க மூக்காய்த்
தான்புகலு மலமதுதா னனுதி யென்றுந்
தவிடுமியங் குரம்போல வுளதே யென்றும்
பான்மையுடை யம்மலத்தே மாயை யென்றும்
பாசமென்றுஞ் சொலலானு மிரண்டு மொன்றே.

ஆன்மாவுக்கு அனுதியாகவே அஞ்ஞானமாகிய மலினமுண்டென்றும், அவ்வஞ்ஞானமே அவித்தை யென்றும், பாசமென்றும் வேதாந்தமென்னும் உபநிடதங்கள் கூறுதலானும்; பதி ஞானத்தைக் கூறும் ஆகமமானது ஆன்மாவுக் கழுக்காகத் தன்னுற் கூறப்படும் மலம் அனுதியென்றும், அரிசியிலே தவிட்டைப்போலும், உமியைப் போலும், முளையைப்போலும் ஆன்மாவிற் சகசமாக வுளதென்றும் பகுக்கப்படுந் தன்மையுள்ள அம்மலத்திற்றனே மாயையு முளதென்றுங் கூறுதலானும் அவ்விருதிற நூல்களும் ஒரு முடிபுடையனவே.

[முற்செய்யு ளுரையிற்போந்த சுவேதாச்வதரோபநிஷத் வசனத்தில் ‘ அஜன் ’ என்பது காணப்பட்டமையின் அஞ்ஞானமென்பது

மறியக்கிடக்கின்றது. ஞானம் - வித்தை யெனப்படுமாற்றுனே அஞ்ஞானம் அவித்தையெனப்படும். அஃதான்மாவுக்கு அனுதியாயுள்ள தென்பதை (ஆத்மஜ்ஞாநஂ விநா நஶ்யத்யாத்மஸந்நிதௌ நித்யத்வேந ப்ரதீயதே ஸமூலாவித்யையாத்மோபாதிர்யஸ்ஸைவ லிங்கஶரீர பீஜஂ ஹ்ருதயக்ரந்திரித்யுச்யதே தத்ப்ரதிபலிதஂ சைதந்யஂ யத்ப்ரகாஶதே ஸ க்ஷேத்ரஜ்ஞ: ।) "ஆத்மஜ்ஞாந ம்ருதேந விநச்யத்யாத்ம ஸந்நிதௌ நித்யத்வேந ப்ரதீயதே சமூலாவித்யேயத்யாத்மோபாதிர்யஸ் ததேவலிங்க சரீரபீஜக் ஹ்ருதயக்ரந்தி ரித்யுச்யதே தத்ப்ரதிபலிதம் சைதந்யம் யத்ப்ரகாசதே ஸக்ஷேத்ரஜ்ஞ:।" என்னும் ஸர்வஸாரோபநிஷத் வசனத்தினுலும், (அநாத்யவித்யாவாஸநயா) "அநாத்யவித்யாவாஸநயா" என்னும் யஜுர்வேத நிராலம்போபநிஷத் வசனத்தினுலுமறிக. முறையே பொருள்:— "ஆன்மஞானத்தானன்றி நசியாததும், ஆன்மசன்னிதியில் நித்தியத்துவமாகக் காணப்படுவதும், ஆன்மோபாதியாயுளதுமான மூல அவித்தை எதுவோ அதுவே இலிங்கசரீர பீஜம்: இருதயக்கிரந்தியெனப்படுவதும் அதுவே: அதனிற் பிரதிபலித்துப் பிரகாசிக்கின்ற சைதன்னியந்தான் க்ஷேத்ரஜ்ஞன்" எனவும், "அனுதியான அவித்தை வாசனை" எனவுமாம். இலிங்கசரீர மென்பது ஆண் பெண்ணென்றற்காம் அடையாளமுள்ள சூக்குமதேகம். இது பிரமனுற் சிருட்டிக்கப்படுவது; இதனது பீஜம் அத்திற அடையாளமில்லாத அனுதி காரணதேகமாகலின் அத்தேகத்தை நீங்காத் தேகியாய பசுவின்கண்ணுள்ள ஆணவ மலத்தையும் அத்தேகத்தோ டிணைத்துக் கூறுமாற்றுனே காரண தேகத்திற் பிரதிபலித்துப் பிரகாசிக்குஞ் சைதன்னியம் 'க்ஷேத்ரஜ்ஞன்' எனப்பட்டது. காரணதேகத்தின் உள் ளந்தக்கரணமெனும் புருடதத்துவமே பிரதிபலித்தற்குரிய நிலைக்கள மெனக்கொள்க. அம்மலத்திற் கட்டுண்டு கண்டப்பொருளெனவிருக்குஞ் சீவான்மா இன்ப துன்பங்களை நுகர்வான் வினையளவாய்ப் பிரவேசித்துப் புருடதத்துவமாய் நிற்றலே பிரதிபலித்தலெனப்பட்டது. க்ஷேத்ரஜ்ஞன்=சீவான்மா. இன்னு மிவ்வான்மா அவத்தைபேதங்களாற் சிதாபாஸன், விச்வன் முதலிய பலபெயர்களையுமுடையன்.

(ஸர்வஸர்வஹார ஸ்ரஷ்டா ஸம்ஹர்த்தா ஜ்ஞாநவாந்: ।
அவித்யாவ்ருதிரஜ்ஞாநீ ப்ராஜ்ஞோ யோக்ஷதாந்திபி: ॥)

"பசுத்வ பசுநீஹார ம்ருத்யு மூர்ச்சா மலாஞ்ஜனைஃ।
அவித்யாவ்ருதிருக் க்லாநி பாபமூலக்ஷயாதிபிஃ॥

என்னும் மிருகேந்த்ராகம ஜ்ஞாநபாதச் சுலோகத்தானே ஆணவ மலமானது பசுத்துவம், பசுநீகாரம், மிருத்திபு, மூர்ச்சை, மலம், அஞ்சனம், அவித்தை, ஆவிருதி ருக்கு, கிலானி, பாவமூலம், க்ஷயம் எனும்பெயர்களையுறுதல் காணப்பட்டமையாற் போந்த மூலாவித்தை, அவித்தை யென்பன இவ்வாணவத்தின் பெயர்களே யென்பதுமறிக. "பரசிவப்பொருளை யறிந்த ஞானத்தினுன் மிருத்தியுவைக் கடப் பன்" எனும் பொருள்பொருந்த (ஜ்ஞாத்வாசிவம் ம்ருத்யுமத்யேதி நாந்ய:பந்தா வித்யதேயநாய) "ம்ருத்யுமேதி நாந்யபந்தா வித்யதேயநாய" எனச் சுவேதாச்வதரோபநிஷத்திலும், "ஜ்ஞாத்வாதம் ம்ருத்யுமத்யேதி நாந்யபந்தாஃ விமுக்தயே" எனக் கைவல்யோபநிஷத்திலும் வருவசனங்களும், இக் கைவல்யத்திற்றானே "சமத்த சாக்ஷியாயிருக்குஞ் சிவனை முனிவன் தியானித்து இருளைக் கடப்பன்" எனும் ஒண் பொருள் பொருந்த "த்யாத்வா முநிர்கச்சதி......ஸமஸ்த ஸாக்ஷிந் தமஸஃ பரஸ்தாத்।" என வருவசனமும் மிருத்திபு, தமசு என்னுஞ் சொற்களானே அம் மலத்தையே விளக்குமென்க. அஃ திருள் வடிவிற்றாகலின் (தமஸ்) தமமெனப்பட்டது. அற்றாகலினன்றே "ஊனத்திரு ணீங்கிட வேண்டின்—ஞானப்பொருள் கொண்டடி பேணும்......மயிலாடு துறையே" எனத் தமிழ்மறையின்கண்ணே திருஞானசம்பந்தசுவாமிகளது திருவாக்குங் காணப்படுகின்றது. எஞ் சிய சொல்லி னெய்தக் கூறலென்னும் உத்தியால் ஈண்டிதுவுங் கொள்க. 'உரையிற் கோடல்' எனக் கூறப்படுமோருத்தியும் இதன் கண்ணேயே அடங்கவேண்டும். (மோஹமலம் ததா) "மோஹமலம் ததா" எனும் வராஹோபநிஷத்தின் ௫ - ம் அத்தியாய வசனத்தி னும் 'மலம்' என்பது வெளிப்பட்டுள்ளதன்றோ. 'பாசம்' என்ப தற்குரிய பிரமாணங்கள் முற்போந்த செய்யுளுரைக்கண்ணேயே வந்துள. (கேபாசாஃ கேமலாஃ ப்ரோக்தாஃ) "கேபாசாஃ கேமலாஃ ப்ரோக்தாஃ" எனும் ஸர்வஜ்ஞானோத்தராகம வசனத்தையும் இம்பர்க் கருதிக்கொள்க. இவ்வாறாக வேதமும் ஆகமுங் கூறுத லின் "இரண்டு மொன்றே" என்றனர்.] (௯)

சொற்றமல மாயையையொன் றிரண்டு மூன்றாச்
சொல்லினுமே விகற்பின்றிக் கருத்தொன் றேயாம்

பற்றுமல மாயையற்ற சுத்த மென்னுப்
பசுவான வான்மாவைப் பகர்வே தாந்தம்
முற்றுறுநன் முத்தியினி லொவ்வு மன்றே
முன்னுவலற் கொவ்வாது நுவல்வ தெற்றேல்
அற்றமறு முடிவான தீர்ப்பைத் தானே
யாரம்ப மதினும்வைத் தறைந்த தாமே.

மேற்கூறிய மலமாகிய மாயையை ஒன்றாகவும், இரண்டாகவும், மூன்றாகவுங் கூறினும் விகற்பில்லாத கருத்தால் அவை பொன்றே. பசுவாகிய ஆன்மாவைப் பற்றும், மலமாயையு மில்லாத சுத்த பதார்த்தமென்று கூறும் (உபநிடதமாகிய) வேதாந்த நிச்சயம் முடிவுடைய பரமுத்தி தசையிலொவ்வும். முற்பட்ட பெத்ததசையிற் கூறுதற்கு அஃதொவ்வாது. ஆயின், வேதாந்தம் அப்படிக் கூறுவதுதான் எத்தன்மையா லென்னின்,—அஃது எவ்வகைச்சோர்வும் ஒழிந்த முத்தி முடிவையே ஆரம்பத்தினும் வைத்துக் கூறியதாதல் வேண்டும்.

["கருத்தொன்றேயாம்" என்றதற்குச் சாத்துவிகம், இராசதம், தாமதமென்னும் முக்குணங்களையுங் குணமென்றே யொன்றாகக் கோடல்போற் பொருள் கொள்க. ஊர்த்துவமாயை, அதோமாயை யெனப்படுமாற்றானே மாயை இரண்டென்பதும்; சுத்தமாயை, அசுத்தமாயை, (மூலப்) பிரகிருதிமாயை யெனப்படுமாற்றானே மாயை மூன்றென்பது முணர்க. முத்திமுடிவையே பெத்தத்தினும் வைத்துக் கூறின தன்மையினை, "ஸத்பசித்கந மகண்டத்வயம் ஸர்வத்ருச்யரஹிதம் நிராமயம் | யத்பதம் விமலமத்வயம் சிவம் தத்ஸதாஹமிதி மௌநமாச்ரய ||" என்னும் வராஹோபநிஷத்தின் ௩-ம் அத்தியாய வசனத்தினறிக. தமிழ்:— "சத்திய சிற்கன அகண்டத்துவமாயும், எல்லாத் திருச்சியமுமில்லாததாயும், நோயற்றதாயும், மலமற்றதாயும், அத்வய சிவமாயு மிருக்கின்ற தெதுவோ அது நானென் றெக்காலமும் மௌனத்தை ஆச்சிரயித் திருப்பாயாக" எனவாம்.

வேதாந்த நிச்சயம் 'வேதாந்தம்' எனப்பட்டது. 'அன்றே' என்பதில் அன்று, ஏ - அசைகள். ] (௧௦)

அறிவுநிமிர் தேசிகனே முன்னஞ் சொன்ன
வக்கினியா மான்மாவிற் கூடாந் தெய்வம்

நிறைவிடுத லுண்மையெனி னென்றுக் கொவ்வு
நினைப்புறுதொண் டான்மாக்க ளளப்பி லாமற்
செறிதலினு லவற்றுளந்த வேக தெய்வஞ்
சேர்ந்திருக்குஞ் சரதமதை விளக்கிப் பின்னும்
நிறைவுநவில் விபுவாக நிற்கு நேரு
நெறியாகத் துலக்கியருள் புரிதி யென்றான்.

ஓங்கிவளர் ஞானமுள்ள சுவாமீ! முற்கூறிய நெருப்பிற்கு உவமிக்கப்பட்ட சீவான்மாவிற் கூடாத்த பரம்பொருள் வியாபித்திருத்தல் மெய்மையெனின், அஃதொரு சீவான்மாவுக்கே யொவ்வும். (அவ்வாறின்றி) உணர்வோடுங்கூடிப் பழமையாயுள்ள அவ்வான்மாக்கள் எண்ணிறந்தனவா யுலகிற் செறிந்திருத்தலினால் அவற்றுள் அந்த ஏகமாகிய தெய்வம் (அத்துவிதமாகக்) கலந்திருக்கும் உண்மையை முன்னே விளக்குவதோடு அதற்குப்பின்னரும் எங்கும் நிறைவென்று சொல்லப்படும் விபுவாக நிற்கு மொழுங்கையுங் கிரமமாகத் தெரிவித் தருள்செய்யவேண்டுமென்று சீடன் கூறினன்.

[தொண்டு=பழமை; "தொண்டென்ப பழமை யொன்பான் றொழும்பொடு வழிபா டாமே" என்னும் ணகரவேதுகை காண்க. தொழும்பும் அதுவாகலின் அதற்குரிய ஆன்மாக்க ளென்பது கருதியுந் "தொண்டான்மாக்கள்" என்று இரட்டுற மொழிதலென்னும் உத்தியாற் கூறினரெனினு மாம்.] (கக)

புருடவுடற் காதார மாக வுள்ளும்
புறம்புநிறை வெள்ளிடையுங் காலும் போல
உருமருவு முயிர்தோறு முள்ளுக் குள்ளே
யுளபிரமந் தனையந்த ரான்மா வென்றும்
பெருவெளியாம் புறத்திலுள்ள வத்துத் தன்னைப்
பேசரிய பரப்பிரமம் பரமான் மாவென்
றருமறைகள் சொல்லுமந்த விரண்டு மொன்றே
யண்டவெளி பிண்டவெளி போலுந் தேரே.

சீவதேகத்திற்கு ஆதாரமாக உள்ளிடத்தும் வெளியிடத்தும் நிறைந்துள்ள ஆகாசமுங் காற்றும்போலத் தேகங்களோடு கூடிய வுயிர்கள் தோறும் உள்ளீடாக விருக்கும் பிரமத்தை அந்தரான்மா

வென்றும், அவ்வுயிர்கட்கு வேறான பெருவெளிப்பக்கங்களிலுள்ள பொருளைச் சொல்லுதற்கரிய பரப் பிரமமென்றும், பரமான்மா வென்றும் வேதாகமங்க ளெடுத்துரைக்கும். ஆயினும் இரண்டு மொன்று தான். பிரமாண்டத்திலுள்ள ஆகாசத்தையும், தேகத்தி லுள்ள ஆகாசத்தையும் ஒத்திருக்குமென் றறிவாயாக.

[உயிர்தோறு முள்ளுக்குள்ளே பிரம மிருக்கிற தென்பதற்குப் பாயிரத்து ௩, நூல் ௩, அ - இச்செய்யுள்களி னுரைகளிற் காட்டப் பட்ட ஸ்காந்தமஹாபுராணம், கைவல்யோபநிஷதம், வாயுசங்கிதை இவற்றின் வசனங்கள் பிரமாணமாகும். (விஃரு௱ாதூநிஃருெஷு௱ம்) "சித் த்ருசாத்மநி த்ருஷ்ட்வேசம்" என்று சிவஜ்ஞாநபோதங் கூறு வதும் அது. தமிழ்:— "ஈசனை ஞானமாகிய கண்ணினால் ஆன்ம அறிவின்கண்ணே கண்டு" எனவாம். இன்னும் பல பிரமாணங் களுமுள; வந்துழி வந்துழிக் காண்க. அக் கைவல்ய மந்த்ரம்— "அத்விதீய நிட்கள பரமான்மரூபம் இருதய குகையிலுளது" எனு மருத்தந் தருதல் போலப் பல உபநிஷதங்களுந் தருதலினால் அக் குகை உடம்பின் கண்ணதோ? உயிரின் கண்ணதோ? எனுஞ் சங்கை யிங்ஙனமுண்டாதல் கூடும். அதனை, (ஶுஹாஂவ௰விஷாவாதூ நஉஹி தஃ௱ூநாக) "குஹாம் ப்ரவிஷ்டாவாத்மாநௌஹி தத் தர்சநாத்" எனப் பிரஹ்மஸூத்ரத்தில் வருஞ் சூத்திரமானது "குகையின்கட் பிரவேசித்தவை யிரண்டான்மாக்களே; அங்ஙனங் காணப்படலான்" எனுந் தமிழைத்தருநெறியானே தீர்த்துக்கோடல் வேண்டும். கன்மத்திற் கேற்பப் பல்லுடம்புகளிலும் புக்குழிதரும் பொருள் சீவான்மாவாயிருத்தலின் அஃதிருக்குங் குகை உடம்பி லுள்ள இதயத்தானமே யென்பதூஉம், அவ்வான்மாவை உடம் பாகக் கொண்டுள்ள சிவமெனும் பரமான்மாவிருக்குங் குகை அச் சீவான்மாவின் இதயமே யென்பதூஉம் இச்சூத்திரத்திற் பெறப் படுவ வாயின. இச் சூத்திரார்த்த நீலகண்ட பாஷ்யத்தும் இத்திற இரண்டான்மாக்கள் ஆக்ஷேபமறச் சாதிக்கப்பட்டன. சீவான்மாவின் இச்சா ஞானக் கிரியைகளை யியக்குமாறுண்ணிற்றலே பரமான்மப் பிரவேச மெனப்பட்டதென்க. இவ்வாறு சித்தாந்த போதகமாயுள்ள பிரஹ்மஸூத்ரத்தை மாயாவாத சாத்திரமெனச் சில ரெண்ணிக் கூறல் சால்புடைமையாதல் யாங்ஙனமெனக் கடாவுஞான்று (ஆத்ம க்ருதேঃ=) "தன்பாலிருந்து சிருட்டித்தலான்" என்று கூறி அதன் மேலெழும்பும் ஆக்ஷேபநிவர்த்தியின்பொருட்டு, (வஙிணாமாக -

பரிணாமாத்=) "பரிணாமத்தினால்" என்று கூறிய விடத்தாமென்னின், — அது சித்தாந்தமுரணாவதன்று: என்னை? முண்டகோபநிஷத்தில் உரைக்கப்பட்ட ஊர்ணநாபியெனும் பூச்சிவாயிலாகப் பிரமத்திற்கு நிமித்தகாரணமும், உபாதானகாரணமு மெய்துகின்றமையின். இவ் வுபாதானம் ஒருவகைப் போலிநியாயமென்பது முதலிய விவரமெல்லாம் அ-ன் உரையில் விளக்கப்பட்டமையால் அது கடைப்பிடிக்க. அசுத்தமாயையைத் தன்பாலடக்கி வியாபித்து நிற்கும் பிந்துவெனுஞ் சுத்தமாயையாகிய பரிக்கிரகசத்திக்கும், சிவசிற்சத்திக்கும் இருக்கையொன்றாகவும், அச் சிற்சத்தியின் வடிவம் பரிக்கிரகசத்திபாகவு மிருத்தலாற் சடமாகிய சுத்தமாயையைச் சைதன்னியமென்றே கோடல்வேண்டுமென்பதும்; அத்திற வடிவுடைச் சிற்சத்தியையே சமவாயசொரூபமாகக் கொண்டு நிற்போன் இறைவனாகலின் அவ்விறைவற்குச் சமவாயமல்லா அந்தச் சுத்தமாயையையும் ஒரு வழிச் சமவாயசம்பந்தமாகவுரைப்பது ஆகமசம்மதமென்பதும் அடியிற்காட்டப்படு மேற்கோள்களி னறியக்கிடக்கின்றமையின் அவ்விதப் போலிப்பரிணாமங் கூற ஈண்டுமிடனுண்டாவதே. இதனாற் சிவத்திற்காயினும், சிவசிற்சத்திக்காயினும் பரிணாமதோட விகார மெய்துதல் யாண்டு மெஞ்ஞான்றுமின்று; அ-ன் உரை முற்றுமோர்க. அம் மேற்கோள்கள்—

"ஸாசகுண்டலிநீ சம்போச் சக்திச் சுத்தாஜடாத்மிகா।
நதாதாத்ம்யாத் ஸ்திதா கிந்து வர்த்தமாநாபரிக்ரஹே॥"

எனப் பௌஷ்கராகம பிந்துபடலத்திலும்,

"அநந்யோந்யச் சதச்சக்தேஸ்ஸமவாயாத் ஸ்திதச்சிவ:।"

எனப் பதிபடலத்திலும்,

"சுத்ததத் துவங்க ளென்று முன்னமே சொன்ன வைந்தும்
இத்தகை மையினி யம்பு மிவைமுப்பத் தொன்று மாகத்
தத்துவ முப்பத் தாறுஞ் சைதன்னி யங்க ளாந்து
சித்தசித் தான்மா வொன்று முப்பது மசித்தே செப்பில்."

எனச் சிவஞானசித்தியாரிலும் வருவனவே. வடமொழிகளின் பொருள்:— "அந்தக் குண்டலினியாகிய மாயை சம்புவுக்குச் சுத்தையான சடரூபசத்தியாகும்: தாதான்மியசம்பந்தமாயிருப்பதில்லை: மற் றென்னையெனிற் பரிக்கிரகசத்தியாயிருக்கும்" எனவும், "சிவதத்துவமாயுள்ள அம் மாயாசத்திக்கு அனன்னியமாகவும், அன்னியமாகவும், சமவாயசம்பந்தமாகவு மிருக்கின்றனன் சிவன்" எனவு

மாம். வேண்டுமிடத்துத் தொழிற்குக் காரணமாய்க் கிரகிக்கப்படு தலின் மாயை பரிக்கிரகசத்தி யெனப்பட்டது. இப்பெயர் அசுத்த மாயைக்குமாம். மேலைச் சித்தியார் விருத்தத்திற் சுத்தவித்தை யாதி சுத்தமாயாதத்துவம் ஐந்துமே சைதன்னியங்களெனப்பட்டன. இம் மாயையே பிரணவம் : இது சிற்சத்தி வடிவென்பது முன்னருங் கூறப்பட்டதன்றே. இச்சத்தியைக் குணமாகவுஞ் சிவத்தைக் குணியாகவுங் கொள்ளும் ஏகசொரூப நிச்சயத்தில் அவ்வடிவு சிவத்தினதாகலிற் சிவவடிவம் பிரணவரூப மென்றும், பிரணவம் பிரம மென்றும் வேதாகமங்கண் மிழற்றும். துட்ட நிக்கிரக சிட்டபரி பாலனார்த்தமாகச் சிவபெருமான் கொள்ளும் மூர்த்தங்கட்கு இம் மகா மாயையே வடிவாகும் ; அசுத்தமாயை யாதலின்று. இவ்வுணர்ச்சி வாயிலாகவும், புவனவடிவ மகாவிசுவ ரூப வுணர்ச்சி வாயிலாகவும் பிரம சைதன்னியம் உலகமாயிற்று ; பிரம சத்தி சகமாயிற்று ; பிரமம் பிரபஞ்சமாயிற்று என்று கூறுவனவெல்லாம் மாயையின் விருத்தியேயாகி ஊர்ணநாபியுவமானத்தி லொடுங்குமென்றோர்க.

போந்த பிரஹ்மஸூத்ரம் (சயிஷ்டாநாநுபவவத்தஸ்ய-அதிஷ்டாநாநுபபத்தேச்ச=) " அதிட்டானம் பொருத்தமின்மையினாலும்" என்று மதகண்டனஞ் செய்ததும் வேதவிருத்தமாய பாசுபதாகம வழியே பதிப்பொருளை வேறுபடுத்துத் துவைதங்கூறி நிற்பாரது மதங் கருதியே. ஆகமவிவரம் வந்துழிக் காண்க. இச் சூத்திரமாகிய சாத்திரமும், இதற்கு ஸ்ரீ நீலகண்ட சிவாசாரியராற் செய்யப்பட்ட சைவபாடியமும் அர்ச்சிராதிமார்க்கம் போந்தெய்து சிவலோக கதியைக்கூறி முடிதலினாலும் அவை தாழ்வுடையன வாகா. என்னை ? அச் சிவசாரூபமுற்றோர் மீளத்திரும்பா தாண்டிருந்தவாறே சிவ சாயுச்சிய மெய்துவதுண்மையின். முடிபு ஸ்தூலாருந்ததி நியாயமு மாம். சிவபரத்துவ போதகார்த்தச் சுருதிகளை யெடுத்துப் பிர மாணிக்கப்பட்டமை சாலப் பெரிதாயிருத்தலின் அப்பாடியஞ் சிவ நெறிச் செல்வர்கள் அவாவி யினிது படிக்கத்தக்கதேயாம். சாதிப் பெருமை பாராட்டுவாரது திருத்திநோக்கி அதனுழைத் தெரிக்கப் பட்டனவுஞ் சிலவுள. அவைகருதியு மதனையிழத்தல் கூடாதால். அபிப்பிராய பேதங்கள் பன்னூலகத்துமுண்டாதல் தொல்வழக்கே. பிரஹ்மஸூத்ரமெனும் மீமாஞ்சையானது பண்டையார்வழக்கிற் பிரமாணமாய் நிலவுகின்ற வித்தை பதினான்கனுளொன்றாயிருத்தலி னாலும், சிவபெருமானது ஆஞ்ஞையின்படி விட்டுணுமூர்த்தி வியாச

ராக வவதரித்துப் பிரமத்தை விதிக்குஞ்சூத்திரஞ் செய்தனரென்பது ஸ்காந்தமஹாபுராண சங்கரஸம்ஹிதையின் ஆரம்பத்திற் பெறப்படுதலினுலும், "அதாதோப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா" என்னும் பிரதம சூத்திரத்தைச் செபமாகச் செபிக்கவேண்டுமென்பது "அதாதோப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா வேதாதீநபிஸம்ஜபேத்।" என்று சைவமஹாபுராண கைலாஸ ஸம்ஹிதையின் அ - ம் அத்தியாயத்திற் பெறப்படுதலினுலும், (ச்ருதோபநிஷத்க கத்யபிதாநாச்ச=) "உபநிஷத்தை யுணர்ந்தோர்க்குரிய கதி கூறப்படலானும்" என்று அந்தப்பிரஹ்மஸூத்ரமே கூறிக்கொண்டு இஃது உபநிடத நெறியென்பதை யுணர்த்துதலினுலும்,

(𑌪𑌤𑍍𑌯𑍁𑌰𑌸𑌾𑌮𑌞𑍍𑌜𑌸𑍍𑌯𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌤𑍍𑌰 𑌨𑌿𑌰𑍂𑌢𑌪𑌾𑌶𑍁
𑌪𑌤𑌸𑍍𑌯𑍈𑌵𑌨𑌿𑌰𑌾𑌕𑌰𑌣 𑌪𑌰𑌂𑌨𑌤𑍁𑌕𑌾𑌮𑌿𑌕𑌾𑌦𑌿𑌸𑌿
𑌦𑍍𑌧𑌾𑌨𑍍𑌤𑌶𑍈𑌵𑌾𑌗𑌮𑌸𑍍𑌯 𑌵𑍇𑌦𑌾𑌵𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌸𑍍𑌯)

"பத்யுரஸாமம்ஜஸ்யாதித்யேதத்து நிரூடபாசு
பதஸ்யைவ நிராகரணபரம்நது காமிகாதிஸித்
தாந்த சைவாகமஸ்ய வேதாவிருத்தஸ்ய"

என்று உமாபதி சிவாசாரியர் பௌஷ்கராகமவிருத்தியிற் றெரித்தருளிய மொழிகள் "பத்யுரஸாமம்ஜஸ்யாதிகரணத்தில் நிரூடபாசுபதமே நிராகரணஞ் செய்யப்பட்டது: வேதவிருத்தமாகாக் காமிகாதி சித்தாந்த சைவாகமங்கள் நிராகரணஞ் செய்யப்படவில்லை" எனும் பொருள் பயத்தலின் அவ் வாசாரியரும் பிரமசூத்திரத்தை அங்கீகரித்தவரே யென்பது தோன்றி நிற்றலினுலும் அந்தப் பிரமசூத்திரத்தைக் கழிப்பார் கொள்கை வைதிகசித்தாந்தமெனற்கு வாயின்றே. இச் சூத்திரத்தின்கட் சிவாஞ்ஞையின்படி தெய்வப் பெயர் (ப்ரஹ்ம) பிரம சத்தத்தானே கூறப்படுவதாயிற் றென்பதூஉம் போந்த புராண வாக்கியங்களில் வெளிப்பட்டதன்றே. பிரமம்= சிவம்.

இச் செய்யுட்கண்ணே கடாகாச மஹாகாச வுவமானம் பொருந்துமாறும் அறியக்கிடக்கின்றது.] (கஉ)

சச்சிதா னந்தபரப் பிரமந் தானே
சாக்கிரசொப் பனசுழுத்தி களுக்கு நேரே
உச்சமுறு சாட்சியா யிருக்கும் போழ்தா
முணர்வாய சீவான்மா வந்த ரான்மா

நிச்சயமாம் பரமான்மா வென்று சின்னா
னிகழ்த்துவதை யீண்டதிர்த்த சீவ னேடே
அச்சமறு முள்ளான்மா பரமான் மாவென்
பவற்றிற்கு மருத்தமிட்டுக் கொள்ளொ ணாதே.

சச்சிதானந்த லட்சண பரப்பிரமமே சாக்கிர சொப்பன சுழுத்திக ளாகிய அவத்தைத் திரயங்களுக்கு முறையே பிரபல சாட்சியா யிருக்கும்போது உணர்ச்சியுள்ள சீவான்மா, அந்தரான்மா, பரமான் மாவென்னு நாமங்களைப் பெறுமென்று (ஏகதேசமாகச்) சில புத்தகங் கள் புகலுமொழுங்கினை யெடுத்து, என்னு விங்கே கூறப்பட்ட சீவான்மா, அந்தரான்மா, பரமான்மா வென்பவைகட்கும் பொருள் படுத்திக்கோடல் கூடாது.

[ ஒன்றாது - என்பதன்மரூஉ "ஒண்ணுது"; ண் - தொக்கது.] (கரு)

முனருரைத்த வக்கினிசூ டொளியே யாய
மூன்றும்விற கிடைத்தோன்றல் போல வோது
கனசிவமும் பசுபாசங் களுமெச் சார்பிற்
காணுமெனக் கடாவிடுதற் கிடனிங் கில்லை
எனையென்னி லனலாதி மூன்று மட்டி
லெடுத்தபிர மாணத்தை யனுதி யாக
உனலன்றி மேற்போக வொண்ணு தேற்ப
வுரைத்தளவி லுவமானங் கொளலே ஞாயம்.

முன்னர்க் கூறிய நெருப்பு, சூடு, ஒளியாகிய மூன்றும் விறகிற் காணப்படுதல் போல, மேலே குறிக்கப்பட்ட பரசிவமும் பசு பாசங் களும் எந்தச் சார்பினிற் காணப்படுவனவென்று வினவுதற்கு இங்கு இடமேயில்லை. எனென்னில்,—நெருப்பு முதலிய மூன்று வரையிலும் ஈண் டெடுத்துக்கொள்ளப்பட்ட உவமான அளவைகளை அனுதி யாகவே நினைக்க வேண்டுமன்றி அவ் வளவைகட்குமேலே போதல் கூடாது. இயைபுமா றுரைத்தமட்டில் உவமானங் கொள்ளுதலே நியாயம். (கச)

கட்டையிலேகள்வனென்றுசொனதைக்கொண்டே
கனபிரமவிலக்கணமெலாமங்கோதற்
கொட்டாதுபின்னுமதற்காதிக்கட்டை
யோதெனலுமரபன்றுதீயாம்பூதஞ்

சுட்டின்றி நீர்வாயுக்காட்டத்துள்ளுஞ்
சூக்குமமாயிருந்தெங்கு நிறைவாய்மன்னுந்
திட்டமுடன்மேற்சொற்றதேசுந்தீயுஞ்
சேர்ந்திருக்குமதிசூக்கமாயென்றான்கோ.

மேலும், தாணுபுருட திருட்டாந்தத்தைக் கொண்டே பிரம லட்சணம் முழுதும் அங்ஙனந் தாபித்துப் பேசுதற்கும் அத் திருட்டாந்தம் பொருந்தாது. மேலும் அத் தாணுவுக்கு ஆதித் தாணு நவிலுக வென்றலுஞ் சாத்திர சம்பிரதாய வொழுங்கன்று. (இவ்வாறே யான் கூறிய வுவமானவிடயத்துமாம்.) அக்கினியாகிய பூதம் கண்ணுக்குத் தோன்றாமல் நீர், காற்று, கட்டை முதலிய பொருள்கட்குள்ளுஞ் சூக்குமமா யிருந்துகொண்டு எங்கும் வியாபித்திருக்கும். உறுதியாக மேற் கூறப்பட்ட ஒளியும் நெருப்பும் அதனோடு அதி சூக்குமமாகப் பொருந்தியிருக்குமென்று கூறியருளினர் ஆசிரியர்.

[தாணுபுருட திருட்டாந்தமே "கட்டையிலே கள்வன்" எனப்பட்டது. இத் திருட்டாந்தம்— யோகசிகோபநிஷத்திலும், "தஸ்மிந்மரு சுக்திகா ஸ்தாணு ஸ்படிகாதௌ ஜலரௌப்ய புருஷரேகாதிவல் லோஹித சுக்லக்ருஷ்ணகுணமயீ குணஸாம்யா நிர்வாச்யா மூலப்ரக்ருதிராஸீத்।" என்னும் பைங்கலோபநிஷத் வாக்கியங்களிலுமறியப்படும். அருத்தம்:— "(பிரமமாகிய) அதனிடத்தில் மருபூமியில் நீர், கிளிஞ்சிலில் வெள்ளி, தாணுவிற் புருடன், படிகத்தில் வர்ணம் முதலியவற்றைப்போலச் செம்மை வெண்மை கருமையாகிய இக்குணமயத்ததும், ஏற்றங் குறைவின்றி யொவ்வொன்றுஞ் சமமாங் குணத்ததும், வாக்குக் கெட்டாததுமாகிய மூலப்பிரகிருதியிருந்தது" எனவாம். தாணுபுருடனும் விவர்த்தோபாதானகாரண மாதலின் இதனை வெளியிடு சுருதிவாக்கியங்கட்கு முரிய உண்மைப்பொருள் அ - ன் உரையிற் போந்ததே யென்க.

ஆய் = ஆக; எச்சத்திரிபு. கோ = பெருமையிற்சிறந்தோன்; ஈண்டு ஆசிரியர் மேற்று; பிங்கலநிகண்டு காண்க. கக - ற் சீடன் வினாய வினாவிற்கு இதுகாறும் ஆசிரியர் விடையிறுத்தவாறு.] (கரு)

## ச. மூர்த்திபேத நிச்சயம்.

கலிநிலைத்துறை,

ஐய வென்றனிறை யேசொன வாறுய ரமல
தெய்வ மானதுரு விலதெனிற் பற்பல தேவர்

மெய்யி லங்கவுள ரென்பதென் விளக்குதி யென்னுப்
பையி லங்குமகன் வினவின ஞரியன் பன்னும்.

ஐயனே! என்னுடைய சுவாமீ! முன்னே யருளிச்செய்தபடி சுத்த சேதனமாகிய அந்த மேலான தெய்வமானது உருவமில்லாத தெனின்,—பலப்பல தேவர்கள் பிரகாசமான தேகங்களோடு கூடி யிருக்கின்றன ரென்பதென்னே? தெளிவாகக் கூறுக வென்று விசாரிக்குமழகு திகழ்ந்துள்ள சீடன் கேட்டனன். ஆசிரியர் விடை கொடுக்கத் தொடங்கினர்.

[பை=அழகு; "படமும் பச்சையு மழகும் பையே" என்பது பிங்கல நிகண்டு.] (கசு)

மங்கு புற்கலர்தம் மாசறுத் தாண்டுகொள் வானோர்
ஐங்கி ருத்தியமுஞ் செயப்படு மவட்பிர மாதி
ஐங்க ருத்தர்களு மாவரவ் வைவரு மந்த
அங்க மற்றபிர மத்தின தங்கிச மறிதி.

அஞ்ஞானத்தி லாழ்ந்திருக்குஞ் சீவர்களுடைய குற்றங்களை யொழித்து அவர்களை யாட்கொள்ளும் பொருட்டுச் சருவேசுவரனுல் ஐந்து தொழில்களுஞ் செய்யப்படும். அங்ஙனமே பிரமன் முதலிய பஞ்சகருத்தர்களுஞ் சிருட்டிக்கப்படுவர். அந்தக் கருத்தர்களும் அந்த நிட்களப் பிரமப்பொருளின் அமிசமாவர்; அறிவாயாக.

[ஐங்கருத்தர்கள்=பிரமன், விட்டுணு, உருத்திரன், மகேசுரன், சதாசிவன். இவர்களிடத்துக் கடவுளுடைய ஐந்தொழிற் சத்தி பதிதலினுல் இவர்கள் பிரமாங்கிசமெனப்பட்டன ரென்பதே "பிர மத்தின தங்கிசம்" என்றதற்குப் பொருளெனவறிக. இந்த ஐவரும், இவர்களுடைய முதல்வனும் வேதத்தானும் விளக்கப்படுகின்றன ரென்றற்குரிய பிரமாணங்களை இந் நூலாசிரியரது சைவசமய சரபத்துக் கைவல்லிய காண்டத்து அ, கஉ - ம் அத்தியாயங்களிற் கண்டு தெளிக.

கருத்தர்கள் - கள், விகுதிமேல் விகுதி. ஐவர் - தொகைக்குறிப்பு.] (கஎ)

அஞ்சு பேருருவு மாயையி னிடைவெளி யாகும்
அஞ்சு கேத்திரமு மவர்க்குள வவத்தையு மஞ்சாம்
அஞ்சு பூதியமு மவரது தத்துவ மாகும்
அஞ்சு பேர்வினையு மீசுரன் றன்வினை யறிதி.

ஆரம்ப காலத்திற் பஞ்ச கருத்தர்களுடைய தேகங்களும் மாயையி லுற்பத்தியாகும். அவர்கட்கு ஐந்து க்ஷேத்திரங்களு முள. அவர்கட்குரிய அவத்தைகளும் ஐந்தாம். பஞ்சபூதங்களும் அவர்களுடைய தத்துவங்களாம். அந்த ஐவருடைய கிருத்தியங்களும் விசாரணையில் ஈசுவரனுடைய கிருத்தியங்களே ஆம்; அறிவாயாக.

[ஐந்து என்பது அஞ்சு - என இலக்கணப்போலியாயிற் றென்ப. "அல்லல் கெடுப்பன வஞ்செ ழுத்துமே" என்று தமிழ்மறையுங் கூறிற்று.] (கஅ)

என்று சொற்றவிடை யேற்றசற் சீடனு மீடில்
வென்றி யுள்ளவரன் விட்டுணு வென்றிரு மூர்த்தி
யின்றி றம்பரவி யொன்றனை யொன்றுகொ லெள்ளற்
கன்றெ ழுந்தமுறை பற்பல வறைதலெ னென்றான்.

என்று குரு கூறிய விடையை ஏன்றுகொண்ட சற்சீடனானவன் மேலும், சமானமற்ற வெற்றிப்பாடுடைய அரன், அரியெனப்பட்ட விரண்டு மூர்த்திகளுடைய வல்லமைகளை யெடுத்துக்கூறி, ஒன்றனையொன் றிழித்துரைக்கும்படி பண்டையேற்பட்ட புத்தகங்கள் பலப்பல கதைகளைக் கூறுதலென்னையென்று வினவினன்.

[முறை=புத்தகம் (=கோசம்); "கோசமும் பழமையு மூழுங் கூட்டு—மார்ப்பு முறைமையு முறையென லாகும்" என்று பிங்கலநிகண்டுரைத்தலினறிக.] (கக)

அந்த நுட்பமதை யிங்ஙனங் கேட்டியென் றுசான்
நிந்தை யின்றி நுவல் கின்றன னவர்களி னீர்மை
தந்தம் வாதிகளும் விளக்கிடு காலொரு சாங்கம்
அந்த மாகிய வுபாங்கமின் றென்னவு மறைவார்.

அந்த நுட்பத்தை யிப்போது நிந்தை யென்பது சற்றுமின்றி நான் கூறுகின்றேன்; நீ கேட்பாயாக. தங்கள் தங்கள் மதவாதங்களை யெடுத்துக் கூறுவோர்களும் அம் மூர்த்திகளின் றன்மைகளை விளக்கிக் காட்டும்போது அவ்வத் தெய்வத்திற்குங் கரசரணாதி சாங்கம், அழகிய ஆயுதாதி உபாங்கம் முதலியவற்றொன்று மில்லையென்றே கூறுவர். (உ0)

ஆதி யந்தநடு வற்றறி வாம்பரப் பிரமம்
ஈதென் றோதிடுவ ரிவைகளை யூகிக்கி னவர்க்கே

ஏத மற்றதெய்வ மொன்றுள தென்னுணர் வெழலால்
வாத மொன்றுமிலை வடிவ மிலாதது பொருளே.

ஆதி மத்தியாந்த ரகித அறிவே யுருவாகிய பரப்பிரமந்தான் எங்கள் தெய்வமென்றுங் கூறுவர். இக்கூற்றுக்களை யூகத்துடன் விசாரிக்கின் ஒவ்வொரு மதத்தருக்குங் குற்றமற்ற தெய்வமொன்றுள தென்னு முணர்ச்சி யெழும்புதலால் அவ்விடயத்தில் ஒரு விவாதமு மில்லை. பரம்பொருள் வடிவமில்லாததே.

[பரம்பொருள் வடிவமில்லாதது என்பதற்காய பிரமாணங்கள் கூ, எ, அ - ன் உரைகளிலேயே வந்துள்ளன. அந்த கூ, எ - ற் கூறப்பட்ட அருவப்பொருண் முடிவுதானே "வடிவமிலாதது பொருள்" என்று முன்மொழிந்துகோட லென்னும் உத்தியால் ஈண்டுங் கூறப்பட்டது.] (உக)

வடிவ மற்றபர வத்துவி னிலக்கணந் தன்னை
வடிவர் கட்குரைத ராவிடின் மாண்புமின் றவர்க்கால்
வடிவ மற்றதுசம் பூரண மாகலின் வாதம்
வடிவ மட்டிலல துண்மையி லின்றெனன் மரபே.

வடிவ மில்லாத பரம் பொருளின் இலக்கணத்தை வடிவத் தோடு கூடிய தெய்வங்களுக்குஞ் சமர்ப்பித்துக் கூறுவிடின் அந்தத் தெய்வங்களுக்கொரு மேம்பாடு மில்லை. பரிபூரண மெனப்படுவ தொன்று வடிவமில்லாத தாகலின் (அளவிறந்த வடிவங்கள் ஒரு தெய்வத்துக்கே யுளவென்று கூறினும் அவைகளெல்லாம் பொது வியல்பெனுந் தடத்தலக்கணமாகக் கருதப்படின்) சிறப்பியல்பெனுஞ் சொரூபலக்கணம் வடிவ மின்மையே; தடத்தலக்கணத்திற்றான் விவாதம்; சொரூபலக்கணத்தில் விவாதமில்லையென்று கூறுதல் முறையே.

[சொரூபலக்கணஞ் சகசமாயுள்ளதாகலின் அதுவே ஈண்டு "உண்மை" எனப்பட்டது.] (உஉ)

சைவம்வைணவமிரண்டினுஞ்சகளத்தைநீத்து
மெய்ம்மைகூறியுனிலோவந்தமேதகப்பொருளைப்
பொய்ம்மையின்றிவழிபடலெனவாமிந்தப்பொருத்தம்
மைம்மனத்தவர்கடேர்கிலர்மதியினர்தேர்வர்.

சைவம் வைணவமாகிய இவ்விரண்டு மதங்களிலும் வடிவத்தை விடுத்து, 'நீ சொரூப மாத்திரையாகவே யிருக்கின்றனை' எனத் துதித்துத் தியானித்தால் அந்தப் பரம்பொருளை எத்திற மாறுபாடுமின்றி வழிபடுமார்க்கமாகவே முடியும். இந்தப் பொருத்தமான கோட்பாட்டை, (அபிமானத்தான் மயங்குறு) குற்றமுள்ள நெஞ்சினர் கண்டறியார்; விவேகிகளே யறிவர்.

[விட்டுணுவுக்கு உருவமே சிரேட்டமென்றும், அது வைகுண்டமெனுமொரு தானத் துளதென்றும், அவ்வுருவினையடைந்து "அவணுள்ள திருமாமணி மண்டபத்திலே நித்திய சூரிகளோடு கலந்து குணாநுபவ கைங்கரியஞ் செய்வதே மோக்ஷம்" என்றும் மொழிதரு வைணவம்—சுவானுபவ ஆன்ம தரிசனத்தில் அந்தரியாமியையறிந்து படர்ந் துளபடிநிற்கும் பரமஞானிகள் கொள்ளத் தக்க தன்றென்பதையும் இச்செய்யுள் காட்டிற்றன்றோ. இங்ஙனஞ் சைவத்தையும் அவ்வாறு காட்டாதோ வென்னின்,— அறியாது கடாயினை. சைவம்—சிவனுக்கு உருவசகளங் கூறினும் அருவ நிட்களமுங் கூறி அத்திற ஞானத்திற் சிவசாயுச்சிய பரிபூரண ஆன்ம லாபமுங் கூறுதலின் அவ்வாறு காட்டாதன்றோ. உரிய பிரமாணங்களும் ௭-ன் உரையின்கண் வந்துளவே.

"இன்றெனக்கருளியிருள்கடிந்துள்ளத்தெழுகின்றஞாயிறேபோன்று
நின்றநின்றன்மைநினைப்பறநினைந்தேனீயலாற்பிறிதுமற்றின்மை [சிவனே
சென்றுசென்றணுவாய்த்தேய்ந்துதேய்ந்தொன்றாந்திருப்பெருந்துறையுறை
யொன்றுநீயல்லையன்றியொன்றில்லையாருன்னையறியகிற்பாரே."

எனுந் திருவாசகத்தையும் ஈண்டுணர்ந்துகொள்க. இதனில் "நின்றன்மை நீயலாற் பிறிது மற்றின்மை—சென்று சென்றணுவாய்த் தேய்ந்து தேய்ந் தொன்றாம்; திருப்பெருந் துறையுறை சிவனே" என்பது — "திருப்பெருந் துறையின்கண் ணெழுந்தருளிய சிவபெருமானே! உனது தன்மையானது ஒருங்கியைந்து நிற்குமுனக்கு வேறாகச் சீவான்மாவென ஒன்றில்லாத தன்மையே: என்னை? தூலதேகத்தோடு கூடி நின்ற அஃது உள்ளுறை யுடம்பாகிய சூக்குமத்தை யெய்தி, பின்றை அதன் உள்ளுறை யுடம்பாகிய காரணத்தை யெய்தி, ஆண் டாணவமலத்திற் கட்டுண்டதனது அணுத்தன்மை இற்றென்றறிந்தவா றதனிலழுந்தி, அவ்வாணவ இருளோடும் விராய தற்போதமென்னும் அத்தன்மையினின்றுங் கன்மானுபவத்தினின்றுந் தேய்ந்து தேய்ந்து, ஒருபொரு

ளென்னும் பரம்பொருளுண்மையை யுள்ளபடியெய்தும் பொருளா யிருத்தலின்." எனுமருத்தத்தைப் பயக்கும். உடம்பெல்லாம் மாயா மலமாதலின் இங்ஙனம் மும்மலமுங்கடந்து ஒன்றுமென்பது கருத்து. ஒன்றும் = ஒருபொருட்டன்மையுறும்; "ஒன்றெனப் படுவது வீடு பெறலே" என்று பிங்கலநிகண்டு கூறு நெறியானே வீடுபேறெய்தும் என்பது இரட்டுறமொழித லென்னும் உத்தியாற்கொள்க. ஈண்டுச் சென்று, சென்றெனும் இரண்டனையுஞ் சூக்குமதேகத்துங் காரணதேகத்தும் இயைக்குமாறு தேய்ந்து, தேய்ந்தெனும் இரண் டனையும் ஆணவமல தற்போதத்தும், கன்மமல அனுபவத்தும் இயைக்க. சதசற்பிரபஞ்ச வத்துக்களி லெதுவு நீயல்லை: நின்னை நீங்கித் தனியிருக்குந் தன்மையும் அவையற்றி லெதற்குமில்லையெனச் சிவன துயர்வுடைமையையும், ஏனையவற்றி னிழிவுடைமையையும் அத்துவித வியாபக வியாப்பியத்திலவைத்து விளக்கவுள்ளது—"ஒன் றுநீ யல்லை அன்றி யொன்றில்லை" எனுஞ் சொற்றொடரென்க. இப் பொருள், பாயிரத்து உ-ன் உரையிற் காட்டப்பட்ட அஜிதாகமச் சுலோகத்தானும் விளங்குமென்பதும், இந் நியாயம் நூலின் அ-ன் உரையிற் பெரிதும் வலியுறுத்தப்பட்டதென்பது முணர்க.

மேதை யகப்பொரு ளென்பது "மேதகப் பொருள்" என மருவிற்று. மேதை=மிக்க பேரறிவு; "மேதைதோல் புதனிறைச்சி மிக்கபே ரறிவு" எனுந் தகரவேதுகைக் கூற்றுழைக் காண்க. அகப்பொருள்=உயிரினுள் ளிடத்திருக்கும் பரம்பொருள்.] (உங)

மூர்த்தி பேதகமு ளொான்றனுக் கொன்றதி முரணுய்
வார்த்தை யாடுமுறை முறையுள வேவிதி வழங்கச்
சாத்தி யஞ்சிறிது மின்றுர வோரதைத் தவிர்த்துப்
பூர்த்தி செய்யவுள மூர்த்தியைப் புந்திசெய் வாரால்.

மூர்த்தி பேதங்களுக்குள்ளே ஒன்றற்கொன்று மிக்க விரோத முறப் பேசு நிரல்கள் தொன்றுதொட் டுள்ளனவே. பரம சாந்தசம் பந்தமான விதிகள் அநுட்டிக்கச் சிறிதுஞ் சாத்தியப்படுத வில்லை. ஆதலி னறிவுடையோர் அத்தகைய பேதத்தை விட்டுத் தங்களுக்கு ஆன்மலாபத்தை யளித்தருளவுள்ள மூர்த்தியையே தியானிப்பர்.

[முறையுள = தொன்றுதொட் டுள்ளன. முறை = தொன்று (பழமை).] (உச)

சீவர் கட்கருளும் வானுயர் மூர்த்தியைச் சிந்தித்
தாவி யுண்மைதனை யறிவிக்க வேயறிந் தீறில்

ஓவி லொன்றுகள மொடுங்கிய வந்தர முறழ்ந்து
மாவி லாசவருட் பிரமத்தை யெய்துவர் மதியோர்.

சீவர்களுக் கிரங்கி யருள்புரியும் பரமாகாயத்தின்கண் ணுறை பரமமூர்த்தியினைத் தியானித்து, அம்மூர்த்தி—நீ பாசத்தோடுளையாயினும் பாசம் நீ அன்று; உனதகத்து உனக்குத் தலைமைப் பொருளாயுள்ள அந்தரியாமியால் நடத்தப்படுகின்ற சித்து நீ யாகலின் யாதொரு சுதந்திரமுள்ள வுனக்கு ஒரு சுதந்திரமு மின்றெனு முண்மையினை அறிவிக்க வறிந்து, ஓங்காரத்தில் அகரமும், உகர மகரங்களும் ஏகீபவித்திருக்கும் ஒற்றுமைபோல மகத்தான திருவருள் விலாச பரமுத்தியை விவேகிக ளடைவர்.

[நூலாசிரியர் "வானுயர் மூர்த்தி" என்று பொதுப்படக்கூறினாராயினும், பிரபலச் சுருதி—

(தஸ்மாத்ஸர்வாந்பரித்யஜ்ய த்யேயாந்விஷ்ண்வாதிகாந்ஸுராந் ।
ஶிவஏவஸதாத்யேயஸ் ஸர்வஸம்ஸாரமோசக꞉ ॥)

" தஸ்மாத்ஸர்வாந்பரித்யஜ்ய த்யேயாந்விஷ்ண்வாதிகாந்ஸுராந் ।
சிவஏவஸதாத்யேயஸ் ஸர்வஸம்ஸாரமோசக꞉ ॥ "

என்று கூறுகின்றது. பொருள்:—"சமுசார துக்க நாச முத்திப் பிராத்தியின் பொருட்டு விட்டுணு முதலிய சர்வதேவர்களையும் விட்டு எஞ்ஞான்றுந் தியேயனுகவுள்ள சிவனையே தியானிக்க வேண்டும்" எனவாம். இஃது அதர்வணவேத சரபோபநிஷத்தினுளது. இச்சுருதிப் பொருளையே பெரிதும் வற்புறுத்துக் கூறும் பிரபலப் பிரமாணங்களையெல்லாஞ் சைவசமயசரபத்தி லறியலாம். சிவபிராற்குங் குமாரக்கடவுட்கும் பேதமின்றென்பதும், குமாரக்கடவுள் பரமாசாரிய மூர்த்தியென்பதும் பாயிரச்செய்யு ளுரைகளிற் சாதிக்கப்பட்டமையின் வானுயர்மூர்த்தி யென்றது குமாரமூர்த்தியையுங் குறிக்குமென்க.] (உருு)

அருவ வுண்மையறி விக்குமம் மூர்த்தியை யன்றி
அருவ மிற்றெனவுள் ளறிவதில் லாகலி னுசான்
உருவ மாயிலக லுண்டந்த வொழுங்கினை யீசன்
மருவு நல்லளியி னுலவ்வவ் வடிவுக்கு வடிவாய்.

அருவத்தினுடைய வுண்மையினை யறிவிக்கும் அம்மூர்த்தியின் சகாயமில்லாமல் அருவம் இத்தன்மைத்தென ஆன்மா வறிவதில்லையாகலின் அந்த நிட்களப் பொருளே ஆசாரிய ரூபத்தைக் கொண்டிருப்பது முண்டு. ஆன்மாக்களிடத்தில் வைத்த காருண்ணிய மேலீட்டினால் அந்த அந்த வடிவுக்கு, அந்த அந்த வடிவாய் நின்றருளுங் கிரமத்தினைப் பொருந்துவன் அந்த ஈசன்.

[ (ஸநோதேவஶ்ஶுபயாஸ்ம்ருத்யாஸம் யுநக்து) "ஸநோதேவச் சுபயாஸ்ம்ருத்யாஸம் யுநக்து" எனுந் தைத்திரீயாருணசாகை நாராயண வசனம் "அந்தத் தேவன் நம்மை ஞானத்தினாற் சேர்ப்பானாக" எனும் பொருளையும்,

(அணோரணீயாந்மஹதோ மஹீயாநாத்மா
குஹாயாந்நிஹிதோஸ்ய ஜந்தோ꞉। தமக்ரதும்
பஶ்யதிவீதஶோகோதாது꞉ ப்ரஸாதாந்மஹிமாநமீஶம்॥)

"அணோரணீயாந் மஹதோமஹீயாநாத்மாகுஹாயாந்
நிஹிதோஸ்ய ஜந்தோ꞉। தமக்ரதும் பச்யதிவீத
சோகோதாது꞉ ப்ரஸாதாந் மஹிமாநமீசம்॥"

என அந்த ஆருணசாகை நாராயணத்திலும், சுவேதாச்வதரம், சரபம், நாரதபரிவ்ராஜகம், யஜுர்வேத கடம் இந்த உபநிஷத்துக்களிலும் வருவசனங்கள்— "அணுவிலும் அணுவாய்ப் பெரிதிலும் பெரிதாயுள்ள (பரம) ஆன்மா இந்தச் செந்துவினது இருதய குகையிலுளது: தன்னுடைய மகிமைக்கு ஏதுவாயுள்ள அதனைக் கன்மநீக்கமுள்ளோன் தனக்காதாரமான ஈசனது பிரசாதத்தினாற் சோகமில்லாதவனாய்க் காண்கின்றனன்" எனும் பொருளையும், (இதிதம் பரமேஶாநோ மலபாகமபேக்ஷ்ய ஸ꞉। ஸ்வேச்சயைவாநுக்ருஹ்ணாதி முக்திவ்யக்த்யர்த்ததயா த்ருஶா॥) "இதிதம் பரமேசாநோ மலபாகமபேக்ஷ்யஸ꞉। ஸ்வேச்சயைவாநுக்ரஹ்ணாதி முக்தி வ்யக்த்யார்த்தயா த்ருசா॥ எனப் பௌஷ்கராகம பசு படலத்தில் வரு சுலோகம் "அந்தப் பரமேசுரன் மலபரிபாகத்தை அபேக்ஷித்துத் தனதிச்சையாற்றானே முத்தி வியத்தியின் பொருட்டாயுள்ள கண்ணினாலனுக்கிரகிப்பன்" எனும் பொருளையுந் தருதலின் இப்பொருள்களையும்; "காட்டுவித்தா லாரொருவர் காணா தாரே காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக் காலே" "அவனருளே கண்ணாகக் காண்ப

தல்லா—லிப்படிய னிவ்வுருவ னிவ்வண் ணத்த னிவனிறைவ னென் றெழுதிக் காட்டொ ணாதே" எனுந் தமிழ்மறைப் பொருளேயும்; "இருவினைநே ரொப்பி லின்னருட் சத்தி—குருவென வந்து குணம் பல நீக்கித்—தருமரன் ஞானத்திற் றன்செய லற்றால்—திரிமலந் தீர்ந்து சிவனவ னாமே" என்னுந் திருமந்திரத் தூக்குப்பொருளேயும் இச்செய்யுள் கொண்டிருத்தல் காண்க. மேலே காட்டியபடி "ஆத்மா குஹாயாந் நிஹிதோஸ்ய ஜந்தோ:" எனற்பாலதே சரபம், நாரத பரிவ்ராஜகமெனும் உபநிஷத்துக்களில் "ஆத்மாஸ்ய ஜந்தோர் நிஹிதோ குஹாயாம்" என நிலைமாறி வருகின்றது. அந்தக் கடோபநிஷத்தில் இந் நிலைமாறுதலோடு "ஈசம்" என்பது "ஆத்மந:" எனவும் வருகின்றது. இந்த ஆத்மசப்தம் பரமான்மாவெனும் ஈசன் மேற் றெனற்கு இவ்வுபநிஷத்வசனமும், பிறவுபநிஷத் வசனமுமே சான்று.

உள்=உள்ளிடம்; அங்கிருக்குமுயிரை இஃது இடவாகுபெயரானுணர்த்துவதாயிற்று. "அறிவிக்க வன்றி யறியா வுளங்கள்" என்றார் மெய்கண்டதேவ நாயனாரும். இல் - என்பது இன்மைப் பொரு டருமொரு பண்புச்சொல்; ஐகாரச்சாரியை பெறின் 'இல்லை' என நிகழும்.] (உசு)

சைவத் தச்சுதனை யுயிரெனச்
சாற்றினுந் தாவில்
மெய்வத் தாயசிவ சத்தியின்
மேனியிஃ தென்றுந்
தொய்யற் றாயசிவ பேதமு
ளொன்றென்றுஞ் சொலலாற்
பொய்வத் தன்றுவிது வென்றரன்
கோடலும் பொருந்தும்.

சைவநூல்களில் விட்டுணுவைப் பசுவென்று கூறினும் அழிவற்ற வுண்மைப்பொருளாகிய சிவசத்தியின் (நான்கனிலொன்றன) உருவம் இது வென்றும், ஆனந்த சுத்தசிவத்தின் (நவந்தரு) பேதங்களி லொன்றென்றுங் கூறுஞ் சம்பிரதாயமுங் காண்டலால், விட்டுணு கற்பிததெய்வ மன்றென்று உறுதிகொள்ளுதலும் பொருந்தும்.

['வத்தாய'—இது "கேசரந் துணரின் கிளர்மலர்த் தாதே" என்னும் பிங்கலநிகண்டுச் சூத்திரத்தில், தாது என்னும் வடசொல்லும் ஏகாரமுங் குற்றுகரப் புணர்ச்சிபோற் புணர்ந்தவாறே 'வத்து' என்னும் வடமொழியும்,

'ஆய' என்னுந் தென்மொழியும் புணர்ந்த வாக்கிய மென்க. தொய்யல்=இன்பம்; யகரவேதுகை காண்க. (வியா-ங) விது=விட்டுணு; அமரஸிம்ஹம் காண்க.] (உஎ)

எழுசீர்க்கழிநெடில்டியாசிரியவிருத்தம்.

சம்புமார்க்கமேய்ப்பவேசனுர்த்தனன்னெறிக்கணும்
அம்பரத்தைமேவுஞானவான்களோடுய்யன்பரும்
உம்பர்வாழ்த்தவேயுளாரென்றேதுநூலுணர்ந்துளோர்
வம்புபேசிடார்மெய்ஞ்ஞானவாழ்விற்பேதமில்லையே.

சைவ மதத்திலே ஞானுகாசத்தை யெய்தலுற்ற ஞானவான்களோடு, பத்தி மார்க்கம்பற்றி வாழும் அடியரும் தேவர்களும் வாழ்த்தும்படி யுள்ளமைபோல வைணவத்திலும் அத்திறமுள்ளாருள்ளாரென்றுரைக்கு நூல்களை யறிந்தோர் குதர்க்க வாதத்திற் றலையிடார்; என்னை? ஞானத்தாலாகும் முத்திவாழ்க்கையிற் பேதமில்லையாகலின்.

[இதனுழைப் போந்த ஞானவான்கள்:—சிவத்துரோகியாகாத நம்மாழ்வாரென்னுஞ் சடகோபர், சிவநிந்தை செய்யாத ஆண்டாள் போல்பவ ரென்க. இவ்விடயம் இந்நூலாசிரியரது நாலாயிரப்பிரபந்த விசாரத்தி னன்குணரத் தக்கது.

சனுர்த்தனன்னெறி - விரித்தல் விகாரம். அம்பரம்=ஆகாசம்.] (உஅ)

பன்னிறப்பசுக்களிற்கறந்தபாலின்பான்மையே
என்னமூர்த்திபேதந்தானனந்தமுள்ளவென்னினும்
வின்னமற்றவுண்மையால்விகற்பமின்றெனத்தெளிந்
தென்னையாளுமீசுரன்பதத்தைநாடுவார்நலோர்.

பசுக்கள் பல நிறங்களை யுடையனவாக விருப்பினும் அவைகளிடத்துக் கறக்கப்பட்ட பாலானது ஒரு நிறமா யிருத்தல்போல, மூர்த்தி பேதங்க ளனந்தமாக வுளவெனினும் யாண்டும் நிறைந்துள்ள பரம்பொரு ணிச்சயத்திற் பேதமே யில்லையெனத் தெளிந்து, என்னையும் ஆட்கொண்டருளும் ஈசுவரனது திருவடியை விரும்புவார்கள் உத்தமர்கள்.

[பசுக்களும் பாணிறமுமாகக் கூறப்பட்ட உவமானம்:—"கவாமநேகவர்ணாநாம் க்ஷீரஸ்யாப்யேகவர்ணதா ।" என்ற நியாயமாயிருக்கிறது. இஃது அதர்வணவேத திரிபுராதாபிந்யுபநிஷத் வசனம்.](உகூ)

முப்பத்தாறுண்மன்னுபன்மதங்கடந்தமோனவாழ்
வைப்பற்றொண்மையாத்தரிம்மதச்சழக்கின்மாழ்கிடா
தப்புமுப்பும்போலவேயமர்ந்திருந்தவாணையிற்
றப்பிடாததீதசற்சமாதிமேனிலாவுவார்.

தத்துவம் முப்பத்தாறிற்குள்ளேயே நிலைபெறு மதங்கள் பல வற்றையுங் கடந்துள்ள மௌனாதிக்கியத்தைப் பற்றும் பரிசுத்த ஆப் தர்கள் இம் மதப்பிணக்கிற் சிக்கி வருந்தாமல் நீரும் உப்புங் கலந்திருக் குந் தன்மையிலே உப்பு மறைந்திருக்குந் தன்மைபோலப் பிரபஞ் சத்திற் கலந்து மறைந்திருக்குந் திருவருளை விட்டு விலகாது அதீத சற்சமாதியிற் பிரகாசித்திருப்பர்.

[பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், கந்தம், இரசம், உருவம், பரிசம், சத்தம், சக்கு, சுரோத்திரம், கிராணம், (ஜிஹ்வா) சிகுவை, துவக்கு, வாக்கு, அத்தம், உபத்தம், பாயு, பாதம், மனம், புத்தி, அகங்காரம், சித்தமெனும் **ஆன்மதத்துவம்** இருபத்து நான்கும்; காலம், கலை, நியதி, அராகம், வித்தை, மாயை, புருட னெனும் **வித்தியாதத்துவம்** ஏழும்; சுத்தவித்தை, ஈசம், சாதாக்கியம், சத்தி (=விந்து), சிவம் (= நாதம்) எனுஞ் **சுத்ததத்துவம்** ஐந்துமே முப்பத்தாறெனப்பட்டன. இவை உட்கருவி யெனப்படும். ஏனைய வை புறக்கருவி யெனப்படும். இவற்றின் றொழில் முதலிய விவர மெல்லாம் ககOக - திருப்பாட்டுக்களா னிரம்பியுள்ள இந்நூலாசிரி யரது திருப்பா வெனுமொரு நூலிற் செவ்வனே காணலாம். கருவிக் கூட்டங்களிலேயே சமயக் கூட்டமனைத்தும் நிலைபெறு மாதலால் "முப்பத் தாறுண் மன்னு பன்மதங்கடந்த மோன வாழ்வு" என்றார். "சைவமுத லாவளவில் சமயமும் வகுத்துமேற் சமயங் கடந்தமோன சமரசம் வகுத்த நீ" என ஸ்ரீ **தாயுமானார்** கூறிய தூஉம் இதுவே. அம் மோனவாழ்வுதான் சமயாதீதம்; சும்மாவிருத்த லெனுஞ் சுவானுபூதி. இதனை, "பெம்மான் முருகன் பிறவா னிற வான்—சும்மா விருசொல் லறவென் றலுமே—அம்மா பொருளொன் றுமறிந் திலனே" எனும் ஸ்ரீ **அருணகிரிநாதரது** திருவாக்கானு முணர்க. 'அம்மா பொருளொன்று மறிந்திலனே' என்பது "யாண் டும் பரசோரூபமே காணப்படுகின்றதே, இஃதாச்சரியம்" எனும் பொருளைப் பயக்கும். "சத்தான பிரமம் நீரில் உப்பைப் போலச் சகத்திற் கலந்து மறைந்துளது" எனு மருத்தத்தில், "கதமிதி லவண மித்யபி" என்றும், "ஸத்ஸோம்யநிபாலய ஸேத்ரை

வகிலேதி" என்றுஞ் சாந்தோக்யோபநிஷத்தின் ௬-ம் பிரபாடகத்துப் ௧௩-ங் கண்டங் கூறிச்செல்லுதலின் "அப்பு முப்பும் போலவே யமர்ந்திருந்த வாணை" என்றது சுருதி நியாய மாதலறிக. ஆணையை 'ஆஜ்ஞா' என்பது வடமொழி மதம். அது, சிவத்திற்கு வேறாகாத அருளெனுஞ் சிவசத்தியெனப்படு மென்பது (ஆஜ்ஞயாஸமவேதயா) "ஆஜ்ஞயாஸமவேதயா" என்று வடமொழிச் சிவஜ்ஞாநபோதமும், "போக்கு வரவு புரிய வாணையி—னீக்க மின்றி நிற்குமன்றே" என்று தென்மொழிச் சிவஞானபோதமும் புகறலினறிக.] (௩0)

தொங்கு நன்னர் முலையி னுண்ணி
துத்தம் விட்டுச் சோரியே
அங்கம் விம்ம வுண்ணல் போ
லனேக நூல்க ளாயினும்
உங்கள் கத்த னெங்கள் கத்த
னென்று வாத மோதுவோர்
பங்க மற்ற ஞான மின்றஞ்
ஞான மேப டைப்பரால்.

பசுவினது தொங்குந் தன்மையுள்ள பான்மடியி லிருக்கும் உண்ணியானது அம்மடியிற் சுரக்கும் பாலை யுண்ணுது விட்டு, உடம்பு வீங்க வுதிரத்தையே யுண்டல்போல, உங்கள் கடவுள் வேறு எங்கள் கடவுள் வேறென்று வாதிப்போர் எண்ணிறந்த சாத்திரங்களை யாராய்ந் திருப்பினும் ஈனமற்ற ஞான மின்றி அஞ்ஞானமே யுள்ளவராவர். (௩௧)

கல்விபொன்னிரண்டுநற்கருத்துளர்க்குநன்னரும்
வல்விடத்தையொத்தவர்க்குமல்குதீதுநல்குமால்
ஒல்கிடாதபேதவாதமோதுவார்தங்கல்வியும்
நல்குமாவரந்தையென்றுஞானநூலிசைக்குமால்.

கல்வியுஞ் செல்வமுமாகிய இரண்டும் நற்புத்தியுள்ளாருக்கு நன்மையையும், கொடிய விடமொத்த புத்தியுள்ளாருக்குத் தீமையையும் பயக்கும். (அவ்வாறாகவே) ஓயாது பேதவாதமே கூறுவோருடைய கல்வியும் பெருத்த துன்பத்தையே அவருக்கு விளைக்குமென்று ஞானசாத்திரங்கள் நவிலும்.

["பேதவாதப்—பிசுக்கரைக் காணு கண்வாய் பேசாதப் பேய்க ளோடே" என்று திருமாளிகைத் தேவருந் திருவிசைப்பாவிற் கூறி யருளினர். இது போல்வனவே அந்த ஞானநூல்க ளென்க.] (நஉ)

நீரிலாதுசந்துரைத்தநீள்கரங்கணோதல்போல்
ஏரிலாவிவேகமின்றிவாதுபேசியெய்க்குமுட்
சீரிலாரிணக்கநீசெயாதிருந்துதேவர்வாழ்
ஊரிலுள்ளடங்கவேயுயர்ந்தநிட்டைசெய்குதி.

நீர் விடாது சந்தனக் கட்டையினை யுரைத்த நெடிய கரங்கள் துன்பப்படல்போல நல்ல விவேகமில்லாமல் மதவாதம்பேசி யோய்ந்துபோஞ் சித்தசுத்தி பெறுதாருடைய சினேகத்தை நீ செய்து கொள்ளாதிருந்து, தேவர்கள் வசிக்குந் திவ்விய க்ஷேத்திரத்தின்கட் சிவபோத மடங்கும்படி மேலான நிட்டையைச் செய்வாயாக.

[சருவ கன்மங்களையும் விட்டிருத்தல் பிரமநிட்டை யென்பதை அறிவுறுத்துவான் "உள்ளடங்கவே" என்பதோடு "உயர்ந்த நிட்டை" என விசேடித்துரைத்தனர். இது "ஸர்வகர்ம பரித்யக்தஃ, (கயூ௦) கதம் ப்ரஹ்ம நிஷ்டாபரஃ।" எனும் அதர்வணவேத பரமஹம்ஸபரிவ்ராஜகோபநிஷத் வசன நிச்சயமாயிருக்கிறது. "பிரமம் பிரமநிட்டரால் அடையப்படுபொருள்" என்றற்குரிய சூத்திரத்தை, (தந்நிஷ்ஸ்ய மோக்ஷோபதேசாத்) "தந்நிஷ்டஸ்ய மோக்ஷோபதேசாத்" என்று பிரஹ்மஸூத்ரமுங் கூறுகின்றது. இந் நிட்டையிலெய்து ஞானவாயிலாகவே மோக்க முறல்வேண்டுமென்பதை—

(அதஸ்ஸர்வேஷாம்கைவல்யமுக்திர் ஜ்ஞாநமார்கேணோக்தா நகர்மஸாங்க்யயோகோபாஸநாதிபிரித்யுபநிஷத் ।)

"அதஸ்ஸர்வேஷாம்கைவல்யமுக்திர் ஜ்ஞாநமார்க்கேணோக்தா
நகர்மஸாங்க்யயோகோபாஸநாதிபிரித்யுபநிஷத் ।"

எனும் வசனத்தானே யஜுர்வேத முக்திகோபநிஷதம் விளக்கிற்றாகலின் "உயர்ந்த நிட்டை செய்குதி" என்றது பெரிதுஞ் சால்புடைத் தென்க. அருத்தம்:— "ஆதலால் யாவர்க்கும் ஞானமார்க்கத்தினுற்றான் கைவல்லிய முத்தியாம்: கருமம், சாங்கியம், யோகமெனும் இவ்வுபாசனை முதலியவற்றால் அன்றென்பது உபநிஷத்" எனவாம். கரும மென்றது—உலகம் தோன்றியழியா தென்ஞான்று முளது ; வேதத்தில் விதிக்கப்பட்ட வேள்வி முதலிய கருமங்களே

சுவர்க்க முதலிய பயன்களை நேரேயுதவும்; காமியம் வேண்டாது செய்யப்படுங் கருமம் முத்தியை யுதவுமென்னும் ஜைமினியாரது பூருவமீமாஞ்சை மதத்தை யெனவும், சாங்கிய மென்றது—நித்தமாய் அருவாய் வியாபகமாய்ச் சடமாய்ப் புத்திமுதல் நிலம் ஈறுன உங - ற்குங் காரணமாயுள்ள மூலப்பிரகிருதியே உச - ந் தத்துவமாகும்; புத்தியாகிய அந்தக்கரணத்தை அனுதியாகவே சார்ந்துள புருடன்றன் உரு - ந் தத்துவமாகிய ஆன்மா; மூலப் பிரகிருதியையும் புருடனையும் பகுத்துணர அவித்தை நீங்கும்; அதுவே முத்தி; புருடனுக்கு வேறாய் ஈசுவரன் இலன்; அவனுளனென்பது பொய்யென்னுங் கபிலரது சாங்கிய மதத்தை யெனவும், யோக மென்றது—சாங்கிய மதத்திற் சொல்லப்பட்ட உரு - தத்துவமும் பெத்த முத்திகளும் ஈசுவரநீதிக் கேதுவாம்; உசு - ந் தத்துவமாக முற்றுணர்வுள்ள ஈசுவர னொருவனுளன்; அவன் நூல்களை யருளிச் செய்து உரு - ந் தத்துவ புருடனுகிய ஆன்மாவுக்கு யோக ஞானத்தை அறிவுறுப்பனென்னும் பதஞ்சலியாரது யோகமதத்தை யெனவு மறிக. இம்மதங்கள் சித்தாந்தமல்லாத பூர்வபக்ஷ முடிபுடையனவாகலிற் சுருதி அவ்வாறு கூறுவதாயிற்று; என்னை? சிவபோத்தானிகழுங் கருமம் அங்நிகழ்வற்ற நிட்டையிற் பரமான்மஞானத்தைப் பயவாததொன்றுகலின்; புருடதத்துவம் ஆன்மாவல்லாத உள்ளந்தக்கரணமே, அதுவும் அப்போதநிகழ்விற்றுகலின்; யோக ஞானத்தும் அப்போதம் முளைத்துத் தோன்றவுளதாகலின். இச் சித்தாந்தத்திற்குச் 'சமத்த சாக்ஷியாயிருக்குஞ் சிவனை முனிவன் தியானித்து இருளைக் கடப்பன்' என்னு மருத்தத்தில் கூ - ன் உரையி லெடுத்துக் காட்டப்பட்ட கைவல்யோபநிஷத் வசனமும், இதுபோன்ற பிறவும் மாறுகோளாகாவோவெனின்,—ஆகா; என்னை? அதர்வவேத சாண்டில்யோபநிஷதம் "யமநியமாஸநப்ராணுயாமப்ரத்யாஹாரதாரணு த்யாநஸமாதயோஷ்டாங்காநி।" என வியம்புமாறு இயமம், நியமம், ஆசனம், பிராணுயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதியெனப்படும்யோகாங்கம் அ-ல் அந்தத்தியானம் எ-வது ஆகும். அது, தயிலதாரையையொத்து நிகழ்பொழுது தியானிக்கப்பட்ட ஈசன் உள்ளிடத்தே வெளிப்பட்டு அ - வதான சமாதியிற் போதம் முளைத்தெழாதுறு பதிஞானத்தை யடையுமா றனுக்கிரகிப்பன், அதனல் அத்திற ஞானமடைவனென்றல் அவையற்றின் கருத்தாகலின். இங்ஙனம் யோகநிலை யுபாசனையில் அல்லது தியானத்திற் சிவபோதமுண்டு, சமாதி ஞானத்தி லின்

றெனலே யறியக் கிடக்கின்றது. ஆகலினன்றே "குருவென வந்து குணம்பல நீக்கித்—தருமரன் ஞானத்திற் றன்செய லற்றால்—திரிமலந் தீர்ந்து சிவனவ னாமே" என்று திருமந்திர முனிவரும், "நானவனென் றெண்ணினர்க்கு நாடுமுள முண்டாதல்—தானெனவொன் றின்றியே தானதுவாய்" என்று சிவஞானபோதமுனிவருந் தெரித்தருளினர். தன்செயலாகிய சீவபோதம் எத்துணைச் சிறிதிருப்பினும் ஆன்மா சிவத்தன்மையினை யெய்தாத சீவனேயாம். ஞானசாத்திர நுட்பமறியாராய் முத்தி விருப்பமுமுள்ளாராய் உலக நடையி லிருப்பார் சிலர், அப்போதந்தா னடங்கச்செய்யு முபாயம் யாதென வினுதலு முளதன்றே. எல்லாஞ் சிவன்செயலே எனக்கொரு சுதந்திரமு மின்றென்னும் உறுதி பிறந்தவழிச் சும்மாவிருக்குங்காறும், அது சுவபாவமாய் நிலைக்குங்காறும், திருவருள் வெளிப்பட்டுத் தன்னைத் தீண்டுங்காறும் விருப்பு வெறுப்புக்களாலலையும் மனமடங்காது; அடக்கமுயறலும் மனத்தின் செயலாகவே முடியுமென்றல் அவ்வினுவுக்கு விடையா மென்பதை இந்நூலேயினி யறிவுறுக்கும்; கடைப்பிடிக்க. உடம்பிலே இருதய முதலிய சில தானங்களே விசேடமாதல்போல வுலகிற் சிலவே புண்ணியத் தலங்களாதலின், நின்மல நிட்டை கூடுவார்க் கிருக்கை "தேவர் வாழ் ஊர்" எனக் குறித்தனர். இதனை, "முனிசனங்கள் கூடியுள்ள நைமிசாரணிய புண்ணியத்தலம்" எனுந் தமிழைத் தரத்தக்க "முநிஜநைருபஸங்கீர்ணம் நைமிசாரண்ய புண்யஸ்தலம்" எனும் நாரதபரிவ்ராஜகோபநிஷத் வசனமும் வலியுறுத்தும்.] (௩௩)

பேதமற்றபோதவட்டைபேதபந்தமானுடர்க் [மால்
கேதுமில்லையென்பதுண்மையென்னநூல்கள்பன்னு
மாதர்புத்தியேப்பவேமதங்கள்பேசிவாயுறழ்
வோதுவாரவ்வூகவாழ்வுறாரென்றோதினிறை.

பேதமில்லாத ஞானமார்க்கம் பேத பெத்தர்களாகிய மனிதர்கட்கு எவ்வளவாயினுங் கிட்டுவதில்லையென்பது மெய்யெனச் சாத்திரங்கள் கோடிக்கும். பெண்கள் மனத்தையொத்து நிலையற்றவர்களாய் மதவாதங்கள் மிழற்றி வாய்ஞான மொன்றுமே கூறுவோர், ஞான செல்வத்தை யடையாரென்று கடவுளொத்த ஆசிரியர் கூறியருளினர்.

[உறழ்வு=உணர்வெனும் அறிவு; "உறழ்வே யிடையீடு முணர்வும்" எனச் சேந்தன்றிவாகரங் கூறுமாற்றானறிக.] (௩௪)

## ரு. பஞ்சகிருத்திய நிச்சயம்.

இந்தவாறதிர்த்தயாவுமேசிலாதசீடனோர்ந்
திந்தஞாயமொவ்வுமுன்னிசைத்தசுத்தவத்துவுக்
கெந்தவூழுமில்லையேயெவ்வாறுபஞ்சகிருத்தியஞ்
சொந்தமாய்நடக்குநன்குசொல்லவேண்டுமென்றனன்.

இவ்விதமாக ஆசாரியராற் கூறப்பட்ட வனைத்தையுங் குற்ற மற்ற அச் சீடனறிந்து, இந்த நியாயங்களெல்லாம் பொருத்தமுள் ளனவே. மேற்கூறப்பட்ட பரிசுத்த பரம்பொருட்கு (இராசத தாமத சாத்துவிகங்களில்) எக்குணமுமில்லையே, அப்பொருட்குச் சொந்தமாகிய பஞ்சகிருத்தியம் நடைபெறுவ தெங்ஙனம்? விளங்க வுரைக்கவேண்டு மென்று விண்ணப்பித்தனன்.

[ஊழ் = குணம்; "பாலூழ் பான்மை பண்பு" எனச் சே - திவாகரங்கூறு தலினறிக. சொந்தம் - ஸ்வதந்த்ரம் என்னும் வடசொல்லின் விகாரம்.] (நடரு)

பானுசன்னிதிக்கண்யாணர்ப்பங்கயங்கள்விள்ளல்போல்
ஆனியில்சிவத்தின்சன்னிதானசத்தியாலெலாம்
ஊனமின்றியாமுனேயுரைத்தவைங்கிருத்தியம்
ஏனெனக்கடாவுவார்க்கியானுரைப்பதென்னெனின்·

ஊகமோதுவேதமார்க்கியிலீலையென்றுரைத்திடும்
ஆகமம்வண்ணனையேய்ப்பவாத்துமாக்கடீட்டெலாம்
ஏகவென்றுஞற்றலாகுமென்னுமவ்விரண்டையும்
பாகமாகவூகஞ்செய்துபார்த்தஞாயம்பன்னுவேன்.

சூரியசன்னிதானத்தில் நல்லதாமரைமுகைகள் விகசித்தல்போல, அழிவற்ற சிவசன்னிதான சத்தியால் யாவுங் குறைவின்றித் தோன் றும். யான் முன்னர்க் கூறிய பஞ்சகிருத்தியங்கள் எதுபற்றியுள்ளன வென்று வினவுவோர்க்கு நானுரைப்ப தென்னையெனின்,— (நடசு)

விசாரித்து நியாயமறிதலைக் கூறுநின்ற வேதமார்க்கியின் கோட்பாடானது அந்தக் கிருத்தியங்கள் பரம்பொருளுக்கு விளை யாட்டாக விருக்குமென்று விளம்பும். அங்ஙனமே சிவாகமங்கள் வண்ணனுடைய தொழிலைப்போல ஆன்மாக்களின் மல அசுத்தங்க ளொழியவென்று செய்யும் (பரோபகாரத்) தொழிலாக விருக்கு மென்று பகரும். இவ்விரு திறத்தையும் பகுத்துணர்ந்த முடிவினை யுஞ் சொல்வேனுக.

[வேதமார்க்கம் இலீலையென் றுரைப்பதை, ஸாமவேத மஹோப நிஷதம் (ஜெ.தாஜெ.தஸஉாஹ-ஜெ ஜமநிஉாணலீயயா ।) "த்வைதாத்வைத ஸமுத்பூதைர் ஜகந்நிர்மாணலீலயா ।" என்று கூறுதலி னறிக. வடமொழிமறை யிவ்விதங் கூறுதலால், "கூத்த னிவ் வானுங் குவலயமு மெல்லோமுங்—காத்தும் படைத்துங் கரந் தும் விளையாடி" என்று திருவெம்பாவையிற் றமிழ்மறையுங் கூறிற்று. விளையாட்டு = இலீலை. (லோகவத்து லீலாகைவல்யம்) "லோக வத்து லீலா கைவல்யம்" என்று பிரஹ்மஸூத்ரமுங் கூறிற்று. இதன்றமிழ்:—"உலகத்திற்போல இலீலை மாத்திரம்" எனவாம். ஆகமமார்க்கங் கூறுதலை, வடமொழிச் சிவஜ்ஞாநபோதம்—(விதந்த்ய க்ஷாணிபும்ஸார்த்தாந் ஸ்வயம்) "விதந்த்யக்ஷாணிபும்ஸார்த்தாந் நஸ்வயம்" என்றும், (தஸ்மாத்தஸ்மிந் பராம்பக்திம் குர்யாதாத்மோப காரகே ।) "தஸ்மாத்தஸ்மிந் பராம்பக்திம் குர்யாதாத்மோப காரகே ।" என்றும், தென்மொழிச் சிவஞானபோதம் "விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்—களந்தறிந் தறியா" என்றும், "காண வுள்ளத்தைக் கண்டு காட்டலின்—அயரா வன்பி னரன் கழல் செலுமே" என்றும், இப்போதத்திற்கு வழிநூலாய சிவஞான சித்தியார் உ - ஞ் சூத்திரம் "செழுநவை யறுவை சாணி யுவர்செறி வித்த ழுக்கை—முழுவதுங் கழிப்பன் மாயை கொடுமல மொழிப்பன் முன்னோன்" என்றுங் கூறுமாற்று னறிக. அறுவையெனும் ஆடை யிலுள்ள அழுக்கைச் சாணி உவர் செறிவித்துக் கழித்தல் வண் ணான்றொழி லென்பது மோர்க. வடசொற்களி னருத்தம்:—"கண் முதலிய இந்திரியங்கள் புருடனால் தத்தம் விடயங்களை யறிகின்றன. இங்ஙனமன்றித் தாமேயறியமாட்டா" "ஆதலிற் றனக்கு உபகாரி யாகிய அச்சிவனிடத்தே மேலான பத்தியைச் செய்யக்கடவன்" எனவாம்.

ஊகமோது என்பது வேதத்தின் மேற்று. ஊஹஃ—என்னும் வடசொல் 'ஊகம்' என விகாரப்பட்டது; விசாரித்து நியாயமறிதலெனும் பொருட்டு. வேதமார்க்கியின் கோட்பாட்டை வேதமார்க்கியென் றுபசரித்தார்.] (௩எ)

சீவர்கட்கிதாகிதஞ்செய்தோவிலீலைசெய்வனத்
தேவனென்னெனர்கேள்விதான்செனிப்பதாலஃதொவ்வி
சீவர்கட்கழுக்கொழிக்கத்தேவனுக்குமித்துணைத் [டா
தாவுடைப்பிரமாதமோசொலென்னலுஞ்சனிக்குமே.

சீவர்கட்குச் சுக துக்கங்களை விளைக்குங் காரியங்களைச் செய்தோ அந்தத்தேவன் விளையாடுவன் என்னுமோராட்சேபம் பிறந்திடுதலால் அது பொருந்துவதன்று. (பிறிதொரு காரணத்திற்குச்) சீவர்களுடைய மலத்தினை யொழிக்கச் சருவ சத்திமானாகிய தேவனுக்கும் இவ்வளவு பெரிய பிரமாதமோ கூறுகவென்னும் ஆசங்கையும் ஏற்படும்.

[இலீலை யெனுஞ் சுருதிமொழி பிடித்துத் தோற்றம் முதலிய தொழில்கட்குக் காரணம் விளையாட்டென்னும் லீலாப்ரஹ்மவாதியின் கோட்பாடே இங்கு ஒவ்விடா தெனப்பட்டது. இறைவன் சங்கற்ப மாத்திரையாகத்தானே அவற்றை யெளிதிற் செய்தலே இலீலை யெனப்படுமென்பதற்கு அது வேறாகவுளதென்பது மறிக.

'ஒவ்விடாது' என்னுந் துவ்வீறு விகாரத்தாற் றொக்கது.] (கூஅ)

சொனவிரண்டிலாகமந் துலக்கலீரமாவதால்
உனருமத்தைமேலதென் றுரைக்கலாம்பசுக்கடாம்
அனகஞானமின்றணுதியாமலத்தவாகலின்
இனையஞாயமொவ்வுமென்றங்கீகரிப்பதேற்றமால்.

கூறிய இரண்டு காரணங்களில் ஆகமம் விளக்குதலானது சீவகாருண்ணியமா யிருத்தலின் அளவிடற்கரிய அதனையே விசேடித்ததாக வுரைக்கலாம். ஏனெனில், — சீவான்மாக்கள் தூய ஞானமில்லாமல் அணுதியான மலத்தோ டணுதியாக வுள்ளன: ஆகலின் இத்திற முரைத்த ஆகம நியாயமே பொருத்த முடைத்தென வொப்புதல் விசேடமாகும். (கூகூ)

ஏசுடைப்பசுக்களுக்கவாவியற்கையாதறொட்
டீசனுசைவழியிலேநடத்தியந்தவேட்டையை [போல்
நாசமேசெய்துய்த்தல்செம்பைநல்லசெம்பொனுக்கல்
ஆசிலாவருட்டயாவதாமெனற்குமொவ்வுமே.

சகச மலக் குற்றமுடைய சீவர்களுக்குப் பலவகைப்படும் ஆசை யென்பது சுவபாவம் (இப்பொழுதே நுங்கட்கு முத்தியளிக்குது மென்னினும் அதனை விரும்பார்கள்) ; ஆதலால் ஈசுரன் அவர்களால் விரும்பப்பட்ட வழியிலேயே அவர்களை நடத்தி அனுபவ வாயிலாக அவ்வாசையை நசிப்பித்து முத்தியிற் செலுத்து

தல்—இரசவாதி செம்பை மாற்றுயர்ந்த பொன்னாகச் செய்வது போன்ற ஒரு குற்றமற்ற அருளின் றயவாகு மென்றற்கு மொவ்வும்.

[ ௩அ - ஞ் செய்யு ளுரைக்குமாறு உயிர்களை முத்தியிற் சேர்ப்ப தற்காகவே இறைவன் ஐந்தொழி லிழைக்கின்றன னென்றல் " சிவ ஃ ஸங்கல்ப மாத்ரேண பிந்துக்ஷோபகரஃ ஸதா ।" என்று பௌஷ்க ராகம பதிபடலம் பகர்கின்றபடி சங்கற்ப மாத்திரையாய்த்தானே யாவுஞ் செய்யவல்ல அவன் காரியத் தவ்வாறு கூறுதல் பொருந்தா தென்பதனான் மறுக்கப்படுதலின், அவை—" வேண்டுவார் வேண்டு வதே யீவான் கண்டாய் மெய்ந்நெறி கண்டாய் விரத மெல்லாம்— மாண்ட மனத்தார் மனத்தான் கண்டாய் மறைக்காட் டுறையு மணா ளன் றானே " எனத் தமிழ்மறை சாற்றுமாறு உயிர்கள் விரும்பியவா றளிக்கும் பலன்கருதி அருளாற் செய்யப்படுவனவென்னுஞ் சான்ற காரணத் துளவென்பது இச்செய்யுடொடங்கி வலியுறுத்தப் படு கிறது. இறைவன் காரியம்—இஃதிவ்வாறாக வென்றெண்ணுதலாகிய சங்கற்பமாத்திரையே யுளதென்பது கருதியே (நிஷ்கலம் நிஷ்க்ரியம்) " நிஷ்கலம் நிஷ்க்ரியம் " என்று சுவேதாச்வதரோபநிஷத்துஞ் சொல் லுவதாயிற்று. (ஸத்யஸங்கல்பஃ) " ஸத்யஸங்கல்ப ஃ " என்று சாந் தோக்யோபநிஷத்தின் அ - ம் பிரபாடகமு மியம்பிற்று.

எட்டை = விருப்பம் ; " இச்சை பொற்பு மோக மேட்டை " என்று பிங்கலநிகண்டு கூறுதலி னறிக.] (௩௦)

**சேதனர்க்ககாமியஞ்சுதந்த்ரமாகச்சேரலால்**
**நீதனானவீசனந்நிதானங்கண்டுபிரேரித்தல்**
**சீதவீரமாகுநல்லதெட்பமார்மருத்துவர்**
**வாதைவீயச்செய்யுபாயமானுமென்னலாமரோ.**

தற்போதமுடையராகிய சீவர்கட்கு ஆகாமிய கன்மம் அவர்க ளுடைய இச்சாசுதந்திர வழியாகவே வந்து கூடுதலால், நீதியைச் செலுத்தும் ஈசுரன் அவரவர்களுடைய செய்கைகளை யளவிட்டு நடத் துதலும் தண்ணிய அருளேயாகும். (அது), தெளிவுடைய வைத் தியர்கள் நோயுடையானது வருத்தமொழியச் செய்யு முபாயத்தை யொக்குமென்றுஞ் சொல்லலாம்.

[ நோயளவாய்க் கைப்பான மருந்து கொடுத்துக் குணப்படுத்தல் போல வினையளவாய் இறைவன் றண்டித்தருளலும் மறக்கருணை யெனப்படு மென்க.

சேதனர்=தற்போதமுடையார். "சேதனர்க்கு" என்பதிலுள்ள கு, அ-ஒடு சிவணியதாகலின், "சேதனர்க்க" என வாயிற்று; விதி—தொல்காப்பியத்து வேற்றுமை மயங்கியலில், "கு ஐ ஆனென வரூஉ மிறுதி—அவ்வொடு சிவணுஞ் செய்யு ளுள்ளே." என்னுஞ் சூத்திரமென்க. ஆகாமியம் - காமியம் என விகாரப்பட்டது.] (சுக)

துன்புசேர்பிறப்பையீகன்மம்மிரண்டுந்தொல்லையென்
றன்பிருத்திவீடுகூடவுன்னுஞான்றவ்வாண்டவன்
தன்பெருத்தவின்பருத்தறக்கதேயவ்வெல்லையும்
நன்கொடேதுபோக்குவானடத்துமாதியென்னலாம்.

துன்பஞ் சேரும்படியான இப் பிறப்பினைத் தந்த நல்வினை தீவினையென்னு மிரண்டு கன்மமும் முற்பிறப்பிலுற்ற பழையனவே யென நிச்சயித்து, (உலகை வெறுத்து) ஈசுரகிருபையை நெஞ்சிற் பதித்து மோக்கமடைய எண்ணுங்காலத்து அந்த ஆண்டவன் தன்னாற் பிரசாதிக்கப்படும் பரிபூரணானந்தத்தினை அவர்கட்கு ஊட்டுதல் கருதியே: அக்காலம் வரையிலுஞ் செய்தநன்மையோடு தீமையையும் புசிப்புவாயிலாகப் போக்கும்பொருட்டு அவர்களை நடத்துவன் அம்முதல்வனென்று கூறுதலுமாம்.

[நல்வினை தீவினையெனும் இருதிறக் கன்மங்களும் அநாதியாயுள்ளனவாகலின் அவை, "தொல்லை" எனப்பட்டன. தொல்லை=பழமை. கரணப்பிரவர்த்திக்குரிய சூக்கும தூல தேகங்க ளேற்பட்ட பின்றைச் செய்யப்படுவதன்றோ கன்மம்; அவைகளேற்படாத வநாதியிற்றானே அஃதுளதென்பதென்கொலோவெனுங் கடா வீண்டெழுமாயின் அதற்கு—வித்து முற்பட்டதோ? விருக்க முற்பட்டதோ? எனுங் கடாவுக்கு விடை யொருசார்பினு முரைக்க வியையாப் பீசாங்குரநியாயமே சாதிக்குமாறு சாதித்திடுதலே விடையாகும். நூலாசிரியர் இதுகருதியே வித்தாயுள்ள தண்டுலத்தின் முளையையும், செம்பின் நாற்றத்தையும் அதற்குவமைசெய்துரைத்ததும் பின்னர்க் காணப்படுகின்றது. அற்றேல், "விச்ச தின்றியே விளைவு செய்குவாய்" என்னுந் திருவாசகம், விருக்கந்தான் முன்னருற்பத்தி செய்யப்பட்டதென்பதைக் காட்டற் கேதுவாயிருத்தலென்னையெனின்,—நன்றுகடாயினாய்! "வித்து, கிழங்குமுதலிய பீசங்களைக்கொண்டு தாவரவர்க்கங்களை மனிதர் வேறுநின்று உண்டுபண்ணுமாறெதனையுஞ்செய்யாமற் றனக்கு வேறுபடாநிலைக்களத்தே யாவையுந் தோற்றுவிக்கும் மகத்துவ சத்திமானு நீ" எனும்பொருடரு மஃது அத்

திறவேதுவாக மாட்டாதென்க. முதற்கண்ணே வித்துத்தான் சிருட்டிக்கப்பட்டதென்னும் வியவகாரம் வரினும், அவ்வித்தின் உபாதான காரண மாயையே விருக்கத்தானமெனுந் தீர்வையுமுண்டாம். ஆகலிற் கன்மமலம் பிரவாகாநாதியெனவே கொள்ளக் கிடக்கின்றது. அற்றாகலினன்றே "கன்மம் பாகுபாடின்மையால் இன்றெனின், அன்று: அநாதிக்கண்ணதாகலின் அது முழுதும் பொருந்தும்: அநுபவத்து மறியப்படுகிறது" எனும்பொருள் பொருந்த—

"நகர்மா விபாகாதிதி சேந்நாநாதித்வாத்,
உபபத்யதேசாப் யுபலப்யதேச"

என்று பிரஹ்மஸூத்ரமுங் கூறிற்று. "ஞானேந்திரிய பஞ்சகம், கருமேந்திரிய பஞ்சகம், பிராணாதி பஞ்சகம், ஆகாசாதி பஞ்சகம், அந்தக்கரண சதுட்டயம், (அவித்யாகாமகர்ம தமாம்ஸிச புரம்) அவித்தை, காமகருமம், தமசென்னு மிவைகளே புரம்=தேகம்" என்று பைங்கலோபநிஷத்தின் உ - ம் அத்தியாய மியம்புதலால் மல காரணசரீரமெனும் அவித்தைக்குப் பின்னர்க் கூறப்பட்ட காமகன்மமும், தமசும் அந்தக் காரணசரீர சம்பந்தமாய் அநாதியென வறியக் கிடக்கின்றனவாகலிற் பிரஹ்மஸூத்ர நிச்சயமுஞ் செய்யுணிச்சயமும் வலியுறுகின்றன.

(க) "ததேவஸக்தஸ் ஸஹகர்மணேதி லிங்கம் மநோயத்ரநிஷக்தமஸ்ய।
ப்ராப்யாந்தம் கர்மணஸ்தஸ்ய யக்திஞ்சேஹகரோத்யயம்।
தஸ்மால் லோகாத்புநரேத்யஸ்மை லோகாயகர்மண இதிநு
காமயமாநோதா காமயமாநோயோகாமோ நிஷ்காம ஆப்தகாம
ஆத்மகாமஃநதஸ்யப்ராணா உத்க்ராமந்தி ப்ரஹ்மைவஸந்ப்ரஹ்மாப்யேதி॥"

என்று பிருஹதாரண்யகோபநிஷத்தின் ரு - ம் அத்தியாயத்து ச - ம் பிராஹ்மணமும்,

(உ) "கர்மாநுகாந்யநுக்ரமேண தேஹீஸ்தாநேஷு
ரூபாண்யபிஸம்ப்ரபத்யதே।"

என்று சுவேதாச்வதரோபநிஷத்தும்,

(ரு) "அந்யஸ்ஸங்வ்யாப்திதோநந்யகர்மாநுஸாரதஃ।
கரோதிஸம்ஸ்ருதிம்பும்ஸாம் ஆஜ்ஞாயாஸமவேதயா॥"

என்று சிவஜ்ஞானபோதமும்,

(ச) "கர்மவித்யதே பலவத்தரம், பலந்ததநுஸாரேண புஞ்ஜந்
தேதேமுநீச்வராஃ।"

என்று பௌஷ்கராகம பாசபதார்த்த படலமும்,

(ரு) " கர்மநாசே ஸதாசிவ: "

என்று யஜுர்வேத ஸ்கந்தோபநிஷத்தும் பகர்கின்றன. பொருள்:— (க) " இவனுடைய மனம் எப் பலனை யிச்சிக்கின்றதோ அப் பலனுக்குரிய கன்மத்தைச்செய்து அவ்வக்கன்மானுகுணமாக அவ்வவ்வுலகங்களையடைந்து மீண்டுங் கன்மசேடமனுபவிப்பதற்காக இவ்வுலகத்தையடைகின்றனன் : காமத்தில் ஆசையுளான் படும்பாடிதுவாம் : காமநீங்கியவனுக்குப் பிராணன் உற்கிரமிப்பதில்லை : பிரமத்தன்மையினனுப் பிரமத்தை யடைகின்றனன் " எனவும்; (உ) " சீவன் தன் கன்மங்கட் கிடாகப் பலவேறு தானங்களிற் பலவேறு வடிவங்களை முறைமுறையே யடைகின்றது " எனவும்; (ந) " மேற் கூறப்பட்ட அரனெனுஞ் சங்கார காரண கருத்தாவானவன் பொருட்டன்மையால் வேருனவனேயாயினும் வியாபகத்தினுல் வேறல்லாதவனுப் தன்னை விட்டு நீங்காத ஆணையென்னுஞ் சிற்சத்தியினுல் ஆன்மாக்களின் கன்மங்கட் கீடாகச் சிருட்டி முதலியன செய்கின்றனன் " எனவும்; (ச) " முனீசுவரர்களே! பலவத்தான கன்மமுளது, அந்தக் கன்மானுகுணமாய் அவர்கள் அதன் பலத்தைப் புசிக்கிருர்கள் " எனவும்; (ரு) " கன்மநாசத்திலே சீவன் எப்போதுஞ் சிவனுய் விளங்குவன் " எனவுமாம். இவற்றானும் ஈண்டெடுத்துக் கொள்ளப்பட்ட நியாயம் இனிது பொருந்துதல் காண்க.

" நன்கொடேதும் போக்குவா னடத்து மாதி " என்பதில் துட்ட நிக்கிரக சிட்ட பரிபாலனங்கள் புரியும் இராசனைப்போலவே இறைவனு மிழைப்பனென்பதுங் கொளக்கிடக்கின்றது.

ஏதம் - 'ஏது' எனவியைந்தது. ஏதம் = குற்றமாகிய தீமை. ] (சஉ)

கலிவிருத்தம்.

இந்த வாறிறை யோன்புரி மாதொழில்
ஐந்துட் சிட்டியெ னுள்வினை மாயையின்
பந்திப் பிற்கிடந் தோவு பசுக்களின்
பந்த நீப்புடல் பண்ணுவ தேயரோ.

இவ்வாருக இறைவன் செய்யும் பெருந்தொழில்கள் ஐந்தனுட் படைத்தற் ெறுழிலாவது மாயாகாரண கர்ப்ப பந்திப்பிற் கிடந்து இன்பொழிந்துள்ள சீவான்மாக்களின் பந்த நிவிர்த்திக் கேதுவான சூக்கும வுடம்பையுந் தூல வுடம்பையும் உண்டாக்குதலேயாம்.

[“உடல் பண்ணுவது” என்பதில் அறிவிழந்து சுழுத்தியிலாழ்ந்து கிடக்குமுயிர்கள் சொப்பன சாக்கிரங்களிற் செலுத்தப்படுமாறே மாயாகாரண கருப்ப கேவலத்திற் கிடக்குமுயிர்களுங் கன்மமிருந்தவாறு சூக்கும தூல தேகங்களிற் செலுத்தப்படுதலே சிருட்டி காரியமென்பது மறியக்கிடக்கின்றது. உயி ரறிவுடைப்பொருளே யாயினும் அது, கலாதத்துவத்தினல் ஆணவமல பந்தத்தினின்று சிறிது நீக்கப்பட்டபோதுங் கண்ணுகிய கருவியொடு கூடியே யாதொன்றனைக் காணுமாறு மனமெனுங் கருவியொடு கூடியே யாதொன்றனை நினைக்குந் தன்மைத்தாகலின், ஏனைக் கருவிகளும் இவ்வாறேயதற்கு வேண்டப்படுவனவாகலின் அச் சூக்கும தூல தேகங்கள் “பந்த நீப்புடல்” எனப்பட்டனவென்க. தூலதேக விழி பலவீனப்பட்டபோது அதனேடு கூடிக்காணு மறிவுங் குறைதல் போலச் சூக்குமதேகக் கருவிகளிலொன்றாய்ப் பிராணனை ஆச்சிரயித்திருப்பதாயுள்ள மனமும் அந்தப் பிராணநாடி பிரவேசித்தற்குரிய ஆகார இரத்ததாது மூளை குறையிற் குறையும்: அவ்வழி அம்மனத்தை ஆதாரமாகக்கொண்டு நினைக்கு மான்மவறிவுங் குன்றும். அதுகொண் டவ்விரத்த தாதுவே மூளையே பிராணன், அறிவு, ஆன்மாவென்பார் கூற்றும் அறியார் கூற்றேயாதல் தெள்ளி தென்பதூஉம், அத்தாது அசித்தாகலின் அது சித்தாதல் யாண்டையதெனக் கடாவிக் காரணத்தி லிலாதது காரியத்துளதாத லிலதென்பதூஉம் ஈண்டு நிறுவற்பாலன. உணவின் சூக்குமபாகமே (தூல) மனமாகின்றதென்பது சாந்தோக்யோபநிஷத்தின் சு - ம் பிரபாடகத்து சு - ங் கண்டத்துங் கூறப்பட்டது. கருவிகள் அறிவுவிளக்கத்திற்குரியனவாயிற் கருவிகளைக் கடந்த நாதாந்தமே அகண்டஞானமென வுரைக்குமா றென்னையெனின்,— ஆணவமலமென்னும் அஞ்ஞான நீங்குழி ஞானம் அகண்டமாகலின் அத்திற நிலைக்களத்தே ஆன்மாவுக்குத் தேகசகாயந் தேவையின்றாகலின் அவ்வாறுரைத்த லேற்புடைத் தென்க.] (சரு)

ஆக்கை யாற்றெழிற் பட்டுணர்ந் துய்யுமா
றக்க னைத்தையு மன்புசெய் தங்கங்குக்
காக்குங் கன்மந் தனைத்திதி யென்றரன்
வாக்கெ னுந்தந்தி ரங்கள் வழங்குமே.

(அசைக்கவசையுந்) தேகத்தாற் கருவிகள் தொழிற்பட்டு உணரவேண்டியவற்றை யுணர்ந்து வாழுமாறு உண்டாக்கப்படுந் தனு

கரண புவனமனைத்தையும் இடையிற் கெடாமல் ஆங்காங்குக் கருணை புரிந்து காக்குங் கிருத்தியத்தையே காத்தற்றொழிலென்று சிவவாக்கென்னும் ஆகமங்கள் கூறும்.

[ சிருட்டிக்கப்பட்டவை மின்னல்போலத் தோன்றியவுட னழியாவண்ணம் அவற்றைக் கருமத்தினளவாக நிறீஇ வளர்ப்பதும், சிறைச்சாலையிற் சிறைப்பட்டிருப்பார்க்கு அரச னுணவளித்தாங்கு தீயகன்மவழித்தோன்று முயிர்கட்கும் வானத்தைப் பெய்வித்தன் முதலியபெருங்காரிய வழியா யுணவளித்துக் காத்தன் முதலியனவுமே இத் திதியெனல் பெறப்படுகின்றது. ] (சச)

காப்பி னைக்கரு தாதுபுன் காதலால்
மாப்பி ணிக்குள் வருந்தி யழுங்குபொல்
லாப்பு விட்டிளைப் பாறும் பொருட்டருந்
தூப்பி ரானற் றுடைத்த னடக்குமே.

ஈசுரன் தோன்றாத்துணையாக நின்று காக்குந் தொழிலைக் கருதிப் பாராமல், ஈன இச்சையாற் பெரும்பிணியால் உள்ளம்வருந்தித் துன்புறும் பொல்லாப்பினைவிட்டு, இளைப்பாறியிருக்கு நிமித்தம் பரிசுத்த தேவனது அரியசங்காரத்தொழில் நடக்கும்.

[ பகலெல்லாந் தொழிலிழைத் தலுத்தவர்கள் ஒரு தொழிலுமின்றி யுறங்கிக் கிடக்க விரும்புதல்போலச் சருவான்ம கோடிகட்கும் ஏற்பட்ட மாயாகாரிய தனு கரணங்கள் பலவீன முற்றஞான்று விடயங்கள்புரிய இயலாமையெய்தி வாளாகிடக்க நினைக்குங் காலமே சங்கார காலமாகும். கருணையின் அவ்வா றவ்வுயிர்களையும் எஞ்சிய காரியங்களையும் மாயாகாரணத்தில் அணுக்களென வொடுக்குதலே " இளைப்பாறும் பொருட்டு - நற்றுடைத்த னடக்கும் " எனப்பட்டது. இங்ஙனம் இஃதிராக்கால மொக்குமாகலின் முற் கூறப்பட்ட சிருட்டி பகற்கால மொக்குமென்க. உறக்க முறுங்கால் உயிர்க்கு வருத்தமின்மை காணப்படுமாறே சங்கார முறுஞான்றும் உயிர்கட்கு வருத்தமின்மையே காணப்படும். பாவமூல சங்காரமே பரிசுத்தம், தத்துவ சங்காரமே ஞானனந்தமென்பதும் இங்ஙனங் கருதத்தக்கது. ஓராறு கருமத்தினளவாகச் சிலவுயிர்கட்கு வருத்தமு மிருக்கலாமென்பது ஊகிக்கப்படுமாயின் அஃதுடம்பிலுற்ற கொடுநோய்வழி நெடுநா ளனுபவிக்கப்படுந் துன்பத்திற்கு அவ்வுடம்பிழக்குஞான்றெய்து துன்பஞ் சிறுவரையேயென அவ்விழத்தலை விழைவார்

மாட் டறியப்படுமாறே யறியப்படும். இங்ஙனம் சங்கார கிருத்தியம் இகபரமிரண்டினும் உயிர்கள் வேண்டற்பாலதெனல் சித்திக்கின்ற தும், உலகமாகிய அண்டமழிக்கப்படுந் தன்மைத் தென்பதற்கு அழி வுடைச் சரீரமாகிய பிண்டந் தகுசான்றெனல் சித்திக்கின்றது மோர்க.

குவ்வுருபை ஆல் உருபாகத் திரித்துக் கொள்க. உள் = உள்ளம்.] (சடு)

எனதெ னக்கொள் குலத்துக்கோ ரிஞ்சிபோல்
வினை நு கர்ந்திடு வானதில் வேண்டுவ
நினைவு கூரற் களந்து நிறுத்துமோர்
வினையை யேதிரை யென்று விளம்புவார்.

என்னுடைய தெனக்கொண்ட வொருமனைக்கு, ஏற்பட்டிருக் கும் எல்லை மதிலைப்போல வினைப்போகத்தை யனுபவிக்குமாறு அவ் வினையிலே தேவையானவற்றை ஞாபகத்துக் கெடுத்துக்கொள்ளு தற்கு வரைவுசெய்து அதிலே நிறுத்துமொரு கிருத்தியத்தையே திரோதான மென நூலறிவுடையார் நுவல்வர்.

[ வான் - எதிர்கால வினையெச்ச விகுதி. ] (சசு)

நன்றுந் தீதுந் துலாவொத்த ஞான்றிறை
என்ற ஞானபட் டாரக னின்புடன்
தொன்று மாமல மைந்துந் துடைத்திகல்
இன்றென் றோத லனுக்ரக மேயரோ.

நல்வினையுந் தீவினையுந் தராசுத் தட்டுக்கள்போ லொத்து நிற் குங் காலத்து, இறையென்று சொல்லப்பட்ட ஞானசாரியன் இனிய குணத்துடன் பழமையாகிய ஐந்து பெரிய மலங்களையு மொழித்து, இனியுனக்குப் பகையில்லையென் றுபதேசித்தல் அனுக்கிரகமாம்.

[ ஆன்மலாப மொன்றையே கருதிப் பரமபதியை நோக்கியும், அவ னடியவரை நோக்கியுஞ் செய்யப்படு சற்கரும **பதிபுண்ணியம்** யாவும்.— அவ்வாறு நோக்காது காமியவழிச் செய்யப்படு நன்றெ னும் பசு புண்ணியமும் தீதெனும் பாவமும் நிரலே சுவர்க்கத்திருத் தும் பொன்விலங்கினையும், நரகத்திருத்தும் இருப்புவிலங்கினையு மொக்குமாகலின் அவை மீளவு மிறப்புப் பிறப்புக்களிற் செலுத்துஞ் சேடமேயென அவ்விரண்டனிலும் விருப்பும் வெறுப்புமில்லாத உவர்ப்பினை விளக்கும். அஞ்ஞான்று புண்ணிய பாவங்கள் துலா

வொத்து நிற்கும். அக்காலமே "நன்றுந் தீதுந் துலாவொத்த ஞான்று" எனப்பட்டது. துலாவொத்து நிற்றல் இருவினைச் சம மெனப்படும். இதனை "ஒட்டிரு வினைச்சமங் கட்டவிழ் பருவம்" என இந்நூலாசிரியரது ஞானவாக்கியங் கூறுதலினறிக. "பசித் துண்டு" என்றற்றொடக்கத்துச் சிவஞானபோதச் செய்யுளில் "இரு வினையொப்பு" என வருவது மது. பதிபுண்ணியத்தான் விளையும் இவ் விருவினையுவர்ப்பெனுஞ் சமம் நிகழ்வுழிப் பிரபஞ்ச வியாபார மனங்குறைந்து கன்மமல விருத்தியும் ஆணவமல வலியும் படிப்படி குறையும். இது மலபரிபாக மெனப்படும். இப்பரிபாகமே மந்ததர மாதி நாற்றிறச் சத்திநிபாதமு முண்டாதற்குக் காரணமாகும். ஞானாசாரியனை நாடிச் செல்லுந் தீவிரதர சத்திநிபாதத்தில் "இரு வினை நேரொப்பி லின்னருட் சத்தி—குருவென வந்து குணம்பல நீக்கித்—தருமரன் ஞானம்" என்று திருமந்திரமுனிவர் கூறுமாறு இறைவன் ஞானாசாரியனாக வெளிப்பட் டனுக்கிரகிப்பன் என்பதே இச்செய்யுண் முடிபாக விருக்கின்றது. சக்திநிபாதம் என்னும் வட சொற்பொருள்:—'சத்தி வீழ்ச்சி, சத்திபதிதல், சத்திதீண்டுதல்' என்றவாறு. பாதம்=விழுதல், கடைக்கணித்தல். நி=மிகுதியாக என்னும் பொருள் பயந்து நிற்குமோ ரிடைச்சொல். சக்தி=மலத் தை நடத்தி நிற்குந் திரோதான சத்தியே. விவரம் பஞ்சபாசவிவர த்தில் விளக்கப்படும். ஞானாசாரியனது திருமேனியிலிருந்து சிட னுட் பிரவேசிப்பதே அவ்வீழ்ச்சியாகலின் அது—சகலர், பிரளயாக லர்பால் வீழத்தக்கதே யாமெனினும், விஞ்ஞானகலருக்கு அவருள்ளி ருக்கும் அந்தரியாமித்துவ பரம்பொருளே யனுக்கிரகித்தருளுமென லும் ஈண்டு வகுத்துக்கோடல் வேண்டும். அருட்சத்தி (=அருள் வலி) துன்னி நிற்குந் திருமேனி.—

(க) நோக்கு நயனம்,
(உ) பாவிக்குமனம்,
(ங) பரிசிக்குங் கரசரணங்கள்,
(ச) யோகப் பிராணன்,
(ரு) மந்திரமோது வாக்கு,
(சு) ஞான சாத்திரஞ்சொல் வாக்கு

என அறிவுறுக்கும் விவரம் கஉஅக - செய்யுள்களா னிரம்பி யுள்ள இந்நூலாசிரியருடைய (குமரகுருதாசசுவாமிகள்) பாடலிற் காணலாம். அருளே திருமேனியாக வருவோன் ஆசாரியனென்

றுரைக்குமுறை உண்மையெனலும் ஈண்டுப் பெறுக. இஃது ௫௦ - ஞ் செய்யுட்கண்ணும் வெளிப்படுகின்றதன்றோ. கூறிப்போந்த சத்திநிபாத மலபரிபாக காரணம் பதிபுண்ணியமாகலின் அதனையுடையாரே பரமசிவத்தையுமடைவரெனு நியாயங் காண்டலிற் சுருதியும்—

(𑌬𑌹𑍂𑌨𑌿𑌪𑍁𑌣𑍍𑌯𑌾𑌨𑌿𑌕𑍃𑌤𑌾𑌨𑌿𑌯𑍇𑌨, 𑌦𑍇𑌵𑍈𑌵𑌲𑌭𑍍𑌯𑌃
𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑍋𑌽𑌸𑍌𑌯𑌸𑍍𑌯𑌾𑌙𑍍𑌗𑌜𑍋𑌽𑌹𑌂 𑌹𑌰𑌿𑌰𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑍁𑌖𑍍𑌯𑌾𑌃।)

"பஹூநிபுண்யா நிக்ருதாநியேந, தேவைவலப்யஃ பரமேச்வ
ரோஸௌயஸ்யாங்கஜோஹம் ஹரிரிந்த்ர முக்யாஃ।"

என்று கூறுவதாயிற்று. பொருள்:— "மிக்க புண்ணியஞ் செய்தவர்களா லடையத்தக்கவனும், (பிரமனாகிய) நானும் விட்டுணுவும் இந்திரன் முதலியோரும் பிறக்க உற்பத்தித்தானமாயுள்ளவனுமான பரமேசுவரன்" எனவாம். இது சரபோபநிஷத்திலுள்ளது. பாவ புண்ணியமெனுங் கன்மங்களில் உவர்ப்பினை விளைக்கும் இப்புண்ணியத்தின்மீதுண்டாம் பயன் முதலிய வெல்லாம்—

(𑌕𑌰𑍍𑌮𑌨𑌾𑌶𑌾𑌨𑍍𑌮𑌲𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌵𑌿𑌪𑌾𑌕𑍇𑌸𑌹𑌕𑌾𑌰𑌿𑌣𑌃 ।
𑌪𑌤𑌤𑍍𑌯𑍁𑌨𑍍𑌮𑍀𑌲𑌿𑌨𑍀𑌶𑌕𑍍𑌤𑌿𑌸𑍍𑌤𑌦𑌨𑍁𑌗𑍍𑌰𑌹𑌰𑍂𑌪𑌿𑌣𑍀 ॥
𑌤𑌸𑍍𑌯𑌾𑌂𑌪𑌤𑌿𑌤𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌯𑌾𑌂 𑌮𑌲𑌸𑍍𑌯𑌾𑌧𑍋𑌨𑌿𑌯𑌾𑌮𑌿𑌕𑌾 ।
𑌶𑌕𑍍𑌤𑌿𑌰𑍍𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌤𑍇𑌤𑌸𑍍𑌯𑌾𑌂 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌾𑌯𑌾𑌂𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ॥
𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌂𑌜𑌾𑌯𑌤𑍇𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌰𑌂𑌸𑌂𑌸𑌾𑌰𑌾𑌦𑍍𑌦𑍁𑌃𑌖𑌸𑌾𑌗𑌰𑌾𑌤𑍍।)

"கர்மநாசாந்மலஸ்யாபி விபாகே ஸஹகாரிண ஃ।
பதத்யுந்மீலிநீசக்திஸ் ததநுக்ரஹ ரூபிணீ ||
தஸ்யாம்பதிதமாத்ராயாம் மலஸ்யாதோநியாமிகா ।
சக்திர்நிவர்த்ததேதஸ்யாம் நிவ்ருத்தாயாம் மஹாத்மநஃ ||
வைராக்யம்ஜாயதேக்ஷிப்ரம் ஸம்ஸாராத்து ஃக ஸாகராத்।" என்றும்,

(𑌏𑌤𑍇𑌷𑌾𑌂𑌯𑌸𑍍𑌯𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯 𑌮𑍁𑌪𑌜𑌾𑌤𑌂𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ।
𑌇𑌮𑍇𑌤𑍇𑌨𑌾𑌧𑌿𑌕𑌾𑌰𑍇𑌣𑌶𑍍𑌰𑍇𑌯𑌸𑌃 𑌪𑌰𑌿𑌪𑌨𑍍𑌥𑌿𑌨𑌾 ॥
𑌇𑌤𑌿𑌤𑌂𑌪𑌰𑌮𑍇𑌶𑌾𑌨𑍋 𑌮𑌲𑌪𑌾𑌕𑌮𑌪𑍇𑌕𑍍𑌷𑍍𑌯𑌸𑌃 ।
𑌸𑍍𑌵𑍇𑌚𑍍𑌛𑌯𑍈𑌵𑌾𑌨𑍁𑌗𑍃𑌹𑍍𑌣𑌾𑌤𑌿 𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌯𑌾𑌦𑍃𑌶𑌾 ॥)

"ஏதேஷாம்யஸ்யவைராக்ய முபஜாதம் மஹாத்மநஃ।
இமேதேநாதிகாரேணச்ரேயஸ ஃ பரிபந்திநா ||
இதிதம் பரமேசாநோ மலபாகமபேக்ஷ்யஸ ஃ।
ஸ்வேச்சயைவாநுக்ரஹ்ணாதி முக்திவ்யக்த்யார்த்தயாத்ருசா ||

என்றும் பௌஷ்கராகம பசுபடலச் சுலோகங்கள் விளக்குவன வாயின. பொருள்:—"கன்ம நாசத்திற் கன்ம சககாரியாயுள்ள ஆணவமலத்துக்கும் பரிபாக மெய்து மளவாகத்தானே அம் மலானுக்கிரக ரூபிணியாய்ச் சொப்பிரகாசமாயுள்ள சத்தி பதியும். அச்சத்தி பதிந்த மாத்திரையே சீவனைச் சிருட்டியாதிகளிற் றள்ளவுள்ள மல சத்தி நிவர்த்தியாகும். அந் நிவர்த்தியையடைந்த மகான்மாவுக்கு விரைவிலே துக்கசாகர சமுசார விரத்தியுண்டாகும்" எனவும்; "மகான்மாவுக்கு முத்திவிக்கினஞ் செய்யாநின்ற இந்த அதிகாரத்தால் யாது பயனென்னும் வைராக்கிய மெவர்மாட் டுதித்ததோ அவர்மாட்டு அப் பரமேசுவரன் மலபரிபாகத்தை யபேக்ஷித்துத் தனதிச்சையாற்றானே முத்திவியத்தியின் பொருட்டாயுள்ள கண்ணின லனுக்கிரகிப்பன்" எனவுமாம். இவ் வனுக்கிரகப்பிரசாதங் காட்டுஞ் சுருதிகளும் உ.௬ - ன் உரைக்கண் வந்துள்ளன. கன்மமல மில்லா விஞ்ஞானகலர்கட்குச் சுத்தகால நியதி முதலியனவோடுள்ள சுத்த மாயாதத்துவ அனுபவம் ஆணவமல பரிபாகத்தின்படியா மெனவும், பிரளயாகலர்கட்கு அசுத்த மாயாதத்துவ அனுபவம் கன்மமல பரிபாகத்தின்படியாமெனவும் மேலைப் பௌஷ்கரம் பகரும்.

கூறிப்போந்த இருவினைச்சமம்:—நல்வினையின் மிக்க அசுவமேத யாக புண்ணியமும், தீவினையின் மிக்க பிரமக்கொலைப்பாவமும் ஒத்தனவாயின் அவை தம்முளொன்றுலொன்று தாக்கப்பட்டுச் சுந்தோபசுந்தநியாயமாய் அழிவுறும்; அவ்வாறே எல்லாப் பாவமும் புண்ணியமுஞ் சமப்பட்டவுட னழியுமென்று கூறுவாருமுளர். பற்றும் வரவுஞ் சமமுறின் மிகுதியொன்றுமில்லையென்று கணக்கு முடிதல் போலப் பாவமும் புண்ணியமுஞ் சமமுற்றொழிவதே முடிவெனக் கூறுவாருமுளர். இம்முடிபிற்றானே துலாத்தட்டு இரண்டினு மிடப்பட்ட நிறைகல்லும் பொருளுந் தம்மி லொத்து நிற்றல்போலப் பாவ புண்ணியங்கள் சமமுறுமெனக் கூறுவார் கூற்றும், பாவமும் புண்ணியமுமாகிய இரண்டும் அசைவற நிற்றலே இருவினையொப்பெனக் கூறுவார் கூற்றும், பிறவும் அடங்கும். இன்னோர் கூற்றுக்கள்—"கன்மநாசத்திலே சீவனெப்போதுஞ் சிவனாய் விளங்குவன்" எனும்பொருள் பயப்பதாய், சஉ - ன் உரையி லெடுத்துக்காட்டப் பட்டதாயுள்ள ஸ்கந்தோபநிஷத் வசனத்தையும்;

(யதாவஶ்யஃவஶ்யெஸ ஹஜு ஃஸ ஷீஂரோஂவஸஷஂ
ஷஷுயொநிஂ। தஊாவி ஹாநுவஷாவாவெ வியஷயநிஂ
ஜநஃ வஸரோஂஸாஶ்யோவெதி ॥)

"யதாபச்யஃ பச்யதேருக்மவர்ணம் கர்த்தாரமீசம்புருஷம்
ப்ரஹ்மயோநிம் । ததாவித்வாந்புண்யபாபே விதூயநிரஞ்ஜநஃ
பரமம் ஸாம்ய முபைதி ॥"

என்னும் முண்டகோபநிஷத வாக்கியத்தையும், பிறவற்றையும் ஒட்டிய தீர்வைகளாயிருக்கின்றன. முண்டக வாக்கியப் பொருள்:— "பசுவெனுஞ் சீவன் எஞ்ஞான்று பொன்வண்ணனைக் கருத்தாவாய்ப் புருடனைத் தோற்றங்கட்கெல்லாங் காரணமாயுள்ள ஈசனைக் காண்கின்றனனே அஞ்ஞான்று சீவன்முத்தனாகிய வவன் புண்ணிய பாவங்களை நீங்கினவனைக் களங்கமில்லாதவனைச் சிவசாமியத்தையடைகின்றனன்" எனவாம். இச்சுருதிக்கு—

"விரிபுண் ணியபா வாதிகளை மேவு றாது நிவிர்த்திசெய்து
பிரிய மிகுந்த பரசிவவு பேத சொரூப மேயான
அரிய சாமி யத்தையினி தடைவா னவிருங் கற்பகப்பூந்
தெரியல் வளைந்து வீங்கியெழீஇச் சிலையை வாட்டுந் திணிதோளீர்."

என்னுஞ் சூதசங்கிதைச் செய்யுள் உபப்பிருங்கணமாயிருத்தலுங் காண்க. கன்மமிருக்கும்போது முத்தியில்லை யென்பதாக (𑌕𑌰𑍍𑌮𑌵𑍍𑌯𑌞𑍍𑌜𑌕𑌮𑌪𑍍𑌯𑍇𑌤𑌤𑍍𑌰𑍋𑌧𑌿𑌸𑌤𑍍𑌯𑌂𑌨𑌮𑍁𑌕𑍍𑌤𑌯𑍇 ।) "கர்ம வ்யஞ்ஜகமப்யேதத்ரோதிஸத்யந் நமுக்தயே ।" என்று மிருகேந்த்ராகம ஜ்ஞாநபாதமுங் கூறிற்று. இங்ஙனம் கன்ம நாசமே முத்தியெனுஞ்செய்தி வெளிப்படுதலின் அது—எக்கன்மமுஞ் சீவபோத நிகழ்ச்சிக்கு ஏதுவும் உரிமையுமென்ப துண்மையின் நிட்டையிற் கன்மஒழிவே அப்போதக்கேடு; அக்கேடே சத்திநிபாதமும், ஆணவமல நீக்கமும் மோக்கமுமாமெனும் பொருள் அருத்தாபத்தியாற் கொள்ளக் கிடக்கின்றது; என்னை? கன்மவிருத்திரகித மலசுழுத்தியின்மேலும் ஆணவ இருளிருத்தலின். சனன மரண மூலமாயுள்ள காமிய கன்மமும், நிட்காமிய கன்மமுஞ் சமாதிஞான விரோதிகளே யாகலின் அவையொழியவேண்டுமெனு நிச்சயத்தை (𑌅𑌨𑍍𑌧𑌂𑌤𑌮𑌃𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿𑌯𑍇𑌽𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌮𑍁𑌪𑌾𑌸𑌤𑍇 । 𑌤𑌤𑍋𑌭𑍂𑌯𑌇𑌵𑌤𑍇𑌤𑌮𑍋𑌯𑌉𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌯𑌾𑌂𑌰𑌤𑌾𑌃 ॥) "அந்தம்தமஃ ப்ரவிசந்தியேவித்யா முபாஸதே। ததோ பூய இவதேதமோயஉ வித்யாக்ரதாஃ ॥" என்று பிருஹதாரண்யகோபநிஷத்தின் ௪ - ம் அத்தியாயமும், இவ்வசனத்தையே சொல்லிக்கொண்டு (𑌅𑌨𑍍𑌯𑌦𑍇𑌵𑌾𑌹𑍁𑌰𑍍𑌵𑌿𑌦𑍍𑌯𑌯𑌾 𑌅𑌨𑍍𑌯𑌦𑌾𑌹𑍁𑌰𑌵𑌿𑌦𑍍𑌯𑌯𑌾 । 𑌇𑌤𑌿 𑌶𑍁𑌶𑍍𑌰𑍁𑌮𑌧𑍀𑌰𑌾𑌣𑌾𑌂𑌯𑍇𑌨𑌸𑍍𑌤𑌦𑍍𑌵𑌿𑌚𑌚𑌕𑍍𑌷𑌿𑌰𑍇 ॥) "அந்யதேவாஹுஸ்

ஸம்பவாதந்யதா ஹ¬ரஸம்பவாத் । இதி சுச்ரும தீராணும் யேநஸ் தத்விச சக்ஷிரே ॥" என்று ஈசாவாஸ்யோபநிஷத்தும் வற்புறுத்துக் கூறுகின்றன. பொருள்:—"எவர்கள் அவித்தை (=ஞானமில்லாத பிரகிருதிரூப கன்மம்) என்பதை யனுட்டிக்கிறார்களோ அவர்கள் காடாந்தகார இருளை (=ஆணவமலத்தை) யடைகின்றனர். எவர்கள் (யாண்டும் ஆன்மசொரூபமாக வியாபித்துள்ள ஈசனுக்கு வேறான) தேவதா ஞானத்தில் ஆசையுள்ளவர்களோ அவர்கள் அதனினும் பெரிய இருளிற் பிரவேசிக்கின்றனர்" எனவும், "அந்த அன்னியதேவ கன்மத்தையும் ஞானத்தையு முபதேசிப்பவரே ஞானத்தினாலும் (ஆன்மாவுக்கு) அன்னிய பலனையே சொல்லுகிறார்; கன்மத்தினாலும் அவ்வித பலனையே சொல்லுகிறார்; இவ்வாறு ஞானிகள் நவிலுஞ் செய்தியைக்கேட்கின்றோம்" எனவுமாம். உண்மைநிட்டை கூடாதார்க்குங் கூடி நழுவி நிற்பார்க்கு முரிய உபாயநிட்டை கன்ம வழியே யென்பதூஉம் இந்நூலில் உபாயநிட்டைவிவரம் என்பதன்கண் ணறியக் கிடக்கின்றது. போந்த சுந்தோபசுந்த நியாயமாயேனும், மற்றொரு நியாயமாயேனுங் கன்மங்கள் ஏககாலத்தி லொழியினுஞ் சமமுற்று நிற்கினு நலமே. சமமுற்று நிற்பவை—இப்படலத்து அஅ-ஞ் செய்யுளினுள்ளபடி அனுபவியாம லொழிதல் இலவென்பதேற்படினும், சுந்தோபசுந்த நியாயமாகவும் ஒழியா வென்பதேற்படினும் "தனக்குப் பிரியமாயிருப்பார்பாற் புண்ணியத்தையும், விரோதமாயிருப்பார்பாற் பாவத்தையும் விட்டு விட்டுத் தியான யோக வழியாகச் சாசுவதப் பிரமத்தை யடைகின்றனன்" என்னும் பொருளுற, "ப்ரியேஷு¬ஸ்வேஷு¬ ஸு¬க்ருதமப்ரியேஷு¬ சதுஷ்க்ருதம் । விஸ்ருஜ்ய த்யாநயோகேநப்ரஹ்மாப்யேதி ஸநாதநம் ॥" எனவரு நாரதபரிவ்ராஜகோபநிஷத்தின் ந-ம் உபதேசச் சுலோகத்தின்படி யொழியும். இவ்வழியானும் அவை முற்று மொழியவில்லை யென்பதுறுமாயின், இதனடுத்த படலத்து சக-ஞ் செய்யுள் நவிலுமாறு சுகமுந் துக்கமுஞ் சமமெனநிற்கு மெய்த்துறவிலும், இப்படலத்து அகூ-ஞ்செய்யு ளியம்புமாறு ஞானேதயத்திலும் எல்லாக் கன்மங்களு நசிக்குமென வுறுதியேயெனல் கடைப்பிடிக்க.

இரணிய கசிபன் மரபில்வந்த நிசுந்த னென்பானுக்குப் புத்திரர்களாய்த் தோன்றிப் பிரமனை நோக்கிக் கடுந்தவங் கிடந்து அவா

விய உருவெடுக்கவுங் கருதியவிடஞ் செல்லவும் பிறரால் கொல்லப் படாதுய்யவும் அப் பிரமன்பால் வரங்கள் பெறீஇப் பலரையும் வருத்து ஞான்று தேவர்களது சூழ்ச்சியாற் றங்கண்முன்வந்து நிற்குந் திலோத்தமை மீது மோகம் மிக்கு, ஏ பெண்ணே! நீ யெங்களி லெவர்க்கு மனைவியாவை யென்ற ஞான்று அவள் நும்மில் வீர முடையார்க்கே யுரியேனென்றலுந் தம்மிற்போர்புரிந்து ஒருவரை யொருவர் வெட்டிக்கொண்டிறந்த செய்கை போன்ற ஒருநெறியே (சுந்தன் உபசுந்தனெனப்படும்) அந்தச் சுந்தோபசுந்த நியாயம்.

மூலமல காரியமாய் உயிர்ப்பகையாய் விளையக்கூடிய காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியமெனும் ஆறுமே 'இகல்' எனப்பட்டது. இகல்=பகை. இதனை, "காமக்ரோத லோப மோஹ மதமாத்ஸர்யமிதி அரிஷட்வர்க்கஃ।" என்று ருக்வேத முத்கலோபநிஷதம் மொழிதலினறிக. இந்த அரிஷட்வர்க்கம் நாரதபரிவ்ராஜகம், வராஹம் முதலிய உபநிஷத்துக்களிலுஞ் சொல்லப்படும். அரி=பகை.

துலா, அனுக்ரகம் என்பன வடநூன்முடிபு.] (சஎ)

ஆற்ற லாரவ் வனுக்ரக நல்கருள்
தேற்ற மாமதி தீக்கையைச் சீடனுள்
ஊற்ற மேவு முளத்தினு மாரியன்
ஏற்ற மெய்யினு மாநின் றிழைக்குமால்.

மா வல்லமையோடு கூடிய அவ் வனுக்கிரகத்தைச் செய்யுந் திருவருளானது தெளிவாகிய ஞானவதியென்னுந் தீட்சையை, உள்ளபடி ஆசாரியனைத் தஞ்சமாகவடையுந் தரம்பொருந்திய சற்சீடனது உள்ளத்தினும், ஆசாரியன் கொண்ட திருமேனியினுமாக நின்று செய்யும்.

[மதிதீக்கை=ஞானதீக்கை. ஊற்றம்=பற்றுக்கோடு=தஞ்சம்; சே - திவாகரங் காண்க. மெய்=உடம்பு. திருட்டிக்குப் புலப்படாச் சிவனைப் புலப்படுமாறு காட்டிநிற்ப திவ்வுடம்பேயாகலின் இது மெய் யெனும் பெயர்த்தென்பதூஉம், பொய்புடம்பினை மெய்யென்பது மங்கலவழக்கென்பார் கூற்றுத் தள்ளற்பாலதாமன்றிக் கொள்ளற் பாலதாகாதென்பதூஉம் இந்நூலாசிரியரால் வடசொற்புகாது பாடப் பட்ட சேந்தன்சேந்தமிழெனும் பெயரிய நூலில் "மறைந்தவுயி ரைத் தனது வண்மையினுற் காட்டிப்—பிறங்குதலின் மெய்யென் பெயர்

தான்—பிறந்தவுடல்—பெற்றதிது நன்குள்ள ஞான்றே பெறற்குனடி—யற்றமில்லே லோமெற் கருள்." "புல்லெதிர்ப்பு ருமுதுவோர் பொய்யுடம்பை மெய்யென்ற—னல்வழக்கென் றேசிலவர் நாட்டுநடு—வல்வழக்காய்—நிற்குங் கொலோயா னிகழ்த்துண்மை போலெ னையாள்—பொற்குன்றய் சேந்தா புகல்." என்றியம்புதலி னறியவுள்ளன. உடம்பு உயிர்க்காதாரமெனப்படுவ தொன்றுகலின் ஆதாரமெனும்பெயரும் நிகண்டு வழியா யதற்குளதென் றுணர்வார்க்கு இவ்வா றியம்புதலே பேற்புடைத் தென்றலும் இனிது புலப்படும். ] (சஅ)

**இந்த வைந்து மியங்குயிர் கட்குறும்**
**பந்த முத்தி யிரண்டினும் பையுளின்**
**றந்த வீச னருளி னடக்குமென்**
**றுந்து நெஞ்சுழி யுன்னருண் மைந்தனே.**

திருவருளை விரும்பிய மகனே! இவ்வைந்து கிருத்தியங்களும் இயங்கு திணைப்பொருள்களாயுள்ள சீவர்கட்குப் பொருந்தும் பெத்த முத்தியாகிய இரண்டு காலத்துங் குறைவில்லாமல் அந்த ஈசுரனுடைய அருளால் நடக்குமென்று உள்ளிடத்துற்றிருக்கும் உன்மனத்திடை நினைப்பாயாக.

[ (𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌃 𑌪𑌞𑍍𑌚𑌕𑍃𑌤𑍍𑌯𑌸𑌮𑍍𑌪𑌨𑍍𑌨𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑍇𑌶𑍍𑌵𑌰 𑌈𑌶𑌃 𑌪𑌶𑍁
𑌪𑌤𑌿𑌃।)

"ஸர்வஜ்ஞ: பஞ்சக்ருத்ய ஸம்பந்நஸ் ஸர்வேச்வர ஈச: பசுபதி:।"

என்னும் ஜாபால்யுபநிஷத் வசனமும்,

(𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌷𑍍𑌣𑍍𑌵𑌾𑌦𑌿𑌭𑌿𑌸𑍍𑌸𑍇𑌵𑍍𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌜𑌨𑌕𑌂 𑌪𑌰𑌮𑍍।)

"ப்ரஹ்மவிஷ்ண்வாதிபிஸ்ஸேவ்யக் ஸர்வேஷாம் ஜநகம்பரம்।"

(𑌪𑌞𑍍𑌚𑌕𑍃𑌤𑍍𑌯𑌨𑌿𑌯𑌨𑍍𑌤𑌾𑌰𑌂 𑌪𑌞𑍍𑌚𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌕𑌂 𑌪𑍍𑌰𑌭𑍁𑌮𑍍।
𑌪𑌞𑍍𑌚𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍋𑌪𑌸𑌂𑌹𑌾𑌰𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌨𑌿𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍॥)

"பஞ்சக்ருத்யநியந்தாரம் பஞ்சப்ரஹ்மாத்மகம் ப்ருஹுத்।
பஞ்சப்ரஹ்மோபஸம்ஹாரம் க்ருத்வாஸ்வாத்மநிஸ்திதம்॥"

என்னும் பஞ்சப்ரஹ்மோபநிஷத் வசனங்களும் இங்குரைக்கப்பட்ட படைத்தன் முதலிய ஐந்தொழில்களுஞ் சிவபிரானுக்கே யுரியன வென்பதை நிலைபெறு செய்வனவாயின. பொருள்:—" சருவஞ்ஞனும், பஞ்சகிருத்திய சம்பன்னனும், சருவேசுவரனும், ஈசனுமான

பசுபதி" "பிரம விட்டுணு முதலியோரால் சேவிக்கப்படுவோனும், அனைவர்க்குஞ் சனகனுமான பரமன்" "சிருட்டி முதலிய பஞ்ச கிருத்திய நியமன கருத்தனும், பெரியவுரு வுள்ளவனும், பஞ்சப் பிரமரூபமாம் பிரமன் முதலிய பஞ்ச கருத்தாக்களையுந் தன்னிடத்தில் உபசங்காரஞ்செய்து உறுதியாயிருப்பவனுமான பஞ்சப்பிரம சொரூபன்" எனவாம். சுருதி யிவ்வாறு கூறுதலின், சுந்தரமூர்த்தி சுவாமிகளது தமிழ்மறையும்—"வாழ்வர்கண்டீர் நம்முளவர் வஞ்ச மனத்தீரே—யாவரானு மிகழப்பட்டிங் கல்லலில் வீழாதே—மூவ ராயு மிருவராயு முதல்வ னவனேயாந்—தேவர்கோயி லெதிர்கொள் பாடி யென்ப தடைவோமே." என்று கூறுவதாயிற்று. வேதங் கூறி யாங்கு (ஜகஜ்ஜந்மஸ்திதித்வம்ஸதிரோபாவ விமுக்தய: । க்ருத்யம் ஸகாரக பலம் ஜ்ஞேய மஸ்யைத தேவஹி ॥) "ஜகஜ்ஜந்மஸ்திதி த்வம்ஸ திரோபாவ விமுக்தய: । க்ருத்யம் ஸகாரக பலம் ஜ்ஞேய மஸ்யைத தேவஹி ॥" என்று மிருகேந்த்ராகம பரமோக்ஷ நிராஸப்ரகரணமுங் கூறிற்று. பொருள்:— "உலகப்படைப்பும், காப்பும், அழிப்பும், மறைப்பும், அனுக்கிரகமுமாகிய ஐந்தொழில்களும் கருவிச் சத்தியோடும் பலமெனும் போகமோக்கங்களோடுமுள்ள இந்த ஈசுரனுடையனவா யிருக்கின்றன" எனவாம். திரோதானம் திதியினும், அனுக்கிரகம் சங்காரத்தினு மடங்கக் கூறுஞான்று தொழில்கள் மூன்றென்றுந் துணியப்படும்.

இன்றி - என்னும் வினையெச்சம் "பையுளின்று" என்பதில் உகரவீறாய் நின்றது செய்யுளாகலின். அன்று - என வருவனவற்றிற்கும் இவ்விதி கோடற்பாற்று. "அன்றி யின்றியென் வினையெஞ் சிகரந்—தொடர்பினு ளுகர மாய்வரி னியல்பே" என்பது சூத்திரம். உந்துதல்=ஏறுதல், சென்றிருத்தலெனும் பொருளுடைத்து: இதனை, "வானுந்து தேவர்கட்கோர் வான்பொருள்காண் சாழலோ" எனுந் தமிழ்மறை வாக்கானுமுணர்க.] (சுக)

ஆன்ற வாரிய னவ்வருண் மேனியாத்
தோன்ற லாலவன் றேல்சிவ மேயெனு
ஊன்று ஞாயமுண் டாவது மோர்தியென்
றூன்ற யாவுடை யையனென் பானரோ.

எல்லா நற்குணங்களு நிறைந்த ஆசிரியன் அவ்வருளே திருமேனியாகத் தோன்றுங் காரணத்தினால் அன்னோன் முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம்பொருளாகிய சிவமேயென் றுறுதிப்

படுத்துமொரு நியாயம் அங்ஙனமுண்டாவதும் அறிவாயாகவென்று கருணாநிதியாகிய ஆசிரிய ருரைத்தருளினர். (௫0)

உயிர்க ளைக்கதி சேர்க்க வுளுற்றிடும்
அயர்வி லாவைங் கிருத்திய மன்னணம்
உயிரெ லாங்கதி யுற்றபி னேவுங்கொல்
செயிரி லோய்சொல் கெனக்குரு செப்புமால்.

சீவர்களைச் சேர்க்கவேண்டிய கதிகளிற் சேர்ப்பதற்காகப் பெத்தகாலத்திற் செய்யப்படுங் குறைவற்ற பஞ்சகிருத்தியங்கள் அப்படிச் சீவர்களெல்லாம் பரகதியடைந்த பின் நின்று விடுமோ? குற்றமற்றகுருவே! கூறுகவென்று சீடன்வேண்ட; ஆசிரியர் கூறலாயினர்.

[ கொல் - ஐயப்பொருளில் வந்தது. ] (௫௧)

ஒத்து ரைத்த வணந்துணை யொப்பனை
நீத்த வத்துவு மாயையு நிற்குமட்
டாத்து மாவு மளப்பின்றி யார்தலால்
நாத்தி கூறற் கொணுதெந்த ஞான்றுமே.

வேதம் விளம்பியபடி அளவு சமமென்பனவுந் தாய் தந்தைகளுமில்லாத பரம்பொருளும், மாயையும் எக்காலம் வரையிலுமுள்ளனவோ அக்காலம் வரையிலுஞ் சீவான்மாக்களும் அளவிறந்தனவாக விருக்குமாகலின், எந்தக்காலத்திலேனும் பஞ்சகிருத்திய நாத்தி கூறொண்ணாது.

[ உரைக்கப்பட்ட நித்திய பஞ்சகிருத்தியமே அனவரத தாண்டவமென்றுங் கூறப்படும். இதனை, "ஆமே திருக்கூத் தனவரத தாண்டவம்" என்று திருமந்திர நூல் நாலாந் தந்திரத்தே நவிலுமாற்றானு மறிக.

நாத்தி = இன்மை. செயவெனெச்ச வாய்பாடு பற்றி வந்த 'கூறற்கு' என்பதில் கு - விகுதி. அனை - (அன்னை) என்றவிடத்து "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குறித்தே" எனும் விதிப்படி தந்தை யென்பதை வருவித்துரைத்துக் கொள்க.] (௫௨)

எண்ணி லாத பசுக்களென் றோர் நுதற்
கண்ணு ளான்சொன் ணெடித்திடல் காண்டலிற்
பண்ணு பஞ்ச கிருத்திய நித்தமென்
றெண்ண லாமுயிர்க் கூத்திவை யேயரோ.

பசுக்கள் எண்ணிறந்தனவென்று அழகிய நெற்றிக்கண்ணை யுடைய சிவபரஞ்சுடரின் வேதாகமங்கள் கூறுதலை நாம் காண்கின் ரேமாதலின் அப்பரஞ்சுடராற் செய்யப்படும் அந்தப்பஞ்சகிருத்தியங் களு நித்தியமென் றெண்ணுதல் பொருந்தும். ஆட்ட ஆடும்படி யாய சீவர்கணிமித்தம் பரமபதியாற் செய்யப்படு திருநடனமும் இக் கிருத்தியங்களே.

['ஆன்மாக்கள் அனந்தம்' என்பது வெளியாக "ஆன்மாக் கள் யாவும்" எனும் அருத்தத்திலே (ஸவெஷுாத்ஷ) "ஸர்வேஷ் வாத்ம" என்று சாந்தோக்யோபநிஷத்தின் ரு - ம் பிரபாடகத்துப் கஅ - ங் கண்டமும், "அநித்தியங்களில் நித்தியனுய்ச் சேதனங் களிற் சேதனனுய்ப் பலவற்றிலு மொருவனுயிருக்கிறவன்(ஈசானன்)" எனும்பொருள் வெளியாக; அங்ஙனம் 'பஹூநாம்' என்பது சேதனமாகிய ஆன்மாக்கள் அனேகமெனும் பொருடர (நிதெ்யா நித்யாநாம் செதநஶ்செதநாநாமெகொவஹூநாம்) "நித்யோ நித்யாநாம் சேதநச் சேதநாநா மேகோபஹூநாம்" என்று கடோப நிஷத்தின் ரு - ம் வல்லியுஞ் சுவேதாச்வதரோபநிஷத்தின் சு - ம் அத்தியாயமும், "பிராணன்களென்னுஞ் சீவான்மாக்கள் சத்தியம்" எனும் பொருளுற (ப்ராணாவெஸத்யம்) "ப்ராணுவைஸத்யம்" என்று பிருஹதாரண்யகோபநிஷத்தின் ச - ம் அத்தியாயத்து க - ம் பிராஹ்மணமும், "ஆன்மாவானது வியாபக மில்லாததுமன்று, க்ஷணிக பதார்த்தமுமன்று, ஒன்றுயுளதுமன்று, சடமுமன்று" எனும் பொருளுற (நாவ்யாபகொநக்ஷணிகொநைகொநாபி ஜடாத்மகஃ।) "நாவ்யாபகோநக்ஷணிகோநைகோநாபி ஜடாத்மகஃ।" என்று மிருகேந்த்ராகம பசுலக்ஷணப்ரகரணமும், "ஏககாலதில் யாவர்க்கும் முத்தி காணப்படாமையின் அவ்வான்மாக்கடோறுமுள்ள ஆணவமலசத்தி அனேகமென்று கூறல்வேண்டும்" எனும்பொரு ளுற, (கிந்து தச்சக்தயோநேகாயுகபந் முக்த்யதர்சநாத்।) "கிந்து தச்சக்தயோநேகாயுகபந் முக்த்யதர்சநாத்।" என்றுமேலேய ஆகம பாசலக்ஷணப்ரகரணமுங் கூறுதலின் "எண்ணிலாத பசுக்க ளென்றோர் நுதற் கண்ணு ளான்சொன் ஞெடித்திடல் காண்டலின்" என்று கூறினமை தெளிக. போந்த பிருஹதாரண்யக வசனத்தில் "ப்ராணுஃ" என்பது (பஹுவசநம்) பன்மைச்சொல்லாகலிற் சத் தியமான சீவான்மாக்க ளனந்தம்; அவை பலபேதமாகவுள்ளனவென் பதும், மிருகேந்த்ர வசனம் 'ஒன்றுயுளதுமன்று' எனும் பொருடரு

தல் சீவான்மாக்கள் அனேகமென்பதைக் காட்டிற்றென்பது மினிது பெறுக. "மகாசேனைகளாகிய ஆன்மத்திரள்கள் அந்தரங்கபுத்தியுடன் வணங்கிக்கொண்டு அவனது சுவாதீனத்தி லிருக்கின்றமையின், பரமேசுவரியாகிய நின் றிருமகன் (=முருகன்) மகாசேனனெனச் சொல்லப்படுகின்றனன்" என வேதோபப்பிருங்கணம் விளம்பினதூஉம் ஈண்டுக் கருதத் தக்கது. இது, ஸ்காந்தமஹாபுராண சம்பவகாண்டத்து ௩௫-ம் அத்தியாயத்து உக-ஞ் சுலோகம்.

சொல் - ஆகுபெயரால் வேதாகமங்களை யுணர்த்திநின்றது. அவை சிவபிரான் றிருவாக்காகலின் "நுதற்கண்ணுளான்சொல்" எனப்பட்டன. உரிய சுருதி முதலிய பிரமாணங்களெல்லாம் சைவசமயசரபத்திற் சிவபெருமானே வேதங்களை யருளிச்செய்தவனெனும் அத்தியாயத்திற் கூறப்பட்டன. (ஸவ௱ாமஃயஸ்ஷிவஃ) "ஸர்வாகமமயச்சிவஃ" என்னும் நாரதபரிவ்ராஜகோபநிஷத் வசனம்—"சகலாகமஸ்வரூபன் சிவன்" எனும் பொருடருதலையும் ஈண்டுக் கருதிக் கொள்க.] (௫௩)

> சீவ ரித்துணை யென்றந்தத் தைவத
> மாவ தோரற் கொணுதுகொ லென்பையேல்
> ஒவி றெய்வந்தன் மாண்வரம் புள்குமேற்
> சீவர் தந்தொகை யுந்தொகை செய்யுமால்.

என்னைப் போன்றாராற்று னறியப்படாததாகும் அந்தச் சீவர்கள் தொகுதி; அஃதிவ்வளவிற்றென்று அந்தத் தெய்வமாவ தறிதற்கு ஒண்ணுதகோவென்று நீ கேட்கில், அந்த ஒழிவற்றதெய்வம் தன்பெருமையை அளந்தறியுமாயிற் றன்னுடைய அந்தரியாமித்துவத்திற்கு எண்ணிறந்த மூர்த்தங்களாயுள்ள ஆன்மகோடிகளையும் ஒரு கணக்கிட் டறியும்.

[இறைவன், தன்பெருமையை அளக்கொணுத் தன்மையினனென்பது "தம்பெருமை தானறியாத் தன்மையன்காண் சாழலோ" என்னுந் தமிழ்மறைக் கூற்றானு மறியப்படும். "உம்ப ராலு முலகினவ ராலுந்—தம்பெருமை யளத்தற் கரியானூர்—நண்பு லாவு மறையோர் நறையூரில்" எனத் தமிழ்மறையில் ஞானசம்பந்தப் பெருமானது திருவாக்காய் வருதலுமது. ஆகலின், அவ்வளக்கொணுத் தன்மை அவனை யளவு படுத்தாது பெருமையினும் பெருமையைக் காட்டுவதொன்றாகலின் அவனுடைய அந்தரியாமித்துவ சித்து

மூர்த்தங்களும் அளவிட்டுரைத்தற் கமைவனவல்லவென்பது போதருமாகலின் அது, பின்வரு செய்யுளானு முணர்த்தப்படுகின்றது. இங்ஙனம் பஞ்சகிருத்தியங்களு நித்தியமென்பது சித்தித்தது.

"தைவதமாவது" என்றதிலுள்ள ஆவது - ஐயப்பொருளில் வந்ததெனினும், ஆனது எனு மெழுவாய்ச் சொல்லுருபின் திரிபெனினுமாம்.] (௯௪)

## ௬. பஞ்சபாச விவரம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஆதலா லிதுவிங் கோதற் கமைவதின் றறிதி யென்று
ஓதலுஞ் சீடன் றீர்த்த னொளிமுக கமல நோக்கி
ஏதமாம் பாசஞ் சீவற் கியற்கையே லகல்வ தெவ்வா
றூதவ மனவைச் சுட்டா லகலுமோ தவள மென்றான்.

(கணக்கிட்டு) அறியாதாகலின் (வாக்குக்கும் மனத்துக்குமெட்டாத) இவ்விடயம் இங்கே கூறுதற் கமைவதில்லை; இதனை நீ அறிவாயாகவென்று ஆசிரியர் விடையிறுத்தலும்; சீடன், தேஜோமய கமலமலர்போல விகசித்த அவரது வதனத்தை நோக்கி, ஆதவனையொத்த ஞானதேசிகனே! குற்றமாகிய பாசம் சீவனுக்கு இயற்கையாகில் அது நீங்குவதெப்படி? சங்கினை நெருப்பிலிட்டுச் சுட்டால் அதற்கு இயற்கையிலுள்ள வெண்மை போகுமோ? என்றான்.

[ தீர்த்தன் = குரு; தீர்த்தம் = ஆகமசாத்திரமாகலின் அதனை யுணர்ந்தோற் கிப்பெயர் போந்தது.] (௯௫)

அங்கண்மா வத்தன் கூறு
மறிவுடை மகனே கேட்டி
இங்கணே பொருந்தா தந்த
வெழின்மன வுவமா னந்தான்
செங்குருச் செம்பின் மாசு
நாற்றஞ்செந் நிறமும் போலத்
துங்கமின் மலமோர் மூன்றுந்
தொல்லுயிர் மாட்டுண் டன்றே.

அங்ஙனம் அந்தப் பேராசிரியரானவர் கூறுவான்றொடங்கினர். அறிவுள்ள மைந்தனே! கேட்பாயாக. இங்ஙனம் அவ்வழகிய சங்குத் திருட்டாந்தம் பொருந்தாது. செந்நிறமுள்ளசெம்பிலே களிம்

பும், நாற்றமும், நிறமுமுள்ளமைபோல அசுத்தமான முத்திற மல மும் அநாதியான உயிர்களிடத்தி லுண்டு.

[ குரு = நிறம். அங்கண் = அவ்விடம். இங்கண் = இவ்விடம். "அங்கட் கொண்டான், இங்கட்கொண்டான்" எனத் தொல்காப்பியத்துப் புள்ளி மயங்கிய லுரையில் வருதலுமறிக.] (ருசு)

சவிரதக் குளிகை யாலே தாமிரங் களங்க நீங்கிப்
புவிபுகழ் பொன்னு மாறூர் பொருவிலா வருளா லந்த
விவிதமா மலங்க ளெல்லாம் விலகிய பின்ன ராதன்
துவிதமில் சிவமே யாகித் துவிதமற் றிருப்ப னன்றே.

ஒளியுள்ள இரச குளிகைபாற் செம்பு, களிம்பு நீங்கி உலகத்தா ராற் புகழப்பட்ட பொன்னெனவாதல்போலச் சமானரகிதத் திருவரு ளாற் பலவகைப்பட்ட மா மலங்களுமகன்ற பின்பு ஆன்மாவானவன் துவிதமில்லாத சிவத்தன்மையை யுற்றுச் சுத்தாத்துவித முத்தியி லிருப்பன்.

[ மல நீக்கத்தின் பின்னர்ச் சீவன் சிவத்தன்மை யுறுமென் றல்— "கன்ம நாசத்திலே சீவ னெப்போதுஞ் சிவனாய் விளங்குவன்" என்று ஸ்கந்தோபநிஷத்தும், "களங்கமில்லாதவனுய்ச் சிவ சாமியத் தை யடைகின்றனன்" என்று முண்டகோபநிஷத்தும், "திரிமலந்தீர் ந்து சிவனவ னாமே" என்று திருமந்திரமும், பிறவுங் கூறுமாற்றானே யுறுதிப்படும்; இவை முற்போந்த வுரைகளிலும் இயைபுபற்றிக் காட்டப்பட் டுள. செம்பு பொன்னாதலென்னும் அருந்தொழிற் பயனை நம்பாதார் பொருட்டுப் பிறிதோ ருவமானமும் அனுபவ சாக்ஷியும் வருஞ் செய்யுளிற் கூறுவாராயினர்.] (ருஎ)

தண்டுலத் தனாதி யாகத் தவிடுமி மூளையுண் டேனும்
விண்டிடுந் துவைக்குங் காலவ் விதமல மனாதி யேனுங்
கொண்டிடு மருளால் வீயுங் குயின்றது சரத மென்னற்
கெண்டிகை யேத்த வுள்ள விகலரு ளாளர் சான்றால்.

அரிசியொடு அனாதியாகத் தவிடு, உமி, மூளையாகிய இவைக ளிருப்பினுங் குத்தும்போது அவைகள் அரிசியைவிட் டகலும். அப்படியே மலங்கள் அனாதியாக விருப்பனவாயினும் ஆன்மாவை ஆட்கொண்டருளுந் திருவருளாலே தஞ்சத்தி கெட்டு நிற்கும். இவ்வாறு சொன்னது சத்தியமென்பதற்கு அட்டதிக்கி லுள்ளோருந்

துதிக்குமாறு (சீவகரணம் சிவகரணமாய்) நிற்கின்ற அருள்வலி வாய்ந்த ஆன்றோரே சான்றாக வுள்ளார்.

[ ௬௬, ௬௭, ௬அ - ஆகிய விச்செய்யுள்களிற் கூறப்பட்ட செம்பிற் களிம்பு, தண்டுலத்திற் றவிடுமி முதலிய திருட்டாந்தங்களும், அவற்றின் நீக்கமும்—

(𑌤𑌣𑍍𑌡𑍁𑌲𑌸𑍍𑌯𑌯𑌥𑌾𑌚𑌰𑍍𑌮 𑌯𑌥𑌾𑌤𑌾𑌮𑍍𑌰𑌸𑍍𑌯𑌕𑌾𑌲𑌿𑌮𑌾 ।
𑌨𑌶𑍍𑌯𑌤𑌿𑌕𑍍𑌰𑌿𑌯𑌯𑌾𑌵𑌿𑌪𑍍𑌰 𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌯𑌤𑌥𑌾𑌮𑌲𑌮𑍍 ।
𑌜𑍀𑌵𑌸𑍍𑌯𑌤𑌣𑍍𑌡𑍁𑌲𑌸𑍍𑌯𑍇𑌵 𑌮𑌲𑌂𑌸𑌹𑌜𑌮𑌪𑍍𑌯𑌲𑌮𑍍 ॥)

" தண்டுலஸ்ய யதா சர்மயதா தாம்ரஸ்ய காளிமா ।
நச்யதிக்ரியயாவிப்ர புருஷஸ்ய ததாமலம் ।
ஜீவஸ்ய தண்டுலஸ்யேவ மலம்ஸஹஜமப்யலம் ॥"

என்று மஹோபநிஷத்தும், (𑌤𑍁𑌷𑍇𑌣𑌬𑌦𑍍𑌧𑍋𑌵𑍍𑌰𑍀𑌹𑌿𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌤𑍁𑌷𑌾𑌭𑌾𑌵𑍇𑌤𑍁𑌤𑌣𑍍𑌡𑍁𑌲𑌃 ।) "துஷேண பத்தோவ்ரீஹிஸ்யாத் துஷாபாவேது தண்டுலஃ ।" என்று போந்த ஸ்கந்தோபநிஷத்துங் கூறுதலி னறியக்கிடக்கின்றன. "நெல்லிற் குமியு நிகழ்செம்பி னிற்களிம்புஞ்—சொல்லிற் புதிதன்று தொன்மையே—வல்லி—மலகன்ம மன்றுளவாம்" என்று சிவஞானபோதத்துங் கூறப்பட்ட இச் சகச திருட்டாந்தங்களைக் கண்ணுற்றார் பல்லோருள்ளும் இவை, வேத படிதமல்ல வென்பார் கூற்று மறியார்கூற்றே யாயிற்று. தண்டுலம் = அரிசி. (𑌵𑍍𑌰𑍀𑌹𑌿𑌃) "வ்ரீஹிஃ" = செந்நெல். ஆன்மாவுக்கு வெளியே காரணதேகத்தின் கண்ணே சனன மரண விருக்கமென நின்று தளிர்த்துக் காய்க்குந் தன்மையது கன்மமாகலின் அரிசியின் வெளியிடத்துள்ள முளையைக் கன்மமலத்துக் குவமித்துக் கொள்க.

ஏனும் = ஆயினும்; எனினும் என்பதன் மரூஉ.] (௬அ)

மலமகன் றறிஞ ராகி மகத்துவம் புரித லானும்
நிலமிசை யுலப்பு நீங்கி நிமலனை யடைத லானுஞ்
சொலுமிந்த வுவமை யாவுந் துகளற்ற வுவமை யென்னு
இலகிய வாக மங்க ளியம்புதல் பொருந்து மாதோ.

மலத்தினின்று நீங்கிப் பதிஞான முடையராய் அற்புதங்களைச் செய்தலானும், இக்கன்ம பூமியிற் பெத்தான்மாக்கள் தேகவியோக மெய்துதல்போ லெய்தாது அனாதி முத்தனுடைய திருவடி நீழலை யடைதலானும் மேற்கூறப்பட்ட உவமானங்க ளெல்லாம்

ஆபாசமற்ற உவமானங்க ளென்று விளக்கத்தோடுங் கூடிய ஆகமங்கள் கூறுதல் பொருத்தமாகும்.

[ ஆகமம் - என்னும் வடசொல் 'வந்தது' என்னும் பொருளைப் பயத்தலின், எங்கிருந்து வந்ததெனுங் கடாவுக்குப் பரமாப்தரது திருநாவி லிருந்தென்பது விடையாகலின், ஈண்டு "ஆகமங்கள்" என்றது வேதாகமங்களை யென்க.] (ருகூ)

முன்னரஞ்ஞானத்தாலுண்மூடுண்டவேண்டிச்சீவன்
பின்னர்மெய்ஞ்ஞானத்தாலுட்பிறங்கிடக்கண்டதக்கார்
பின்னவெம்மலந்தான்சேர்க்கையியற்கையோபேசிடா
றென்னகாரணத்திற்காகவினவுவரிருந்தேருதே. [யென்

பிரதமத்தில் அஞ்ஞானத்தா லாவரிக்கப்பட்ட அறிவுடையதாகிப் பரிதபிக்கத்தக்க நிலையிலிருந்த சீவன், பின்பு பதிஞான விளக்கத்தால் நன்கு பிரகாசிக்கக்கண்ட பெரியோர் (குரு வுபதேசித்த மார்க்கம் பிடித்து) அசைவறவிருந்து மேனிலைகளிலேறுங் காரியத்தி விராமல் ஆன்ம வறிவுக்கு வேறாகிய கொடிய மலம் சேர்க்கையோ? இயற்கையோ? கூறுக வென்று எதற்காகக் கடாவுவர்? கடாவ நியாயமின்று.

[ எகர வினவடியாப் பிறந்த 'எவன்' என்னும் அஃறிணைக் குறிப்பு முற்று லணையும்பெயர் என் - என விகாரப்பட்டு, அகரச்சாரியை பெறீஇ "என்ன" என நின்றது. "சொன்னவித் தொழில்க ளென்ன காரணந் தோற்ற" என்று அருணந்திசிவாசாரியரும் (சிவஞான சித்தியாரில்) கூறினர்.] (கூ0)

செம்பெனுஞ்சீவற்குள்ளதிரிமலவிவரங்கூறிற்
செம்பினிற்காளிதம்போலாணவஞ்செறிந்துநிற்குஞ்
செம்பினிறூற்றம்போலச்செனிக்கிறகன்மநிற்குஞ்
செம்பினிற்செம்மைபோன்மாயாமலஞ்சிறந்துநிற்கும்.

செம்பென் றுவமிக்கப்பட்ட சீவனுக்குள்ள மும்மலங்களின் வகையினைக் கூறப்புகின், செம்பிலே களிம்பு வெட்டுவாய் தோறுந் தோன்றி அதன் சொரூப முழுதையும் மறைத்து நிற்பதுபோல ஆணவமலம் அறிவின்கண் வியாபித்திருக்கும். அச் செம்பின் வாசனைபோலக் காரணதேகத்தினின்று தோன்றி விருத்தியாகி வருங் கன்மமல நிற்கும். அச்செம்பிற் செந்நிற மிருப்பதுபோல மாயாமலம் (காரணதேகம் முதலியனவாய்ச்) சிறப்புற்றிருக்கும். (கூக)

**ஆணவமானதந்தகாரமாயறிவாலன்றிக்**
**கீணமதாகாதாகிக்கிளர்சித்தைமறைத்துச்சீவர்**
**காணொணாவண்ணமேசேர்ந்துகலந்துளேயிருப்பதாகி**
**ஆணவப்பெயருக்கேற்பவணுக்களையணுவாயாக்கும்.**

ஆணவமல மானது (பூதவிருளையொத்த) இருளாய் ஞானத்தாலன்றி மற்றொன்றால் ஒழியாத்தாகிப் பிரகாசமுடைய ஆன்மவறிவை மறைத்துத் தானிருப்பதைச் சீவர்களறியாவண்ணம் அவர்களோடு கலந்து உள்ளே யிருப்பதாகி ஆணவமென்னுந் தன்பெயருக்கேற்ப அணுக்களெனும் பெயரிய வுயிர்களை அணுக்களாகச் செய்யும் (மாலையதாம்).

[ ஆணவமல இலக்கணம் இவ்வாறிருக்கும், அஃதனாதி நித்திய மென்பதற்குரிய சுருதிமுதலிய வெடுத்துக்காட்டுகள் பலவும் இப்படலத்து ௬ - ன் உரையிலேயே வந்துள்ளன. "இருளான பொருள் கண்ட தல்லாற் - கண்ட - என்னையுங் கண்டிலேனென்னேடிதோழீ" என்று தாயுமானசுவாமிகள் சுவானுபூதியி லறிந்துரைத்தவாற்றானும் அவ்விலக்கணம் சால்புடைத்தாகின்றது. 'இருளான பொருள்' என்றதனானே இருளுமொரு பொருளே யென்பது வலியுறுதலுமோர்க. ஆன்மா இவ் வாணவத்திற் கட்டுண்டமையின் 'அணு' எனப்பட்டதாகலின் "ஆணவப் பெயருக் கேற்ப வணுக்களை யணுவா யாக்கும்" என்றார் ஆசிரியர். ஆன்மா அணு வெனப்படு மென்பதை "ஏஷோரணுராத்மா" என்னும் முண்டகோபநிஷத் வசனத்தினாலும், "ஜீவாத்மரூபம் ஜ்யோதிரூப மணுமாத்ரம் வர்த்ததே" என்னும் ஸாமவேத தியாநபிந்தூபநிஷத் வசனத்தினாலும்,

"சரீரப்ராதேசாங்குஷ்டமாத்ர மணோரப்யண்யம்
த்யாத்வாத: பரமதாங்கச்சதி"

என்னும் மைத்ராயண்யுபநிஷத் வசனத்தினாலும் அறிக. ஈற்றிற் காட்டப்பட்ட வசனம்—"சரீரத்தின் இருதயத்திற் பெருவிரலளவாயுள்ள (ஒளி) வடிவில் அணுவுக்கணுவா யிருக்கின்றதைத் தியானித்துப் பரம்பொருளை யடைகின்றனன்" எனும்பொருளைப் பயக்கும். அணுவுக்கு அணு = உயிரினுக் குயிரான கடவுள். "உடம்பினுள் அணு விருக்கின்றது" எனும்பொருளில் "அஸ்த்யணுஸ் தநௌ" என்று சிவஜ்ஞாநபோதம் ௩ - ம் ஸூத்ரத்தின் மொழிதருவதும், "மேவிய சீவன் வடிவது சொல்லிடிற்—கோவின்

மயிரொன்று நூறுடன் கூறிட்டு—மேவிய கூறது மாயிர மாயினுல்—ஆவியின் கூறுநூ றுயிரத் தொன்றே." என்று திருமந்திரந் தெரித்திடுதலும் மேலைச் சுருதிநெறியே யென்க. எ - ன் உரை யெடுத்துக் காட்டுகளின்படி வியாபகத்தன்மையுள்ள சீவான்மாவை அணுவென்று கூறும் இக்காட்டுகளாலும் அணுவாக்கிக்கொண் டிருப்பது ஆணவமலமென்றல் சுருதியின் கருத்தென்பது பெறப்படுகின்றது. இதுவேயுமன்றி, மசகமுஞ் சீவனேயாகலின் அதன் நுண்ணுடம்பாகிய பிரத்தியக்க அளவையானும் சீவன் அணுவென லேற்படுகின்றது.] (கூஉ)

இம்மலஞ்சீவர்தம்மாட்டிருத்தலிற்கறிவுமாண்ட
மம்மர்சேர்மூலத்தூக்கமூர்ச்சையுஞ்சான்றுமாசார்
எம்மலங்களுக்குமேலாயிருக்குமிம்மலத்தை நீத்தார்
மும்மலவணுக்களாகார்முத்தராய்ப்பரமாவாரே.

இந்த ஆணவமலம் சீவர்களிடத்துள்ள தென்பதற்கு அறிவுகெட்ட மயக்கஞ் சேர்ந்த மூலாதார நித்திரையும், மூர்ச்சையுஞ் சாட்சிகளாகும். குற்றத்தோடு கூடிய எத்திற மலங்களுக்கும் மேலாகிய இம்மலத்தை யொழித்தோரே திரிமலமுமுள்ள அணுக்களாக மாட்டார். முன்னர்ச் சீவன்முத்தராகிப் பின்னர்ப் பரமுத்தியிற் சிவசாமியத்தைப் பெற்றவராவர்.

[இச்செய்யுட் பொருளை—(ஸுஷுப்திகாலே ஸகலே விலீநே தமோபிபூத ஸுகரூபமேதி। புநச்ச ஜந்மாந்தர கர்மயோகாத் ஸ ஏவ ஜீவ: ஸ்வபிதி ப்ரபுத்த: ॥) "ஸுஷுப்திகாலே ஸகலேவிலீநே தமோபிபூதஸ் ஸுகரூபமேதி। புநச்ச ஜந்மாந்தர கர்மயோகாத் ஸஏவஜீவ: ஸ்வபிதிப்ரபுத்த:॥" என்னுங் கைவல்யோபநிஷத மொழிகள் நிலைபெறுத்துவனவாயுள. என்னை? "சுழுத்திகாலத்திற் சகலமும் இலயமுற்றிருக்கையில் தம:=இருளினுற் சூழப்பட்டவனுய்ச் சுகரூபத்தை யெய்துகின்றனன்: பெயர்த்துஞ் சன்மாந்தர கன்மசம்பந்தத்தினுல் அச் சீவனுனவனே விழித்துக் கொண்டு பெயர்த்துஞ் சுழுத்தியையடைகின்றனன்" எனும்பொருள் பயத்தலின்.] (கூந)

கேவலமிதுவேயாகுங்கிளரருட்கலையாற்கிஞ்சில்
வீவுறுதகலுஞ்செவ்விசகலமாம்விரவுமந்தக்

**கேவலந்தானேயல்லாங்கிளக்கியசகலமெல்லாம்**
**ஆவியாமுயிர்கட்கெல்லாமறைந்தவிரண்டுமுண்டால்.**

இந்த ஆணவமலமே (முன்னர்க்கூறப்பட்ட மூலத்தூக்கம் மூர்ச்சையெனப்படுங்) கேவலாவத்தையாகும். அருளால் நடத்தப் படுகின்ற பிரகாசரூப கலாதத்துவத்தால் அம்மலந் தனது காரணங் கெடாமே காரியத்திற் (சாக்கிர சொப்பனங்களிற்) சிறிது நீங்கிநிற்கு நிலையே சகலாவத்தையாகும். (ஆராயுமிடத்துச்) சுழுத்தி நித்தி ரையிற் கலந்துள்ள அந்தக் கேவலாவத்தையே இரவாகும். (பின் னேகூறப்படுஞ்) சொப்பன சாக்கிரங்களிற் கலந்துள்ள சகலாவத் தையே பகலாகும். ஆவியாகிய சீவர்கட்கெல்லாம் கூறப்பட்ட இரண் டவத்தைகளுமுள்ளன.

[கேவலம்=தனித்து நிற்குநிலை. இவ்வாறு நிற்கும் ஆன்மா வையே 'சருவ சரீரோபாதியின்றிச் சைதன்னியப்பிரமமாய் அவித் தியோபாதிக் குட்பட்டதாயுள்ள பிரத்தியகான்மா' என்று ஸர்வ ஸாரோபநிஷதஞ் சாற்றுகின்றது. 'விசுவன், தைசசன், பிராஞ்ஞன் என்னு மிவர்கள் தத்தம் அவித்தியோபாதி நீங்கினவுடன் அடங்கு மிடமாயுள்ள பிரத்தியகான்மாவே கூடத்தன்' என்று பைங்கலோப நிஷத்தின் ௩ - ம் அத்தியாயம் மொழிகின்றது.

கிஞ்சித் - என்னும் வடசொல்லே "கிஞ்சில்" எனத் திரித்துரைக்கப் பட்டது. உண்டு - என்பதற் கேயும்விதி ௪ - ஞ் செய்யுளுரையகத் துரைக் கப்பட்டதே யாம்.] (௬௪)

வேதநன் னுணுக்கந் தேரார்
மிளிருயிர்க் காண வந்தான்
ஏதெனக் கடாவு வாரஃ
தினையஞா யங்க ளாலோர்
போதுமொவ் வாதஞ் ஞானம்
பொழுதைச்சீ ழூத மூடு
மாதிரி பெனிற்றன் னுக்குண்
மறதியேன் மருளேன் மன்னே.

வேதத்திலுள்ள நல்ல நுட்பங்களையறியுங் கூரிய புத்தி யில் லாதோர் பிரகாச அறிவுடைச் சீவனுக்கு ஆணவமலம் ஏதென்று ஆட்சேபிப்பர்; இதுகாறுங் கூறிவந்த நியாயங்களால் அக்கேள்வி ஒரு

காலத்தும் நியாயமான தாகாது. (அப்படி) அஞ்ஞானமொன்றுள்ள தாயின், சூரியனைக் காளமேகம் மூடுவதுபோல ஒருவிதக் கேடாக விருக்கலாமென்னில், மேகம் சூரியனை மூடுவது சூரியனுக்குள்ளிடத் தன்று, வெளியிலாகும்; அத்தன்மை போல்வதெனின், சீவனுக்குள் ளே நிகழும் அவத்தைக ளாகிய மறதியும், மயக்கமும் எவ்வா றுள வாகும்?

[' ஆணவமலம் ' என்னுஞ் சொல்லால் அஞ்ஞானங் கூறப்படவில்லையே அஃதேதெனு மயங்கி நிற்பாரையே "வேதநன்னுணுக்கந் தோரார்" என்றார். "மூடுமாறு" எனற்பாலதில் று - விகாரத்தாற் றொக்கது. திரிபு=கேடு; "திரிதலே யுலாவல் கேடாம்" எனும் மகாவேதுகைக் கூற்றுழைக் காண்க.] (கூ௫)

முகிலுழி மறைந்த வென்றூழ்
  மூதொளி யிருது தன்னுட்
புகரற விலங்கன் மானப்
  பூரண வாத்து மாவுந்
துகண்மலஞ் சூழ்ந்தா லுந்தான்
  றுலங்கிட வேண்டு மிந்தத்
தகவெது மிலாமை யாலத்
  தளைமல மிருத்த றிண்ணம்.

மேகத்தான் மறைக்கப்பட்ட சூரியன் தனது பழமையான பிரகாசங் கெடாமல் தன்னளவிற் களங்கமின்றிப் பிரகாசித்தல் போலக் குற்றமாகிய அஞ்ஞானம் ஆன்மாவுக்கு வெளியிலே சூழ்ந்து கொள்ளினுங் குறைவற்ற அவ்வான்மா—தன்னுடைய ஞானந் தனக் குட் பிரகாசிக்க விருக்கவேண்டும். இப்படியிருக்குந் தன்மையில் எவ்வளவும் ஆன்மாவுக்கின்மையால் அதன்கண் அனுதிபந்த (அஞ் ஞான) ஆணவமலமிருத்தல் உறுதியே. (கூகூ)

சுழுத்தியி லிருந்தோ னந்தச்
  சுழுத்தியை விளக்க லானல்
விழுப்பொரு ளாய வான்மா
  வினுக்குமே லறிவுண் டென்னும்
வழக்கினைக் கணித்தீண் டாய்ந்த
  வண்மையுந் தெரிப்ப லாண்டுச்

சுழுத்தியி லுணருஞ் சித்தந்
தொலைவின்றி யுளதா லொவ்வும்.

(இதயத்தான) சுழுத்தியவத்தையி லிருந்தவன் (கண்டத்தான சொப்பனங்கடந்து, இலலாடத்தான) சாக்கிராவத்தைக்கு வந்தபோது சுழுத்தியவத்தை சுகமாகவிருந்ததென்று அதனை விளக்கிக் கூறலாற் சிறந்த நற்பொருளாகிய ஆன்மாவுக்கு, மேலான அறிவுண்டென்னும் வார்த்தையை இங்கே கணக்கிட் டாராய்ந்த வளப்பத்தையுங்கூறுவேன்—அந்தச் சுழுத்திகாலத் தறிகருவியான சித்தம் மாத்திரம் ஒடுங்காது சீவித்திருத்தலின் அக்காலத்து மறிவுண்டென்பது பொருத்தமே.

[“சுழுத்தியி லுணருஞ் சித்தந் தொலைவின்றி யுளதா லொவ்வும்” என்றது (𑌚𑌿𑌤𑍍𑌤𑍈𑌕𑌕𑌾𑌰𑌣𑌾 𑌸𑍁𑌷𑍁𑌪𑍍𑌤𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌾𑌭𑌵𑌤𑌿।) “சித்தைககரணு ஸுஷுப்த்யவஸ்தாபவதி।” என்னுஞ் சுருதி நிச்சயமாயிருக்கிறது. இது, பைங்கலோபநிஷத்தின் உ-ம் அத்தியாயத்தது. பொருள்:—“சித்தமாகிய ஏக கரணத்தையுடையதே சுழுத்தியவத்தை” எனவாம். “சென்றணையுஞ் சித்தமித யத்து” என்று சிவஞானபோதந் தெரிப்பதூஉம் அது.] (கூஎ)

அயர் துரி யத்து மேலு
மறியறி வின்மை யானும்
மயலுறு சுழுத்தி யேய்ப்ப
மதித்தொரு காறு கூறற்
கியல்வதில் லாமை யானு
மிவைகளைக் கூடிச் சீக்குந்
துயிலுணர் சுழுத்தி யூகஞ்
சுயம்புவென் றிடலொவ் வாதே.

அந்தச் சித்தமெனுங் கருவியு மயர்ந்துவிட்ட நாபித்தான துரியாவத்தையிலும், மூலாதார துரியாதீதாவத்தையிலும் அறியுமறிவின்மையானும்; இவ்விரண்டவத்தைகளிலும் மயக்கமுள்ளசுழுத்தியறிவைப்போல நித்திரையனுபவத்தைச் சற்று நிதானித்து ஓரளவு கூறுதற்கு இயலாமையானும் இரண்டவத்தைகளையுங் கூடி நீங்குமொரு நித்திரையின்கண்ணே யுணருஞ் சுழுத்தியறிவு—(கலை, சித்த

மெனுங்கருவி இவற்றின் சார்பிற் றோன்றுவதாகலின் அதனைச்) சுயம்புவென்று கூறுதல் பொருந்தாது.

[சாந்தோக்யோபநிஷத்தின் அ - ம் பிரபாடகத்துப் கக - ங்கண்டத்தில் (ஸ்வப்நம் நவிஜாநாதே) "ஸ்வப்நம் நவிஜாநாத்யே" எனுமிடத்திலே (நாஹவஷ்யமேவம் ஸம்ப்ரத்யாத்மாநம் ஜாநாத்யயமஹமஸ்மீதி நோஏவேமாநி பூதாநி) "நாஹகல்வயமேவக் ஸம்ப்ரத்யாத்மாநம் ஜாநாத்யயமஹமஸ்மீதி நோஏவேமாநி பூதாநி" என நிகழ்ந்துசெல்லும் வசனம்—"உண்மையாகவே அவன், நானென்று ஆன்மாவையறிந்திலன் : வேறொன்றையு மறிந்திலன்" எனும் பொருள் பயத்தல் சுழுத்தியைக் குறித்துளதாகலின், "அபர் துரி யத்து மேலு மறியறி வின்மை" என்றது சால்புடைத்தே யாம். முற்செய்யுளுரைக்கட் காட்டப்பட்ட பைங்கலோபநிஷத் வசனத்திற்கு விரோத முறுமே இச்சுருதி கூறிய சுழுத்தியைத் துரியமென்றே கோடன் மரபாம். இவ்வாறு கூறுதலே, உரியபொருளை விட்டு அப் பொருளின் சம்பந்தியை யுணர்த்தும் இலக்கணையென்ப. ஆணவமலத்திற் கட்டுண்ட அணுவினதறிவு சஈ - ன் உரையில் விளக்கியவாறு கலை, கருவி யென்பவற்றின் சகாயம் வேண்டற்பால தாகலின், "சுழுத்தியூகஞ் சுயம்பு வென்றிட லொவ்வாதே" என வீங்குரைக்கப்பட்டதன்றி வேறன்று ; என்னை ? அதற்குச் சுயம்புவான உள்ளமுளது, அது சித்தேயெனுந் துணிபுரைகள் கூ0, கூஉ - லும் வேறு சில நூற்குக்களிலுங் கூறப்பட்டமையின். "சுழுத்தி" என்றது ஆகுபெயராய் அங்கு னுறுமறிவினை யுணர்த்துவதாயிற்று. மேலும் - என்பது துரியாதீதத்தை யுணர்த்தி நின்றது. துரிய துரியாதீதங்கட்குஞ் சொப்பன சாக்கிரங்கட்கும் இடையிலுளது சுழுத்தியாகலின் அவ்விடத்து நித்திரை— "கூடிச் சீக்குந் துயில்" எனப்பட்டது. இவ்வைந்து அவத்தைகளையும் (பஞ்சாவஸ்தா: ஜாக்ரத்ஸ்வப்நஸுஷுப்தி துரீயதுரீயாதீதா: ।) "பஞ்சாவஸ்தா: ஜாக்ரத் ஸ்வப்நஸுஷுப்தி துரீயதுரீயாதீதா: ।" என்று யஜுர்வேத மண்டலப்ராஹ்மணோபநிஷதங் கூறிற்றாகலின், வேதம் பஞ்சாவத்தை கூறிப் பரம்பொருணிச்சயஞ் செய்திலதெனற்கு வாயின்று.] (கூ௪)

ஆத்துமன் றனக்கெஞ் ஞான்று
மறிவிருந் திடுமேன் முன்னர்ச்

சாற்றிய மூர்ச்சை வேலை
தனினுமஃ திருத்தல் வேண்டுந்
தேற்றிய பின்பல் லாது
சிறிதுமஃ தின்மை யாற்பொய்
வேற்றுமை காட்டஞ் ஞான
மிகைமல மிருத்தன் மெய்யே.

சீவனுக்கு எக்காலத்தும் அறிவொன்றிருப்பது உண்மையா யின் மேலே கூறிய மூர்ச்சை யமையத்திலும் அது சீவிக்க வேண்டும். ஔடதம் உபசாரமாகிய விவற்றால் அம் மூர்ச்சை தெளிந்த பின்னர்த்தான் அவ் வறிவு நிகழ்வ துண்மையின், சீவனுக்கு அறிவு எக்காலத்து முண்டென்பது பொய்யே. ஒவ்வோ ரவத்தையினும் வெவ்வேறு காட்சிகளைத் தோற்றுவிக்குங் குற்றமுள்ள அஞ்ஞான ரூப ஆணவமலமிருத்தன் மெய்யே.

[ ஆத்மந் - என்னும் வடசொல் தமிழ்நூன்முடிபுக் கியைய "ஆத்துமன்" என வுரைக்கப்படுவதாயிற்று. அச் சொல்லைக் **கடோபநிஷதம்** ச - ம் வல்லி க - ல் " அந்தராத்மந் " என வருமாற்றானுமறிக. ' ஆத்துமன் ' என்பதற்குச் ' சாற்றிய ' முதலியன இனவெதுகை.] (சுக)

மிச்சையா முயிர்க்கெஞ் ஞான்று
மிளிருணர் விருப்ப தாநாம்
நிச்சய நொடிக்க வில்லை
நிசபரம் பொருளைத் தானே
சொச்சமா மான்மா வாகச்
சொல்லினே மதற்கெஞ் ஞான்றுங்
கொச்சையி லறிவுண் டென்னுங்
குறிப்பையு மாய்வா மிங்ஙன்.

பரம்பொருளாகிய வொன்றுமே யுண்மைப் பொருள் ; (அது காரணமாகத் தோன்றுஞ் சக சீவ பரங்களெனும் மூன்று) பொய்ப் பொருள்களு ளொன்றுஞ் சீவனுக்கு, எக்காலத்தும் பிரகாசிக்கும் அறிவிருப்பதாக நாங்கள் நிச்சயங் கூறவில்லை ; அவ் வுண்மைப் பொருளைத்தானே பரிசுத்த ஆன்மாவென்று கூறினேம் ; அத்தகைய ஆன்மாவுக் கெக்காலத்துங் குறைவில்லாத அறிவுளதென்று குறிப் பாகக் கூறும் பட்சத்தையும் இங்ஙனம் விசாரிப்பாம்.

[ தான் - கட்டுரைச் சுவைபட நின்ற அசை. கொச்சை= குறைவு; கொச்சக மெனப்படுவ தொன்றும் இச்சொற்பொரு ளுடைத்தே. "ஆய்வாம்" என்றது சீடனைக் கூட்டிக்கொண்ட உளப்பாட்டுத் தன்மைப் பன்மை.] (எ0)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஒப்பில் வத்துவை யகண்ட மென்னினது
  கண்ட மென்றறையொ ணாதுமா
துப்பி லங்குமது துரிசு டம்புள்வர
  ஞாய மின்றறிவு சோர்வெனின்
ஒப்பு ருதிவை யுயிர்க்க தற்கிலென
  வோதி னுஞ்சுருதி யாலினும்
எப்ப டிப்பகரி னுங்க டத்துளஃ
  திருத்த லென்பதுபொய் யாதரோ.

அந்தப் பரம்பொருளை நிகரற்ற அகண்ட வத்துவெனக்கூறின்; அதனைக் கண்டவத்து வென்று கூறுதல் அடாது. (அன்றியும்) மிக்க பரிசுத்தம் பிரகாசிக்கவுள்ள அஃது அசுத்தமாகிய இத்தேகத்தினுள் வர ஒரு நியாயமுமில்லை. (இங்ஙனம், சீவான்மா பரமான்மாவின் அமிச மதனால்) அறிவு சோர்வெனில், சடப்பொருள்கள் அமிசப் படுமேயன்றிச் சித்துப் பொருள் அமிசப்படா தென்னு நியாயத்தானும், கடவுள் பகாப்பொரு ளென்னு நியாயத்தானுஞ் சோர்வு அங்கீகரிக்கத்தக்க தாகாது. (இதன்மேல்) இந்த அவத்தையெல்லாம் சீவான்மாவுக்கே; பரமான்மாவுக் கில்லை யென்னினும், இவ்விடயத்தைச் சுருதிப் பிரமாணங்களைக்கொண்டு எப்படி யெப்படி வற்புறுத்திக் கூறினுந் தேகத்தில் அஃதிருக்கின்ற தென்பது பொய்ப் படுவதில்லை.

[ இங்ஙனம், வீரபத்திரமூர்த்தி முதலினோர் சிவபிரானுடைய அமிசமெனக் கூறப்படுதல் நூல்களி லுண்டேயென்னின்,—தந்தையினது சரீர அமிசமான விந்து மகனுக் குடம்பாதல் போல, அம்மூர்த்தி முதலினோர்க்குஞ் சிவபிரானுடைய பிரணவ சரீரகலை அவ்வா ருயதேயல்லாற் சிவசைதன்னியமே அவ்வா ருயதன்றெனல் அக்கூற்றிற்குப் பொருளாகுமென்க. அந்தச் சைதன்னியம் பல மணிகளிடத்தும் ஒரு நூலே புக்கிருத்தல்போலப் பதியினுடைய அமிச மூர்த்தங்களினும், பதிக்குடம்பாயுள்ள ஆன்மாவாகிய

மூர்த்தங்களிலுமிருக்கும். அது தன்னளவில் நன்கு பிரகாசித்திருப்பதே. இவ்விவரத்தை—"அறிவாமெய் வத்துமற்றென் றுதலற்ப மாதல்—செறிவாமுக் காலுமில்லை தேவே பரஞ்சோதீ. பன்மணியி லோர்நூலே பற்றிநிற்கு மாறரிய — நின்மகிமை மூர்த்தமெங்கு நிற்பாய் பரஞ்சோதீ. கருவமிச மாமாறு காந்தியோங் கார— வுருவமிச மாமென்ற லொவ்வும் பரஞ்சோதீ." என்று காசியாத்திரையில் இந் நூலாசிரியரே கூறியிருத்தல் கொண்டும்,

"மணிகணே ஸூத்ரமிவ ஸர்வக்ஷேத்ரேஷு யதாநுஸ்யூத
அந்தர்யமயந் ப்ரகாசதேஹ்ய யாத்மா ஸோந்தர்யாமீ ।"

என்று ஸர்வஸாரோபநிஷதங் கூறுதல்கொண்டு மறிக. சுருதியினருத்தம்:—"பலமணிகளில் ஒரு நூல்போல உள்ளே யிருந்து பிரகாசிக்கின்ற ஆன்மா எவனோ அவனே அந்தரியாமி" எனவாம். "யஸ்யாதித்யச் சரீரம் யஆதித்யமந்தரோயமயத் யேஷத ஆத்மாந்தர்யாம் யம்ருத:।" எனப் பிருஹதாரண்யகோபநிஷத்தின் ௩-ம் அத்தியாயத்து எ-ம் பிராஹ்மணத்தினும், "ஸத்யஸ்ய ஸத்யமிதி ப்ராணாவைஸத்யம் தேஷாமேஷ ஸத்யம்" என மேலை யுபநிஷத்தின் ௪-ம் அத்தியாயத்து க-ம் பிராஹ்மணத்தினும் வரு வசனங்கள் சத்தியமாகவுள்ள ஆன்மாக்கள் அந்தரான்மாவாகிய கடவுளுக்கு மூர்த்தங்களென்பதைக் காட்டுகின்றன. முறையே பொருள்:— "அவனுக்குச் சூரியன் சரீரம்: உள்வயி னிருந்துகொண்டு சூரியனை யியக்குகின்றனன்: இவனே ஆன்மாவின் அந்தரியாமி: அமிருதன்" எனவும், "சத்தியத்தினுஞ் சத்தியம்: பிராணன்களனுஞ் சீவான்மாக்களே சத்தியம்: அவற்றிற்கு இந்த (ப்பரம) ஆன்மா சத்தியம்" எனவுமாம். 'ப்ராணா:' என்பது பன்மைச் சொல்லென்பது ௩௬-ன் உரையிலேயே விளக்கப்பட்டது. சத்தியமான அச் சீவான்மாக்கள் அனேகம்: அவை பலபேதமாக வுள்ளன வென்பதூஉம், சீவான்மாவைப் பொய்யென்றல் போலிக்கூற்றென்பதூஉம் ஈண்டுப் பெறுக. மைத்ராயண்யுபநிஷதம் கூ-ம் பிரபாடகத்தில் (யெஸிநுவஊவாஹ)ஹுரஞ)ஜஹு ०) "யேபிந்தவ இவாப் புச்சரந்த் யஜஸ்ரம்" என்று கூறிச்செல்லுமிடத்துறு வசனங்கள்—"நீர்த்துளிகளையும் மேகத்திற்குண் மறைந்துள்ள மின்னல்களையுமொத்து வெளிப்படு முயிர்கள் பரமாகாசப் பிரமதேசசாக விருக்கின்றன: அக்கினிப் பொறிகள்போல வெளிப்படுகின்றன" எனவும், முண்டகோபநிஷத்தின் உ-ம் முண்டக ஆரம்ப வாக்கியங்

கள்— "எப்படி அக்கினியிற் பொறிகளுண்டாகின்றனவோ அப்படியே அக்ஷரத்திலிருந்து பலவித பதார்த்தங்க ளுண்டாகின்றன" எனவும், தைத்திரீயாருணசாகை நாராயணத்தில் (வாஜொஸ்ரு விஸ்ரூாஹ-ுதாநி) "பாதோஸ்யவிச்வா பூதாநி" எனவரு மந்திரம்— "எல்லாவுயிர்களும் அம்முதல்வனுடைய பாதம்" எனவும் பொருளாமாற்றானே சீவான்மாக்கள் பரமான்மாவின் அமிசமெனக் கருதல்வேண்டுமென்ப தேற்படுகிறது. இதனுண்மை.— மநுஸ்ம்ருதியின் கஉ-ம் அத்தியாயம் ஆத்மஸ்வரூபமென்னுமிடத்தில் "அந்தப் பரமான்மாவினது சரீரத்தினின்று சீவான்மாக்கள் அக்கினியிலிருந்து பொறிகள் வெளிப்படுதல்போல எண்ணில்லாதனவாய் வெளிப்பட்டுத் தேவர் மனிதர் முதலிய வுருவங்களைத் தரித்துக் கொண்டு திரிகரணங்களையும் இருவினைகளி லேவுகின்றன" எனும் பொருட்டாதலிற் பெறப்படுகின்றது. என்னை? அ-ன் உரைக்கட் போந்த ஊர்ணநாபிப் பூச்சி போலிருக்கும் பிரமத்தின் சரீரமாய மாயைவயி னடங்கிக்கிடக்கு முயிர்கள் சிருட்டி ஞான்று வெளிப் படுதல்பற்றிச் சுருதி அவ்வாறு கூறிற்றேயன்றிப் பிரமமெனும் ஆன்மாவே அவ்வாறாயதாகக் கூறிற்றிலை யென்பதறியக்கிடத் தலின். அம் முண்டக வாக்கியங்கட்குப் பின்னர் (அக்ஷரா த்ரூதஃ வரஃ) "அக்ஷராத் பரதஃ பரஃ" எனவரு வாக்கியம் "அக்ஷரத்தினும் பரனை சீவனினும் மேலானவன் அம்முதல்வன்" எனும்பொருள் பயத்தலின் அவ் வக்ஷரம் மாயையென்பது மறியக் கிடக்கின்றது. சீவான்மா அசித்தாயுள்ள பாசபதார்த்தம்போலாது சித்தாயிருத்தலினாலும், பரமான்மாவுக் குடம்பாயுள்ள அவ்வான்மப் பிரகாசம் அப் பரமான்மப் பிரகாசத்தாற் பிரகாசிப்பதொன்றாதலினாலும் பிரமதேசசு, பிரமபாதம் (=அமிசம்) என்று சுருதி கூறிற்றெனினுமாம். பிரஹ்மஸூத்ரம் "அம்சோ" என்றற் றொடக்கத்துச் சூத்திரத்தில் 'வேறாய் (=உடம்பாய்) ச் சொல்லப்படலான் ஆன்மா அமிசம்' என்றதும், (ஆபாஸஏவச=) "போலியுமே" எனுஞ் சூத்திரத்தால் உபாதியினாற் பிரமஞ் சீவனாயிற்றென்பது போலிநியாயமென நிச்சயித்ததும் இம்முடிபிற் பொருந்துகின்றன. (ஸவஜெஜூஶோாஶோயாமெஶ ஸஙிதொ) "ஸர்வஜ்ஞேசோமாயா லேச ஸமந்விதோ" என்றற் றொடக்கத்தனவாகக் கூறப்படு பைங்கலோபநிஷத் வசனங்களில் "சருவஞ்ஞனாகிய ஈசன் மாயாலேசத்துடன் வியட்டி தேகத்திற் பிரவேசித்து (தயாமோஹிதோ ஜீவத்வமகமத்=) அம் மாயையினால் மோகிக்கப்பட்டவனாய்ச் சீவத்து

வத்தை யடைந்தனன்" என்பதும், (ஈஶ்வர ஏவ ப்ரஹ்ம விஷ்ணு ஈஶாநேந்த்ராதீநாம்) "ஈச்வர ஏவ ப்ரஹ்ம விஷ்ண்வீசாநேந்த்ராதீநாம்" என்றற் றொடக்கத்தனவாகக் கூறப்படு நிராலம்போபநிஷத் வசனங்களில் "ஈசுவரனே பிரமன், விட்டுணு, உருத்திரன், இந்திரன் முதலிய நாமரூபவாயிலாகத் தூலமாயிருக்கின்றேனென்று (அத்யாஸம் =) சுமத்திக்கோடலாற் சீவனாகின்றனன்" என்பதும் பெறப்படுகின்றன. இவைகளும், இவை போல்வன பிறவும் சீவான்மாக்கள் ஈசுவராமிச மென்பதை நிலைபெறுத்த மாட்டா. என்னை? இயங்கா வுடம்பினைத் தானியங்குந் தன்மையா லியக்கிக்கொண்டு தேகாபிமானியாயிருக்குஞ் சீவனைப்போலவே தான் சீவனொடொற்றித்து அம்மயமாய்நின் றியக்கியும் இயங்கியு நிற்குஞ் சத்தியுளோன் ஈசுவரனாகலின். சிவஜ்ஞானபோதத்தின் (த்ருஶோர் தர்ஶயிதா ஸாத்மா) "த்ருசோர் தர்சயிதா சாத்மா" என்றற் றொடக்கத்துப் கக - ஞ் சூத்திரம்— "கண்கட்கு உருவத்தைக்காட்டுவோனுங் காண்போனும் ஆன்மாவாதல் போல அவ்வான்மாவுக் குண்ணின்று விடயத்தைக் காட்டுவோனுங் காண்போனுஞ் சிவனே: ஆதலிற் றனக்கு உபகாரியாய அச்சிவன்பால் மேம்படு பத்தியைச் செய்யக்கடவன்" எனும் பொருட்கு மாற்றானும் இந் நியாயத்தைப் பெறுக. இயக்குந் தன்மை சங்கற்பமாத்திரையேயாம்; இயங்குந் தன்மையிற் றமரை யிலைச்சலம்போ விருப்பனாகலின் ஈசுவரன் விகாரியாவா னல்லன். இந் நியாயத்தை "மயிஜீவத்வ மீசத்வம் கல்பிதம் வஸ்துதோநஹி।" என்று ருக்வேத ஸரஸ்வதீரஹஸ்யோபநிஷத் வசனம் ஆதரிக்கின்றதன்றோ. தமிழ்:— "என்மாட்டே (பிரமத்தில்) சீவத்தன்மையும் ஈசத்தன்மையுங் கற்பிக்கப்பட்டன: உண்மையிலின்று" என்றபடி. ஈசத்தன்மை உண்மையி லின்றென்பது இனைத்தென்பதை அ - ன் உரையுழிக் கண்டு தெளிக. மேலைப் பைங்கலோபநிஷத்தின் ஆரம்பத்திற் சொல்லப்படு சச்சிதானந்தப் பிரமசன்னிதியிலுள்ள மூலப்பிரகிருதியிற் பிரதிபிம்பித்த (ஸாக்ஷி சைதந்யம்) சாக்ஷி சைதன்னியமே மேற்போந்த ஈசுவரனெனப்பட்ட தென்பதும், பின்னை அந்த உபநிஷத்திற் சத்துவாதிக்கிய அவ்வியத்த ஆவரண சத்தியிற் பிரதிபலித்த ஈசுவர சைதன்னியமாகச் சொல்லப்படுவது சங்காரகாரிய குணருத்திரனென்பதுங் கொளக்கிடக்குமாற்றானே இவ்வுருத்திரன் வாயிலாக அப்பரமேசுரனது சங்காரகிருத்தியம் நிகழுமென்பதும், அதனால் அவ்வீசுரனை, (ஜகத்யோநி: =) பிரபஞ்ச

காரணனென்பது முணரக்கிடக்கின்றன. இச் சுருதியில் மூலப்பிர கிருதி யென்றது பரப்பிரகிருதியாகிய ஓங்காரமாயையையே. பிரதி பிம்பித்தலென்றது அம்மாயையிற் றங்கியிருந்தும் கடஜலபாநுபோ லொருதொடக்கு முண்ணுதிருக்கு மோரியல்பை; அ - ன் உரையில் அட்டமூர்த்தங் கூறுமிட நோக்குக. அவ் வீரபத்திர மூர்த்தியை, சரபோபநிஷதம்— (ஊஹாவீரோ வீரஹஞெ௱ாவஹஃவஹ - மஹா வீரோ வீரபத்ரோபபூவஹ)= "மகாபலமுள்ள வீரபத்திரமூர்த்தி யாக வெளிப்பட்டோன்" என்று விளம்புமாற்றானே மகேசுரனென் றுணர்த்துகின்றமையானும், வாதுளோத்தர சுத்தாக்ய தத்வபேதபட லம் மகேசமூர்த்தம் உ௫ - மியம்புமிடத்தில் (ஆரூஶோவீரஹஜு௱கஃ - த்வாதசோவீரபத்ரகஃ)= "கஉ - ம் மூர்த்தம் வீரபத்திரன்" என்று கூறுகின்றமையானும், வேறுபிரமாண வேதுக்களானும் பிரளயா கலரிலுள்ள ககஅ - உருத்திரர்களில் வீரேசனென்றாயினும், வீர பத்திரனென்றாயினும் வருமொரு பெயருக்குரியோன் இவ் வீரபத் திரமூர்த்தியின் வேறென்பதூஉ முணரக்கிடக்கின்றது. போந்த அந்தரான்மா சிவபிரானென்பதை, "தமீச்வராணும் பரமம்மஹேச் வரம்......ஏகோதேவஸ்ஸர்வபூதேஷு கூடஸ்ஸர்வவியாபீ ஸர்வ பூதாந்தராத்மா।" என்று சுவேதாச்வதரோபநிஷத்தும், "புந்தியாய் புண்டரிகத் துள்ளாய் போற்றி" என்று தமிழ்மறைத் திருத்தாண் டகமுங் கூறுமாற்றா னறிக. "அத்வைத பாவநாயுக்தஃ ஸதாத்மாந முபாஸயேத்।" என்று ஸர்வஜ்ஞாநோத்தராகமம் கூறுதலுமது. பொருள்:— "அத்துவித பாவனையுடையோன் ஆன்மாவிற் சிவனைக் கண்டு உபாசித்து" எனவாம். இதுபற்றிய வேறு பிரமாணங் களும் பாயிரத்து ௩, நூல் ௩, அ, கஉ - இச்செய்யுள்களி னுரை களிற் காட்டப்பட்டுள. கூறிப்போந்தவாறு ஞானகனமாய்ப் புறத்தி லுள்ள சிவமே அகத்தும் பிரகாசித்துக்கொண் டிருக்குமாயின் அஞ் ஞானம் அல்லது ஆணவமலமென்பதொன்று சீவனுக்குத்தான் யாங் ஙனமிருக்குமென்னின்,—அரிய பெரிய இக்கடாவும், உரியவிடையு மறிந்துகொள்ளாதாற்குத் தன்னுண்மையுந் தலைவனுண்மையும் விளங்கா வென்பதும் மெய்யே. ஆத்மபோதோபநிஷதம்—

(உலூகஸ்யயதாபாநுரந்தகாரஃப்ரதீயதே।
ஸ்வப்ரகாசே பராநந்தே தமோமூடஸ்யஜாயதே॥)

"உலூகஸ்யயதாபாநு ரந்தகாரஃப்ரதீயதே।
ஸ்வப்ரகாசேபராநந்தே தமோமூடஸ்யஜாயதே॥"

என்று கூறுமாற்றானே "கூகைக்குச் சூரியன் இருட்டாகக் காணப்படுமாறு மூடனுக்குச் சுவப்பிரகாச பரானந்தத்தில் இருட்டுள்ளதாகும்" என்பதறியப்படுதலின் அதனுண்மை யுணரற்பாற்று தன்னுயிர்க்குயிராய் நிற்குங் கடவுட்டன்மையே "ஸ்வப்ரகாசபரானந்தம்" எனப்பட்டது. இங்ஙனம், கூகை பகற்குருடா யிருத்தற்கு அதன் விழிக்குற்றமே ஏதுவாதல்போல யாண்டும் ஞானப்பகலாகவே யுள்ள தெய்வத்தைத் தரிசியாது குருடாயிருத்தற்கு ஆணவமலக் குற்றமே ஏதுவென்பதும், பூதவிருளும் ஆணவாதி ஐவகைப்பாசங்களுஞ் சிவபரம்பொருளை மறையாமே சீவனதறிவையே மறைத்து நிற்குமென்பதுந் தெள்ளிதினுணர்க. அம் மறைப்பும் அதன் நீக்கமும் பிறிதோருவமான வாயிலாக எச - ஞ் செய்யுண்முதற் கூறப்படுதலின் அவையற்றை ஆண்டுணர்க. யாண்டும் ஞானப்பகலாயிருத்தலினாலும், அவ்வாறிருக்கும் பதிக்குச் சுட்டியறியக் கிடப்பதொன் றின்மையினாலும், அப்பதியை அறியறிவிருந்தும் பசு அறியாது நிற்றலினாலும், அறியறிவில்லாப் பாசமும் அப்பதியை மறையாது அப்பிரகாசமாய்க் கிடத்தலினாலுமே சிவஞானபோதம் "யாவையுஞ் சூனியஞ் சத்தெதிர்" என்று எ - ஞ் சூத்திரத்தே யியம்புவதாயிற்று. விளங்கி நில்லாமையே 'சூனியம்' எனப்பட்டது. கூகைக்கு இருளிற் பார்வை நிகழுமாறு சீவனுக்கும் அஞ்ஞான தசையிற் சிற்றறிவு நிகழ்வதாகும். இக் கூகையுவமை முதலிய பல்லாற்றானும் பெத்தமுத்தி வியாபக வியாப்பிய விலக்கணங்களெல்லாம் பெரிதும் விளக்கப்படுதலை இந் நூலாசிரியரது சேக்கர்வேள் செம்மாப்பின் முதலாங்காண்டத்தி னறியலாம்.

'வத்துவை ஒப்பி லகண்டம்' என மாறுக. அது - என்பதனோடு இரண்டனுருபுஞ் சாரியையுங் கூட்டி யுரைக்க. கடம்=தேகம்; டகர வேதுகை காண்க.] (எக)

கண்டி தக்கடமு மலமு முள்ளள
வகண்ட மாவதிலை கண்டமே
கண்டி தக்கடமு மலமுஞ் செல்பொழுது
கண்ட மற்றுள வகண்டமே
கண்டி தக்கடமு மலமு முள்ளள
வகந்தை மூடுபசு வாகுமே
கண்டி தக்கடமு மலமுஞ் செல்வுழி
யகந்தை நூறுசிவ மாகுமே.

கண்டமாகிய தேகமும், அஞ்ஞானமுமிருக்குமளவும் அகண்டமென்று அப்பொருளைக் கூறற்கிடமில்லை; கண்டப்பொருளே. அத்தகைய தேகமும், மலமும் ஒழியுங்காலத்துக் கண்டத்தன்மை நீங்கி அகண்டப்பொருளாதல் கூடும். அத்தேகமும், மலமுமுள்ளளவும் ஆணவத்தா லாவரிக்கப்பட்ட பசுவேயாகும். அத்தேகமும், அஞ்ஞானமும் (சிவானுக்கிரகத்தால்) அகலுங்காலத்து ஆணவமலசத்தியைக் கெடுத்துச் சிவசமமாகும்.

[இச்செய்யுள்—

(பசு:பசுத்வஸம்யோகாந்நமுக்த:பசுருச்யதே ।
யஸ்மாத்ஸ்வத்ருக்க்ரியாசாலீ கலாஹீநோப்யநீச்வர: ।
வ்யாபகச்சிந்மயஸ்ஸூக்ஷ்மச்சிவவத்ஸம்வ்யவஸ்தித: ॥)

"பசு:பசுத்வஸம்யோகாந்நமுக்த:பசுருச்யதே ।
யஸ்மாத்ஸ்வத்ருக்க்ரியாசாலீகலாஹீநோப்யநீச்வர: ।
வ்யாபகச்சிந்மயஸ்ஸூக்ஷ்மச்சிவவத்ஸம்வியவஸ்தித: ॥"

என்னும் பௌஷ்கராகம பசுபடல வசனுர்த்தத்தி லுளது. பொருள்:— "பாச சம்பந்தத்தினுல் ஆன்மா பசு: (பாச நீக்க முற்ற) முத்தான்மா பசுவெனப்படான். கலைகளோடு கூடாதவனுய்ச் சுவானுபவ ஞானக்கிரியைகளால் விளங்குகிறவன்: வியாபகன்: சின்மயன்: சூக்குமன்: சிவனைப்போலத் தனக்குமேலாக ஓரதிபதியிலாதவனு யிருக்கிறுன்" எனவாம். இப்பொருளில் வரு முண்டகோபநிஷத். வசனமும் சஎ - ன் உரைக்கட் காட்டப்பட்டதன்றே.] (எஉ)

அனக மானபர மூர்த்தி கட்குமறி
வாள ருக்குமுட லுண்மையின்
சொனவ ணம்புலறி வுங்கொ ழிப்புமவர்
கட்கு முள்ளனகொல் சொல்லெனு
வினவொ ணுதவர்கள் வெண்ப ளிங்குநடு
வுள்ள தீபமென வொளிர்தலாற்
கனக மாமுரு விருந்து மின்மையது
காண லானிழலி லாததால்.

பாவமற்ற பரமேசுர மூர்த்திகட்கும், சீவன் முத்தர்கட்குந் தேகங்களிருத்தலின் மேலே கூறியவாறு அவர்கட்கும் அற்பவறி

வும், மலக்குற்றமும் உளவாமோவென்று ஆட்சேபிக்கக்கூடாது. என்னை? படிகத்தாலாகிய பாத்திரத்தி னடுவுள்ள தீபத்தைப்போலவே அவ்வுடம்பிலிருந்தும் (வெளியிடத்துங் குறைவின்றிப்) பிரகாசிக்கின்றதனாலும், பொன்போன்று மிளிருஞ் சோதியுடம்பு இருந்துந் தாக்கற்றிருக்குந் தன்மையால் அஃதில்லாமை வெளிப்படுதலானும், நோயில்லாமையானும்.

[நீழல்=நோய். நிழல் - குறுக்கல் விகாரம். கொழிப்பு=குற்றம்; சூடாமணிநிகண்டு காண்க.] (எஙு)

சோதி தன்னையிருள் சேரு மென்னலியை
யாமை போலுயிர்கள் சுத்தமென்
றோதி மாழையொடு கூடு மென்பதுமொவ்
வாத ஞதிநனி யுள்ளதாய்
நீதி கூறுவதொவ் வாது போவதிலை
ஞெகிழி யானதை யனுதியே
ஏது மின்னிட விடாது செய்தமுரு
டென்ன மாழையையு மெண்ணிடின்.

எங்ஙனம் ஒளியை இருள்சேருமென்பது பொருந்தாதோ, அங்ஙனமே சீவான்மாக்கள் (பிரமத்தி னமிசங்களாதலின்) பரிசுத்தமானவைகளென்று கூறிக்கொண்டு (பின்பு) அவைகள் அஞ்ஞானத்தோடு கூடுமென்றலும் பொருத்தமில்லாததே. தன்னகத்திருக்கும் அக்கினியை அனுதியிற்றனே எவ்வளவும் பிரகாசிக்கவொட்டாது செய்துகொண்ட கட்டையினை யொக்குமென அஞ்ஞானத்தையுமெண்ணிடின், அவ்வஞ்ஞானம் அனுதியாகவே யுயிர்களிடத்துக் கேடின்றியுளதாகக் கூறு நியாய மொவ்வா தொழிவதில்லை. ஒவ்வும்.

[கட்டையில் நெருப்பு மறைந்துளதென்பதை, “திலேஷுதைலம் ததிநீவஸர்பிராபஸ் ஸ்ரோதஸ் வரணீஷுசாக்நி: । ஏவமாத்மநி ஜாயதே” என்று சுவேதாச்வதரோபநிஷதங் கூறுமாற்றானறிக. தமிழ்:— “எள்ளிலே தைலமும், தயிரிலே நெய்யும், நீர் வருமிடத்திலே நீரும், (ஞெகிழிக்கோல்=) கட்டையிலே நெருப்பும் போல ஆன்மாவிலே (பரம) ஆன்மா வெளிப்படுவன்” எனவாம். “விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போன்—மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்” என்று தமிழ்மறை கூறுதலுமது.

மாழை = அறிவின்மை ; ழகரவேதுகை காண்க. இங்கே அறிவின்மை - அஞ்ஞானமெனும் பொருட்டு.] (எச)

சித்தெ னுஞ்சரத வத்து வின்புடை
யசித்தெனுங் கொடிய வாணவம்
பெத்த மாகவுள தென்றல் விண்ணனி
பிறங்கு சூரியனின் மங்குருன்
நித்த மாகவுள தென்ப தொக்குமென
நெறியி கந்துசொ லுதாரணம்
ஒத்த தாவதிலை மேன்மொ ழிந்தவண
மொத்த துள்ளெரியு முருடுமே.

(இங்கே) சித்தென்னுஞ் சத்திய வத்துவின்கண் அசித்தென்னுங் கொடிய ஆணவமலம் பந்தித்து நிற்குமென்று கூறுதல், ஆகாச முழுதும் பிரகாசிக்குஞ் சூரியனிடத்து, இருளும் நித்தியமாகவே யுள்ளதென்பதை யொக்குமென்று காண்டல் கருதல் உரையென்னும் அளவைகளைக் கடந்து கூறும் ஆட்சேப உதாரணமும் எடுத்துக் கொண்ட மேற்கோளுக்குப் பொருத்தமாவதில்லை. மேற்கூறிய வண்ணம் பொருத்தமுடைய வுதாரணம் கட்டையும் அதனுள்ளடங்கிய அக்கினியுமே. (எரு)

வலிய காட்டமத னத்தி லேமுளரி
மல்கி யேயெழுதல் போற்றமுள்
மெலிவு றாதசிவ யோக நிட்டையில்
விளங்கு முண்மையுணர் வாரினே
சொலுவ ராகலி னனுதி பந்தவிரு
டொலைவி லாதுமுனி ருப்பதும்
நலிவு றுநிலையி லேபின் னம்மல
நசிப்ப துஞ்சரத மைந்தனே.

மாணுக்கனே! வைரமேறிய கட்டையினாற் செய்யப்பட்ட அரணியைக் கடைதலினால் அக்கினி யதிகரித்து வெளிப்படுதல் போல, வருத்தமுறாத சிவயோக நிட்டையிற் றம்மிடத்திற் பிரகாசிக்கும் யதார்த்தத்தை யறிந்தோர் இங்கே கூறிய வுவமானத்தைக் கூறுவர். ஆதலின் அனுதிபந்தமாகிய ஆணவவிருள் தொலைவிலாது

பெத்தகாலத்தி லிருப்பதும், துக்கம் பொருந்தாத முத்திகாலத்தில் அம்மலசத்தி நசிப்பதுஞ் சத்தியமே.

[ (ஆத்மாநமரணிம்க்ருத்வா ப்ரணவம்சோத்தராரணிம் ।
த்யாநநிர்மதநாப்யாஸாத் பாசந்தஹதிபண்டித: ॥ )
" ஆத்மாநமரணிம்க்ருத்வா ப்ரணவம்சோத்தராரணிம் ।
த்யாநநிர்மதநாப்யாஸாத் பாசந்தஹதிபண்டித ॥ "

என்று கைவல்யோபநிஷதங் கழறுதல் கண்ணுற்றார் இச்செய்யுள் சுருதி முடிபென்பதையு மறிவரால். பொருள்;— "பண்டிதனானவன் ஆன்மாவைக் கீழரணியாகவும், பிரணவத்தை மேலரணியாகவுங்கொண்டு கடைதலாகிய ஞான (=தியான) அப்பியாசத்தினாற் பாசத்தை யெரித்து விடுகின்றனன்" எனவாம். பாசத்திற்கு வேறாகாமல் அதனின் மறைந்து நிற்பது பசுவாகலின் அதுவே கீழரணி யெனப்படுவதாயிற்று. சகலாவத்தையிலுள்ள பசு நின்மலாவத்தையிற் செய்யுங்காரியம் இற்றென அறிவுறுக்கப்பட்டதே இது. இச் சுருதி நெறியே சுவேதாச்வதரம், தியாநபிந்து வென்னும் உபநிஷத்துக்களிலுங் கூறப்பட்டுளது. இன்னணங் கூறப்பட்டமையின் "விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல் — மறைய நின்றுளன் மாமணிச் சோதியா—னுறவு கோனட் டுணர்வு கயிற்றினன்—முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே." என்று தமிழ்மறையுங் கூறிற்றால். மலசத்தி நசிக்குங் கிரமம் இப் படலத்துக் கசு - ஞ் செய்யுளிற் காண்க.

நலிவு=வருத்தம்; "நலியு நன்றறி யாச்சமண் சாக்கியர்" என்று திருஞானசம்பந்தப்பெருமானுங் கூறியருளினர்.] (எசு)

கட்டை யுள்வசு மறைந்த மட்டுமது
 கட்டை யென்றறைதல் போலவே
கட்டு மாணவ மறைத்த மட்டுமுயிர்
 கறைய றுதபசு வென்னலாங்
கட்டை யில்வசு வெழுந்து சூழ்பொழுது
 கட்டை யன்றுகன லென்னல்போற்
கட்டு மாசிலருண் ஞான மேவுழியொர்
 கறையு மற்றபர யென்னலாம்.

கட்டையினுள் அக்கினி மறைந்திட்ட காலங்காறும் அதனைக் கட்டை யென்றே கூறுதல்போல, பந்திக்கும் ஆணவமலம் மறைத்தி

ட்ட காலங்காறும் சீவனைக் குற்றமகலாத பசுவென்றே கூறலாம். கட்டையில் அக்கினி வெளிப்பட்டு அக்கட்டை உள்ளடங்க வியாபிக்குங் காலத்து (இது) கட்டையன்று : அக்கினியே யென்று கூறுமாறு பந்தமாகிய குற்றமில்லாத திருவருண் ஞானம் மேவுங்காலம் ஒரு குற்றமுமற்ற சிவமேயென்றுங் கூறலாம். (எஎ)

உயிரில் வன்மல மிருக்கி லத்தையுணர்
வுள்ள சித்தென வனந்தநூல்
பயிற லெற்றெனின் விடாத பந்ததசை
தனிலு ணர்த்தவுணர் வுறுவதுஞ்
செயிரின் முத்திதசை தனின்மு துக்குறைவு
திகழ நிற்பதுவு முயிர்களுக்
கியல்பெ னுந்துணிவி னலவ் வாறுசொலு
மென்ம ஞருணர்வு ளார்களே.

சீவனில் வலிய ஆணவமல மிருந்தால் அதனை அறிவுள்ள சித்துப்பொரு ளென்று அனேக நூல்கள் கூறுத லெத்தன்மைத் தெனின்,— (அறிவித்தாலு மறியாச் சடப்பொருள் போலாது) பந்தம் நீங்காத பெத்ததசையிலே கர்த்தா உள்ளிருந்து உணர்த்த வுணர்வதும், அஞ்ஞானநீங்கிய முத்திதசையிலே பேரறிவுபிரகாசிக்க நிற்பதுஞ் சீவான்மாவுக்கு இயற்கையெனுந் துணிவினால் அவைகள் அவ்வாறு சொல்லுமென்று சொல்லுவார்கள் அறிவுடையார்கள்.

[அதனை - என நிற்கற்பாலது "அத்தை" என மரீஇ நிற்பதாயிற்று; உண்மைவிளக்கத்தில் "இத்தை விளை வித்தன் மலம்" என வருதல் போல.] (எஅ)

ஆத ரானசக லர்க்கு முய்பிரள
யர்க்கு ஞானகல ருக்குநல்
ஏது வாகநிகழ் கிரியை ஞானமுய
ரிச்சை யத்தனையு மாவரித்
தேத மாகவிளை சீவ போதமு
னிரண்ட றக்கலவி யெண்ணற
ஓத ணுக்கடொறு நின்று மொன்றென
வுரைக்க வேயுளதிவ் வாணவம்.

மூவித ஆன்மாக்களுள், சகலர்க்கும் (உருத்திரப்பெயர்பெற்று) வாழுகின்ற பிரளயாகலர்க்கும் விஞ்ஞானகலர்க்கும் நன்னிமித்தமாக நிகழவுள்ள மேலான இச்சாஞானக் கிரியைகளை யெல்லாம் இந்த ஆணவ மலமே மறைத்து, குற்றமாக விளையுஞ் சீவபோதத்துள் அனன்னியமாகக் கலந்து, எண்ணலளவையி லடங்காதனவாகக் கூறப்படும் ஆன்மாக்கடோறும் பல்வேறு வகையுற நின்றும் ஒன்றே யென்று கூறும்படி யுள்ளதாகும்.

[மிருகேந்த்ராகம பாசலக்ஷணப்ரகரணத்தில்— "ததேகம்பஹு ஸங்க்யந்து தாத்ருகுத்பத்திமத்யத:। கிந்துதச்சக்தயோநேகாயுக பந்முக்த்யதர்சநாத்॥" என வருஞ்சுலோகம்— "(சடமாகிய ஆணவ மெனப்படும்) அஃதனேக மென்றக்கால் உற்பத்தியுடையதாகுமாக லின் அனாதியான இஃதொன்றே யாதல்வேண்டும்: ஏககாலத்தில் யாவர்க்கும் வீடுபேறு காணப்படாமையின் உயிர்கடோறுமுள்ள அஃதனேக சத்திகளை யுடைத்தென்றே கூறல்வேண்டும்" எனும் ஒண்பொருள் பயத்தலின் "ஒதணுக்கடொறு நின்று மொன்றென வுரைக்க வேயுளதிவ் வாணவம்" என்றார் ஆசிரியர். விஞ்ஞானகல ரென்பது "ஞானகலர்" என முதற்குறை விகாரமாய் நின்றது.

இதுகாறும் ஆணவமலத்தி னியல்பே கூறப்பட்டதாகும். ஏனைய நான்குமல வியல்புகளும் அடியிற் கூறப்படுகின்றன.] (எகூ)

**பிரள யர்க்குமிழி சகலர் கட்குநவை**
**பேச வுஞ்சுகமு முறுக ணும்**
**புரிவ தாகவு மனேக பேதவலி**
**புகல வுங்கடலி னலையெனு**
**வருவ தாயழிவ தாக வும்படிவம்**
**வாக்கு நெஞ்சினிரு வினைகளாய்**
**விரிவ தாகவு மிருப்ப தேகரும**
**மலமெ னச்சொலிடு மெய்ய னூல்.**

பிரளயாகலருக்கும் அறிவு விளக்கத்தில் அவருக்கிழிந்த சகல ருக்கும் யாதொரு குற்றம் பிறர் கூறவும், அவ் விருதிறத்தார்க்குஞ் சுக துக்கங்களைப் புரிவதாகவும், (இது) பலபேதமாகிய வலியுடைத் தென வுலகில் வழங்கவும், சமுத்திர தரங்கம்போல ஏறியேறி வருவ தாயும், (அனுபவிக்கப்படுதலால்) ஒழிந்தொழிந்து போவதாயும்,

மன வாக்குக் காயங்களாற் செய்யப்படும் நல்வினை தீவினைகளாய் விரிவதாயுமுள்ள மலமெதுவோ அதுவே கன்மமல மாகுமென்று சத்தியரூபனாகிய சிவபரஞ்சுடரின் றிருவாக்குக்கள் கூறும்.

[ இக் கன்மமலம் அனாதியென்றன் முதலியவற்றிற் குரிய சுருதியாதிபிரமாணங்கள் சஉ - ன் உரைக்கண்ணும், வேறு சில செய்யுளுரைக்கண்ணும் வந்துள்ளன. "இருவினைகளாய் விரிவது" என்பது இன்பமுந் துன்பமுங் கன்மமல காரியமென்பதைக் காட்டுவதாயிற்று. அதிகாரத்திலுள்ள விஞ்ஞானகலர்க்கு இம்மல மின்றென லெவ்வாற்றானென்னுஞ் சங்கை யிங்ஙனம் பிறத்தல் கூடும். சுவர்க்க நரகங்களி லுய்க்குங் கன்மமலம் அவர்கட்கின்றென்பதும், அதிகார புண்ணிய கன்மம் அதிகாரமலமெனப்படும்; அஃதாணவமலத்தைத் தேய்க்கும் அருட்சத்தி காரிய மென்பதும் அதற்குச் சமாதான மென்க.] (அ0)

மாயை யென்னுமல மேசி றந்தசுசி
  மாயை மற்றையது மாமரோ
காய மார்சகலர் பாலி ருக்குமித
  னோடு முன்சொலிய கன்மமும்
ஆய புற்கலனில் வெளியி ருக்குமென
  வறையு மாதிபதி யாகமம்
நாய பூருவ திரோதை கூறின்மு
  னவின்ற வண்ணமல மைந்துகாண்.

மாயாமல மென்பதுதானே தொகையாலொன்றும், சிறப்புடைச் சுத்தமாயை அசுத்தமாயையென வகையால் இரண்டுமாகும். தேகத்தோடு கூடிய சகலரிடத்திராநின்ற இம் மாயா மலத்துடன் முற்கூறிய கன்ம மலமும் புருடனாகிய ஆன்மாவுக்கு வெளியிடத்திருக்குமென்று முதல்வனுடைய பதிசாத்திரங்கள் பகரும். நயப்பாடுடைய ஆதிசத்தியெனுந் திரோதையையும் இங்ஙனங் கூறப்புகின் முன் (= சஎ - ஞ் செய்யுளில்) நவின்றபடி மலங்கள் ஐந்து; காண்பாயாக.

[ இம் மாயாமலம் அனாதி யென்றன் முதலியவற்றிற்குரிய சுருதியாதி பிரமாணங்கள் அ - ன் உரைக்கண் வந்துள்ளன. (ஞாவி) சுசி= வெண்மை; இங்கே தூய்மையெனும் பொருட்டு. நயத்தின் சம்பந்தம்

'நாயம்'. இதனை, (நயொ,நாயெ) "நயோநாயே" என்று அமரஸிம்ஹம் ஸங்கீர்ணவர்க்கத்திற் சாற்றுமாற்றா னறிக. திரோதை ஆதி சத்தியாகலின், "பூருவதிரோதை" என்றார். பூருவம்=ஆதி. இது மலத்தின் வழிநின் றதனைத்தொழிற்படுத்து நீர்மைத்தாகலின் மல மென் றுபசரித் துரைக்கப்படுவதாயிற்று.] (அக)

மலந சிக்கும்வண மம்ம லத்தொடு
விராவி யேபொருளை மறைவுசெய்
திலதை யேயுள தெனத்தி ருத்திப ணு
வித்து மும்மல வியற்கையை
உலவ வேவியிறை தனையு ணுதவர்க
ணிருள தாயுனுமுள் ளொளியதாய்
நிலவி நிற்பது திரோதை யாமிதை
நிகழ்த்து வார்களரு ளென்றுமே.

அனாதி பந்த ஆணவமல சத்திகள் கெடும்படி அம்மலத்தோடு கலந்து (அதற்குச் செயலுண்டாக்கி) அத்துவித மெய்ப்பொருளை மறைத்து, நிலையிலாப் போகங்களை நிலையுள்ளனவாக நினைத்திருக்கும்படி திருத்தி பண்ணுவித்து, மற்ற மும்மல வியல்புகளையுந் தேயும்படி செயற்படுத்தி, பதியாகிய சிவத்தை உள்ளூன்றி நினையாதோரிடத்தில் இருளாய் அங்ஙன நினைக்கு முள்ளத்தி லொளியாய்ப் பிரகாசித்து நிற்பது (அந்தத்) திரோதையாகும். இதனை அருளென்றும் பெரியோர் கூறுவர்.

[ உள்ளம் - உள்ளென நின்றது; அதனோடு எழனுருபு கூட்டியுரைக்க. "ஒளியதாய்" என்றதில் அது - பகுதிப்பொருள் விகுதி. ] (அஉ)

ஒரு ஞானகல ருக்கு முய்பிரள
யர்க்கு முடல்கரண புவனமோ
டார்சு போகமென வேயி ருப்பததி
சுத்த மாயைசக லர்க்கவை
சேர நின்றிடு மசுத்த மாயைகலை
செப்பி ரண்டனையு முறைமையே
வீர மாகநிமிர் விந்து மோகினியெ
னச்சி வாகமம் விளம்புமே.

அறிவு விளக்கமுள்ள விஞ்ஞானகலருக்குச் சுத்த தனுகரண புவன போகங்களாகப் பொருந்தியிருப்பது (அந்தச்) சுத்தமாயையாம். (கலாதத்துவ மத்தகாதி யிடங்களில்) வாழ்ந்துகொண்டிருக்கிற பிரளயாகலருக்குத் தனுகரணபுவன போகங்களாய்ப் பொருந்தியிருப்பது (அந்த) அசுத்தமாயையாம். சகலருக்கு அந்தத் தனுகரண புவன போகங்கள் பொருந்த அவ் வசுத்தமாயையினது கலையெனும் பிரகிருதி நிற்கும். இங்கே சொல்லப்பட்ட சுத்தமாயையைப் பராக்கிரமத்தோ டோங்கியிருக்கும் விந்துவென்றும், அசுத்தமாயையை மோகினியென்றுஞ் சிவாகமங்கள் கூறும்.

[சுத்தம், அசுத்தம், (மூலப்) பிரகிருதியெனப்படு மாயைமூன்றனையும் ஊர்த்துவமாயை, அதோமாயையென விரண்டாகவு நூல்கள் கூறுமாறு இந்நூலும் விந்து, மோகினி, மானென்னு மூன்றனையும் இரண்டாகக் கூறுவதாயிற்று. மிருகேந்த்ராகமமும் அத்வப்ரகரணத்திற் சுத்தாத்துவா, அசுத்தாத்துவாவென்னு முறையானே மாயையை இருவகைப்படுத்தே யோதுவதாயிற்று. மான் மோகினியி லடங்கியுளது. சுத்தமாயையே சுத்தமெனப்பட்டது. அசுத்தமாயையே மாயை யெனப்பட்டது. இங்குரைக்கப்பட்ட தனுகரண புவன போகங்களே மாயாமல காரியமென வறியவேண்டும். அசுத்தமாயையின் கலை காலம் நியதி வித்தை அராகமெனும் ஐந்துமே கலாதியெனப்படுமாகலின் அவைகளே பிரளயாகலர்க்கு இங்கு 'உடல் கரணம்' எனப்பட்டன. பிரளயாகலர்க்கு மாயாமல மின்றெனக் கூறிக்கொண்டு இவ்வாறியம்புத லென்கொலோவெனின்,—அறியாது கடாயினுய். கலை முதலிய வைந்தின் கலப்பிலுண்டாம் புருடதத்துவத்தோடு கூடிப் பிரகிருதி குணதி தத்துவங்களாற் சுகதுக்கங்களுறுஞ் சகலர்க்குரிய அப் புருடதத்துவம் அந்தப்பிரளயாகலர்க் கில்லாமையே மாயாமல மின்மையெனல் சாதிக்கப்படுமென்க. அங்ஙனம் கலாதிகளாலேனும் அன்னோர்க் குபாதியின்றுகொலோவெனின்,—உப்புநீரி லுற்பவித்த பிராணிகட்கு உப்பேற்றமுங் குளிர் வருத்தமு மில்லாமைபோல அவற்றிற் பந்தப்படா வன்னோர்க்கு முபாதியின்றென்க. அந்நீரோ டசுத்தநீர் கூடுங்கால் ஆண்டுள்ள பிராணிகட்கு முபாதி யுண்டாதல்போல, அசுத்தப் பிரகிருதியிற் கூடுந் தேகிகளாய சகலர்க்கே யுபாதி விதப்பாம். விஞ்ஞான கலரினுள்ள அனந்தாதி வித்தியேசுரர்க்கு ஆணவமல வுபாதி விதப்புக் கூறக்கூடாததுபோலவே பிரளயாகலரினுள்ள சீகண்டாதி யுருத்தி

ரர்கட்குக் கன்மமல வுபாதி விதப்புங் கூறக்கூடாது. அவர்கன்மம் அதிகார புண்ணியமாகும்.

பிரணவர், தேசேசர், ஈசர், காலர், அஞ்சு, தீர்த்தர், சுசிவர், சாதாக்கியர், சூக்குமர், காரணரெனப்படு பதின்மருஞ் சாதாக்கிய தத்துவவாசிக ளெனப்படுவர். அனந்தர், சூக்குமர், சிவோத்தமர், ஏகருத்திரர், சீகண்டர், ஏகநேத்திரர், திரிமூர்த்தி, சிகண்டியெனப் படுமெண்மரும் மந்திரமகேசுரர், வித்தியேசுரர், ஈசுரதத்துவவாசிக ளெனப்படுவர். இவர்கட்கு வேறாக மந்திரநாயகர், சத்தகோடி மகாமந்திர ரென்பாருமுளர்: இன்னோர் சுத்தவித்தியாதத்துவ வாசிகளெனப்படுவர். இன்னோரினுந் தாழ்வுடையர் பலருளர்: அன்னோர் சுத்தவித்தைக்கும், அசுத்தமாயைக்கும் இடையில் வசிப்போராவர். இந்நாற்றிறத்தவருமே விஞ்ஞானகல ரெனப்பட்டனர். மத்திமப்பிரளயஞ்சம்பவிக்குமுன் அரிபிரமர்களுடன் குணதத்துவத்திலும், அந்தப்பிரளயகாலத்தில் அவ்விருவரையும் ஒடுக்கிக்கொண்டு அராக தத்துவத்திலுமிருக்கத்தக்க சீகண்டர், அவரோடிருக்கத்தக்க வீரபத்திரர், பிரகிருதிமத்தகத்தி லிராநின்ற உருத்திரரெண்மர், கலை மத்தகத்தி லிராநின்ற உருத்திரரெண்மர் ஆகிய இப் கஅ - பெயர்களும்; ககனவெளியினின்று பிரமாண்டத்தைக் காக்கின்ற சத (க00) ருத்திரர் முதலினோரும்; இன்னோரினுந் தாழ்வுடையராய் மிசிரமாயையில் வசிப்பவராயுள்ள உருத்திரர்களுமே பிரளயாகல ரெனப்பட்டனர். பிரகிருதிமுதற் பிருதிவியீறாகவுள்ள தத்துவங்களில் வசிக்கின்ற அரிபிரமர்கள்முதற் றுவரவர்க்கங்காறுமுள்ள சீவான்மாக்கள் யாவுமே சகல ரெனப்பட்டன. விஜ்ஞாநாகலரென்னும் வடசொல், தமிழில் விஞ்ஞானகலரென வழங்கப்படுவதாயிற்று. "மெய்ஞ்ஞானந் தானே விளையும்விஞ் ஞானகலர்க்கு" என்றார் சிவஞானபோதாசாரியரும். "விஜ்ஞாநகேவலஃ" என்றும் பௌஷ்கராகமம் பகரும். ஞானத்தாற் கலாதி அற்றுளோர் விஞ்ஞானகலர்: பிரளயகாலத்தில் அவை அற்றுளோர் பிரளயாகலர்: கலாதியோடு கூடியுள்ளோர் சகலர் என்றும் மொழிப. மேலை ஆகமம் பதிபடலத்தில் (ஸகலாகலஹெஹெதநதி்யா) "ஸகலாகலபேதேநத்ரிதா" என்று கூறுதலும் அது. கலை = கலாதத்துவம்.

இவ்வாறு முத்திற ஆன்மாக்கள் சைவாகமங்களிற் கூறப்பட்டனவேயன்றி வேதங்களிற் கூறப்படக் கண்டிலமே யென்னின்,—பிரச்நோபநிஷத்தில் ஆன்மதத்துவம் உச - ம், சுவேதாச்வதரம் நாரதபரிவ்

ராஜக மென்னும் உபநிஷதங்களில் (காலம் முதலிய) வித்தியாதத்துவம் எ - ம், அதர்வணவேத பிருஹஜ்ஜாபாலோபநிஷத்திற் சிவதத்துவம் ரு - ம் வெளிப்படலால் அத்தத்துவங்களில் வதிதரும் ஆன்மபேதங்களும் அருத்தாபத்தியாற் கொள்ளக் கிடக்கின்றமையின், ஆன்மாக்கள் பல, ஆன்மாக்க ளனேகம், சத்தியமான சீவான்மாக்கள் என்பன போதர வேதங்கள் விளம்பினமையின், அவ்வசனங்களும் ருரு - ன் உரைக்கட் காட்டப்பட்டமையின் அத்திறங் கொள்ளவே கிடக்கின்றது; என்னை ? (தவெஅஉமஹ்ஹாவநிஷத்ஸு மூஷ்ம) "தத்வேத குஹ்யோபநிஷத்ஸு கூடம்" என்று மேலைச் சுவேதாச்வதரமே விளம்பிற் றாகலின். பொருள்;— "வேதங்களில் மறைபொருளாயிருக்கும் உபநிடதங்களில் அவன் மறைந்திருக்கின்றனன்" எனவாம். இதனுல், வேதத்திற்கு மறையெனும்பெயர் தமிழில் வழங்கப்படுதலுஞ் சால்பிற்றுதல் காண்க. மொழிந்த முக்கூற்றுத் தத்துவங்களை யெடுத்து விளக்கும் பிரச்நோபநிஷதாதி வாக்கியங்களைச் சைவசமயசரபத்துக் கைவல்லிய காண்டத்தின் உச - ம் அத்தியாயத்திற் காண்க.] (அரு)

## எ. கன்மத்திரய ஆசங்கை நிவர்த்தி.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இவ்வா றுரைத்த வெல்லாநன்
  மாண வகன்று னிதமாயோர்ந்
தெவ்வா தத்திற் கும்விடைதா
  னிறுக்கு மைய கன்மமலந்
தெவ்வாய் நிற்க வுளோர்க்கிங்கே
  யோது முறழ்வு சேர்தலெவ்வா
றவ்வா றில்லை யெனிலென்போல்
  வார்க்கீ தோதி லென்னென்றான்.

இவ்விதமாகக் கூறப்பட்ட யாவற்றையும் சற்சீடனானவன் நன்று யறிந்து கொண்டு எவ்வித தருக்கத்திற்கும் (பொருத்தமான) நியாயங் கூறி யருளுஞ் சற்குருவே ! கன்ம மலமானது பகையாய் நிற்கவுள்ள சீவர்களுக்கு இங்ஙனங் கூறப்பட்ட ஞானோற்பத்தியுண்டாத லெங்ஙனம் ? அஃதுண்டாத வில்லையெனின்,— என் போலியர்

க்கு இத்தகைய வுபதேசத்தைக் கூறுவதனாற் பயனென்னையோவென் றுரைத்தனன்.

[ ஐய - என்றது அண்மை விளி யென்பதை “அண்மைச்சொல்லிற் ககரமாகும்” என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தா னமைக்க. ] (அ௪)

கருத்திற் கினியோய் நீகுயின்ற
கருத்தெ னக்கு வெளியாயிற்
றருத்தம் பெண்மண் ணெனுநசையா
லாடுங் கால மாடிவிடும்
பொருத்த மான வவ்வமையந்
தானே வீயும் போதமெனுத்
திருத்தம் பேசிச் சோம்புறுவார்
திட்டத் துணிவிங் கொவ்வாதே.

என் மனத்திற்கினிய மாணவகனே! நீ கூறிய கூற்றின் கருத்து எனக்குப் புலப்படுவதாயிற்று. பொன், பெண், மண்ணென்னும் ஆசையாகிய காற்றுலாடும் பொருளென எவ்வளவு காலமட்டும் ஆடவேண்டுமோ அவ்வளவு காலமட்டும் இந்தவுயி ராடிப் பின்பு அவ்வாசையை விட்டிடும்; முத்திபடைதற்குப் பொருத்தமான அத்தருணத்திற் சீவபோதமானது தானேகெடும்; இப்போது செய்யத்தக்க தொன்று மின்றென்று நியாயப் போலியான திருத்த மொன்று பேசிச் சோம்படைந்திருப்பாரது அளவை முடிபு இங்கே பொருந்துமா றில்லை. (அரு)

கன்ம முள்ள காலளவக்
கன்ம வழியே நாமென்றெக்
கன்ம முஞ்செய் யாரோசொல்
காமுற் றேற்ற படிதிரிந்தே
இன்மை காணு விறப்புதிப்பா
மின்னு நிமிர வுழல்வார்தங்
கன்ம மேன்மே லும்பைங்கூ
ழிடுவா ராற்று கணக்காமால்.

(அன்னவர்) கன்மங்க ளனுபவித் தொழிக்கப்படுங் காறும் அக்கன்ம வழியே நாமிருத்தல் வேண்டுமென்னுங் கருத்தானே

எந்தக்கன்மமுஞ் செய்யாதிருப்பரோ? சொல்வாயாக. யாவையும் இச்சித்து மனம் போனவழி யெல்லாஞ் சென்று செய்வோராகி ஒழி வில்லாத இறப்புப் பிறப்பாகிய பெருங்கேடு ஓங்குற வுழல்பவர்க ளுடைய கன்மங்கள் மேலு மேலும் பயிர்த்தொழிற்காரர் செய்து கொண்டேவருந் தொழின்முறையை யொத்தனவாகும். (அசு)

முன்னைச் சஞ்சி தத்தானி
   யத்திற் கிஞ்சின் முடிவுவிதி
என்னும் பிராரத் தப்புசிப்புக்
   கெடுத்து நுகர்கா லிச்சையினுற்
பின்னும் விளைக்க விதையாமா
   காமி யத்தை யேபெய்து
துன்னும் பலனை முன்னெடுத்த
   சஞ்சி யின்மேற் சொரிவாரால்.

சஞ்சித மென்னுங் களஞ்சியத் தானியத்தில் அற்ப பாகத்தை முடிவான விதியென்னும் பிராரத்தப் புசிப்புக்காக வெடுத்துப் புசிக் கும்போது ஆசையினுல் மறுபடியும் அதனை விளைக்க ஆகாமியமாகிய வித்தை விதைத்து, அங்ஙனம் விளைந்து செறிந்த பலனை முன்னே யெடுத்துக் குறைவு பட்ட களஞ்சியத்தின் மீது சொரிந்துகொள் வார்கள். (அஎ)

இன்ன வாறு தொலைவின்றி
   யெடுத்தும் புசித்தும் விளைவித்துங்
கன்ன லிருக்க வேப்பருந்து
   வார்போற் செய்யுங் கரிசொழித்தல்
உன்னு மாகா மியவிதையை
   யோம்பா தெடுத்த வெலாமுண்டு
முன்னைச் சஞ்சி தமுமாய்க்கின்
   முடியு மென்றுவ் வுளரோர்வார்.

இவ்விதமாக வொழிவில்லாமற் சஞ்சித கன்மத்திலிருந்து பிராரத்த கன்மத்தை யெடுத்தும், அதனை யனுபவித்தும், அனுப விக்கும் போதே ஆகாமிய கன்மத்தை யீட்டியுங் கரும்பிருக்க வேம் பருந்துவார்போலச் செய்துவருங் குற்றத்தையொழிக்குங் காரிய

மானது—(முன்வினை யொழிப்பான் புகுந்த நாம் மறு பிறப்புக்குக் காரணமாகிய ஆகாமியத்தை ஆர்ச்சித்தல் அவிவேகமே யென்று துணிந்து) விரும்பும் அவ்வாகாமிய விதையைப் பேணுமற் பிராரத்த மாக வெடுக்கப்பட்ட தானியங்களையெல்லாம் புசித்துப் பழைய சஞ் சிதக் களஞ்சியத் திருப்பவற்றையுங் கெடுத்துவிடின் முடிவடையு மென்று தபோதனர்க ளறிவார்கள்.

[ நியாயாதிபதியா யுள்ளான் யாதானுமொரு குற்றத்தை இரக் கப்பாடாய் மன்னித்து விடுதலுளதன்றே. அத்திற விரக்கம் தேவ நியாத்து மிருக்கத்தானே வேண்டும். எல்லாக்கன்மமு மனுபவித் தே யொழிக்கவேண்டுமெனும் பொருளுற "எடுத்தவேலா முண்டு" என வீண்டுரைப்ப தென்னைகொலோவெனின்,—நன்று கடாயினாய்! தேவன் றன்விடயத்திழைத்த குற்றத்தை மன்னிப்பதற்கு நியாய முண்டு, அவ்வண்ணஞ் செய்வது முண்டென்றல் சால்புடைமை யென்பதும்; அது, பிறர் விடயத்ததாயின் அவ்வித மன்னிப்புக் கிடனின்று: அப் பிறர்பாலேயே அது பெறத்தக்கது: அப் பெறுகை யும் நீதிக்குரித்துளதா யிருந்தாற்றான் தேவாங்கிகாரமாகு மென்ப தும் விடையென்க. இந் நியாயம் — ஸ்காந்தமஹாபுராண சம்பவ காண்டத்து ௩அ - ம் அத்தியாயத்துப் கச, கரு, கசு - ஞ் சுலோகங் கள்—

" எமக்கபராத மெவரிழைப்பினும் அதனைச் சகிப்போம்: எம்முடைய விரண்டு பாதார விந்தங்களைச் சரணடைந்த வடியவர்க்கு எவரேனுங் கேடி ழைப்பின் அதனைச் சகியோம்: அக்கேடிழைப்போர் தேவரேயாயினும் அசுரரேயாயினும் அன்னோர் எம்மா லென்றுந் தண்டிக்கப் படுபவரே."

என்று வீரபாகுதேவர் முன்னிலைக்கண் எம்மை யாண்டருளுங் கந்தபிரான் றிருவாய் மலர்ந்தருளின னெனும்பொரு டருமாற்றா னும் பெறப்படும். மன்னிப்பு விடய மிவ்வாறாயிடினும் பரிகாரசாத் திரங்களிற் பரிகாரங்கள் கூறியுள்ளனவே எல்லாக் கன்மமும் அனுப வித்தே யொழிக்கவேண்டுமென்றல் அச் சாத்திரங்கட்கு மாறுகோ ளாகாதோவென்னின், — ஆகாது; என்னை? அந்தப் பரிகாரங் களே கன்மானுபவமாயிருத்தலின்; நரகயாதனையெனும் பெருந் துன்பத்தை மரணத்திற்கு முன்னே சிறுவரையாக அனுபவித்தொ ழிப்பதே பரிகார மென்பதற்குப் பொருளாயிருத்தலின். அஃதும் பரி காரத்தால் நீங்கத்தக்க அவமிருத்தியுவைப் போன்றவற்றிற்கே யன் றிக் காலமிருத்தியுவைப் போன்றவற்றிற் கன்று. ஔடதம், சீந்திற்

றண்டோமம், (ம்ருத்யுஞ்ஜய) 'ம்ருத்யும்ஜய' மந்த்ரஜபம், சிவ னடியவர்க் களிக்கு முணவு, சிவாராதனை முதலியனவே அந்த அவ மிருத்தியுவை யொழிக்கும் பரிகாரமாம். இவற்றை, திருவலங்கற் றிரட்டின் உ - ங் கண்டத்தில்—

" அவமெனு மிருத்திய வவுடதஞ் சீந்திகொண்
டுவகைசெய் யோமமொர் மந்திர முருகருட்
டவமுடை யவர்க்கிடு சருவிவை களிலறும்.

காலமென் மிருத்திய கடந்திட வழியிலே
மேலுறை விபுதரும் விதிவயப் படுவரென்
றேலிடு மடிக்குக னுரிமைய ரோதுவர். "

என இந்நூலாசிரியரே கூறியவாற்றானு மறிக. இப் பரிகாரஞ் செய்யாவிடின் மிருத்திய அனுபவமாமென விதிக்கப்பட்ட தேவ தண்டனை யானது— இப்பொழுது க00 - பொன் அபராதங் கொடா விடின் ஒருமாதஞ் சிறைச்சாலையி லிருக்கவேண்டுமென்னும் இராச தண்டனை போன்றதேயாம். ஈண்டு, இம்மையிற் செய்பலாய கன்மங் களில் மன்னிப்பு வாயிலாகப் பரிகார வாயிலாக இராச தண்டனை வாயிலாக மற்றுரியதன் வாயிலாகக் கழிந்தனபோக எஞ்சியனவே மறுமையி லனுபவிக்கப்பட் டொழியு மென்னின், அவைகள் சஞ்சித மாகி மறுபிறப்புக்குப் பிராரத்தமாய் நிற்குமென்ப தெவ்வாற்று னேயுமென்னுங் கடாவெழுமாயின் ; அக் கடாவுக்கு மனம், வாக்கு, காயமென்னு மூன்றானு மேற்படு கன்மங்களில் மனமே மற்றை யிர ண்டினும் பொருந்தி நிற்றலின் மூன்றுமே மறுமைப்பயன்களை யனுப விப்பனவாமென்பதும் ; ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள்போல மனத் தான்மட்டு நினைத்ததை யனுபவிக்க வுரியவுடம்பும் இடமும் கால மும் பிறவுரிமைகளும் வேண்டுமாகலின் அத்திற வுடம்பெடுத்தலே மறுபிறப்பு; அது பிராரத்த மெனப்படுமென்பதும் ; அதன் பூர்வ நிலைமையே சஞ்சிதம், கன்மசேடம், கன்மகாரணமெனப்படுமென் பதும் விடையாமென்க. இந்நிச்சயத்திற்கு—

(யதாகாரீயதாசாரீ ததா பவதி)

" யதாகாரீ யதாசாரீ ததா பவதி "

என்னும் பிருஹதாரண்யகோபநிஷத்தின் ச - ம் அத்தியாயத்து ச - ம் பிராஹ்மணவாக்கியம் நன்கு கருதத்தக்கது. தமிழ்:— " யா

ரெப்படிச் செய்கின்றனரோ, யாரெப்படி யாசரிக்கின்றனரோ, அவரப்படியாகின்றனர்" எனவாம். இந் நிச்சயம்—

(ஸவெ-யஂஷ்உா ஆகூநஸஷி)

"ஸர்வேதர்ம்மா ஆத்மநஸ்ஸந்தி"

என்னும் ஸர்வஜ்ஞானோத்தராகம வாக்கியத்தும் பெறப்படுகின்றது. பொருள்:— "எல்லாத் தருமங்களும் ஆன்மாவுக்குள" எனவாம். கன்ம சேடாதிகளைக் கழறும் மேலைப் பிருஹதாரண்யக வாக்கியம் சஉ - ன் உரைக்கட் காட்டப்பட்டது. "தத்யதாத்ருண ஜலாயுகா த்ருணஸ்யாந்தம் கத்வாந்யமாக்ரம மாக்ரம்யாத்மாந முபஸம் ஹரத்யேவ மேவாயமாத்மேதம் சரீரம்நிஹத்யா வித்யாங்கமயித்வாந்யமாக்ரம மாக்ரம்யாத்மாந முபஸம்ஹரதி ॥ ௩ ॥" எனுஞ் சுருதி— "ஆன்மாவானவன், புற்புழு ஒரு புல்லைப் பற்றிக்கொண்ட பின்னர் முன்னர்ப் பற்றியிருந்த புல்லை விடுவதுபோல ஒருதேகத்தை ஆச்சிரயித்த பின்னே பூருவதேகத்தை விடுகின்றனன்" எனும் பொருளைப் பயக்கின்றமையின், சீவன் தேகம் விட்டவுடனே நரகம், சுவர்க்கம், பிதிருலகமென்பவற்றொன்றனை யடையுமென்னுந் தீர்வை சிறக்குமா றில்லையே யென்பார் கோட்பாடும் ஈண்டுக் கண்டிக்கப் படுவதே; என்னை? எடுத்துக்கொண்ட இச்சுருதி— கன்மசேடாதிகளைக் கழறும் மேலைப் பிருஹதாரண்யகோபநிஷத்தின் சு - ம் அத்தியாயத்து ச - ம் பிராஹ்மணத்துள்ளதே யாகலின். இதுவேயுமன்றி—

"தத்யதா பேசஸ்காரீ பேசஸோமாத்ரா முபாதாயாந்யந்நவதரம் கல்யாணதரம்ரூபம் தநுத ஏவமேவாயமாத்மேதம் சரீரம்நிஹத்யா வித்யாங்கமயித்வாந்யந்நவதரம் கல்யாணதரம்ரூபம்குருதே பித்ர்யம்வா காந்தர்வம்வா தைவம்வா ப்ராஜாபத்யம்வா ப்ராஹ்மம்வாந்யேஷாம்வா பூதா நாம் ॥ ச ॥"

என்பதே அதனடுத்த வசனம். இது, "சுவர்ணகாரன் ஒரு திற வடிவுடைப் பொன்னையழித்துப் பிறிதொருதிற நல்ல வடிவுடைப் பூடணமாகச் செய்வதுபோல, இச் சீவனும் பூருவ சரீரத்திற்கு உபாதானமாயிருந்த வத்துவையே கன்மானுசாரத்தின்படி வேறொரு நல்லவடிவாக்கிக் கொள்ளுகின்றனன்: பிதிர் கந்தருவ தேவ பிரசாபதியாதி சரீரங்களி லேதனையேனுமடைகின்றனன்" எனு மருத்தத்தை நல்கி, அச்சுருதிப்பொருளை விளக்கிக்காட்டுதலின்

அக்கோட்பாடு பல்லையிழித்துக்கொண்டு பசபசென விழிக்குமென்க. வேறு சுவடிகளிலும் அக்கோட்பாடுளதேயெனின்,—அது, சுருதி முடி பறியாமையினெழுந்த சுருதிவிரோதமென மறுக்க. கடோப நிஷத்தின் உ - ம் வல்லி—

(நஸாம்பராய: ப்ரதிபாதிபாலம்
ப்ரமாத்யந்தம் வித்தமோஹேந மூடம் ।
அயம்லோகோநாஸ்தி பர இதி மாநீ
புந: புநர்வசமாபத்யதே மே ॥)

" நஸாம்பராய ஃ ப்ரதிபாதிபாலம் ப்ரமாத்யந்தம்வித்தமோஹேநமூடம் ।
அயம்லோகோநாஸ்திபர இதிமாநீ புந:புநர்வசமாபத்யதேமே ॥ "

என்றியம்புவதையும் அக் கோட்பாட்டை நம்புவோர்க்குக் காட்டுக. பொருள்:— " (அறிவிற்) சிறியவனும் அசட்டையுடைய வனும் பணத்தாசையான் மூடுண்டவனு மிருப்பானுக்குப் பரலோ கந் தோற்றுவதில்லை: இந்த (ப் பூ) வுலகத்துக்கு மேலொன்றில்லை யென்னும் எண்ணங்கொண்டுளான் என்வசத்திருக்கு நரகத்தை மறுபடியு மறுபடியு மடைகின்றனன் " எனவாம். இது, நசிகேத னென்பாற்கு இயமனே யியம்பியது. இங்கெடுத்துக்கொள்ளப்பட்ட கன்மத்தைப்பற்றி இன்னுமறியவுள்ள யாவும் சஉ, சஎ, அ0 - ஞ் செய்யுள்களு முரைகளுமா யுள்ளனவாகலின் அவையற்றிற்காண்க.

தொலைவு=நிலையழிவு; இது, " தொலைவு நிலையழிவு " என்று சேந்தன் றிவாகரங் கூறுதலி னறியற்பாற்று. உவ்வுளர்=தவமுடையார். உவ்வு= தவம்; " நோன்பென் கிளவி தான்றவ மாகும்—உவ்வென் கிளவியு மோதுவ ரதற்கே " என்பது பிங்கலநிகண்டு. இப் பொருளுடைச்சொல் வடநூல் களில் உ - என வுளது. அதுவே உவ்வெனப்பட்டது. சூடாமணிநிகண்டில் ' உவவு ' எனக் காணப்படல் வழுவாம்.] (அஅ)

உலப்பி லுணர்வா மழலுதிக்கி
 லொழியு மாகா மியமெல்லாம்
நிலைப்பாய் நின்ற சஞ்சிதமு
 மன்றே நீறும் பிராரத்தம்
பலக்கா தேநின் றறுதிபெறும்
 பகர்ந்த துண்மை யெனற்குகமேல்
நலத்தா லுய்ந்து சிவமடைந்த
 ஞான பரர்கள் கரிகண்டாய்.

கேடில்லாத ஞானாக்கினி யுதிக்கின் ஆகாமிய மனைத்தும் ஒழியும். நிலைபெறாக எஞ்சிநின்ற சஞ்சிதமும் அப்பொழுதே சாம்பராகும். அங்ஙனம் பிராரத்தம் வலிகுறைந்து நின்று உட லூழாய்க் கழியும். இப்போது கூறப்பட்ட நியாயம் சத்தியமென் றறி வுறுத்த முற்காலங்களிற் சிவபுண்ணிய விசேடத்தாற் சீவன்முத்தி யில் வாழ்ந்து பரமுத்திபடைந்த ஞானவான்களே சான்றாகவுள்ளார்.

[ இச் செய்யுண் முடிபு—"தேஹேஜ்ஞாநேநதீபிதே புத்தி ரகண்டாகார ரூபாயதாபவதி। ததாவித்வாந் ப்ரஹ்மஜ்ஞாநாக்நிநா கர்மபந்தம் நிர்தஹேத்॥" என்னும் பைங்கலோபநிஷத் வசன முடி பாகவுளது. பொருள்:— "தேகமானது ஞானத்தினாற் பிரகாசித்துப் புத்தியானது அகண்டாகார ரூபமா யெப்பொழுதாமோ அப்பொ ழுது வித்துவானாயுள்ளான் பிரமஞானமென்னும் அக்கினியினாற் கன்மபந்தத்தை யெரித்து விடுவன்" எனவாம். ஆகாமியம், சஞ்சி தம், பிராரத்தம் ஆகிய மூன்றுமே கன்மத்திரயம் எனும் பெயர் பெறும். இது—(𑌪𑍍𑌰𑌾𑌰𑌬𑍍𑌧𑌾𑌗𑌾𑌮𑍍𑌯𑌾𑌰𑍍𑌜𑌿𑌤𑌾𑌨𑌿 𑌕𑌰𑍍𑌮𑌤𑍍𑌰𑌯𑌮𑌿𑌤𑍀𑌰𑌿𑌤𑌮𑍍।) "ப்ராரப்தாகாம்பார்ஜிதாநி கர்மத்ரயமிதீரிதம்।" என வராஹோப நிஷத்திலுங் கூறப்பட்டது. பிராரத்தமானது ஆதி தைவிகம், ஆத் யான்மிகம், ஆதி பௌதிகமென முத்திறப்படும். அவற்றுள் ஆதி தைவிகமாவது தெய்வங் காரணமாக வருவது. ஆத்யான்மிகமாவது சடத்தோடு கூடிய ஆன்மாவின் வாயிலாக வருவது. ஆதி பௌதி கமாவது சடபூத வாயிலாக வருவது. இவற்றுள் ஆத்யான்மிக மானது காசம் குன்மம் முதலிய நோய்களால் வருஞ் சாரீரகமென வும், சோகம் மாற்சரியம் முதலியவற்றால் வரும் மானசமெனவும் பகுக்கப்படு மென்ப.] (அகூ)

தேகி யென்பா ளொழிகாலஞ்
சிந்தை நைந்த வவன்குலிகள்
ஆகு மாகா மியமாதி
மூவர் கைம்மை யாவரன்றிப்
பாக மாகப் பிராரத்தப்
பாவை சுமங்க லியாயுய்தற்
கூக மொல்லு நடுவிலையென்
றோது நாலு முளவன்றே.

சீவனென்பவனுடைய தேகவியோக காலத்தின் மனம்வருந்திய அவனுடைய சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியமென்னும் மனைவிகள் மூவரும் வைதவ்வியத்தை யடைவரேயன்றிப் பிராரத்தமாகிய மனைவி மாத்திரம் வேறொரு கூறாகச் சுமங்கலியாய் வாழ்வதற்கு ஏற்புடைய நியாயம் இன்றென்றோது சாத்திரங்களு முள்ளன.

[குலி = இல்லாளெனும் மனைவி. குலம் = இல் = மனை; இது வடசொல்.] (கூ0)

உடம்புள் ளளவும் பிராரத்த
  மொழியா தாத ஜெட்டதனை
உடன்கொண் டுய்யுஞ் சீவன்முத்தர்
  கட்கு மஃதுண் டென்பதுமுண்
டிடங்கொண் டிலகும் புந்தியுளோ
  யிவ்வி ரண்டு மொவ்வுதலைக்
கடந்த முத்தர் மனதருவாய்க்
  காணு மாற்று னறிமன்னோ.

தேகமுள்ள வளவும் பிராரத்த கன்மம் நீங்காதாகலின் அத்தேகத்தோடு சிவத்துவாபிவியத்தியைப் பெற்று வாழுஞ் சீவன்முத்தருக்கும், அந்தப் பிராரத்தமுண்டென்று கூறுஞ் சம்பிரதாயமுமுள்ளதே. விசாலமாக மிளிரும் புத்தியுள்ள மகனே! சீவன்முத்த தசையிற் பிராரத்தம் இன்று, உண்டு என்னும் இவ்விரண்டு நிச்சயங்களும் உட்பற்றுப் புறப்பற்றென்பவற்றைக் கடந்து நிற்குஞ் சீவன்முத்தர்களுடைய மனமானது தனது தூலத் தன்மையை யொழித்து அருவத் தன்மையாய் நோக்கும் வழியாற் பொருந்துதலை யறிவாயாக.

[“உடம்புள்ளளவும் பிராரத்த மொழியாது” என்றமையால் உயிரு முடம்பும் பிராரத்த மெனுமொரு பிசின்கொண் டொட்டப் பட்டுள வென்பதூஉம் அறியக்கிடக்கின்ற தன்றோ.

(த்விவிதச்சித்தநாசோஸ்தி ஸரூபோரூபஏவச ।
ஜீவந்முக்தௌ ஸரூபஸ்ஸ்யாதரூபோதேஹமுக்திகஃ ॥)

“த்விவிதச்சித்தநாசோஸ்தி ஸரூபோரூபஏவச ।
ஜீவந்முக்தௌஸரூபஸ்ஸ்யா தரூபோதேஹமுக்திகஃ ॥”

என்று முக்திகோபநிஷதங் கூறுதலின் "கடந்தமுத்தர் மனது அருவாய்க் காணும்" எனக் கூறப்பட்டது. சுருதியின்றமிழ்:— "சித்த நாசமானது உருவம், அருவமென இருதிறப்படும். உருவநாசம் சீவன்முத்தனிடத் துளது. அருவநாசம் விதேகமுத்தனிடத் துளது" எனவாம். இதற்குப் பின்னே "சீவன்முத்தனது அம் மனம் பெயர்த்தும் பிறப்பிற் கேதுவாக மாட்டாது" எனு மருத்தத்திலே (ஸூயொஜந்மவிநிர்முக்தம் ஜீவந்முக்தஸ்யதந்மநஃ।) "பூயோ ஜந்மவிநிர்முக்தம் ஜீவந்முக்தஸ்யதந்மநஃ।" என நிகழ் வாக்கியத்தையும் மேலே உபநிஷதந் தரு நெறியானே மனோநாசந்தானே சித்த நாசமெனப்பட்ட தென்க.] (கூக)

உருவ மனத்தர்க் காம்விடய
முருவ மாகு முருவமிலா
அருவ மனத்தர்க் காம்விடய
மருவ மாகு மாதலினல்
மருவி மருவா திருக்குமந்த
மாசில் சீவன் முத்தர்புசிப்
பருளின் செயலா நிற்குமென்றே
யத்தன் விளக்கி யருளினனே.

தூல மனத்தோடு கூடிய பிராக்கிருதர்களுக்கு அனுபவம் தூலமேயாகும். சூக்குமமனத்தோடுள்ள சீவன் முத்தர்களுக்கு அனுபவம் சூக்குமமேயாகும். ஆதலின் உலகவிடயங்களிற் பொருந்தியும் பொருந்தாமலுமிருக்கும் அந்தக் குற்றமற்ற சீவன்முத்தர்களுடைய அனுபவம் அருளின்செயலாகவே நிற்குமென்று ஆசிரியர் முன் றொகுத்துரைத்ததை விரித்துக் கூறியருளினர்.

[விடயம்= பற்றப்படு பொருள்.] (கூஉ)

## அ. முத்தியிலு மும்முதல்களுளவேனற்கு வேதாகமங்களின் சம்மதம்.

கலிவிருத்தம்.

எந்தா யிதுபோ லெழிலார் விடைநீ
தந்தா ளமுதந் தனின்மும் முதலும்
நொந்தா துளவென் றரனா னுவலின்
வெந்தே றிடுமொற் றுமையெவ் விதமாம்.

என் பிதாவே! இங்குத் தெளிவாக விளக்கியவாறு இனி, யான்கேட்கும் கேள்விக்கும் அழகார்ந்த விடைகொடுத் தென்னை ஆண்டுகோடல் வேண்டும். அமிர்தத்துவ முத்திநிலையிலும் பதி, பசு, பாசமாகிய முப்பொருள்களும் நசியாமலிருக்குமென்று சிவசாத்திரங்கள் கூறுமாயின், சீவபோதம் வெந்து சிவபோத மாகுந்தன்மை யெங்ஙனங் கூடும்? (௬௩)

என்றுன் மதிசேர் மகனின் படிகள்
நன்று யிதைநீ தெளிநா னவில்வல்
பொன்று வரணிக் கனலைப் பொருமென்
குன்று முடிவைக் குறிசெத் தறுமே.

என்று புத்திமானுகிய சீடன் கூறினன். ஆனந்தத்திற் படிந்திருக்குங் குருவானவர்—இவ்வுண்மையை நானெடுத்துக்கூறுவேன்; நீ சந்தேக விபரீதங்க ளற அறிவாயாக. தீக்கடைகோலிற் றோன்றி (அவ்வரணியைத் தன்னுளடக்கி) மேலிட்டுநிற்குந் தீயைபொக்குமெனக் குறைவற்ற அம்முடிவைக்குறி; ஐயப்பா டிறந்தொழியும்.

[ தீ மேலிட்ட ஞான்றே அரணியாகியகட்டை, தனது பண்டை நிலைமை மாறித் தீமயமாயிருத்தலின் அதுபோற் பாசங் கெடாது கெட்டு நிற்குமென்ப தறிவுறுப்பான் "அரணிக் கனலைப் பொருமென் முடிவைக் குறி" என்றியம்பிய தென்க. இம்முடிவுதானே பின்னர் வேறோராற்றனும் வலியுறுத்தப்படுவதாயிற்று. ] (௬௪)

அத்தீ யிடைவெப் பனல்போல் விரவிக்
கத்தா வுமிரு வணுவுங் கறையின்
றெத்தே வருமே தொழுமா றிலகும்
வித்தா ரநயன் மிளிர்வீ டிதுவே.

தீ மயமாகிய அக்கட்டையின்கண்ணே தீயும், அதனை நீங்காச் சூடுங் கலந்து நிற்பது போலச் சிவமுஞ் சீவான்மாவும் பாசப் பொருட்கண்ணும் வியாபித்துக் களங்கமின்றி எத்தகைய தேவரும் வணங்கும்படி பிரகாசித்துக்கொண் டிருக்கும். சாத்திரங்களிற் பெருவாரியாக வெடுத்துக்கூறப்பட்ட நயமெல்லாம் பிரகாசிக்கவுள்ள முத்திநிலை யிதுவே. (௬௫)

பாசம் பகலோன் முனரே திமிரம்
நாசம் பெறல்போ னயவா லருண்முன்

பாசங் கையிலா தழியா தழிவுற்
றீசன் றருமின் பெனநின் றிடுமே.

சூரியன் முன் இருளானது எப்படி யிருந்தும் இராததுபோ லிருக்குமோ அப்படியே நயமுள்ள அருட்பிரகாசத்தின் முன் அஞ்ஞானமானது கெடாமற்கெட்டுச் சந்தேகமில்லாமற் பரமேசுரனளித் தருளும் ஆனந்தமென நிற்கும்.

[“சேணு றிருள்வடிவு செங்கதிரோன் பானிற்பக் — காணு தொழியுங் கணக்கேபோல் — ஆணவத்தின் — ஆதி குறையாம லென்பா லணுகாமல் — நீதி நிறுத்து நிலைபோற்றி” என்னும் போற்றிப்பஃறொடைக் கூற்றின்பொருள் இச் செய்யுட்பொருளா யிருத்தலு மறிக. ஒருவனை வெயிலில் நிறுத்தியவிடத்துக் காணப்படுஞ்சாயை இருளேயாகலின் அதன்வழி இருளானது அழியாதழிவுறுதல் காண்க.

‘பகலோன் முனரே திமிரம் நாசம் பெறல்போல் நயவாலருண் முன்பு பாசம் அழியா தழிவுற்று ஆசங்கையிலா தீசன் றரு மின்பு’ என இயைக்க. ] (௬௬)

இதனு னிசமுப் பொருளென் றிடலுஞ்
சதமா யொருமைத் தகையோ திடலும்
இதமா கவொவும் புகல்வே னினமுஞ்
சுதனே யுணரென் றுரியன் சொலுவான்.

முத்தி இத்தகைய இலக்கண முடைத்தாகலின் அந்நிலையில் முப்பொருளும் உளவென்னலும், (பதிப்பொருளில் மற்றிரண்டுந் தோன்றும லொடுங்கி நிற்குந் தன்மையால்) ஒருமைப் பெருமை பாராட்டலும் அவிரோத நயமாகப் பொருந்தும். மைந்தனே ! இன்னும் இவ்விடயத்தைப்பற்றிக் கூறுவேன் அறிவாயாக வென்று குரு கூறலாயினர்.

[“ அமுதந்தனில் ” “ நிசம் முப்பொருள் ” என்னு நிச்சயம்— “ முத்திதனின் மூன்று முதலு மொழியக்கேள்—சுத்தவனு போகத் தைத் துய்த்தலணு—மெத்தவே—இன்பங் கொடுத்தலிறை யித்தை விளை வித்தன்மலம்—அன்புடனே கண்டுகொளப் பா.” என்னும் உண்மைவிளக்கத்துச் செய்யுட்கண்ணு மறிய வுள்ளது. முத்திநிலை யான்மா அறியற்பாலது சிவமொன்றே ; அஃதேனையவற்றை அறியா

மையே அச் சிவானுபவ இன்பத்தினுக்குச் சிறந்த காரணமாகலின் 'இத்தைவிளை வித்தன்மலம்' என்று அவ்விளக்கம் விளம்பிற்றென்க. "பெற்றசிற் றின்பமே பேரின்ப மாமங்கே—முற்ற வரும்பரி சுந்தீபற முளையாது மாயை" என்று திருவியலூர் - உய்யவந்ததேவநாயனார் கூறினதும் ஈண்டுக் கருதத்தக்கது. (கூஎ)

சத்தோ டறிவுந் தகையின் பமதுங்
கத்தா நிலையுண் டெனவே கரிசில்
சித்தா கமமுந் திகழா ரணமும்
ஒத்தோ துதலுண் டெனவே யுணர்வாய்.

பரம்பொருட் டன்மையிற் சத்தென்பதுடன் சித்துமுண்டு, பெருமையுள்ள ஆனந்தமு முண்டென்று குற்றமற்ற ஞானத்தைப் போதிக்குஞ் சிவாகமங்களும், பிரசித்தமான வேதங்களும் விவாதமின்றிக் கூறுதலுண்டென அறிவாயாக.

[ இதன்கண் வெளியாஞ் சத்து, சித்து, ஆனந்தமென்னுங் கடவுட்டன்மை வேதத்தும் ஆகமத்து முண்டெனற்குரிய வாக்கியங்கள் பாயிரத்து உ - ன் உரைக்கட் காட்டப்பட்டுளவாகலின் ஆண்டுக் காண்க.] (கூஅ)

இம்மூன் றுமொருங் கிலகும் மிதுவே
பெம்மான் றருபே ரமுதென் றிடுமோர்
செம்மே னியடங் கிடுமா தெளிவிற்
சும்மா வமருஞ் சுசியத் துவிதம்.

இம்மூன்றிலக்கணங்களும் பரம்பொருட்கண் ஒருமைப்பட்டுப் பிரகாசிக்கும். இவ்வொருமைப்பாடே சிவபெருமான் கொடுத்தருளும் பரமுத்தி யெனுமொரு சோதிசொரூப வியாபகத்திலடங்கும் பெரியஞானப் பிரகாசத்திற் கருவிச் சேட்டைகளுஞ் சீவபோத முனைப்பு மொழிந்தமருஞ் சுத்தாத்துவித நிலையாம்.

[ திருவாசகத் திருப்பள்ளியெழுச்சியில், "செந்தழல் புரைதிருமேனி" எனவரு பிரமாணத்தினைச் "செம்மேனி" என்பது கொண்டிருத்தலு மறிக. சும்மாவமர்தல் இற்றென்பதும், உரிய மேற்கோளும் ௬0 - ன் உரைக்கட் காட்டப்பட்டன. "(அகங்காரவர்ச்சித சோகம்பாவனையாக) அந்தச் சிவம் நானேயென்று

எப்போதும் மௌனத்தை ஆச்சிரயித்திருப்பாயாக" எனுமொண் பொருளுற, (தத்ஸதாஹமிதி மௌநமாச்ரய) "தத் ஸதாஹமிதி மௌநமாச்ரய" என்று வராஹோபநிஷத்தின் ௩ - ம் அத்தியாயங் கூறுதலும் அது. சுத்தாத்வைதமே "சுசிபத்துவிதம்" எனப்பட்டது. சுசி=சுத்தம்; சூடாமணிநிகண்டு காண்க. (சுசிபத்துவிதம்) அத்வைதம் - அத்துவிதம் எனத்தமிழிலே தொன்றுதொட்டு மருவி வழங்கப்படுமொரு வடசொல். "அருமறைக ளொன்றென்னு தத்துவித மென்றறையு மாங்கு" என்றார் சிவஞானபோத முனிவரும். சுத்தாத்வைதப் பிரயோகம்—

(தந்மநோவிலயம்யாதி தத்விஷ்ணோ: பரமம்பதம் । தல்லயாச்சுத்தாத்வைதஸித்தி: । பேதாபாவாத் । ஏததேவ பரமதத்வம் ॥)

"தந்மநோவிலயம்யாதி தத்விஷ்ணோ: பரமம்பதம் । தல்லயாச்சுத்தாத்வைதஸித்தி: । பேதாபாவாத் । ஏததேவ பரமதத்வம் ॥"

எனும் மண்டலப்ராஹ்மணோபநிஷத் வசனங்களி லறியவுள்ளது. இஃது "அந்த மனோலயம் எதுவோ அது விட்டுணு பரமபதமாம்: அப் பரமபத லயமே சுத்தாத்துவித சித்தி: பேதமின்மையே பரமதத்துவம்" எனப் பொருள்படும். இந்த அத்வைத சப்தம்— "ஸோஹமேவமுபாஸீத நிர்விகல்பேந சேதஸா!" என்று ஸர்வஜ்ஞானோத்தராகமத்துங் கூறப்பட்ட சோகம்பாவனையை, "ஸோஹம் பாவோ நமஸ்கார:!" என்று கிளத்தாநின்ற மேலைய உபநிஷத்தில் "சுத்தாத்வைத ப்ரஹ்மாஹம்" என்னுமிடத்தும், "சுத்தாத்வைதாஜாட்ப" என்னுமிடத்தும் வருகின்றது. * விசிஷ்டம் முதலிய சத்தங்களி லெதனையேனும் முன்னே கொண்டு வரூஉம் அத்வைதம் எப்படிச் சுருதியிலில்லையோ அப்படியே சுத்தமென்பதை முன்னே கொண்டு வரூஉம் அத்வைதமுஞ் சுருதியிலில்லையென்றுரைத்தோர் கூற்றினைப் பலப்பலவாண்டுக ளொப்புக்கொண்டிருந்த சைவரும் இறும்பூதுறுமாறு இந்நூலாசிரியர் மேலே காட்டப்பட்ட சுருதி வசனங்களை யெடுத்துத் தமது நாலாயிரப்பிரபந்த விசாரத்திற் பிரமாணித்துக் காட்டினமை பிரதமமன்றோ. இனைய சுருதி பலவுஞ் சித்தாந்தமேயென அவரெடுத்துக் காட்டுதல் இந்நூலகத்து முரையகத்தும் உணரக் கிடக்கின்றது. தத்தம் மதக்கோட்பாடுகளை விசேடித் துணர்த்துதற்கே அத்வைதத்தோடு விசிஷ்டம் முதலிய சத்தங்கள் அவ்வம் மதாசாரியராற் சேர்க்கப்பட்டபடி 'சுத்தம்' என்பதும்

* விசிஷ்டம்='வியாப்பியமாய்ச் சேர்ந்திருப்பது' என்றுங் கூறுப.

"பொய்கண்டார் காணுப் * புனிதமெனு மத்துவித—மெய்கண்ட நாதனருண் மேவுநா ளெந்நாளோ." எனுமாற்றுனே தாயுமானுர் முதலினேரால் சேர்க்கப்பட்டதென்னினும், விசிஷ்டம் முதலியவற் றுள் யாதானுமொரு மொழியான் விசேடிக்கப்பட்டு நின்று பொரு ளுணர்த்தாது சுத்தமாய் நின்றே பொருளுணர்த்துதலிற் சுத்தாத் வைதமென வழங்கப்படுமென்னினும் பொருந்துமாறின்று ; என்னை? அன்னேரும் அம்மதங்களுந் தோன்றுமுன்னுள்ளதாய் முந்தைச் சுருதியாய் மிளிர்வது அம் மண்டலப்ராஹ்மண மாகலின். ஆயின், அந்தச் 'சுத்தம்' என்பதுதான் எப்பொருளுடைத்தென்னின்,—விட் டுணு கதியாகிய பரமபதத்தைக் கீழ்ப்படுத்துக் கூறுமாற்றுனே, அப் பதத்தின் மேம்பட்டு நிற்பது சிவகதியென்றல் வைதிகசைவ நூல்க ளின் றுணிபாயிருத்தலானே, உரு - ன் உரையிற் காட்டப்பட்ட "தஸ் மாத்ஸர்வாங்பரித்யஜ்ய" என்றற் றொடக்கத்துச் சுருதி வசனத்தா னும் "பரம வத்துவித சைவமெய்ஞ்ஞானி பாரளந்தவன் முதலோ ரால்—வரமுறப் பூசை புரிந்திடத் தக்கோன்" என்னுஞ் சூதசங்கி தையின் சாமசாகோபநிடததாற்பரியவத்தியாயக் கூற்றுனும் அஃ தும் பெறப்படுதலானே அது தூயதன்மையைக் காட்டுமொரு விசே டண மொழியாகவே கொள்ளவுளதும், இக்கதிக்கு வேறுகக் கூறப் படும் அத்துவிதமெல்லாம் பாசத்தோடுள்ளனவென்பதையு மறி வுறுத்த வுளதுமாம்: இங்ஙனஞ் சுருதி நெறியான சுத்தாத்வைத சித்தாந்தம் அனுதியென்பதுமாமென்க. இம் மண்டலப்ராஹ்மணமல் லாத வேறு பல உபநிஷதங்களில் வரும் அத்துவிதம்—பதி, பசு, பாசமெனு முப்பொருளும் நீரும் எண்ணெயும்போல ஒன்றற் கொன்று தூல சூக்குமங்களாய் வியாப்பியமும் வியாபகமுமாய் நிற் கின்ற தன்மையை யுணர்த்தவுளதெனக் கோடல்வேண்டும். இஃது ஆன்மாவின் பெத்ததசையின் சம்பந்தமாம். இச் சம்பந்தம் உடம் பும் உயிரும்போல † அனுதிக்கலப்பும் உடனுதலும் வேறுதலுமா கிய மூன்றுமென வறியவுள்ளது. சோகம்பாவனையெனும் உபாச னைக்கண்ணும் அத்துவிதம் பொருந்தும். சுத்தமெனும் அடைமொழி யில்லாத இந்த அத்துவிதத்தையும் அவ்வடைமொழியுள்ள அந்த அத்துவிதத்தையும் பெத்ததசையிலும் முத்திதசையிலும் ஒரு பொருளே யுடையனவெனக் கொள்ளின் வெண்ணிலாவென்பதில் வெள் - இனம் விலக்கவந்ததல்லாத இயற்கையடைமொழியாதல் போலச் சுத்தமென்பதும் இயற்கையடைமொழி யாதல்வேண்டும்.

---

* புனிதம் = சுத்தம். † காரணதேகம் அனுதி.

ஆயின், சுத்தாத்துவிதமெனக் கூறிக்கோடலாற் பயனென்றுமின் றெனவுமேற்படும்; அஃதீண்டைக்குச் சால்புடைத்தன்று. மேலே கூறிப்போந்த சுருதி வசனங்களோடு தாயுமானர் கூற்றினையு நோக்குக.

அந்த 'அத்வைதம்' என்னுஞ் சொல் அ + த்வைதம் எனப் பிரிக்கப்படும். "சொன்ன மொழிப்பொரு ளீக்கு நகாரமச் சொன் முன் மெய்யேல்—அந்நிலை யாக வுடல்கெடு மாவிமுன் னுகிலது—தன் னிலை மாற்றிடும்" என்று வீரசோழியம் விளம்புமாற்றானே 'த்வைதம்' என்னு மொழிமுதற்கண் மெய்வந்தமையின் நகரம் லோபப் பட அந்த அ - வந்ததாகும். இது, பாணினீயமெனும் வியாகரணத்து உ - ம் அத்தியாயத்தின் "நஞ்" என்னும் ஸூத்ர விதியினுறுவது. த்வி = இரண்டு. த்விதா = இருதிறன். இதுவே 'த்வைதம்' எனப் படும். நகரத்தின் வழிவந்த அ - என்பதன்பொருள் :—

(𑌤𑌤𑍍𑌸𑌾𑌦𑍃𑌶𑍍𑌯𑌮𑌭𑌾𑌵𑌶𑍍𑌚 𑌤𑌦𑌨𑍍𑌯𑌤𑍍𑌵𑌂 𑌤𑌦𑌲𑍍𑌪𑌤𑌾 ।
𑌅𑌪𑍍𑌰𑌾𑌶𑌸𑍍𑌤𑍍𑌯𑌂𑌵𑌿𑌰𑍋𑌧𑌶𑍍𑌚 𑌨𑌞𑍍𑌰𑍍𑌥𑌾𑌃 𑌷𑌟𑍍𑌪𑍍𑌰𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌾𑌃 ॥)

"தத்ஸாத்ருச்யமபாவச்ச ததந்யத்வம்ததல்பதா |
அப்ராசஸ்த்யம்விரோத்தச்ச நஞர்த்தாஷ்ஷட்ப்ரகீர்திதா: ||"

என்று ஆசிரியர் - பதஞ்சலியார் தமதுரையின்கண் சு - வகை யாக அளவுபடுத்தியுள்ளார். விவரம்.—

(க) தத்ஸாத்ருச்யம் = அதுபோன்றது, ஒப்பு, அன்மை. அப்ரா ஹ்மணன் என்பது உதாரணம். ஸத்ருச்ய சம்பந்தம் ஸாத்ருச்யம்; ஸத்ருச்யம் = சமம்.

(உ) அபாவம் = இன்மை. அச்ருங்கோமநுஷ்ய: = மனிதன் கொம் பில்லாதவன் என்பது உதாரணம்.

(ங) ததந்யத்வம் = வேற்றுமை, பேதம். அநாகாச: பூ: = பூமி ஆகாயத்தினும் வேறு என்பது உதாரணம்.

(ச) ததல்பதா = குறை. அநுதராகந்யா = வயிறு சிறுத்த கன்னி என்பது உதாரணம்.

(ரு) அப்ராசஸ்த்யம் = பொறையின்மை. அமரா: தேவா: = (மனி தரைப்போலக் கடுந்துயருழத்தல், இடையிடையே சாக்காடுறல் பொறுத்தலின்மையால்) தேவர் மரணமில்லாதவர் என்பது உதா ரணம்.

(கூ) விரோத ீ=பகை, எதிர்மறை, மறுதலை. அஸுரா ீ=சுர விரோதி என்பது உதாரணம்.

எனவாம். இவற்றுள் (தத்ஸாத்ருச்யம்=) ஒப்பெனப்பட்டது தான் சிவசாமியமாகும். சாமியம்=சமத்துவம். இது, (நிரஂஜநஃ பரமஂஸாம்யமுபைதி) "நிரஞ்சநஃ பரமம்ஸாம்யமுபைதி" என்னும் முண்டகோபநிஷத வசன முடிபிலுளது. தமிழ்:— "(இவ்வித சீவன் முத்தன்) மலநீக்க முடையவனுப் பரமசாமியத்தையெய்து கின்றனன்" எனவாம். இவ்வொப்பு அன்மையெனப்படுத லெங்ஙன மாமென்னின்,— க்ஷத்திரியனுகவேனும் வைசியனுகவேனு முள்ள வொருவன் யஞ்ஞோபவீதந் தரித்துப் பிராமணகன்மங்களைச் செய்யு மிடத்து அவன், பிராமணன் அல்லன் பிராமணனுக்கு ஒப்புளோ னை அப்பிராமண னெனப்படுமாறு, சீவான்மாவும் யோகஞான விளக்கமுற்ற ஞான்று பரமான்மாவே அன்று, அப் பரமான்மாவின் சருவஞ்ஞத்துவம் முதலிய கலியாணகுணங்களை அஃதடைந்து அதனை யொத்திருக்குமென் றுரைக்கப்படும்; அங்ஙனமேயாமென்க. இந்த அன்மைப்பொருளே வைதிக சைவ சித்தாந்தத்திற் கொள்ளப் படுவதாயிற்று.

தனக்கிணையாகத் தன்னினம் பிறவினமெனும் இரண்டுமில் லாமையே துவிதமின்மையெனப்படும் அத்துவிதம்; இதுவே அபாவ மெனும் இன்மைப் பொருளென்றும், உயிரனைத்தும் அறிவுடைப் பொருளாயவழி• பிரமத்திற்குத் தன்னினமேயாயினும் அவையெல் லாம் பிரமமேயென்றும், அறிவிலாப்பொருள்களே பிரமத்திற்குப் பிறவினம்; அவற்றிற்கு முதற்காரணம் அந்தப் பிரமமேயென்றும் ஏகான்மவாதிக ளுரைப்ப. இங்ஙனம், அத்துவித மென்பது இன் மைப்பொருள் பயப்பதாயின் 'இரண்டில்லை' எனும்பொருள் பயக்கு மேயன்றி இத்துணை விரிபொருள் பயவாதேயென்று ஆக்ஷேபிப்பார் முன்னிலையில் அன்னோருட் சிலரும் வேறுசிலரும் இரண்டில்லை யெனின் ஒன்றுதானென்பது பொருள்; அஃது "ஏகமேவாத்விதீ யம்" எனுஞ் சுருதி வசனத்தான் உறுதிப்படுமென்றும் மொழிதருப. இவ்வாறு அத்துவிதமென்பது ஒன்றெனும் பொருளைப்பயபதே (அபா வம்=) இன்மை: அதுவே நகரத்தின் பொருளென்னின்,— ஏக மெனும் எண்ணுப்பெயர்மேல் நகரம் வந்த சொல்லே (ந+ஏகம்=) அநேகம்: அந் நகரமும் அத்திறப்பொருள் பயக்கவேண்டும்: பயந்தக் கால் ஏகமெனும் ஒன்றில்லை; அஃதாவது யாதுமில்லாச் சூனிய

மெனவாகும். அவ்வாறுகாமே வடநூன்முடிபின்படி இரண்டின் மேற்பட்ட மூன்றுமுதலாகப் பலவெனவாதலின், துவிதமெனும் எண்ணுப்பெயர்மேல் வந்த நகரமும் இன்மைப்பொருள் பயவாமே அன்மைப்பொருளே பயக்குமெனும் மரபுறுதீர்வை யேற்படுமென்க. இத் தீர்வையோடு துவிதமெனும் எண்ணின்மேல்வரு நகரத்திற்கு இன்மைப் பொருளுங் கொள்ள விதியுளதென்பது காட்டப்படுமாயின் அதுவும் அங்கீகரிக்கப்படுவதேயாம்; என்னை? தத்தம் மதக் கோட்பாடுகட்கிசைய வரைந்த வேதபாடியம் முதலியன உலகில் அங்கீகரிக்கப்படும் வழியின். இன்னணம் ஒன்றென இன்மைப் பொருள்கொள்வோர் இரண்டின் விரோதி ஒன்றென விரோதப் பொருள்கோடல் நேராயிருப்பதை விட்டவாறென்னை? எனுங் கடாவும் இங்ஙனமெழவுள்ளது. அந்த "ஏகமேவாத்விதீயம்" என்னுஞ் சுருதிவசனம் ஏகமும் அத்துவிதமு மொன்றேயெனும் பொருளைப் பயவாது; என்னை? (ஸதெவஸொமெ்யெஉஉ அஸீதெகமெவாஉி தீய௱) "ஸதேவஸோம்யேதமக்ர ஆஸீ தேகமேவாத்விதீயம்" என்று சாங்தோக்யோபநிஷத்துறை வெளிப்படு வசனத்திுள்ளதே அவ்வசனமென்பதும், அது "சோமியனே! இதற்கு முன் (பிரபஞ்ச சிருட்டிக்கு முன்னே) அத்விதீயமாயுள்ளபொருள் ஒன்றேயிருந்தது: அது சத்தே" எனும்பொருள் பயக்குமென்பதும் அறியப்படுதலின். இப்படலத்து ௩ - ன் உரையிற் பிரமாணிக்கப்பட்ட ஐதரேயோபநிஷதம் முதலியவற்றின் வசனங்கள் பயக்கும்பொருளும், "காலமுநாள்க ளூழி படையாமு னேக வுருவாகி" என்று தமிழ்மறையில் வரு திருநாவுக்கரசுகளது திருவாக்கின்பொருளும் இப்பொருளேயாகலின் இதனில் ஏகமும் அத்துவிதமு மொன்றென்பதறிய இடனின்றெனல் ஏற்புடைத்தென்க. "ஏகமேவாத்விதீயம் ப்ரஹ்ம!" என்னும் பைங்லோபநிஷத் வசனத்தில் இந்த 'அத்விதீயம்' என்பது 'ப்ரஹ்ம' என்பதைத் தொடர்ந்து நின்று முடிதலும் ஈண்டுக் கருதிக்கொள்க. 'த்விதீயம்' என்பது இரண்டாவதெனும் பொருளுடைத்தாகலின் 'அத்விதீயம்ப்ரஹ்ம' என்பது இரண்டாவதற்ற பிரமம் எனவாம். இஃது 'இணையற்ற பிரமம் பசு பாசங்களுக்கு வேறன்மைபால் உடங்கியைந்துநிற்குந் தன்மைத்தென்பதை யுணர்த்தவுளது. ஆகலினன்றே "ஒன்றென்ற தொன்றேகா ணொன்றே பதி" "அருமறைகளொன்றென்னு தத்துவிதமென்றறையு மாங்கு" "அரக்கொடு சேர்த்தி யணைத்தவக் கற்போ—லுருக்கி யுடங்கியைந்து நின்று—பிரிப்பின்றித்—தானே யுலகாம்" என்று சிவஞானபோத

மும், "விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல்—மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்" என்று தமிழ்மறையுங் கூறுகின்றன. ஒரு காலத்திற் கூடியதாகக் கூறப்படு சையோகமல்லாத சமவாயமெனுந் தாதான்மிய சம்பந்தமே வியாபகமும் வியாப்பியமுமாய் உடங்கி யைந்து நிற்கும் அத்துவிதமென்றுங் கூறலாம். தாதான்மியத்தின் வேறாய் நையாயிகர் நவிலுஞ் சமவாயமென்ப தொன்றின்று. தருக்க நூலார் கூறியிட்ட ஒன்றிலொன்றின்மை யெனப்படும் அந்யோந்யா பாவம்— "ஈசன்றனை * வினைசேருவ தின்றீசனு மதனை யெய்தா னெனவேயொன்றினி லொன்றின்மைய தென்றல்" என்று இந்நூலா சிரியரே தமது திருப்பாவிற் றெரிக்குமாற்றானே இற்றென வறியப் படுதலின்; அதுவும் உப்புநீருறைமீன் உப்பேறாதிருக்குந் தன்மை போலென உவமான முகத்தானும், உரிய சுருதிமுகத்தானும் இப் படலத்து அ-ன் உரையின்கண் விளக்கப்பட்டமையின் யாண்டும் இறைவனிருத்தற்கு ஒரிழுக்கு மின்றென்பது தெள்ளிதென்க. "ஈக்ஷதேர்ந்நாசப்தம்" எனும் பிரஹ்மஸூத்ரத்திற்கு இயற்று முறையில் ஏகமேவ - என்னு நிச்சயமானது வேறு அதிட்டாதா இல்லையென்பதின் மேற்று என ஏகத்திற்குப் பொருள்விரித்த நீல கண்டபாஷ்யாசார்யர் அத்விதீயம் - என்றதற்குப் பிரமத்தின் விசேட குணங்களை யிது விளக்குகின்றதெனும் பொருளே கொண்டுள்ளார். இப்பொருளும்—ஏகத்தின்பொருள் வேறு அத்விதீயத்தின்பொருள் வேறெனவே காட்டுவதாயிற்று. இவையேயுமன்றி, ஏகமும், அத்து விதமும் ஒன்றேயென்பதை—ஏகபத்தினி யென்பது அத்துவிதபத் தினி யெனவும், ஏகபுத்திரனென்பது அத்துவித புத்திரனெனவும் வழங்கப்படல் வழக்கின்கண் இல்லாமையே இனிது மறுக்கும்.

கூறிப்போந்த 'அநேகம்' எனுஞ்சொல் அன்மைப் பொருளி லுளதுகொல்லோ வெனின்,— பிராஹ்மணன் அல்லா மரபினன் அப் ராஹ்மணனெனப்படுவ னென்பது மேலே காட்டப்பட்டதன்றே; அவ்வாறே ஒன்றல்லா எண் அநேகமென வழங்கப்படுவதாயிற்று; இஃதன்மைப்பொருளி லுளதேயென்க. இவ்வன்மை வழியே 'அத் வைதம்' என்பதும் இரண்டல்லவெனும் பொருளைத்தானே பயக் கும்: அதனாற் சித்தாந்தத்திற்குப்போந்த பயனென்னையெனின்,— 'த்வைதம்' என்பது இருதிறனுணர்த்துதலால் அவற்றொன்று அகண் டத்துவ பதியென்பதும், ஒன்று பாசத்தோடுள்ள பசுவென்பதும்

* வினை = தீவினை.

அறியக் கிடக்கின்றன. அஹம்ப்ரஹ்மாஸ்மி (=நான் பிரமமாயிருக்கின்றேன்) என்னும் யஜுர்வேத மகா வாக்கியத்தையும், இதனை யனுசரித்து வருவனவற்றையுங் கேட்டவழி அவ்விரண்டும் வேறு வேறான கண்டப்பொருள்களா யிருக்கின்றனவோவென்று ஐயுறு வாரது ஐயம் நீக்குதற்பொருட்டு (துவிதம்) இரண்டு அல்லவென்பதையும், இரண்டும் ஒன்றுதானோவென்று ஐயுறுவாரது ஐயம் நீக்குதற்பொருட்டு (ஏகம்) ஒன்று அன்றென்பதையும் வெளியிடுமாற்றானே மேலே கூறப்பட்டபடி இரண்டும் உடம்பு முயிரும்போல அனுதிசம்பந்த மென்பதையும் அறிவுறுத்தும் வலிவாய்ந்துளதே அந்த அத்வைதமென்ப தறியப்படுதலே பயனென்க. இதனைவிட்டு ஒன்றென்பதனாலும், இரண்டென்பதனாலும் உறும் இழுக்கை இப்படலத்து க0சு, க0எ, க0அ-ஞ் செய்யுள்களே தெரிக்கும். ஸாமவேத மைத்ரேயோபநிஷதம்—

"ஏகஸங்க்யாவிஹீநோஸ்மி த்விஸங்க்யாவாநஹம்நச।"
"அகாரோகாரரூபோஸ்மி மகாரோஸ்மிஸநாதநঃ।"
"ஹிருதயக்ரந்திஹீநோஸ்மி ஹ்ருதயாம்புஜமத்யகঃ।"

என்று கூறுமாற்றானும் அவ் வொன்றிரண்டென்றன் மறுக்கப்படும். படவே அத்துவிதமென்பதே நிலைபேறுகும். இவ் வேத வசனங்களின் பொருள்:— "ஒன்றெனும் எண்ணும் இரண்டெனும் எண்ணுமற்றவனுயுள்ளேன்: அகார உகார ரூபமாயுள்ளேன்: மகாரமாயுள்ளேன்: இருதயக்கிரந்தியில்லாதவனு யிருதயகமல மத்தியிலுள்ளேன்" என்று மகாதேவனுகிய சிவபெருமான் மைத்திரேயருக்கு அருளிச்செய்தன னெனவாம். இருதயக்கிரந்தி=அவித்தை, அஞ்ஞானம். தாயுமானசுவாமிகள் தேஜோமயானந்தத்தில் "ஒன்றுடிரண்டெனுச் சமரச சொரூபசுக முற்றிட" எனவும், மண்டலத்தினென்பதில் "ஒன்றிரண்டாய் விவகரிக்கும்விவகாரங்கடந்து" எனவும், பைங்கிளிக்கண்ணியில் "உன்னும லொன்றிரண்டென்றோமல் வீட்டுநெறி—சொன்னுன் வரவும்வகை சொல்லாய்" எனவும், ஒழிவிலொடுக்கநூலார் "என்னுணே யென்னுணே யென்னுணே யேகமிரண்—டென்னுமற் சும்மா விருவென்று—சொன்னுன்—திருஞான சம்பந்தன் சீகாழி நாட—னருளாளன் ஞானவினோ தன்." எனவுங் கூறியுள்ளனவும், பிறவும் இந்நியாயத்தினை நிலைபெறுத்துதல் காண்க. "அலியென்னு மொருமொழி ஆணுமன்று பெண்ணுமன்றெனவும், வாயிலென்னு மொருமாற்றம் உள்ளுமன்று வெளியு

மன்றெனவும், நடுவென்னு மொருகிளவி அடியுமன்று முடியுமன்றெனவும், சோறென்னு மொருசொல் அரிசியுமன்று குழைகூழுமன்றெனவும், மாலையென்னு மொருகூற்று இரவுமன்று பகலுமன்றெனவுந் தீர்வைசெய்யும் வலியுற்று நிற்றல்போல அத்துவிதமெனு மொருசொல்லும் ஏகமுமன்று துவிதமுமன்றெனத் தீர்வைசெய்யும் வலியுற்றுச் சம்பந்த முணர்த்தி நிற்பதாகும்; இது, பாம்பின் கட்டொளியிற் கண்ணுஞ் செவியும், யானையினது துதிக்கையில் நாசியுங்கையும், பேய்பிடித்தானுருவிற் பேயும் பிடிபட்டவுயிரும், வெளவாலுருவிற் பறவைவடிவும் விலங்குவடிவும் உள்ளமையையும், ஈதெமக்கு நறிது நறிதெனத் தேவரொடு கலாய்த்த கலாமுடைச் சூரபதுமனுருவிற் சூரனும் பதுமனு மிருந்தமையையும் ஒக்குமென வுணரவேண்டும்; கல்லாலடிக்கடவுள் கைகாட்டு மிதுவே" என இந்நியாம வலியுறுத்தப்படுதலையும் வேறுபல வெடுத்துக்காட்டுகளையும் இந்நூலாசிரியரது வேதவியாசத்து ௩௩-ங் கடாவிடைக்கண்ணுங் காணலாம். இரண்டின் சம்பந்தமே அத்துவிதமெனப்படு மென்பது—

(ஸலிலஏகோத்ரஷ்டாத்வைதோ பவதி)

"ஸலிலஏகோத்ரஷ்டாத்வைதோ பவதி"

எனும் பிருஹதாரண்யகோபநிஷத்தின் ௪-ம் அத்தியாயத்து ௩-ம் பிராஹ்மண வசனத்தும் அறியப்படுகின்றது. தமிழ்:—"நீரொடு நீர் ஒன்றுபட்டது போல அத்துவிதமாகிறது" எனவாம். இது, சுழுத்தியிற் பரமான்மாவுஞ் சீவான்மாவும் வியாபகமும்வியாப்பியமுமாய் நிற்குந் தன்மைகுறித்து யாஞ்ஞவற்கியர் சனகராசனுக்குச் சொற்றது. "சிவன்வேறு தான்வேறென்னுந் துவிதபாவனையை நீக்கிச் சிவனே நானென்னும் அத்துவிதபாவனையை எஞ்ஞான்றும் பயில்க" என்னும்பொருளுற, ஸர்வஜ்ஞானோத்தராகமம் (சிவோந்ய ஸ்ஸஹமேவாந்ய: ப்ருதக்பாவம் விவர்ஜயேத் । யச்சிவஸ்ஸோஹமேவேதி அத்வைதம்பாவயேத்ஸதா ॥) "சிவோந்யஸ்த்வஹமேவாந்ய: ப்ருதக்பாவம் விவர்ஜயேத்। யச்சிவஸ்ஸோஹமேவேதி அத்வைதம்பாவயேத்ஸதா ॥" என்று கூறுகின்றமையானும், "எவன் இவ்விதமாக இந்தப் பிரமத்தை நான் பிரமமாகின்றேனென வறிபவனோ (பாவிக்கின்றவனோ) அவன் இந்த யாவுமாகின்றனன்; தான்வேறு தேவதை வேறெனக்கொண்டு அன்னியமாகத் தேவவழிபாடு செய்தக்கால் அவனறிந்தவனல்லன்" என்னும்பொருளுற அந்தப் பிருஹதாரண்ய

கத்தின் ங-ம் அத்தியாயத்து ச-ம் பிராஹ்மணம் "யஏவம் வேதாஹம் ப்ரஹ்மாஸ்மீதிஸஇதம் ஸர்வம்பவதி தஸ்யஹநதேவாச்சநாபூத்பா ஈசதே ஆத்மாஹ்யேஷாம் ஸபவதி அதயோந்யாம் தேவதாமுபாஸ்தேந்யோஸாவந் யோஹமஸ்மீதிநஸவேத" என்று கூறிச்செல்கின்றமைபானும் அத்துவித நீத்தநெறி பொருஞான நெறியாக மதிக்கப்படாதென்பதூஉம் ஈண்டுணரற்பாற்று.] (கூகூ)

சத்தே பதியச் சததம் பிரிவில்
சித்தே பசுவத் தினவின் பதுவே
மத்தா கியபா சமனப் பிமரஞ்
செத்தா லிவணந் திகழுந் தெளியே.

சத்தே பதி: எஞ்ஞான்றும் அதனை விட்டு நீங்காத அந்தச் சித்தே பசு: அந்த நிரதிசயானந்தமே உன்மத்தமாகிய பாசம். மனச் சுழற்சி நசிக்குமாயின் அந்தப் பசுவும் பாசமும் இவ்விதமாகத் திகழும்; நீதெளிவாயாக.

[சிவஞானசித்தியாரிற் "சிவன் சீவன்" என்றற் றொடக்கத்துச் செய்யுளிற் "சிவனருட்சித் திவனருளைச் சேருஞ் சித்து" என்ற தன் கருத்தைச் "சித்தே பசு" என்றது கொண்டிருத்தலுங் காண்க.] (க00)

பதிசத் தெனவெம் மறையும் பறையும்
மதியற் றபுமான் வளர்சத் துமலன்
இதமுற் றறிவித் திடினும் மறியா
அதமக் குணபா சவசத் துமலன்.

அறிவித் திடினே யறியும் பரிசால்
உறுகட் பெறலிற் சதசத் துயிரென்
றுறுதிப் பவனூல் சொலுமவ் வுரையால்
அறிவுக் குரியோ னணுவென் றிடலாம்.

எந்த வேதமும் பதிப்பொருளாகிய பிரமம் சத்தென்று கூறும். அறிவு விளக்கமற்ற சீவன் நிலைபெற்ற சத்துமல்லன், விருப்புற் றறிவித்தாலுமறியாத அதமலட்சணமமைந்த பாசபதார்த்த அசத்துமல்லன்.

["அறிவித்திடினும்மறியா" என்பதிலுள்ள மகரவொற்று விரித்தல் விகாரம்.] (க0க)

அறிவித்தாலறியுந் தன்மையினாலும், (காரியக்கே டுடைமையின் அசத்தெனப்படு தேகியாயிருந்து) துன்பத்தைப் பெறுதலினாலும் சீவான்மா சதசத்தாகுமென்று நிலைபேறுயுள்ள பவனென்னும் பெயரிய பரமசிவனுடைய ஆகமங்கள் கூறும். அக்கூற்றி னாதாரத்தால் அணுவாகிய சீவனை அறிவுரிமையுள்ளோ னென்றும், முத்தி ஞானம் பெறுதற்குரியோ னென்றுங் கூறலாம்.

[உயிர் சதசத் திலக்கண முடைத்தென ஆகமங் கூறுதல் (ஸதஸத்வஞ்ச தஸைவம்) "ஸதங்பதஸதங்யச்சத தேவம்" என்று மிருகேந்த்ராகமங் கூறிச் செல்லுமாற்றானு மறியவுள்ளது. "அசத்தைச்—சத்துட னின்று நீக்குந் தன்மையாற் சதசத் தாமே" என்று சிவப்பிரகாச முனிவர் ௬ - ஞ் சூத்திரத்திற் கூறினதூஉம் இச் செய்யுட்பொருட்டே. அறிவுக்குரியோன் - என்பதற்கு அறிவுரிமையுள்ளோன், முத்திஞானம் பெறுதற்குரியோ னெனும்பொருள் இரட்டுற மொழிதலென்னும் உத்தியாற்கொள்க.] (௧0௨)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அதனா லியங்கு மறிவான சீவ
னகல்சித் தெனற்கு ரியதாம்
உதவாத பாச மொருபோது மின்ப
மெனலெவ்வி டாது தெரிவீர்
சதமாக வென்னு மறையோரு மீது
சரிதா னெனச்சொ லிடநான்
இதமாக விப்பர் நவில்வே னெனக்க
ணிறைவாய் மலர்ந்து நவில்வான்.

அதனால், இயக்கினா லியங்கு மறிவுள்ள சீவனனது வியாபிக்குந்தன்மையுள்ள சித்தெனும் பெயருக் குரியதாம். பயனற்ற பாசத்தை முத்தி நிலைக்களத்துஞ் சுக ஏதுவென்றல் ஒருகாலத்தும் பொருந்தாது; இதனை யுறுதியாக அறிவீர்களாக வென்று கூறும் வைதிகரும் இது, சரிதானென் றெத்துக்கொள்ள இதம்பொருந்த இங்ஙனங் கூறுவேனென்று ஞான நேத்திரமுடைய குரு திருவாய்மலர்ந்து கூறுவாராயினர்.

[௬௭ - ஞ் செய்யுளில் "நிசமுப்பொருள்" என்றது பிடித்து ௧00 - ஞ் செய்யுளில் "தினவின்பதுவே மத்தாகிய பாசம்" என்று

கூறினமை நோக்கிப் "பாச மொருபோது மின்பமென லொவ்வி டாது" என்னுமிந்த ஆக்ஷேபம் வைதிகர்பாலு மெழுகின்றமையால் அது தீருமாறு வைதிக நூல்கொண்டே யுரைக்க இங்ஙனந் தொடங்கினரென்க. மேலை ஆக்ஷேபம் சித்தாந்திகட் கின்றென்பது கள-ன் உரையே காட்டும்.

"ஈதுசரிதான்" என்றது—இதுவழியே, இதுநெறியே, இஃதொழுக்கமேயென்னும் ஒப்புக்கோடலில் வந்தது. 'சரி' என்பதை வழியின் பெயரில் வைத்து "உதவிய சரியே தாரை யொழுக்கமே நடவை யாறு" என்று சூடாமணிநிகண்டு கூறுதல் காண்க. இது - என்னுஞ் சுட்டுப்பெயர் "ஈது" என நீண்டது.] (கoரு)

மறையந்த நூல்க ளுநின்ற கார
 ணவுடம்பை மல்கு சுகமென்
றறைகின்ற வின்ப மயகோச மென்று
 மறியா வுபத்த மதனை
உறுமின்பு கொண்டு களிசெய்யு மென்று
 முபயந் துறந்த நிலையில்
அறிவுந்தி யாவு மதுவென்று மோது
 மதனு லசித்து மகிழ்வாம்.

வேதாந்தமான உபநிடதங்கள்—சீவன் தங்கியிருக்குங் காரண தேகத்தைப் பெருகிய சுகமென்று சொல்லப்படும் ஆனந்தமயகோச மென்றும், அறிவித்தாலுமறியாத உபத்தேந்திரியத்தைச் சையோகத்திற் பொருந்துமின்பத்தைக்கொண்டு ஆனந்தத்தை யுண்டுபண்ணுமென்றும், அவித்தையொடு கூடிநிற்ற லற்றநிலையில் எல்லாஞ் சின்மயமாயுள்ள பிரமமேயென்றுங் கூறும். அதனல் அசித்தும் ஆனந்தமயமாம்.

[காரணசரீரம் ஆனந்தமயகோசமெனப்படுதல்— "ஸ்வரூபாஜ்ஞாநமாநந்தமயகோசஃ। தத்காரணசரீரம் ||" என்றும், கன்மேந்திரியங்களி லொன்றுன உபத்தம்— "வாக்பாதபாணிபாயூபஸ்தாஸ் தத்வ்ருத்தயஃ। வசநாதாநகமந விஸர்காநந்தாஸ் தத்விஷயாஃ ||" என்றும் பைங்கலோபநிஷதம் வசனிக்குமாற்றானும்; அவித்தையொடு கூடிநிற்ற லற்றநிலையில் எல்லாம் சின்மயசுகமெனப்படுதல்— "அகண்டைகரஸம்த்ருச்ய மகண்டைகரஸம் ஜகத்।" என்று யஜுர்வேத தேஜோபிந்தூபநிஷதம் வசனிக்கு மாற்றானும் அறியப்படுதலின்

"மறையந்த நூல்கள், ஓதும் அதனு லசித்தும் மகிழ்வாம்" என்றுரைத்தனர்.

யாவும் அறிவுந்து அது - என மாறுக. அவித்தை யொடு கூடிநிற்குந் துவிதநிலையே உபயமெனப்பட்டது. "உபயமு முகளமு மோரிரண்டாகும்" என்றியம்பும் சே - திவாகரம்.] (க0௪)

சொனசுத்த சச்சி தானந்த வண்மை
துவிதத் தினுக்கு மொவிடும்
முனலற்ற வேக மெனுநிச்ச யத்தின்
முடிவுக்கு மொவ்வும் விவரம்
பனுமித் துவந்து வமுமின் றெனச்சொல்
பதமற்ற தற்கு மொவிடும்
எனதுத்த மச்செந் நெறியோய் முடிந்த
விதன்வாய்மை யின்னு மறைவல்.

மேற்கூறிய சுத்த சச்சிதானந்த லட்சணம்—துவிதத்திற்கும் பொருந்தும். சங்கற்பரகித ஏகமென்னு நிர்ணயத்தின் முடிவுக்கும் பொருந்தும். விவரங்கூறுகின்ற இவ் விரட்டைக் கிளவித் துவிதமும், துவிதமில்லை யொன்றென்னும் பதமான அந்த ஏகமும் அன்று அன்றென நீங்கி நிற்கும் அத்துவிதத்திற்கும் பொருந்தும். நான் கூறும் உத்தம சன்மார்க்கத்தினிற்பவனே! முடிவாகிய இவ் விடயத்தினுண்மையை இன்னுங் கூறுவேன், கேட்பாயாக.

[துவந்துவம்=இரட்டை. "மிதுநம் த்வந்த்வம்" என்றுகூறும் அமரஸிம்ஹம்.] (க0௫)

ஒன்றென்னின் முத்தி பெறுவானு மின்பு
மொழியும்வெவ் வேறு மொழியிற்
சென்றுவரு கின்ற பதமுத்தி யல்ல
தைக்கியஞ் செப்ப விசையா
தென்றிவ் விரண்டு மல்லாத சுத்த
வியல்பான சற்ச மரசம்
பொன்றலறு மௌன முடிவென்று தந்தி
ரத்தினது சென்னி புகலும்.

இருப்பது ஏகப்பொருளே வேறென்று மின்றெனக் கூறின் முத்திபெறுவோனும், முத்திப்பேறெனப்படும் இன்பமும் இல்லொ

ருள்களாயொழியும்; முத்தியிற் சிவமுஞ் சீவனும் வேறுவேறெனக் கூறிற் போய்வரு பதமுத்தியேயன்றி ஐக்கிய பரமுத்திகூறப் பொருந்தாதெனக்கூறி, இவ்விரண்டுமல்லாத சுத்த சற்சமரசமே அழிவற்ற மௌனாதீதமென்றும் ஆகமாந்தமாகிய ஞானபாதம் நவிலும்.

[“முத்திபெறுவானு மின்பும் ஒழியும்” என்றதனால் ஒழிதல் கூடாதென்பது— “தமாத்மஸ்தம்யேநு பச்யந்திதீராஃ தேஷாம்ஸுகம் சாச்வதம் நேதரேஷாம்।” என்னுங் கடோபநிஷத்தின் ரு-ம் வல்லி வசனமும், “ப்ரசந்நாத்மாத்மநிஸ்தித்வா ஸுகமவ்யயமச்நுதே।” என மைத்ரேயோபநிஷத்தும் மைத்ராயண்யுபநிஷத்துங் கூறிய வசனமும், “கர்த்ருத்வாதி துஃக நிவ்ருத்தித்வாரா நித்யாநந்தாவாப்திஃ ப்ரயோஜநம்பவதி।” என்னும் முக்திகோபநிஷத்வசனமும் முறையே “(ஈசானனெனப்படும்) அவனை எந்தத்தீரர்கள் ஆன்மாவி லிருப்பவனாக அறிகின்றார்களோ அவர்கட்கு நித்தியமான சுகமுள்ளது; ஏனையோர்க்கில்லை” எனவும், “தெளிவுற்ற ஆன்மா ஆன்மாவி லிருந்துகொண்டு நாசமில்லாத சுகத்தை யடைகின்றனன்” எனவும், “கர்த்திருத்துவம் முதலிய துக்கநிவிர்த்தி வாயிலாக நித்தியானந்தப் பிராப்திதான் பிரயோஜனம்” எனவும் அருத்தமாகின்றமையானும்; இந்த நித்திய சிவசுகத்தை நுகர்ந்திருத்தற்குரிய முத்தான்மாவும் நித்திய வத்துவாகவே யிருத்தல்வேண்டுமென லேற்படுகின்றமையானும்; சுருதி கூறியாங்கு “அண்டமுத லாயினு னந்தமிலா வானந்தம்—பண்டைப் பரிசே பழவடியார்க் கீந்தருளும்—அண்டம் வியப்புறுமா பாடுதுங்கா ணம்மானாய்” என்று தமிழ்மறையுங் கூறுகின்றமையானும் பெறப்படும். (நமுமுக்ஷுர் நவைமுக்த=) முமுக்ஷுவுமில்லை முத்தனுமில்லை என்று அம்ருதபிந்தூபநிஷதங் கூறுங் கூற்று—திரிபுடிரகிதத்திற் சேரற்பாற்று. சுருதி சொல்லுமாறே (விமுக்தஃ கேவலீபூதஃ ஸுவக்ஷயரோவ்யயாக।) “விமுக்தஃ கேவலீபூதஃ ஸுகமக்ஷயமாப்நுயாத்।” என்று ஸர்வஜ்ஞானோத்தராகமஞ் சாற்றுதலும் ஈண்டுணரத்தக்கது. பொருள்:—“மலவாசனை நீங்கிக் கேவலமாய் நின்று அந்தமில்லா வின்பத்தைக் காண்பன்” எனவாம். “முத்தி பெறுவானு மின்பும்” எனவே நித்தியமான அம்முத்தி யின்பம் பரமான்மாவுக்குக் கூறலொண்ணு தென்பதும் போதரும். ‘தந்திரத்தினது சென்னிபுகலும்’ என்பதற்குத் கூகூ-ன் உரை யிற்றிற் காட்டப்பட்ட ஸர்வஜ்ஞானோத்தராகம வசனத்தையே காட்டாகக்கோடல் சாலும். அங்ஙனமே சுருதியுமுளது. சஎ-ன்

உரையிற் காட்டப்பட்ட பௌஷ்கராகமச் சுலோகங்களையும், சஉ - ன் உரையிற் காட்டப்பட்ட பிருஹதாரண்யகம் சுவேதாச்வதரமெனும் உபநிஷதவசனங்களையும், பிரமானந்தத்தின் கீழ்ப்பட்ட கதிகளைப் படிப்படியாகக் கூறிவிளக்குந் தைத்திரீயோபநிஷத் வசனங்கள் பாயிரத்துப் கஉ - ற் காட்டப்பட்டனவாகலின் அவையற்றையும் பதமுத்திக்குப் பிரமாணமாகக் கோடல் சாலும்.

ஐக்கியம் - என்பது விருத்திலயம்; அது மனோலயம், சிவபோத வொடுக்கம் எனவும், இந்த இலயமுற்றுச் சுவானுபூதியைப் பெய்தாமே மலத்திற் கட்டுண்டிருந்த ஆன்மாத் தனது கண்டிப்பு நீங்கி அருளிலழுந்தி யொன்றிரண்டென வியையாச் சுத்தாத்துவித சித்தியினிற்றலெனவும், அதனை யடைதலெனவும் அருத்தமாம். (ஜீவ ப்₃ரஹ்மைக்யார்த்தே) "ஜீவப்ரஹ்மைக்யார்த்தே" என்று சுகரஹஸ்யோபநிஷத்தும், (ஶிவேநைக்யம் க₃த: ஸித்₃த₄:) "சிவேனைக்யம் கதஸ்ஸித்த:" என்று சிவஜ்ஞானபோதமுங் கூறியாங்குப் பிறவேதாகமாதி நூல்கள் ஐக்கியங்கூறு மிடந்தோறும் இந்த அருத்தமேயல்லாமல் என்றும் அத்துவிதமாயுள்ள சிவனுஞ்சீவனுங் கலத்தலென்பது அருத்தமன்று. வேறுபட்டு நிற்பதெதுவோ அதற்கே ஐக்கியங்கூறுதலும், அடைதல் கூறுதலு மேற்புடையன. "பதியிற் கலவாமல்—மாசில் சமத்துமுத்தி வாய்க்குநா ளெந்நாளோ" என்று தாயுமானார் நிற்குநிலையி லுரைத்ததும், "சென்றிவன்றா னென்றிற் சிவபூரணஞ்சிதையும்—அன்றவன்றா னென்றுமெனி லன்னியமாம்" என்று திருவதிகை - மனவாசகங்கடந்தா ருரைத்ததுமுணர்க. (ஸந்தௌ₄ஜீவாத்மநோ ரைக்யம் ஸந்ந்யாஸ: பரிகீர்த்தித: ।) "ஸந்தௌஜீவாத்மனோ ரைக்யம் ஸந்ந்யாஸ: பரிகீர்த்தித: ।" என்னும் மைத்ரேயோபநிஷத்தின் உ - ம் அத்தியாயவசனம் "இரண்டு சந்திகளும் சீவபரமான்மாக்களின் ஐக்கியம்; அதுவே சன்னியாசமென்று சொல்லப்படும்" எனும் பொருள் பயக்குமாற்றானும் எடுத்துக்கொண்ட நியாயம் வலியுறுகின்றது.

வேறுவேறென்பது வெவ்வேறென மரீஇயிற்று. 'முடிவென்றும்' என உம்மை கூட்டியுரைக்க. ] (க0சு)

சும்மா விராது சும்மா விருப்ப
தேயிந்த வாய்மை யிதுவே

சம்மார நாதர் கல்லாலி னல்ல
தடவங்கை வைத்த குறியால்
மும்மா சகற்றி யிம்மா திறத்தெம்
மொடுநின்மி னென்ற முடிவும்
இம்மூக வர்த்த மல்லா திசைக்கு
மெல்லா மவத்த மகனே.

மகனே! சுழுத்திமுதலிய அவத்தைகளில் அறிவிழந்து சும்மா விருத்தல்போ லிராமல், போதசலன நீங்கிச் சும்மாவிருப்பதெனுஞ் சுகத்தி லிருப்பதே யிந்தவுண்மையாகும். மகாசங்காரகருத்தாவானவர் ஞான தக்கிணாமூர்த்த கோலமாகக் கல்லாலி னீழலிலிருந்து நல்ல விசாலமு மழகும்வாய்ந்த தமது கரம் வைக்கப்பட்ட சின்முத்திரைக்குறி வாயிலாக மும்மலங்களையு மொழித்து இந்த மா வுறுதிப்பாட்டில் எம்முடன் நீவிர் நிற்கக்கடவீரென்று சனகாதி முனிவர் நால்வர்க்குஞ் சொல்லாமற் சொல்லியருளிய முடிபும் இதுதானே. வாயாற் கூறப்படாத இந்த மௌனார்த்தமன்றிக் கூறப்படும் பிறகொள்கைகளெல்லாம் பயனற்றவைகளேயாம்.

[ சின் முத்திரையே 'தடவங்கை வைத்தகுறி' எனப்பட்டது. இதுவே உபநிடதங்களிற் கூறப்பட்ட யோனி, கண்டம், சாம்பவி, கேசரி முதலிய பலமுத்திரைகளையும் அங்கமாகக்கொண்டு திகழும் ஞானமுத்திரையெனப்படும். இம்முத்திரை யஜுர்வேத பிரஹ்மவித்யோபநிஷத்தில் (𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌮𑍁𑌖𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍁𑌦𑍍𑌰𑌾𑌂 𑌪𑍍𑌰𑌕𑌲𑍍𑌪𑌯𑍇𑌤𑍍।) "தக்ஷிணாமுகமாச்ரித்ய ஜ்ஞாநமுத்ராம் ப்ரகல்பயேத்।" என்றும், (𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍁𑌦𑍍𑌰𑌾𑌤𑍍𑌮𑌰𑍂𑌪𑌕𑌂) "ஜ்ஞாநமுத்ராத்மரூபகம்" என்றும், யஜுர்வேத தக்ஷிணாமூர்த்யுபநிஷத்தில் (𑌅𑌮𑍃𑌤𑌕𑌲𑌶𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍁𑌦𑍍𑌰𑌾𑌃 𑌕𑌰𑌾𑌬𑍍𑌜𑍈𑌃) "அம்ருதகலச வித்யாஜ் ஞாநமுத்ரா: கராப்ஜை:" என்றுங் கூறப்பட்டுளது. இது மௌனமுத்திரை யென்றுங்கூறப்படும். வலக்கைவிரல் ஐந்தனுட் பெருவிரல் சுட்டுவிரலென்னுமிரண்டுஞ் சேர்ந்திருக்குமாறாகவும், ஏனைய மூன்றுவிரல்களு நீங்கி நிற்குமாறாகவு மிருப்பது இம் முத்திரையாகலின் "மும்மாசகற்றி யிம்மா திறத்தெம் மொடுநின்மி னென்றமுடிவும்" என்றுரைத்தனர்.

" ஒன்றெனற்குச் சுட்டு விரலிணையு மோரிரண்
டென்றிடற்கஃ தோடொன் றிணையுமிரண்—டொன்றுமென

ஆட்டியொன் றுக்குதலுங் காட்டாம லத்துவிதங்
காட்டியதே கல்லாலிற் கை."

என்று இந்நூலாசிரியர் காசியாத்திரையிற் கூறினமையின் இம் முத்திரையில் ஒன்றெனும் ஏகவாதமும், இரண்டெனுந் துவிதவாதமும், இனி யொன்றிலொன்று ஐக்கியமாமெனும் ஐக்கியவாதமும் மறுக்கப்படு நியாயமும், சீவ பரமான்க்களின் அனுதிசம்பந்த அத்துவிதஞ் சித்திப்பான் நிற்குநிலை யுணர்த்தப்படு நியாயமும் பெறலாமன்றே. இவ்வாறு கல்லால விருக்கத்தி னடியிலே பரமாசாரிய மூர்த்தியினுற் சனகர், சனற்குமாரர், சனந்தனர், சனுதனரெனும் பெரிய நால்வர்க்கு முணர்த்தப்பட்டதென்பதைச் சிவ மகாபுராணங்கள் சொல்லும். உரைத்துமென்னும் உத்தியாற் பாயிரத்து கூ - ன் உரையில் நிறுத்திவைக்கப்பட்ட ஐந்து குறிப்பு இங்கு விளக்கப்பட்டமையின் அவ்வுரையையும் ஈண்டுக் கருதிக்கொள்க.

மூகம் = ஊமைத்தன்மை. அஃதிங்கே சும்மாவிருப்பதெனும் மௌனத்தைக் குறிப்பதாயிற்று. 'என்றமுடிவும்' என்னும் உம்மை இறந்தது தழீஇயது. ஸம்ஹார என்னும் வடசொல் 'சம்மார' என விகாரப்பட்டது. (கூவஙூ) அபத்தம் - என்பதன் விகாரமே அவத்தம்; உறுதியற்றதெனும் பொருளுடைத்து. "அறிவி லாத வமணர்சொல் லவத்த மாவ தறிதிரேல்" எனத் திருஞானசம்பந்தசுவாமிகளது திருக்கோவலூர்த் தேவாரத்தும் வருதல் காண்க.] (க0எ)

நெஞ்சா னினைக்க வாக்கா லுரைக்க
வொண்ணுவொர் நீர்மை யெனவே
செஞ்சீர்கொ ணூல்கள் சொலியுஞ் சழக்கர்
தேறூர் வழக்கி லுழல்வர்
அஞ்சோறு துய்த்த லின்றே யழிந்த
வசனத்தை யும்ப லரியை
மஞ்சோ டருந்த வுனு நீர்மை யென்ன
மதியொன் றிரண்டெ னலையே.

முத்திமுத விலக்கணம் நெஞ்சா லிந்நீர்மைத்தென நினைக்கவும், வாக்கா லவ்வண்ணமே யுரைக்கவுஞ் சாத்தியபடாத வொரு தன்மையென்று மேலான சிறப்பினைக்கொண்ட சாத்திரங்கள் கூறியும் அங்ஙனம்மலத்தடிப்புடையார் தேறூர். (சலமின்றிச் சந்துரைப்பார் தர்க்கர் என்று பெரியோர் கூறியபடி) வீண்வாதம் பேசித் திரி

வர். பதமாகிய அன்னத்தை யுண்பதின்றிக் குழைந்துபோய கூழினை யழகோடுண்ண நினைக்குந் தன்மையேயென ஒன்றென்று கூறுதலை யும்; (அடுப்பின்கண்ணேயே யேற்றப்படாத பாத்திரத்திருக்கும்) வலிய அரிசியை அங்ஙன முண்ண நினைக்குந் தன்மையேயென இரண்டென்று கூறுதலையும் நீ நிச்சயிப்பாயாக.

[கேநோபநிஷதம் (ந தத்ர சக்ஷுர் கச்சதி ந வாக் கச்சதி நோ மந:) "நதத்ரசக்ஷுர்கச்சதி நவாக்கச்சதி நோமந:" என்றும், மாண் டூக்யோபநிஷதம் (அத்ருஷ்டமவ்யவஹார்யம்......சிவம்) "அத்ருஷ்டமவ் யவஹார்யம்......சிவம்" என்றுங் கூறுதலிற் செஞ்சீர்கொள் நூல்கள் சொன்னவா றறியக்கிடக்கின்றது. பொருள்:— "அந்தப் பிரமத்தி னிடத்தே கண் செல்வதில்லை: வாக்கு எய்துவதில்லை: நெஞ்சு அடைவதில்லை" எனவும், "கண்ணிற்குப் புலப்படாததும், வாக்கு வியவகாரத்திற் கெட்டாததுமாகிய சிவம்" எனவுமாம். ஏகவாதம் குழைகூழினையும், துவிதவாதம் அரிசியினையும், ஏகமுமன்று துவி தமுமன்றென்னும் அத்துவித சித்தாந்தம் பதமான சோற்றினையு மொக்குமென்பது கருத்து.

உம்பல் = வலி.] (கO அ)

முதனூ லிரண்டி லரனூ லசங்க
மொழியாத வின்ப முனு நீ
அதுவாவை யென்னு முடிபா யிருக்கு
மறவோ ருவந்த சுருதி
அதுநா னெனச்சொன் முடிபா யிருக்கு
மதனு லிரண்டு மழியாப்
பதமான சுத்த வனுபூதி முன்பு
பகையா தொருங்கு படுமே.

வேத சிவாகமங்களாகிய முதனூல்க ளிரண்டனுள் சிவாகமம் சமானரகித ஆனந்தானுபவத்தை நினைந்திருக்கும் நீ அதுவாவை யென்றுகூறுந் தீர்வையாக விருக்கும். தருமரூபிகளாகிய முனிவர்க ளங்கீகரித்தவேதம் அது நானென்று கூறுந் தீர்வையாகவிருக்கும். ஆகலின் அழியா நிலையினதாகிய சுத்தாத்துவித அனுபூதியின்கண் இவ்விரண்டும் விரோதமுறாமல் ஒருபொரு ளுடையனவாகும்.

[ நீ அதுவாவை - என்பது வடமொழியில் 'த்வம் ததஸி' என்பதிற் பொருந்தும். இது— சிவபரம்பொருளோடு அநாதி அத்துவித சம்பந்தியாயுள்ள நீ இனிச் சுவாநுபூதி ஞானத்தால் அப்பொருட்டன்மையை யடைவையெனும் அருத்தமுடைத்தாகலின் ஆகமமுடிபாகக் கூறப்பட்டது. அது நான் - என்பது 'அஹம்ப்ரஹ்மாஸ்மி' 'தத் த்வமஸி' 'அயமாத்மா ப்ரஹ்ம' என்னும் மகாவாக்கியப்பொருள்களிற் பொருந்தும். இவ்வாறு பொருந்துதலின் இது— வேதமுடிபாகக் கூறப்பட்டது. 'அவன் நான்' என்பதற்குரிய 'ஸோஹம்' என்பதும் 'அது நான்' எனும் பொருளிலுளதே. இதுவும் வேதாகமங்களி லுளதென்பது கூகூ - ன் உரையிற்போந்த சோகம்பாவனை வசனங்களிற் காண்க. பைங்கலருக்கு யாஞ்ஞவற்கியர் கூறும் மகாவாக்கியவிவரணம்— "பைங்கல: பப்ரச்ச யாஜ்ஞவல்க்யம் மஹாவாக்ய மநுப்ரூஹீதி।" என்னும் பைங்கலோபநிஷத் வசனத்தி னறியப்படுகின்றமையின், அங்ஙனமே மேற்குறிக்கப்பட்ட (கூர்மதகூவஸி) "த்வம் ததஸி" என்பதுங் கூறப்பட்டுளது. பொருள்:— 'நீ அது வாகின்றனை' எனவாம்.] (க0கூ)

நிகமங்க ளனு ளுயர்சாம வுச்சி
நிகழ்கின்ற தத்து வமசி
பகருஞ் சுருக்க மதுசோக மஃது
நாலே ழெனச்சொல் பதிநூல்
புகலந்தம் வாது ளத்தோய்வில் வந்த
புரைதீர் சிவோக மதுவும்
உகளங் கடந்த வோமென்ப தன்க
ணொருசேர நிற்ற லுணராய்.

வேதங்கள் நான்கினுட் சிரேட்டமுடையதாய்க் கொள்ளப்படுஞ் சாமவேதத்தில் மிளிர்ந்துகொண் டிருக்கின்ற "தத் த்வமஸி" என்னும் மகாவாக்கியமானது பகருஞ் சுருக்கம் 'ஸோஹம்'; அதுவும், ஆகமங்கள் இருபத்தெட்டென்று கூறுமொரு பதிநூலானது அவற்றின் அந்தத்திற் கூறும் வாதுளாகமத்தின் உத்தர பாகத்திலே வந்தது குற்றமற்ற 'சிவோஹம்'; அதுவும் உகளங் கடந்த 'ஓம்' என்னும் பிரணவத்தின்கண் ஒன்றுபட்டு நிற்றலை யுணர்வாயாக.

[ "மூன்று வேதங்களும் வாக்காதிகளே: வாக்கே இருக்குவேதம்: மனமே யஜுர்வேதம்: பிராணனே சாமவேதம்" எனும்

பொருள் பயக்கத்தக்கதாய் "த்ரயோவேதா ஏதஏவ வாகேவருக்வேதோ மநோயஜுர்வேத: ப்ராணஸ்ஸாமவேத: ।" என்று கூறப்படுவதாயுள்ள வசனம் பிருஹதாரண்யகோபநிஷத்தின் ௩ - ம் அத்தியாயத் திருக்கின்றமையின், அவ்வாக்கினும் மனத்தினும் பிராணன் சிரேட்டமாந்தன்மையின், அந்தச்சாமம் மற்ற வேதசாகைகளின் எண்கள் கீழ்ப்பட ஆயிரஞ்சாகை யுடைமையின் "நிகமங்களுனுள் உயர் சாமவுச்சி" என்றுரைத்தார். உச்சியென்றது அவ் வேத சாந்தோக்யோபநிஷத்தை. (க) இவ்வுபநிஷத்தின் (தத்வமஸி) "தத்த்வமஸி" என்னும் மகாவாக்கியமானது தத் = அது; த்வம் = நீ; அஸி = ஆகின்றனை யெனப்படு மாற்றானே 'அது நீ யாகின்றனை' எனும்பொருட் டாதலானும், அந்த அது - என்பது (உ) 'பெரிய ஞானமே சொரூபமாகவுள்ள பிரமம்' எனும்பொருளைப் பயக்கத் தக்க "ப்ரஜ்ஞாநம்ப்ரஹ்ம" என்னும் ருக்வேத மகாவாக்கியத்தினுள்ள பிரமமேயாதலானும், (௩) "அயமாத்மாப்ரஹ்ம" என்னும் அதர்வணவேத மகாவாக்கியமானது அயம் ஆத்மா = இந்த ஆன்மா; ப்ரஹ்ம = பெரியது எனப்படுமாற்றானே 'ஆன்மாவுக்கு அந்தரியாமியாயுள்ள பரமான்மாவே (அந்தப்) பிரமம்' எனும்பொருட் டாதலானும், (ச) "அஹம்ப்ரஹ்மாஸ்மி" என்னும் யஜுர்வேத மகாவாக்கியம் 'நான் (அந்தப்) பிரமமா யிருக்கிறேன்' எனும்பொருட்டாதலானும், ஒன்றையொன்று தொடர்ந்துநிற்கும் இம் மகாவாக்கியமெல்லாம் முற்செய்யு ளுரையிற்போந்த 'ஸோஹம்' எனுஞ் சொல்லாகச் சுருங்குகின்றமையானும் "தத்துவமசி பகருஞ் சுருக்கமது சோகம்" என்றுரைத்தனர். அயமாத்மா - என்பதற்கு இந்தச் சீவான்மா வெனும்பொருள் கொள்வுழியும் இருதிற ஆன்மாக்களின் வியாப்பிய வியாபக அனன்னியத்துவமே இம் மகாவாக்கியப்பொருளென்பதேற்படும்; சித்தாந்த விரோதமாவதன்று.

மந்திர ராஜமாகிய பஞ்சாக்கரத்திற் சிவய - என்னுமெழுத்துக்களுட் சிவ - என்னு மிரண்டும் அருளோடுங் கூடியுள்ள சிவனை யுணர்த்தி நிற்பனவாம். யோகதத்வோபநிஷதங் கூறுகின்றபடி ய - வாயுவின் பீஜமாய் நின்று பிராணனை யுணர்த்தவுள்ளதனாலும், "யகார புருஷோபவதி ।" என்று யஜுர்வேத தாரஸாரோபநிஷதமுரைக்குமாற்றானே புருஷன் சீவனெனவறியக் கிடக்கின்றதனாலும் அது சீவான்மாவை யுணர்த்தி நிற்பதாகும். இச் சீவன் 'அஹம்' என்னுஞ் சொல்லாற் குறிக்கப்படும். படவே சிவன் நானெனும்

பாவனைக்குரிய 'சிவோஹம்' என்ப தேற்படும். இம் மந்திரராஜம் ஆகம மகாவாக்கியமா யிருத்தலானும், "ஸூக்ஷ்மபஞ்சாக்ஷரம் ப்ரோக்தம் ஸ்தூலபஞ்சாக்ஷரம் ச்ருணு। நகாராதி யகாராந்தம் பஞ்சார்ணம் தத்ரவிந்யஸேத்॥" என்று வாதுளோத்தர சுத்தாக்ய மந்த்ரஜாதபடலங் கூறிச்சேறலானும் "வாதுளத்தோய்வில் வந்த புரைதீர் சிவோகம்" என்றுரைத்தனர். ஸ:, அஹம் என்னுஞ் சொற்களிரண்டும்; சிவ:, அஹம் என்னுஞ் சொற்களிரண்டும் வடநூல் விதியின்படி சந்தியாம்போது நிரலே 'ஸோஹம்' 'சிவோஹம்' எனவாம். இவ்விருதிற வாக்கியங்களும் ஓங்காரத்தி லொன்று படுதலின் "ஓமென்பதன்க ணொருசேர நிற்றலுணராய்" என்றும் அறிவுறுத்தார். இரண்டு வாக்கியங்களும் 'ஓம்' என்பதொலிக்க நிற்றலின் ஒன்றுபடுத லறியப்படுமால். பஸ்மஜாபாலோபநிஷதம் "சிவோமே அஸ்து ஸதாசிவோம்" என்றும், மேலை வாதுளோத்தர சுத்தாக்யப்ரணவபேத படலம் "ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்மவதந்தி சிவயோகிந:।" என்றும் பகர்தலையும் ஈண்டுக் கவனித்துக்கொள்க. "பரபிந்து: பராசக்திர் மஹாமாயாசகுண்டலீ।" என்னுஞ் சிந்திய விசுவ சாதாக்கிய வசனத்தின்படி ஓங்காரம் மகாமாயை யெனப்படுதலானும், அம்மாயை பிரகிருதி, அசுத்தமெனும் இருதிறமாயையையுங்கடந்து நிற்றலானும் "உகளங் கடந்த ஓம்" என்றுரைத்தார். பஞ்சாக்கரத்திலுள்ள நம - என்னுமிரண்டெழுத்தும் பாசமெனப்படு மென்பது "நம இதி த்வயக்ஷரம் ப்ரக்ருதிஸ்வரூபம்" என்னும் மேலைத் தாரஸாரோபநிஷத் வசனத்தானு மறியக்கிடக்கின்றது. கூறிப்போந்த 'தத் த்வமஸி' என்பதை மத்துவபாடியத்தில் நகாரத்தின் வழிவரும் அகாரமுற 'அதத் த்வமஸி' எனவாக்கிக்கொண்டு அருத்தஞ் செய்யப்பட்டிருக்கிறது. அவ்வாறு செய்வதற்குக் கிடைத்த ஆதரவு.— கங்காம்ருதம் என்னுந் தீர்க்கசந்திபதத்தைக் கங்கா + அம்ருதம் எனப்பிரிக்குமாறு அந்தச் சாந்தோக்யத்து ௬ - ம் பிரபாடகத்தில் ௯ - முறை பிரயோகிக்கப்பட்டிருக்கும் (ஸூத்ராதத்வஸி)"ஸஆத்மாதத்த்வமஸி" என்பதையும் ஸஆத்மா + அதத் த்வமஸி எனப் பிரித்துக்கொண்டமையே போலும். ஆவதேல், மகாவாக்கியவிவரணங் கூறுமிடத்தில் "தத் த்வமஸி த்வம் ததஸி" என்று பைங்கலோபநிஷத்தும், "ஓம் தத் த்வமஸி।" என்று சுகரஹஸ்யோபநிஷத்தும், "அஹம் ப்ரஹ்மாஸ்மி। தத் த்வமஸி। அயமாத்மாந்தர்யாமி" என்று அதர்வணவேத ஹயக்ரீவோபநிஷத்தும், "தத்த்வமஸீத்யேவ ஸம்பாஷ்யதே। அயமாத்மாப்ரஹ்ம" என்று

ருக்வேத பஹ்வ்ருஷோபநிஷத்தும் பகர்தற்கும், இவற்றை யனுச ரித்து வேறு சில சுருதிகள் கூறுதற்கும் விரோதமென அது மறுக்கப்படுமாகலின் அவ்வாறு பிரித்துப்பொருள்கோடல் சிறிதுஞ் சாலாதன்றே. மேற் கூறிப்போந்த மகாவாக்கியம் நான்கனுள் க - ம் வாக்கியம் சிரவணம் (=கேட்டல்) என்றும், உ - ம் வாக் கியம் மனனம் (=சிந்தித்தல்) என்றும், ந - ம் வாக்கியம் நிதித்தியா சனம் (=தெளிதல்) என்றும், ச - ம் வாக்கியம் சமாதி = (நிட்டை) என்றும் ரிபுகீதை சொல்லும்.

மந்திர விழிகொண்டு பார்த்து விடந்தீர்க்கும் மாந்திரிகன் கருடத்தன்மையுறுவான் தனது ஆன்மாவைக் கருடமந்திர தேவ தையாகச் சத்திய பாவனை செய்வது கருடோகம்பாவனையெனப்படு மாறு தன்னைப் பரமசிவமாகப் பாவிக்கு நிலையில் அவசமுற் றழுந்தி நின்று அப்பண்படைந்து பாச நீங்கிநிற்பதற்காகப் புரியும் அத்வைத உபாசனை சோகம்பாவனையென்றுஞ் சிவோகம்பாவனையென்றுஞ் சொல்லப்படும். அப்படிச் சத்தியமாகப் பாவிப்பது சரீரத்தையன்று; ஆன்மாவையே. அது தைலதாரையென்ன இடையறாது செய்யவே சித்திக்கத்தக்கது. (ஸவெ-யஜெ-ராகூத்தரஸுஷி) "ஸர்வேதர்ம்மா ஆத்மநஸ்ஸந்தி" என்னும் ஸர்வஜ்ஞானோத்தராகம வசனம்—"எல்லாத் தருமங்களும் ஆன்மாவுக்குள" எனும்பொருள் பயக் கின்றமையின், பாசத்தோடுகூடிப் பாசமயமாகவும், பதியோடுகூடிப் பதிமயமாகவும், எவ்வெம் மந்திர தெய்வங்களோடு கூடினும் அவ் வத்தெய்வ மயமாகவு மிருக்குமியல்புடைய ஆன்மாச் சார்ந்ததன் வண்ணமாந் தன்மைத் தெனப்படுவதாய்ப் பாவனையை யுறுதிப் படுத்துவதாயுளது. விட வேதனையுள்ள வொருவன் இக் கருடோகம் பாவனையைச் செய்து குணப்படுமாறுபோலப் பாசவேதனையுள்ள வொருவனுஞ் சோகம்பாவனையைச் செய்து குணப்படுதல் கூடுமாயி னும் அக் கருடோகம்பாவனையுள்ளோன் வேறொருவ னுற்ற விட வேதனையைத் தீர்க்குமாறுபோலச் சோகம்பாவனை சித்தித்துள் ளோனும் பாசமுடையானது பாசவேதனையை ஞானசாரியனாக நின்று தீர்த்தருள்வனென்பதும் இங்ஙனம் ஏற்புடைத்து. இக் கருத் தேபற்றி "விடநகுல மேவினுமெய்ப் பாவகனின் மீளுந்—கடனிவி ருள் போவதெவன் கண்." என்று திருவருட்பயனும் அருளுரு நிலையிற் கூறிற்று. துரியாதீத சன்னியாசிக்கும், அவதூத சன்னி யாசிக்கும் இப் பாவனையையே "துரீயாதீதாவதூதயோஸ் ஸோ

ஹம் பாவநா" என்று நாரதபரிவ்ராஜகோபநிஷத்தின் எ-ம் உபதேசம் விதிக்கின்றது. கூறிப்போந்த பாவனுசித்தியினலேயே விசுவாமித்திரர் வேறொரு சுவர்க்கத்தைச் சிருட்டித்தல், அகத்தியர் கடலைக்கவளீகரித்தன் முதலிய செய்கைகளைச் செய்யச் சாமர்த்தியமுடையராயின ரென்று நீலகண்டசிவாசாரியரும் (வ்யாகாரமாஜி) "ப்ரகாசாதி" என்றற்றொடக்கத்துப் பிரமசூத்திரபாடியத்தில் நிகழ்த்தியுள்ளார். இப்பாவனை இலக்ஷியமில்லாது நிகழ்வதில்லை. உவமானத்திலுள்ள அக் கருடோகம்பாவனை மேலைப் பாடியாசாரியராலும் "பேதஃ ஸ்புடோகருடமாந்த்ரிகயோரலீகந் தாதாத்ம்யபாவநமதாபி விஷம்ப்ரமார்ஷ்டி!" என்று அரதத்தசிவாசாரியராலும், "கருடனுருவங் கருதுமளவிற்—பருவிடந் தீர்ந்து பயங்கெடு மாபோற்—குருவி னுருவங் குறித்தவப் போதே—திரிமலந் தீர்ந்து சிவனவனுமே." என்று திருமந்திரமுனிவராலும், "ஒண்கருட—சானத்திற் றீர்விடம்போற் றூன்" என்று சிவஞானபோதமுனிவராலுங் கூறப்பட்டது.

வேதாந்த உபநிடத மகாவாக்கியமும், ஆகமங்களின் அந்தமாகவுள்ள வாதுள மகாவாக்கியமும் ஒற்றுமைப்பட்டுளவென்பது இச்செய்யுளின் கருத்தாகவிருக்கின்றது. பதிநூல் அந்தம் புகல் எனவியைத்துப் பொருள்கொள்க. அந்தம் என ஏழாவது தொகுத்துரைக்கப்பட்டது. வந்தது என நிற்கற்பாலது 'வந்த' என நின்றது.] (கக0)

கட்டளைக்கலிப்பா.

அவித்தி யாகத மான வுயிர்ப்புன்மை
யாக நானென் றெழுந்திறன் றூனிறந்
துவக்குங் காலவ் வுயிர்க்குநற் சாட்சியா
யுள்ள தைவிக மாதலு மாணவக்
கவிப்ப தான வுயிர்ப்புன்மை தோன்றவே
காட்டி நானென் றெழும்பகந் தானிறந்
தெவைக்கு மாண்டவ ஞஞ்சிவ மாதலு
மேச கன்றவொன் றென்றுகொ ளன்பனே.

அன்பனே! அவித்தையால் மூடப்பட்டிருக்குஞ் சீவனுக்குக் குற்றமேயாக நான்என்றெழும் அகங்காரவலியானது இறக்க, அங்ஙனம் சுகானுபவத்திருக்கும்போது சீவசாக்ஷியாயுள்ள பிரமமேயாதலும்; ஆணவக் கவிப்பாகிய வுயிர்க்குற்றம் வெளிப்படுமா

றதனைக்காட்டி நான் என்றெழும்பும் போதம் இறக்க, அங்ஙனம் பாச பசுக்களை ஆண்டருளுஞ் சிவசமத்துவமாதலுங் களங்கமற்ற ஓரேநிலையெனக் கொள்வாயாக.

[நான் என்பதே வடநூல்களில் அஹங்காரமெனப்படுகின்றது. ஞான சுகானுபவத்திற்கு இந்த அஹங்கார மிறக்கவேண்டுமென்றல் வேதமுடிபாயிருத்தலின் "நானென் றெழுந்திறன் முனிறந் துவக் குங்கால்" என்றார். அம் முடிபு "அகங்கார சுதனையும், திரவிய சகோதரனையும், மோக வீட்டையும், ஆசை மனைவியையும் விடும் போது முத்தனெனப்படுவன்; சந்தேகமின்று" "ஞானமயமான சுதனும் பிறந்தனன்" எனும் பொருளுற (அஹங்காரஸுதம் வித்தப்ராதரம் மோஹமந்திரம் । ஆசாபத்நீம் த்யஜேத்யாவத்தாவந் முக்தோ நஸம்சய: ॥) (ஜாதோ போதமயஸ்ஸுத:) "அகங்கார ஸுதம் வித்தப்ராதரம் மோஹமந்திரம்। ஆசாபத்நீம் த்யஜேத்யாவத்தாவந் முக்தோ நஸம்சய:॥" "ஜாதோ போத மயஸ்ஸுத:" என்று மைத்ரேயோபநிஷதங் கூறுதல்கொண்டு மறியப்படுகின்றது. போதமென்றது அனுபூதி ஞானத்தையே. மனத்திற் குறைவிடங் கண்டம், புத்திக் குறைவிடம் முகம், சித்தத்திற் குறைவிடம் நாபியென்று நவிலும் யஜுர்வேத சாரீரகோபநிஷதம் "அஹங்காரஸ்ய ஹ்ருதயம்" என்னும் வாக்கியத்தானே இவ் வகங்காரத்திற் குறைவிடம் இருதயமென் றியம்புகின்றது. புத்திக்குறைவிடம் முகமென்றதனானே அறிவுக்குறைவிடம் முற்பக்கத்து மூளையென்பது மறியக் கிடக்கின்றது. அகத்திருப்பது போதமாகலின் 'அகம்' என்றுரைத்தார். இப் போதத்திற்குப் புத்திதத்துவமே நிமித்தமென்பதாக, (புத்திர்போதநிமித்தம்) "புத்திர்போத நிமித்தம்" என்று மிருகேந்த்ராகமப்ரத்யாதிப்ரகரணங் கூறுகின்றது. இப்புத்தியிலிருந்து தோன்றியது அகங்காரமேயெனல் (அதவ்யக்தாந்தராத் புத்தேர் கர்வோபூத்கரணம் சித: । வ்யாபாராத்யஸ்யசேஷ்டந்தே சாரீரா: பஞ்சவாயவ: ॥) "அதவ்யக்தாந்தராத்புத்தேர் கர்வோபூத்கரணம் சித:। வ்யாபாராத்யஸ்யசேஷ்டந்தே சாரீரா: பஞ்சவாயவ:॥" என்னும் மேலைப்பிரகரணச் சுலோக வாயிலாக வறியப்படுகின்றது. பொருள்: — "முயற்சியுண்டாகப் புத்தியிலிருந்து (கர்வமாகிய) அகங்கார கரணம் பிறக்கின்றது: அதன் வியாபாரத்தினுற் சரீரத்திலே (பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன்

எனும்) ஐந்து வாயுக்களு மியங்குகின்றன" எனவாம். இவ்வாறு ஆகமங்கூறுதலின் "நானென் றெழும்பகந்தா னிறந்து" என்ற ஆசிரியர் வேதத்திற் கூறப்பட்ட அகங்காரமே ஆகமத்திற் கூறப்பட்ட போதமாக விருத்தலும், 'யானேயென நிற்பார்க்குப்போல அவன் நானெனப் பகுத்தறிந்து சிந்திப்பார்க்குஞ் சிந்திக்குஞ் சீவபோதம் (=நாடுமுளம்) முனைத்துத்தோன்றுதலால் அந்நிலை அத்துவிதமுத்திநிலை யாகாது; நானென வொன்றில்லையென நிற்கும் பூரணமுடையாரையே தனது திருவருளிலடங்கி நிற்கச்செய்து தானே முழுவதுமாய்க் காணப்பட்டு நிற்கும் இறை' எனும் பொருள் பயப்ப— "நானவனென் றெண்ணினர்க்கு நாடுமுள முண்டாத—ஞானென வொன் றின்றியே தானதுவாய்—நானெனவொன்—றில்லென்று தானே யெனுமவரைத் தன்னடிவைத்—தில்லென்று தானு மிறை." எனச் சிவஞானபோதம் ௧0-ஞ் சூத்திரவுதாரணத் துரைக்குமாற் றானும் அது நீங்குநிலையி லெய்துபய னென்றாயிருத்தலுங் கருதியே "ஏசகன்றவொன் றென்றுகொ ளன்பனே" என்று மறிவுறுத்தார். தைஜஸ அகங்காரத்திலிருந்தே மனம் தோன்றிற்றெனவும், அசுத்த மாயையிலுள்ள வித்தை ஆன்மஞான சத்தியைப் பிரகாசிக்கச்செய்யுந் தன்மைத்தெனவும் மேலே ஆகமங் கூறுதலால் மனம், அகங்காரமாகிய போதம், வித்தை என்னுங் கருவிப்பெயர்களி லெதனைக்கூறினும் அக்கருவிகளி னிற்கத்தக்க ஆன்மபோதமே அப்பெயர்ப்பொருளெனக் கோடல்வேண்டும். என்னை? ஆணவ இருளோடும் விராயதற்போதமே அப்பொருளாயிருத்தலின். அப்போதமே ஆன்மசுதந்திரமாயிருத்தலையும், அச் சுதந்திரம் நானெனவும் எனதெனவும் வியாபித்தவழியே சனன மரண ஏதுவான பாவபுண்ணியங்களேற்படுதலையுங் கணித்து அதனைத் தனக்கு அந்தரியாமியாய்த் திகழ்ந்துள்ள இறைவனுக்கு உள்ளபடி யொப்புவிக்கு ஞான்று அவனருளால் அச் சுதந்திரந் தலைப்படாமே சும்மாவிருப்பதெனுஞ் சுகநிட்டைவாழ்க்கை பொருந்துமென்னும்பொருளும் இங்ஙனுணரக் கிடக்கின்றது. என்னை? 'அஹம்' எனும் பதத்திற்குரியோன் சிவனென்பது கைலாஸசம்ஹிதையின் ௧௧-ல்—

(ஸுஹம்பதஸ்யார்த்த பூதஸ்ச க்த்யாத்மாபரமேஸ்வர: ।)

"அஹம்பதஸ்யார்த்தபூதச் சக்த்யாத்மாபரமேச்வரஃ।"

எனவரு வசனத்தானும், அதன்றமிழ்:— "அகம்பதத்தின் பொருள் சத்தியோடுள்ள பரமேசுவரன்" என்று கொளக்கிடத்த

லானும் பெறப்படுதலின். இங்ஙனம் (தஸ்யோபநிஷதஹமிதி) "தஸ்யோபநிஷதஹமிதி" எனும் பிருஹதாரண்யகோபநிஷத்தின் எ - ம் அத்தியாயத்து ரு - ம் பிராஹ்மண வாக்கியமுங் கருதத்தக்கது. இதன்பொருள்:— "அந்தத்தேவனது இரகசியநாமம் அஹம்" எனவாம். போந்த ஆகமம் மனத்திற்கு மூலமான அகங்கார வியாபாரத்தினற் பிராணாதிவாயுக்க ளியங்குகின்றனவென்று கூறினமையானும், அனுபவமு மவ்வாறுண்மையானும் மனநிரோதம் அல்லது போதநிரோத நிலைக்களத்தே அந்தப் பிராணவாயு முதலியனவும் இயங்கா வின்பநிட்டை கூடுமென்பதை யுய்த்துணர்பவர் இந்நிட்டை மனத்தைக் கடந்ததாய், அகங்காரத்தைக் கடந்ததாய், வித்தைபைக் கடந்ததாய், கன்மமல விருத்தியைக் கெடுத்து ஆணவமலத்தையும் வெல்வதாய் நிகழுமெனவு நிச்சயிப்பரால். நானெனும் அகங்காரம் ஞாதிருவெனப்படும். எனதெனும் மமகாரத்தில் ஞானம் ஞேயமெனு மிரண்டுமடங்கும். இவற்றினை முறையே காண்பான், காட்சி, காட்சிப்பொருளெனுந் திரிபுடி யென்ப. இவ் விவரம் ஸர்வஸாரோபநிஷத்தில் "ஜ்ஞாத்ரு ஜ்ஞாந ஜ்ஞேயாதா வாவிர்ப்பாவ திரோபாவ" என்று குறிக்கப்பட்டது. யாதொன்றைச் சுட்டியறியு நிகழ்ச்சிக்குரிய இத்திரிபுடியானது சிவம் வெளிப்படும் அனுபூதியில் அச் சிவமயமாய் நிற்பார்க்கில்லை யென்பதனையே "கண்க ளிரண்டு மவன்கழல் கண்டு களிப்பன வாகாதே" என்றற்றொடக்கத்துத் திருப்பத்து வாயிலாகத் தமிழ்மறையும் விளக்கிற்று.

புன்மை=குற்றம்; பிங்கலநிகண்டு காண்க. இச்செய்யுளில் இறக்க எனற்பாலதாம் வினையெச்சம் "இறந்து" என இரண்டிடத்து வந்துளது. இன்னணம் வரலாமென்னும் விதி—"சொற்றிரியினும் பொருடிரியா வினைக் குறை" என்னுஞ் சூத்திரத்தானமைக்க. இன்னும் வரினும் ஆண்டு மிவ் விதியே யமைக்க.] (கககூ)

இச்சைக் காமனப் போதகந் தானிறந்
தேக மாயறி வுக்கறி வாய்நிலா
வச்சி வத்தினை நீங்கலின் னீர்மையு
மாடுஞ் சீவத்து வந்தணந் தங்கணோர்
அச்ச மின்றறி வுக்கறி வாயுவந்
தறிவித் தாலறி சிற்றறி வாச்சுடர்
சொச்ச வத்துவை நீங்கலின் னீர்மையுந்
துகடு றந்தவொன் றென்றுகொள் செம்மலே.

மகனே! இருதயதாமரை மலரின்கண்ணே இச்சைக்கேதுவா யுள்ள அகங்காரம் இறக்க, அங்ஙனமே ஒவ்வொரு சீவான்மாக்களி லுமுள்ள அறிவுக்கெல்லா மறிவாகியும், அவ்வாறு தனித்தனியாக நின்றும் ஏகமேயாகியும் பிரகாசிக்கும் அந்தச் சிவத்தினைவிட்டு நீங்காதுநிற்குந் தன்மையும்; மனமாகநிகழ்ந்து அசையுந்தன்மை யுள்ள சீவபோதங்கெட, அங்ஙனமே தனதான்மவறிவுக்கு அறிவா கியும் உவந்து அறிவித்தாலறியுஞ் சிற்றறிவுடைய தன்னிடத்து மூலாதாகியும் பிரகாசிக்குஞ் சுத்தசேதன சிவத்துடன் அவ்விடத்தில் நாமொரு சீவனென்னும் அச்சமின்றி அனன்னியமாய் ஆனந்தானு பவத்திருக்கும் ஸ்திதியும் ஒரேநிலையெனக் கொள்வாயாக.

["தெளிவுற்ற ஆன்மா ஆன்மாவிலிருந்துகொண்டு நாசமில் சுகத்தை யடைகின்றனன்" எனும் பொருளைப் பயப்பதாய் க0சு - ன் உரைக்கட் பிரமாணிக்கப்பட்டதாயுள்ள சுருதிவசனத் தையே ஈண்டு "அச்சிவத்தினை நீங்கலில் நீர்மை" என்றதற்கும், கூகூ - ன் உரையீற்றிலும் க0சு - ன் உரையிலும் "சிவோஹமஸ்த்வ ஹம்" "விமுக்தஃ" என்பன தொடக்கமாகப் பிரமாணிக்கப்பட்ட ஸர்வஜ்ஞானோத்தராகம வசனங்களையே ஈண்டுச் "சொச்சவத்துவை நீங்கலில் நீர்மை" என்றதற்குங்கோடல் சாலும். போந்த கககக - ற் றெரிக்கப்பட்ட சுவானுபவத்தன்மைகளே இதனினுந் தெரிக்கப்பட் டன. இவை அவற்றிற்கு வேறுபோல வாக்கிய பேதங்களிற் காணப் படலானே வேறாகா; ஒருமுடி புடையபவென விளக்கினராகலிற் கூறியது கூறலென்னுங் குற்றமன்று. அனன்னிய ஆனந்தானுபவத் தையே "நீங்கலில் நீர்மை" என்றுரைத்தார். அசுத்த நில நோக் காது ஆகாயத்திற் பார்வை படர்ந்தவழி மனத்திற்குறு மகிழ்ச்சி யானே அவ்வாகாய மெத்துணையு மழிதலுறா திருத்தல்போல இவ் வானந்தமுங் கணித்தற்குரிய தொன்றாகலிற் சுவைக்கப்படுபொருள் கரைந்தழியுமாறு ஞானச்சுவைக்குரிய சிவமுமழியுங்கொலோவெ னுங் கடாவொன் றெழுப்புதற்கும் இங்ஙனிடனின்று. உண்டு கழிக் கப்படுவதன்றோ அழியும்; பேரின்பம் அற்றன்றே.

மனப்போது = இருதய தாமரைமலர்; "பொழுதின் மலர்வுடையது போது". சொச்சவத்து = சுத்தசேதனப்பொருள். (ஸஹஃ) ஸ்வச்சஃ எனும் வடசொல்லின் விகாரமே சொச்சம்; சுத்தம், தெளிவென்னும் பொருட்டு.] (ககஉ)

இந்த ஞாயமிவ் வாறிருக் கப்பசு
 வேறு வோன்பதி நூலினர் சாகையைப்
பந்த நூல்பசு நூல்கன்ம நூலெனப்
 பன்ன லும்மறை யோர்பதி நூலினை
அந்த மாகிய மோகன மென்னலு
 மவ்வி ரண்டினும் பூருவ பக்கமாய்
வந்த வென்பர்கண் ணுளர் சடந்தமும்
 வழுவொ ழிந்தவொன் றென்றுகொண் மைந்தனே.

வேதாகமங்களில் வெளிப்படும் இந்த நியாய மிவ்வண்ண மிருக்க, இடபவூர்தியின் நூல்களாம் பதிநூல்களுக் குடையராகிய சைவர்—வேதங்களைப் பாசநூலென்றலும், பசுநூலென்றலும், கரும நூலென்றலும்; வேதியர்— பதிநூல்களாகிய சிவாகமங்களை அழகான மோகனநூலென்றலும் ஆகிய இவைகளெல்லாம் அவ்விரண்டு முதனூல்களிலும் பூருவபக்கமாக வேறுபட்டவைகளே யென்று ஞானக்கண்ணினர் கூறுவர். ஆறந்தங்களுந் தோடமகன்ற ஒரே நிலையாமென்று சீடனே! அறிதி.

[அநித்திய சுவர்க்க போகங்கட்குரிய வேள்வி முதலியவற்றை விதிக்கும் வேதத்தின் கர்மகாண்டமே அவ் வேதத்தின் பூர்வபக்கமாகும். சுரைக்குடந் தாபித்தல் முதலிய அவைதிக கர்மங்களைக் கூறும் வாமம், பாசுபதம், சோமம், இலாகுளம், பைரவமென்னும் வேதவிருத்தமான ஆகமங்களே வேதவிருத்தமல்லாத காமிகாதி இருபத்தெட்டுச் சுரௌதாகமங்களின் பூர்வபக்கமாகும். இந் நிச்சயத்தினை—

" நிர்ம்மிதம்ஹிமயாபூர்வம் ச்ரௌதம்பாசுபதம்சுபம் ।
குஹ்யாத்குஹ்யதமம்ஸூக்ஷ்மம் வேதஸாரம்விமுக்தயே ॥
ஏஷபாசுபதோயோகஸ் ஸேவநீயோமுமுக்ஷுபி ꞉ ।
அந்யாநிசைவசாஸ்த்ராணி லோகேஸ்மிந்மோஹநாயவை ॥
வேதவாதவிருத்தாநி மயைவகதிதாநிது ।
வாமம்பாசுபதம்ஸோமம் லாகுளஞ்சைவபைரவம் ॥
நஸேவ்யமேதத்கதிதம் வேதபாஹ்யந்ததேதரத் । "

என்னுங் கூர்மமஹாபுராண உத்தரபாக வசனங்களானும்,

" ச்ரௌதாச்ரௌதவிபேதந த்விவிதஸ்துசிவாகம ।
ச்ருதிஸாரமயச்ச்ரௌதஸ் ஸபுநர்த்விவிதோமத ꞉ ॥
ஸ்வதந்த்ரஇதரச்சேதி ஸ்வதந்த்ரோதசதாபுரா ।
ததாஷ்டாதசதாபச்சாத் ஸித்தாந்தஇதிகீயதே ॥ "

என்னும் ஸநத்குமாரஸம்ஹிதா வசனங்களானு முணர்க. முறையேபொருள்:—"மறைவினும் மிகுமறைவாய்ச் சூக்குமமாய் வேதசாரமாய்ச் சுபமாயிருக்குஞ் சுரௌதபாசுபதம் (உருத்திரப் பெயருடைய) எம்மாற் செப்பப்பட்டது : இப்பாசுபதம் முமுக்ஷுக்களாற் சேவிக்கவுள்ளது : வேத விருத்தமான வாமம் பாசுபதம் சோமம் இலாகுளம் பைரவமென்னும் அன்னிய சாத்திரங்களும் உலகின்கண் மோகனஞ் செய்யு நிமித்தம் எம்மாலே யியற்றப்பட்டன : வேத பாகியமாகக் கூறப்பட்டது சேவிக்கத்தக்க தன்று" எனவும், "சிவாகமம்—சுரௌதம் அசுரௌதமென இருதிறப்படும்: சுருதிசாரமாயுள்ளதே சுரௌதம் : பின்பு அது சுவதந்திரம் இதரமென இருதிறப்படும் : அவற்றுட் சுவதந்திரமாயுள்ளது முன்னே ௧0 - ம் பின்னே ௧அ - மாகச் சித்தாந்தமென்று தெரிக்கப்படும்" எனவுமாம். இந்தச் சித்தாந்தம் "வேதாந்தார்த்தமிதம்ஜ்ஞாநம் ஸித்தாந்தம் பரமம்சுபம்।" என மகுடாகமத்திற் கூறப்பட்டுளது. தமிழ்:—"இவ் வேதாந்தப் பொருளாய ஞானம் பரமசுபமாகிய சித்தாந்தம்" எனவாம். பாசுபத ப்ரஹ்மோபநிஷத மென்பதொன்று அதர்வணவேதத்தைச்சார்ந்ததாயிருத்தலின் அதுவும் வைதிகபாசுபத முளதென்பதைக் காட்டுவதாகும். (ஆமஸ்யாவிரோதேந ஊஹநம் தர்க்க உச்யதே।) "ஆகமஸ்யாவிரோதேநஊஹநம் தர்க்கஉச்யதே।" என்று யஜுர்வேத அம்ருதநாதோபநிஷதங் கூறுதலும் இங்ஙனங் கருதத் தக்கது. "பொருள்:— "ஆகமங்களுக்கு விரோத மில்லாமல் ஊகிப்பதே தர்க்கமாகும்" எனவாம். "உத்பத்த்யஸம்பவாத்" என்னுஞ் சூத்திரத்தாற் பாஞ்சராத்திராகம மார்க்கத்தைக் கண்டித்த வியாசமாமுனிவர் அங்ஙனமே வேதவிருத்தமான பாசுபதாகமத்தையும் 'பதிபொருத்தமின்மையின்' என்னும் பொருளினுள்ள "பத்யுரஸாமஞ்ஜஸ்யாத்" என்னுஞ் சூத்திரத்தாற் கண்டிப்பாராயினர். இவ்வித வேதவிருத்தமான ஆகமங்கள் கௌதமமுனிவர் மீது அநியாயமாகப் பசுக்கொலையினை யேற்படுத்திய சில கிருகத்தாச்சிரமிகளுக்கு அந்தக் கௌதமனரிட்ட சாபம் அனுபவ மாதற்பொருட் டியற்றியளிக்கப்பட்டனவென்று கூர்ம மஹாபுராண பூர்வபாகமும், ஸ்காந்த மஹாபுராண ஸூதஸம்ஹிதாவுஞ் சொல்லுகின்றன.

காமிகாதி இருபத்தெட்டுச் சிவாகமங்களுக்கும் வேறாயுள்ள ஆகமாதிகளைப் பூர்வபக்கமாகக் கொள்ளவேண்டுமென்று கூறியுளதை "வேதநூல் சைவநூலென் றிரண்டே நூல்கள் வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்கள்" என்றும், "பிறநூல் திகழ்பூர்வஞ்

சிவாகமங்கள் சித்தாந்த மாகும்" என்றுஞ் சிவஞானசித்தியாரில் வரூஉம் வாக்கியங்களும் வலியுறுத்துகின்றன. சடந்தம்=ஆறந்தம்; விவரம்:—வேதாந்தம், சித்தாந்தம், நாதாந்தம், போதாந்தம், யோகாந்தம், கலாந்தமாமெண்பதை "வேதத்தி னந்தமு மிக்க சித்தாந்தமு—நாதத்தி னந்தமு நற்போத வந்தமு—மோதத் தகுமெட்டி யோகாந்த வந்தமு—மாதிக் கலாந்தமு மாறந்த மாமே." என்று பத்தாந் திருமுறையாகிய திருமந்திரங் கூறுமாற்று னறிக. இங்கே சித்தாந்தமென்றது மேற்போந்தவாறு வடமொழிகளானுந் தென்மொழிகளானுங் காமிகாதி சிவாகமங்களென வறியக்கிடக்கின்றது. வேத + அந்தம் = வேதாந்தமெனப்பட்டபடி ஸித்த + அந்தம் = ஸித்தாந்தமெனப்பட்டது. இத்திற வடமொழிப் புணர்ச்சியைத் தீர்க்க சந்தியென்ப. அந்தம் = முடிவு. (ஷிஜ நிவ்ரு-த்தஃ) "ஸித்தநிர்வ்ருத்தஃ" என்று நிகண்டு - அமரஸிம்ஹம் கூறுமாற்றானும்; நிச்சயமெனும்பொருளைப் பயக்கத்தக்க நிர் - என்னும் அவ்வயத்தோடுள்ள வ்ருத்த சப்தம்—அதீதம், செய்புளெனப் பொருள்படுமாற்றானும் மேலான நிச்சயங்களின் முடிவு, நிர்ணயஞ் செய்யப்பட்ட நூல்களின் முடிவெனவாம். சுருங்கச்சொல்லின், தேர்ச்சியான முடிவெனவாம். "ஸர்வவேதாந்தஸித்தாந்தக் ஸர்வசாஸ்த்ரார்த்த நிர்ணயம்। அநேகஜீவஸத்பாவ மேகஜீவாதிநிர்ணயம்॥ எனுந் தேஜோபிந்தூபநிஷத் வசனத்தானும் இந் நியாய மறியக்கிடக்கின்றது. பூர்வபக்கங்களை நோக்கி யிவ்வாறு கூறப்பட்டதென்பதையும் காட்டப்பட்ட உபப்பிருங்கண வசனங்களே காட்டும். இந் நிச்சயமறியாதார் 'ஸித்தம்' என்பதற்கும் 'ஷித்தம்' என்பதற்கும் பேதந் தெரியாமே சித்தத்தினன் முடிவு செய்யப்பட்டது சித்தாந்தம்; அது வேதாந்தம்போன்ற வுண்மைபதாமா? என்றரற்றிக் கடாவெழுப்புதலும் பல்லோரறிந்த விடயமே.] (கசங)

இந்தச் சீவன் கெடாவந்தத் தேவனே
ரேறுஞ் சேவடி யெய்துதன் முத்தியென்
றுன்றன் முன்னுவல் வார்க்கினி யவ்வடி
யோத ருஞ்சிவ னைப்பிரி யாதவா
நந்த மாமரு ளென்றறி வாளர்நா
ணவிலு மாதலி னுலதை யெய்தினல்
அந்தச் சின்மய பூரண வத்துவை
யடைந்த தன்மையு மாமென் றறிப்பையே.

இந்தச் சீவன் அந்தச் சீவநிலை கெட்டு (ச் சிவத்தன்மையுறன் முத்தியன்று; சித்தாந்த சாத்திரங் கூறுமாறு) இறைவனுடைய அழகு மீக்கொண்டுள்ள செவ்விய திருவடியெய்துதலே முத்தியென்று உனக் குரைப்போர்க்கு, அந்தத் திருவடியானது அளவிட்டுரைத்தற்கரிய சிவஞானவிட்டுப் பிரியாத ஆனந்தமாகிய அருளென்று அந்த ஞானவான்களுடைய நூல்கள் கழறுமாதலின் அத் திருவருளாகிய திருவடியை அனுபூதிவாயிலாக வடைந்தால் அதற்குரிய அகண்டஞான சொரூபமுடைய பரம்பொருளை யடைந்த தன்மையுமாம் என்று மெய்யுணர்ந்த நீ இனிக் கூறுவாயாக.

[ "யானென தென்னுஞ் செருக்கற்று அவனது சீபாதத்தை யணையு மாகலான்" என்று சிவஞானபோதங் கூறுதல் கண்ணுற்றுரையே "சேவடி யெய்துதன் முத்தியென்று உன்றன் முன்னுவல்வார்" என் றெடுத்துக்கொள்வா ராயினர். அச் சீபாதமாகிய அடி அருளெனப்படுதல்— "காலுந் தலையு மறியார் கலதிகள்— காலந்தச் சத்தி யருளென்பர்" எனத் திருமந்திர முரைக்குமாற்றானுணரற் பாற்று. அருளைச் சிவபரம்பொருளின் அடியாகக் கூறல் உபசார வழக்கே.

கெடா - இறந்தகால வினையெச்சம். உன்ற - என்பதற்கு 'இந்த' முதலியன இனவெதுகை. 'ஆநந்தம்' வடநூன் முடிபு. மகிழ்ச்சியெனும் பொருட்கு நந்தம் - எனும் வடமொழியோடு ஆ - எனும் உபசர்க்கங்கூடும்வழி ஆநந்தம் என்பதேற்படும்; இன்பமெனும் பொருட்டு.] (கக௪)

ஆத்து மாக்கள் பரத்தொடு கூடியோ
 ரழுங்க லின்றுள வெள்ளி லகண்டமில்
கேத்தி ரம்பல வங்குள வோவெனுங்
 கேள்வி நூறக் கிளக்குவ லென்னெனில்
ஊத்தை யார்மட் கடங்களின் காலெலா
 மோர்விண் ணெய்திடல் போலொரு பேதமின்
றேத்து மைந்தொழி லின்றி யகண்டமா
 மின்ப மேநுகர்ந் துய்வதஃ தாமரோ.

ஆன்மாக்கள் பரம் பொருளோடு பிரிவின்றி நிற்கு நிலையை அனுபவத்திலெய்தித் துக்கமின்றியிருக்குமென்று கூறில், அப் பரம்

பொருளில் அவைகள் தனித்தனியிருக்க வெவ்வே றிடங்களு மிருக்குமோ வென்னுங் கேள்வி வருமாகில் அந்த ஆட்சேபத்தை யொழிக்க நான் கூறுவது இங்கே யாதென்னின்,— அழுக்கோடு கூடிய மட்கடங்களிலுள்ள காற்றெல்லாம் ஒரே ஆகாயத்தின்கண் ணடங்கல்போல எவ்வகைப் பேதமும் இல்லாதனவாய்ப் புகழத்தக்க பஞ்சகிருத்தியங்களுள் எதனையுஞ் செய்யுஞ் செயலின்றி அகண்ட மாம் ஆனந்தானுபவத்தழுந்தி யிருப்பதாகிய ஆன்மலாபமே அது வாகும்.

[ இச் செய்யுணிச்சயம்— (ஜீவந்முக்தபதம் த்யக்த்வா ஸ்வதேஹே காலஸாத்க்ருதே । விஶத்யதேஹமுக்தத்வம் பவநோஸ்பந்ததாமிவ ॥) "ஜீவந்முக்தபதம் த்யக்த்வாஸ்வதேஹே கால ஸாத்க்ருதே । விசத்ய தேஹமுக்தத்வம் பவநோஸ் பந்ததாமிவ ॥" என்னுஞ் சுருதிப் பிர மாணமாயிருக்கின்றது. பைங்கலோபநிஷதச் சுலோகமாகிய இதன் றமிழ்:— "காற்று அசைவற்ற தன்மையை யடைதல்போலத் தனது தேகம் காலவயப்பட்டவுடன் சீவன்முத்தி தசையை நீங்கி விதேக முத்தித்துவத்தை யெய்துகின்றனன்" எனவாம். 'சுவப்பிரகாசத்து வம், வியாபகத்துவம், சர்வஞ்ஞத்துவ முதலிய குணங்களினுற் சிவ சமத்துவமாம் முத்தான்மாக்களி னனுபவம் அத்துவித சிவானந் தானுபவ மொன்றற்கேயுரித்து; இறைவனுடைய படைப்புமுதலிய ஐந்தொழில்களி லெதுவுமுரித்தன்று' என்பார் "ஏத்துமைந்தொழி லின்றி யகண்டமா மின்ப மேநுகர்ந் துய்வதஃ தாம்" என்றார். இத்தீர்வை— 'செம்பிரதகுளிகை' என்றற் றொடக்கத்துச் செய்யு ளில் "உம்பர்பிரா னுற்பத்தி யாதிகளுக் குரியன் உயிர்தானுஞ் சிவானுபவ மொன்றினுக்கு முரித்தே" என்று சிவஞானசித்தியார் தெரிக்குமாற்றானும் பெறப்படுகின்றது. சஎ - ன் உரைக்கண் (யதாபஶ்ய: பஶ்யதே) "யதாபச்ய: பச்யதே" என்றற் றொடக் கத்ததாய்க் காட்டப்பட்ட முண்டகோபநிஷத வாக்கியத்தானும், "போகமாத்திரத்திலே சமத்துவம் என இலிங்க முண்மையானும்" எனும் பொருளைத்தரும் (போகமாத்ரஸாம்ய லிங்காச்ச) "போகமாத்ர ஸாம்ய லிங்காச்ச" எனும் பிரஹ்மஸூத்ர வாக்கியத்தானும் இது வலியுறுகின்றது. "முத்தன் சிவசமமாகின்றனன்" எனுமருத்தத் தில் (முக்தஶ்ஶிவஸமோ பவேத்) "முக்தச்சிவஸமோபவேத்" எனச் சைவமஹாபுராண வாயுசங்கிதையின் பூர்வபாகத்து உஅ, உஉ - ல் வரு வசனம் போந்த முண்டகோபநிஷத வாக்கியத்திற்கு உபப்

பிருங்கணமாயுமிருக்கின்றது. "சிவனைப்போ லிருக்கிறன்" எனும் பொருளின் முடிவதாய் எஉ - ன் உரையிற் காட்டப்பட்டதாயுள்ள பௌஷ்கராகம வசனமும் இம்பர்க் கருதத் தக்கது.

இத்தீர்வை—(ஊமாஹ்லோகாநாமீகாமரூபுநஷஞசரநு। ஊதத்ஸாமோயநாஷெ ।) "இமாங்லோகாந்கீ காமரூப்யநுஞ்சரந்। ஏதத் ஸாமகாயந்நாஸ்தே।" என்னுந் தைத்திரீயோபநிஷதப் பிருகுவல்லியின் கO - ம் அநுவாக வசனம்— "(அறிந்தவன்) தான் விரும்பின வுடனே கிடைக்கும் அன்னத்துடனும் உருவத் துடனும் ஏய்ந்து இவ்வுலகிற் சஞ்சரித்துக்கொண்டு யாண்டுஞ் சமமாயுள்ளதைப் பாடிக்கொண் டிருக்கின்றனன்" எனும்பொருளைத் தருதலானும், இப்பொருளிற் சிவபிரானுக்குச் சிருட்டி முதலியன இயற்றற்கு எவ்வதிகாரமுளதோ அவ்வதிகாரம் பரமுத்தனுக்கும் வரையறுப்பின்றி யுளதாமென்பது பெறப்படுதலானும் விரோத முறுதுகொல்லோ வெனின்,— அறியாது கடாயினுப்! இவ்வசனம் சீவன்முத்தன் விடயமாயுள்ளது. சீவன்முத்தர்களிற் சிலர்க்குப் பல வுருவங்கொள்ளுஞ் சித்தியுஞ் சில பொருள்களை யுண்டுபண் ணுஞ் சித்தியுந் திருவருளா லுள. * ஒன்றரை யங்குலத்தி னின்று தன்னைத் தரிசிப்பதற்கு முன்னே மூன்றங்குலத்தி னிற்கும்போது அச் சித்திகளுண்டாம். அவை— சங்கற்ப மாத்திரையாற் செய்யும் ஈசுரனுடைய பெருந்தொழில்களிலுள்ள பிரதம மகாசிருட்டி போல்வனவல்ல. விசுவாமித்திரர் செய்த சிருட்டியும், பிறவும் அவ்வீசுர நியதியி லுளவென்றற்குரிய பிரமாணங்களும் சகூ - ன் உரையகத்தே வந்துள்ளன. இவ்விடயத்தில் தினசிருட்டிப் பிரமனும், அவாந்தர சிருட்டி விட்டுணுவும் மகாசிருட்டி உருத்திரனும் காரணராகமாட்டார்கள். இதனை, "ப்ரஹ்மவிஷ்ணுருத்ரேந்த்ராஸ்தே ஸம்ப்ரஸூயந்தே ஸர்வாணிசேந்த்ரியாணி ஸஹபூதைர் நகாரணம் காரணநாம்த்யாதா காரணந்து த்யேயஸ்ஸர்வைச்வர்ய ஸம்பந்நஸ்ஸர்வேச்வரச்சம்புராகாச மத்யே" என்னும் அதர்வசிகோபநிஷத் வசனத்தானுமறியலாம். பொருள்.— "பிரமன், விட்டுணு, உருத்திரன், இந்திரனாகிய இவரெல்லாம் படைக்கப்படுகின்றனர். இந்திரியங்களெல்லாம் பூதங்களோடு பிறப்பிக்கப்படுகின்றன. ஆகலின் அவர்களும் அவைகளுங் காரணமில்லை. தியாதாவாகிய அவர்களாலே

* இவ்வங்குல விவரமெல்லாம் குமரகுருதாச்சுவாமிகள் பாடல் ஆநந்தக்களிப்பிற் காணலாம்.

தியானிக்கப்படுந் தியேயனும், சருவைச்சுவரிய சம்பன்னனும், சருவேச்சுவரனும், சம்புசத்தவாச்சியனும், பரமாகாச மத்தியத்தி லிருப்பவனுமான சிவனே காரணன்" எனவாம். பிரமாதி சதா சிவாந்த அதிகாரிகளுடைய மண்டல போகங்களையு மடைவரென அந்தச் சீவன்முத்தரை யுயர்த்திக் கூறுமிடத்தும் அவர் யோக சித்தியாற் பெற்ற சிவசாரூப்பியகதியை யுடையரெனப்படுவரேயல் லால் ஞான சிவசாயுச்சியகதியை யுடையரெனப்படார். ஞான சாயுச்சியமுடையார் எல்லாக் கன்மங்களும் எண்ணமு மிறந்து நிற்குஞ் சமாதி வழிபாகச் சிவசமமடைந்தாராகலின் அவர்பாற் சிருட்டிமுதலிய ஈசுரகிருத்தியங்க ளுளவென்பார்கூற்றுத் தன்றாய் மலடி யென்பான் கூற்றேபோலும். சிவசமம் முன்னர்க்கூறப்பட்டவளவே யாம். அற்றாகலினன்றே சுவேதாச்வதரோபநிஷதம் (𑌪𑌰𑌮𑌂 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌂......𑌨 𑌤𑌤𑍍𑌸𑌮𑌶𑍍𑌚𑌾𑌭𑍍𑌯𑌧𑌿𑌕𑌶𑍍𑌚) "பரமம்மஹேச்வரம்...நதத்ஸமச்சாப் யதிகச்ச" என்றும், சரபோபநிஷதம் (𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌤𑍁𑌲𑍍𑌯𑍋𑌽𑌧𑌿𑌕𑍋 𑌨𑌹𑌿) "தஸ்மாத்துல்யோதிகோநஹி" என்றுங் கூறுகின்றன. முறையே பொருள்:— "அம் மகேசுவரனுக்குச் சமமானவரும் அதிகமானவரும் இலர்" எனவும், "(ஈசன் மேலானவன்) ஆகலின் அவனுக்குச் சமமும் அதிகமுமில்லை" எனவுமாம். இவற்றால் அனேகேசுரவாதங் கண்டிக்கப்படுதலு முணர்ந்தக்கால், உருவ சமத்துவத்தாலேனும், அருவ சமத்துவத்தாலேனும் முத்தர்கள் ஈசுரகிருத்தியங் களைச் செய்துகொண்டிருப்பரென்பதனானே அனேகேசுரவாதங் கற்பிக்குஞ் சமவாதம் அநவஸ்தை (=முடிவுபேறின்மை) யெனுந் தோடத்துட்படுமென்பது தெள்ளிது. அதிகாரமானது முத்தி விக்கினஞ் செய்வதாயுளதெனுஞ் செய்தி ௭௭-ன் உரையிற் காட்டப்பட்ட 'ஏதேஷாம்' என்றற்றொடக்கத்துப் பௌஷ்கராகம வாக்கியங்களிற் பெறப்படுதலானே அவைகளும் மேலைச் சமவாதத்தை மறுப்பனவாயின. போந்த தைத்திரீய வசனத்தில் "சஞ்சரித்துக் கொண்டு யாண்டுஞ் சமமாயுள்ளதைப் பாடிக்கொண்டிருக்கின்றனன்" எனும்பொருளு மிருத்தலின் உண்மை வெளிப்படுமாறு முதல்வனைப் பாடுதல், நூலருளிச்செய்தன் முதலிய உலோகோபகாரங்களுஞ் சீவன்முத்தர்பா லுளவென்பதூஉம் உணரக்கிடக்கின்றது. ஆகலினன்றே "சிவமானவாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ" என்று மாணிக்கவாசகப்பெருமானு மறிவுறுப்பா ராயினர். சிவமாதல் = சிவ சமமாதல்.

நாரதபரிவ்ராஜகோபநிஷத்தின் ரு - ம் உபதேசத்திற் சன்னியாசிகளுள் ஆதுரன் (=மரணகாலத்திற் சன்னியாசம் பெற்றுக்கொள்வோன். ஆதுரம்=நோய்) ஆனவனுக்குங் குடீசகனுக்கும் பூலோக புவர்லோகங்களும், பஹூதகனுக்குச் சுவர்க்கலோகமும், ஹம்ஸனுக்குத் தபோலோகமும், பரமஹம்ஸனுக்குச் சத்தியலோகமும் அடையு நிலைக்களங்களாமென்று கூறுமிடத்தில் "துரீயாதீதாவதூதயோஸ் ஸ்வாத்மந்யேவகைவல்யம் ஸ்வரூபாநுஸந்தாநேந ப்ரமரகீடந்யாயவத்" என வருவசனம் "துரியாதீத சன்னியாசிக்கும், அவதூத சன்னியாசிக்கும் (அத்துவித) சுவரூபானு சந்தானத்தினாற் பிரமரகீட நியாயம்போலத் தன்னுடைய ஆன்மாவின்கண்ணேயே முத்தியாகிய கைவல்லியம்" எனும்பொருளைப் பயக்கின்றது. பிரமரம்=குளவி=செங்குளவி. கீடம்=புழு=பைம்புழு. இக் குளவிபுழு நியாயமானது சாரூப்பிய கதிக்கும், சாயுச்சிய கதிக்கும் பொதுவாகக் கொள்ளத்தக்கது. குளவி தானெடுக்கும் புழுவினுடம்பிலே கடுவுறுப்பா லுறுத்துமென்றும், அங்ஙனம் வேதனையுற்ற அப்புழு அக் குளவியை அடுத்தடுத்து நினைக்குந்தன்மையால் அக் குளவியுருவையடையும் அவ்வாறே சீவன் பிரமத்தை நினைக்குந்தன்மையிற் பிரமமாய்விடுமென்றுஞ் சிலர் கூறுவர். அன்னோர் கூற்று—இப் புழுவல்லாப் பலவேறுசாதிப் புழுக்களுங் கலச குடங்களிலும் அவை போல்வனவற்றிலும் புக்குக்கிடக்குமாயின் அவ்வச்சாதி வண்டாதல் காணப்படுமாறே மூடுண்ட மட்குகைக்கட்கிடக்கும் அப் புழுவுமாம்; நேத்திரமில்லாவதற்குக் குளவி யித்தன்மைத்தெனல் புலப்படாதே; அத்தன்மைத்தாய அஃததனை நினைக்கு நீர்மையையும், அது வேதனையுற்றதையும் நீரெங்ஙனமுணர்ந்தீர்? எனக் கடாவி, ஒருஞான்று முணர்ந்தவரல்லரென உண்மை யுணர்த்தப்படுமாற்றானே மறுக்கப்படும். இது கிடக்க. குளவி தன்னைப்போலப் புழுவைப் பாவித்துக் குளவியாக்கிவிடும்; அவ்வாறே சிவனுஞ் சீவனைத் தன்னைப்போ லாக்கிவிடுவனென்றுஞ் சிலர் கூறுவர். சிவன் செய்வனென்பது சாலும். குளவி அவ்வாறு செய்யுமென்னின்,— கோழியானது முட்டைகளைக் குஞ்சாக்குதலும் பாவனையாலெனல் வேண்டுமன்றோ? அஃதுங் கோடற்பாலதேயெனின்,— நன்று கூறினாய்; தன்னினமல்லா வேற்றினப் பறவைமுட்டைகளையும் அணைத்துக்கொண்டு கிடக்கும் அக்கோழி அப் பறவைமுட்டைகளிற் றன்னுருவக் குஞ்சுகளேனும், தன்னினவுருவக் குஞ்சுகளேனும் வரக்காணாது வேற்றினக் குஞ்சுகளே வரக்கண்டு வெறுத்தோட்டுதலின்மையுறல்

வேண்டும் ; ஒட்டுதலே யுண்மையுறலானும் பார்க்கப்படாக் குகையுட் புழுவிருத்தலானுங் குளவி பாவிக்குமென்னுங் கூற்றும் அறியார் கூற்றெனவே மறுக்கப்படும். ஆயின், அந்தப் பிரமரகீட திருட்டாந்தந் தான் எவ்வளவிற்றென்னின்,— நயனமின்றி அந்தகாரத்திலிருந்த புழுவானது தனது புழுத்தன்மையினீங்கித் தன்னைக் கொடுவந்து வைத்த நயனமுடைக் குளவியெனவாதல் வரையுள்ள அளவிற்றே யென்க. இவ் வளவிற்கிசைய ஞானக்கண்ணின்றி ஆணவவிருளி லிருந்த பசுவானது தனது பசுத்தன்மையினீங்கித் தனக்குக் குருவடிவாய் நின்று நிற்குநிலையி னிறுத்தியருளிய சிவத்திற்குச் சமமா மென்பதுங் கோடற்பாற்று.

'கிளக்குவல்' என்றதில் வ் - எதிர்கால இடைநிலை ; அல் - விகுதி. ஊத்தை = அழுக்கு. அரோ - அசை.] (ககரு)

பதிபசுபாச யதார்த்தவிளக்கப்படல

முற்றிற்று.



# துறவறவிளக்கப் படலம்.

## க. சார்பறுத்தல்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

என்றுகுரு சொற்றமொழி முற்றுநனி கேட்டோ
　னெம்மிறைவ வம்முடிவை யெய்துநெறி யாது
நன்றருளல் வேண்டுமென நல்லடி பணிந்தான்
　ஞானபர னவ்வமைய மோமனை நினைந்தே
ஒன்றறிவு மைந்தவெளி யென்றவொரு பற்று
　முள்ளெனுமொர் பற்றுமற நின்றிடிலென் னுணை
சென்றுவர லற்றநிலை சேர்வையிது தானே
　திவ்யசுக ஞானிக ளடைந்தநெறி மன்னே.

இவ்வாறாகக் குருகூறியவனைத்தையும் நன்றாகக் கேட்டோனாகிய சீடன் என்போலியர்க்குச் சுவாமீ! மேலே கூறிப்போந்த அம் முடிவான நிலையை யடையும்வழி யாது? (அதனை) நன்றாகக் கூறியருளவேண்டுமென விண்ணப்பித்து, அவ்வாசிரியருடைய அழகிய பாதங்களிற் பணிந்தனன். (அது கண்ணுற்ற) மேலான ஞானவானாகிய அவ்வாசிரியர் அவ் வமையத்தே பிரணவப்பொருளாகிய குகேசனைத் தியானித்து, பரமதெய்வத்தின்பாற் பதிந்த சிந்தையுள்ள சீட! புறப்பற்று அகப்பற்று என்று கூறப்படு மிருபற்று மறும்படி நிராசைநிலையிற் சேர்வாயாகில், போக்கு வரவற்ற சுக நிலையை யடைவாய்; என்மே லாணை. இதுதான் தெய்விக சுக மடைந்த ஞானிகளெல்லாஞ் சென்ற மார்க்கமாகும்.

[ "கிராமத்திலிருந்து (யஞ்ஞ தானகன்மங்களாய) இஷ்டாபூர்த்திக ளிழைத்தோன் இறுதிநாளில் அங்கிருந்து புகையையடைவன். புகையிலிருந்து இரவிற்கும், இரவிலிருந்து அபர பக்ஷத்திற்கும், அபர பக்ஷத்திலிருந்து தக்ஷிணயனத்திற்குஞ் செல்வன். தக்ஷிணயனத்திலிருந்து வருஷத்தையடையாமே பிதிருலகிற்கும், பிதிருலகிலிருந்து ஆகாசத்திற்கும், ஆகாசத்திலிருந்து சந்திரனுக்கும் போவன். இவனே சோமராஜா (=யஞ்ஞகருத்தா); அவன் தேவர்

கட்கு அன்னம்; அவனைத் தேவர்களுண்பர்; தன்னுடைய கன்மமெல்லாமனுபவித்து முடியுங்காறும் அவ் வழியேயிருந்து வந்தவழியே ஆகாசத்திற்கும், ஆகாசத்திலிருந்து வாயுவுக்குமாக மீள்வன். பின்றை முறையே வாயு, புகை, (சூஹ்ரம்) அப்ரம், மேகம் (என்பவற்றைப்போல) ஆகி மழையாவன். பின்றை நெல், யவை, ஓஷதி, விருக்ஷம், எள், உழுந்து என்பன (முதலியவற்றெதனிலேனுஞ் சூக்குமம்) ஆயிருப்பன். இவ் விருக்கையிலிருந்து நீங்குதல் அரிது. (நென் முதலிய) அவ்வன்னத்தை எவனருந்தி இரேதசை மகளேவிடத்தில் விடுவனோ அவ்வாகிருதியாகவே அவன் ஆவன்" என்பது சாந்தோக்யோபநிஷத்தின் ரு - ம் பிரபாடகத்துப் கம - ங் கண்டத்து ௩, ச, ரு, சு - ன் பொருள். "உத்தராயண தக்ஷிணாயன மார்க்கங்கட்குரிய எந் நற்கன்மமுஞ் செய்யாத அற்பவுயிர்கள் இறப்புப் பிறப்புக்களேயெய்தும்; சுவர்க்கஞ்சென்று வருவனவல்ல; அவையற்றிற்கு மூன்றாவதாய தானமொன்றுளது" என்பது மேலேக்கண்டத்து அ - ன் பொருள். மூன்றாவது தானம் பாவிகண்மேற்று. பிருஹதாரண்யகோபநிஷத்தின் அ - ம் அத்தியாயத்து உ - ம் பிராஹ்மணத்துப் கசு - லே செல்லு மார்க்கத்துள்ள ஆகாசத்தையும், மீளு மார்க்கத்துள்ள தூமம் அப்ரம் மேகமென்பவற்றையும் மற்றையவற்றடக்கிக் கூறினமையும், சில சுருங்கச் சொன்னமையுங் கண்ணுறலாம். சோமராஜாவினது இயல்பை அவனெய்தியபோது 'அவன் தேவர்கட்கு அன்னம் அவனைத் தேவர்களுண்பர்' என்று சுருதி கூறினமை கௌணமாகலின், அவன் தேவர்கட்குப் பிரியமுள்ள அனுபவ உபகாரணப்பொருளா யிருப்பன்; பசுவைப்போலவும் வாகனங்களைப் போலவுமென்று ஆண்டுப் பொருள் விரித்துக்கோடல் வேண்டும். இத் தக்ஷிணாயனமார்க்கம் புகையிலிருந்து ஆரம்பிக்கப்படுவதாகலின், தூமாதிமார்க்கமெனும் பெயருமுறும். இஷ்டாபூர்த்திக ளிழைத்துளோர் தக்ஷிணாயன மார்க்கத்திற் சந்திரலோகத்தையே யடைகின்றனர்; பெயர்த்தும் பிறப்பெய்துகின்றன ரென்று கூறிய பிரச்னோபநிஷதம் இம்மார்க்கத்தைப் (பித்ருயாணஃ) பித்ருயாணமென்று க - ம் பிரச்நத்து கூ - ல் உரைக்கின்றது. இம் மார்க்கத்தே மீளுங்கதியி லுரைக்கப்பட்ட அனைத்தையும் சுவர்க்கம், (மழைக்குக்காரண பர்ஜந்யதேவதை) மேகம், (பிருதிவி) நிலம், தந்தை, தாய் என்னும் ஐந்திடங்களாகச் சுருக்கியும், அவ்விடங்களே ஐந்தக்கினி அவையற்றிற் றேவர்களால் ஆகுதி செய்யப்பட்ட சிரத்தையெனும் அப்புக்களாற் றழுவப்படும் ஆன்மாவானது சோம

ராஜா, மழை, அன்னம், இரேதசு, கர்ப்பமென ஆறுமென்று வகைப் படுத்தியுங் கூறியிடுதலே மேலைச் சாந்தோக்யத்து ரு - ம் பிரபாட கத்து ச, ரு, சு, எ, அ - ங் கண்டங்களிற் காணலாம். இவ் வைவகை யும் மேலைப் பிருஹதாரண்யகத்து அ - ம் அத்தியாயத்து உ - ம் பிராஹ்மணத்துங் கூறப்பட்டுள. இவ் வைந்திடங்களையும் அக்கினி யாகவும், அவ்வவ்விடங்களி னெய்திய ஆன்மாவை ஆகுதியாகவும் வைத்து உபாசித்தல் பஞ்சாக்கினிவித்தை யெனப்படும். ருக்வேத கௌஷீதகிப்ராஹ்மணோபநிஷதம்—

(யெவெகெசாஸ்மால்லோகாத்ப்ரயந்தி ஸந்த்ரமஸமேவதேகச்சந்தி)

"யேவைகேசாஸ்மால்லோகாத்ப்ரயந்திஸந்த்ரமஸமேவதேகச்சந்தி" என்றும்,

(ஏதத்வைஸ்வர்க்கஸ்யலோகஸ்யத்வாரம் யச்சந்த்ரமாஸ்தம்யதப்ரத் யாஹதமிதிஸ்ருஜதேயஏநம் ப்ரத்யாஹதமிஹவ்ருஷ்டிர்பூத்வா வர்ஷதீஹஸகீடோவா பதங்கோவா சகுநிர்வா சார்த்தூலோவா ஸிம்ஹோவா மத்ஸ்யோவா பரச்வாவா புருஷோவாந்யோ வைதேஷுஸ்தாநேஷு ப்ரத்யாஜாயதே யதாகர்மயதாவித் யந்தமாகச்சந்தம் ப்ருச்சதி)

> "ஏதத்வைஸ்வர்க்கஸ்யலோகஸ்யத்வாரம் யச்சந்த்ரமாஸ்தம்யதப்ரத்
> யாஹதமிதிஸ்ருஜதேயஏநம் ப்ரத்யாஹதமிஹவ்ருஷ்டிர்பூத்வா
> வர்ஷதீஹஸகீடோவா பதங்கோவா சகுநிர்வா சார்த்தூலோவா
> ஸிம்ஹோவா மத்ஸ்யோவா பரச்வாவா புருஷோவாந்யோ
> வைதேஷுஸ்தாநேஷு ப்ரத்யாஜாயதே யதாகர்மயதாவித்
> யந்தமாகச்சந்தம் ப்ருச்சதி"

என்றுங் கூறுகின்றது. இவற்றின் பொருள்:— "இவ்வுலகினை விட்டுச் செல்வோன் சந்திரனையடைவன்" எனவும், "சந்திரன் றான் சுவர்க்கலோகத்திற்கு வாயில்; சந்திரன் கூறுவனவற்றை அவன் மறுத்துரைப்பானாயின் இட்டம்போற் போம்படி அவனை விட்டுவிடுவன்; ஒருவன் சந்திரனுரையை மறுத்துரையாதிருப்பா னாயிற் சந்திரன் அவனை மழையாமாறு கீழே போக்குவன்; போக்கப் பட்ட அவன் கன்மத்துக்கும் அறிவுடைமைக்கு மியையப் புழு, பதங்கம், பறவை, புலி, சிங்கம், மச்சம், சர்ப்பமென்பவற்றுள் யாதொன்றாகவோ, மனிதனாகவோ, மற்றொன்றாகவோ பின்னர்ப் பிறப்பன்" எனவுமாம். இச் சுருதியாற் சந்திரசம்வாதம் நிகழு

மென்பதும், அங்ஙனந் தக்கவாறுரையாதார் கீழே தள்ளப்படுவ ரென்பதும், மனிதப்பிறவி பெற்றோர்க்கும் அஃறிணைப்பிறப்பு வினை வழியெய்துமென்பது மறியக்கிடக்கின்றன. இச் சந்திரன்—* இக் கால ககன கணிதத்திற் சூரியனுக்குக் கீழே பூமிக்கு (உ,சO,000) இரண்டிலட்சத்து நாற்பதினாயிர மயிலுக்கு மேலே நிச்சயிக்கப் பட்டு இவ்வுலகர் விழிக்குப் புலப்படுகின்ற சந்திரனல்லன்; சூரிய னுக்கு மேலே சூக்கும நேத்திரத்திற்குப் புலப்படத்தக்க சந்திரப் பிரகாச மண்டலதேவனாவன்; ஓராறு அம் மண்டலத்திற்கும், இவ் வுலகர் விழிக்குப் புலப்படு சந்திரமண்டலத்திற்கும் அவன் தெய்வ மாயிருக்கலாமென்ப தேயும்போலும். பூமியைச் சுற்றி வருமொரு சந்திரனைப்போலக் குருவையுஞ் சனியையும் யூரேனஸ் என்பதை யுஞ் சுற்றிவரு சந்திரர்கள் முறையே ச, அ, ச - என்பதும், சூரி யர்களும் பலரென்பதும் அக் ககனகணிதத்தும் வெளிப்படுகின்றன. பிண்டமூலத்தில் அக்கினி மண்டலமும், இருதயத்திற் சூரிய மண் டலமும், கபாலமத்தியிற் கோடிசந்திரப்பிரகாச சந்திர மண்டலமு முள: இம் மூன்றும் ஆறுதாரங்களை வியாபித்திருக்குமென்றும் யோகநூலார் கூறுப.

"வனத்திலிருந்து சிரத்தையோடு தவத்தை யுபாசித்துக் கொண்டிருப்போர் ஒளியை யடைகிறார்கள். அவ்வொளியிலிருந்து பகலுக்கும், பகலிலிருந்து பூருவபக்கத்திற்கும், பூருவபக்கத்தி லிருந்து உத்தராயணத்திற்கும், உத்தராயண மாசங்களிலிருந்து வருடத்திற்கும், வருடத்திலிருந்து சூரியனுக்கும், சூரியனிலிருந்து சந்திரனுக்கும், சந்திரனிலிருந்து மின்னலுக்குஞ் செல்கின்றனர்: அங்கிருக்கும் அமானவனெனும் பெயரிய புருடனொருவன் பிர மத்தை யடையும் வழியை அவர்கட்குக் காட்டுகின்றனன்; இது தேவயான மார்க்கம்" என்பது சாந்தோக்யோபநிஷத்தின் ரு - ம் பிரபாடகத்துப் கO - ங் கண்டத்து க, உ - ன் பொருள். "அவன் இவ்விதமாக ஆயுள்காறுமிருந்து பிரமலோகத்தை யடைகின்றனன்; மீளத் திரும்புவானல்லன் மீளத்திரும்புவானல்லன்" என்பது அ-ம் பிரபாடகத்துப் கரு - ங் கண்டத்தில் "ஸகல்வேவம் வர்த்தயந்யாவ தாயுஷம் ப்ரஹ்மலோகமபி ஸம்பத்யதே நசபுநராவர்த்ததே நசபுந ராவர்த்ததே" என வருவதன்பொருள். பிருஹதாரண்யகோபநிஷத்

* ஈ. மார்ஸ்டன், பி. ஏ., என்பவரா லெழுதப்பட்டுப் 18 - வது பதிப்பா யுள்ள பூகோளசாஸ்திரப் பிரதியில் இவ்விவரங் காணலாம்.

தின் அ - ம் அத்தியாயத்து உ - ம் பிராஹ்மணத்துப் கரு - ல் மாசங்கட்குமேல் வருடமின்றித் தேவலோகமும், சூரியனுக்குமேற் சந்திரனின்றி மின்னலும், மேற்காட்டியபடி ஏனையவெல்லாமும், பிரமலோகத்திலிருந்து மீளத்திரும்புவாரல்லர்; வனத்திலிருந்து சிரத்தையையுஞ் சத்தியத்தையு முபாசிப்போர் அடையுமார்க்கமே இவ்விவரமென்பனவுங் கூறப்பட்டுள. இப் பிருஹதாரண்யகத்தின் எ - ம் அத்தியாயத்துப் கO - ம் பிராஹ்மணத்து க - ற் புருடன் இவ்வுலகத்தைவிட்டுப் புறப்படும்போது வாயுவையடைகின்றனன்: அங்கிருந்து மத்திபாக மேலே போந்து சூரியனை யடைகின்றனன்: பின்பு சந்திரனை யடைகின்றனன்: மேல் எஞ்ஞான்றும் நீங்கா வுலகத்தை யடைகின்றனன் எனத் தொகுத்துக் கூறப்பட்டவைகளே மேல் விளக்கப்பட்டபடி விரித்துக் கூறப்பட்டன வென்பதூஉம், சூரியனுக்கு மேலே சந்திரனையடைதலென்றல் இரண்டுபகிடதங்கட்கு முடம்பாடேயென்பதூஉம் ஈண்டியைபுடைமையாகும். மேலைப் பிருஹதாரண்யகத்து ரு - ம் அத்தியாயத்து கூ - ம் பிராஹ்மணத்தில் அப்புவினுதாரம் வாயு, இதனுதாரம் அந்தரிக்ஷம், இதனுதாரம் கந்தருவலோகம், இதனுதாரம் ஆதித்தலோகம், இதனுதாரம் சந்திரலோகம், இதனுதாரம் நக்ஷத்திரலோகம், இதனுதாரம் தேவலோகம், இதனுதாரம் இந்திரலோகம், இதனுதாரம் பிரஜாபதிலோகம், இதனுதாரம் பிரமலோகம், இதனுதாரம் இங்கே சொல்லத்தகாதது என்பன * கார்க்கியென்னுமொரு மகடூஉ வினுய வினுக்கட்கு யாஞ்ஞவற்கியர் கூறிய விடையாக வுள. இக் கிரமங்களில் மேலே கூறப்பட்ட வாயுவும், அதற்குப் பலவேறு தானங்கட்கு மேலுள்ள ஆதித்த லோகமும், அதற்கு மேலுள்ள சந்திரலோகமும், அதற்குப் பலவேறு தானங்கட்கு மேலுள்ள பிரமலோகமும் அறியக் கிடக்கின்றன. போந்த மார்க்கக்கிரமங்க ளொன்றுங் கூருமே சூரியனையே கூறித் தவசு, பிரமசரியம், சிரத்தை, வித்தையென்னு மிவற்றால் ஆன்மாவை நாடியுள்ளோர் அச் சூரியனை யடைகின்றனர்: இஃது அமிருதம்: அன்னோர் மீளத்திரும்புவா ரல்லர்: இஃது உத்தராயண மார்க்கமென்று பிரச்நோபநிஷதம் க - ம் பிரச்நத்தின் கO - ற் பகர்கின்றது. இவ்வாறு பகர்ந்த இஃதே ரு - ம் பிரச்நத்தின் ரு - ல் மூன்று மாத்திரையையுடைய ஓங்காரத்தினுற் பரமபுருடனைத் தியானிப்போர் சூரியமண்டலத்தை யடைந்து பாவமெல்லாந்

---

* (மாமீ-டு) கார்க்கீ - ஸ்த்ரீலிங்கம்; ஏகவசனம்.

தீர்ந்தவராய்ப் பிரமலோகத்திற் சேர்க்கப்பட்டுப் பரமபுருடனைப் பார்க்கின்றன ரென்றுங் கூறுகின்றமையிற் சூரியலோகத்தின் மீப் போய்ப் பிரமலோகமடைதலென்பதே சித்திக்கின்றது. தைத்திரீ யாருணசாகை நாராயணத்தின் ஈற்றில் (யவஷவ ம் வி௯ா-நு-஦ஜமயெநெ வ௵ீயெ.த) "யஏவம் வித்வா நுதகபநேப்ரமீயதே" எனத்தொடங்கி முடியும் வசனங்கள்—" எவன் இவ்விதம் ஞானயோக வித்துவானுய் உத்தராயணத்தி லுடலை விடுவனே அவன் தேவர்களுடைய மகிமை யையடைந்து சூரியனுடைய சாயுச்சியத்தை யெய்துவன்: தக்ஷிணு யனத்தி லுடலைவிடுவோன் பிதிரர் மகிமையையடைந்து சந்திரனது சாயுச்சியத்தை யெய்துவன். இவ்வாறு சூரியசந்திர மகிமைகளை யறிந்த பிராமணன் (=பிரமத்தியானமுள்ளோன்) அடைவனுகலிற் பிரம மகிமையையடைவன்" எனும்பொருளைப் பயக்கின்றன. இவ் வாறு சூரியன் வழியாகச் செல்லுந் தேவயானமார்க்கம் ஒளியி லிருந்து தொடங்கப்படுவதாகலின் இதனை அர்ச்சிராதி மார்க்க மென்ப. அர்ச்சிஸ்=ஒளி. இம் மார்க்கமுடிவிற் கூறப்பட்ட பிரம லோகம் என்பது அயனுலகு, விட்டுணுவுலகு, சிவனுலகென்னு மூன்றற்கும் பொதுமையிற் பிரயோகிக்கப்பட்ட வொருசொல்லாய்க் காணப்படுகின்றது. அங்ஙனம், (க) அயனுலகாகக்கொள்ளுஞான்று அதனையடைந்தவர் 'மீளத்திரும்புவாரல்லர்' என்றதற்கு இந்தக் கற்பங்காறும் அவர் திரும்பாதவராவரென்றும், (உ) விட்டுணுவுலகா கக்கொள்ளுஞான்று விட்டுணுப்பிரளயங்காறும் அவர் திரும்பாதவ ராவரென்றும் பொருள்கோடல் வேண்டும். விட்டுணுவுலகைக் கதி யாகக்கூறுஞ் சுருதிகட்கெல்லாம் இதுவே பொருள். (விஷெ்ணாஃ வாு ௭௦வஉ௱) "விஷ்ணோஃ பரமம்பதம்" என்பது சிவகதியிற் பிரயோகிக் கப்படுஞ் சந்தர்ப்பமாயிருந்தக்கால் அதற்கு 'விட்டுணுவுக்குமேலாய பதம்' என்றருத்தஞ்செய்தல்வேண்டும். என்னை? "ஸ்வரூபதேஜோ மய சாச்வதம்சிவம்" எனும் வசனத்தைத்தருகின்ற மஹோபநிஷதம்—

(஬்ரஹ்மாவிஷ்ணுஶ்ச ருத்ரஶ்ச ஸவ்வாவாஹஂதஜாதயஃ ।
நாஶமேவாநுயாவஂதி ஸலிலாநீவபாடவஂ ॥)
"ப்ரஹ்மாவிஷ்ணுச்சருத்ரச்ச ஸர்வாவாபூதஜாதய:।
நாசமேவாநுதாவந்தி ஸலிலாநீவபாடபம் ||

என்றும், தமிழ்மறையாய திருவாசகம்—

"எண்ணுடை மூவ ரிராக்கதர்க ளெரிபிழைத்துக்
கண்ணுத லெந்தை கடைத்தலைமு னின்றதற்பின்

*எண்ணிலி யிந்திர ரெத்தனையோ பிரமர்களும்*
*மண்மிசை மால்பலர் மாண்டனர்காண் டோணோக்கம்.''*

என்றுங் கூறுதலின். சுருதியின் பொருள்:— "பிரமனும், விட்டுணுவும், உருத்திரனும் எல்லாப் பூதங்களோடுஞ் சிவத்தாற் படைக்கப் படுகின்றனர்: வடவைத் தீயாற் சலம் இலயமடைதல் போல அப் பூதங்களோடு அவர்களும் இலயமடைகிறார்கள்'' எனவாம். இதனிற்போந்த உருத்திரற்கு இருக்கை— ஏழு பாதாளமுங் கடந்த அண்டகடாக வெளியிலுள்ள காலாக்கினிருத்திர புவனமாம். (வாதாளநாமயோவாகெகாலாமிரு: வ்ரதிஷிதஃ।) "பாதாள நாமதோபாகே காலாக்நிர்ய:ப்ரதிஷ்டிதஃ।'' என்று யஜுர்வேத யோகசிகோபநிஷத்துங் கூறிற்று. விவரம் மிருகேந்த்ராகம அத்வப்ர கரணத் தறியற்பாற்று. வேறிருக்கைகளுமுள; சைவசமயசரபங் காண்க. விட்டுணுவினது பரமபதம் பரமதத்துவநிலையன்றெனக் கழிக்கப்பட்டதற்குரிய மண்டலப்ராஹ்மணோபநிஷத்வசனங்கள் முற் படலத்துத் கூகூ - ன் உரைக்கட் காட்டப்பட்டனவாகலின் அவைக ளும் ஈண்டுக் கருதத் தக்கன. இன்னும் உரியசுருதி வந்துழி வந்து ழிக் காண்பதோடு சைவசமயசரபத்துக் கைவல்யகாண்டத்தை அவாவி நோக்கவேண்டும். (ரு) பஞ்சருத்ரத்திலொன்றாயுள்ள சுவே தாச்வதரோபநிஷதம்—

(நதஸ்யகஸ்விதுவதிரஸ்லொகெநவெஸிதாநெவவதஸ்யலிஂமம்।
ஸகாரணஂகரணாயிவாயிவொநவாஸ்யகஸ்விஜநிதாநவாயிவஃ॥)

*"நதஸ்யகச்சித்பதிரஸ்திலோகே நசேசிதாநைவசதஸ்யலிங்கம்।*
*ஸகாரணம்கரணாதிபாதிபோ நசாஸ்யகச்சிஜ்ஜநிதாநசாதிபஃ॥''*

என்று கூறிற்று. தமிழ்:— "அவ் வுருத்திரனுக்கு மேலான பதியுமில்லை: இரக்ஷகனுமில்லை: உற்பத்தித்தானமுமில்லை: அவனே காரணன்: கரணாதிபதிகட்கும் அதிபன்: அவனைப் பிறப்பிக்கின்ற வனும் அவனுக் கதிபனுமில்லை'' எனவாம். இச் சுருதி மொழிகளா னும், மேலே காட்டப்பட்ட "சாச்வதம் சிவம்'' என்னுஞ் சுருதி வாக்கியங்களானும், "ஆதிமத்யாந்தம் விஹீநமேகம் விபும்'' என முற்படலத்து ரு - ன் உரையிற் காட்டப்பட்ட பஞ்சருத்ர கைவல் யோபநிஷத மொழிகளானும், பிறவற்றானும் சிவன் பிறப்பிறப்பற்ற முழுமுதற்கடவு ளென்பது சாதிக்கப்படுதலின் அவ்வாற்றானும்;

(𑌓𑌂𑌕𑌾𑌰𑌰𑌥𑌮𑌾𑌰𑍁𑌹𑍍𑌯 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌂𑌕𑍃𑌤𑍍𑌵𑌾𑌥𑌸𑌾𑌰𑌥𑌿𑌮𑍍 ।
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌲𑍋𑌕𑌪𑌦𑌾𑌨𑍍𑌵𑍇𑌷𑍀 𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌰𑌾𑌧𑌨𑌤𑌤𑍍𑌪𑌰𑌃 ॥)

" ஓங்காரரதமாருஹ்ய விஷ்ணும்க்ருத்வாதஸாரதிம் ।
ப்ரஹ்மலோக பதாந்வேஷீ ருத்ராராதநதத்பர ஃ॥ "

என்னும் அம்ருதநாதோபநிஷதச் சுலோகம் " ஓங்கார ரதத்தி லேறி விட்டுணுவைச் சாரதியாகக் கொண்டு பிரமலோகத்தை நேடிச் செல்வான் உருத்திராராதனத்திற் பேரன்புடையான் " எனும்பொருளைப் பபத்தலிற் சாரதியாவாரது பதத்திற்கும் மேனுள்ளதே உருத்திராராதனத்தையுடையோ னடையற்பாற்றென்பதும், அது பிரமலோக மென்பதும், இவ்வுலகம் அயனுலகன்று, சிவலோக மேயென்பது அயனுலகிற்கும் மேலாயுள்ள வைகுண்டவாச விட்டுணு சாரதியென்பதனு லேற்படுமாற்றானும் வெளிப்படும். தமிழ்மறையில் " ஊனுடல் வேறுசெய்தான் " என் றருளிச்செய்தவாறு சுந்தரமூர்த்திசுவாமிகள் தமது ஊனுடல் வேருகி வெள்ளையானைமீது சிவலோகஞ் செல்வான் அர்ச்சிராதிமார்க்கத்திற் சென்றுகொண் டிருக்கு ஞான்று—

" இந்திரன்மால்பிரமன்னெழிலார்மிகுதேவரெல்லாம்
வந்தெதிர்கொள்ளவென்னைமத்தயானையருள்புரிந்து
மந்திரமாமுனிவரிவனாரென்னவெம்பெருமா
னந்தமரூரனென்றானொடித்தான்மலையுத்தமனே. "

எனக் காண்பனகண்டு கூறியருளிய செய்தி இச் சுருதிசியாயமாயிருக்குமாற்றானும்; இந்த அர்ச்சிராதிமார்க்கமும், அதன் வழிச் சென்று சிவலோகம் புக்கெய்துஞ் சிவசாரூபமும், பிறவும் சைவ மஹாபுராண கைலாஸ ஸம்ஹிதையின் இறுதிப்பாகத்தில் வாமதேவ முனிவர்க்கு முருகப்பெருமானால் மொழிந்தருளப்பட்டன வென்பது காணப்படுமாற்றானும்; வேறுபல வேதுக்களானும் நிலைபேருயுள்ள பிரமலோகம் சிவலோகமென்பதுஞ் சித்திக்கின்றது. அற்றாகலினன்றே " மலர்க்கொன்றைத்—தொங்கலா னடியார்க்குச் சுவர்க்கங்கள் பொருளலவே " என்று ஞானசம்பந்தப் பெருமானது தமிழ்மறையுஞ் சாய்க்காட்டுப்பதிகத்திற் சாற்றுவதாயிற்று. சந்திரனை வாயிலாகக்கொண்டுள்ள வுலகங்களுட் போக்கு வரவுக் குரியவெல்லாஞ் சுவர்க்க சத்தத் தடங்குமென்க. விட்டுணுபத சம்பந்தமான விரஜாநதி கூறிப்போந்த விட்டுணுவுலகாகிய பிராகிருதப்பிரபஞ்ச எல்லையாயுளதெனுஞ் செய்தி யொன்று—

(𑌸𑌆𑌗𑌚𑍍𑌛𑌤𑌿𑌵𑌿𑌰𑌜𑌾𑌂𑌨𑌦𑍀𑌂𑌤𑌾𑌂 𑌮𑌨𑌸𑌾𑌤𑍍𑌯𑍇𑌤𑌿
𑌤𑌤𑍍𑌰𑌸𑍁𑌕𑍃𑌤𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑍇 𑌵𑌿𑌧𑍂𑌨𑍁𑌤𑍇𑌤𑌸𑍍𑌯𑌪𑍍𑌰𑌿𑌯𑌾
𑌜𑍍𑌞𑌾𑌤𑌯𑌸𑍍𑌸𑍁𑌕𑍃𑌤𑌮𑍁𑌪𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑌮𑍍)

**"ஸஆகச்சதிவிரஜாம்நதீம்தாம் மநஸாத்யேதி
தத்ரஸுக்ருததுஷ்க்ருதேவிதூநுதேதஸ்யப்ரியா
ஜ்ஞாதயஸ்ஸுக்ருதமுபயந்த்யப்ரியாதுஷ்க்ருதம்"**

என்னுங் கௌஷீதகிப்ராஹ்மணோபநிஷத் வசனத்தி னறியப் படுதலினாலும், இதன்றமிழ்:— "அவன் விரஜாநதியை யெய்தி அறிவா லதனைக்கடந்து அவ்விடத்தே தன்னுடைய புண்ணிய பாவங்களை யுதறுகின்றனன்: அவனுடைய பிரியமுள்ள சுற்றத்தார் நன்மையையும் பிரியமில்லா விரோதிகள் தீமையையும் பெறுகின்ற னர்" என வாதலினாலும் விரஜாநதியைக் கடந்தவுடன் விட்டுணு வுலகங் கடக்கப்பட்டதாயிற் றென்பதும், மேலடைதல் அப்பிரா கிருத சிவபதமேயென்பது மறியக்கிடக்கின்றன. இவ்வாறு பிரம னுலகுக்குமேலே விட்டுணுவுலகும், விட்டுணுவுலகுக்கு மேலே பரமசிவனுலகு மிருக்குமுண்மை நோக்கியே சரபோபநிஷதம்—

(𑌪𑌰𑌾𑌤𑍍𑌪𑌰𑌤𑌰𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌤𑍍𑌪𑌰𑌾𑌤𑍍𑌪𑌰𑌤𑍋𑌹𑌰𑌿𑌃।
𑌤𑌤𑍍𑌪𑌰𑌾𑌤𑍍𑌪𑌰𑌤𑍋𑌈𑌶𑌃)

**"பராத்பரதரம்ப்ரஹ்ம தத்பராத்பரதோஹரி:|
தத்பராத் பரதோதீச:"**

எனும் வாக்கியங்களானே பரத்துக்குப் பரமாயுள்ளோன் பிர மன், அவனுக்கு மேலேயுள்ளோன் அரி, அவனுக்கு மேலேயுள் ளோன் ஈசன் என்று இருவர்க்கு மேலே மூவர்முதல்வனை மொழி ந்து நிற்பதாயிற்று. இன்னண மொழிந்து நிற்கு மிஃது அந்தப் பிரமாவினது திருவாக்கே யென்பதூஉம், மூவர்முதல்வன துலகினை யடைந்தோர் 'மீளத் திரும்புவாரல்லர்' என்றதற்கு அவனது உருவ சமத்துவமடைந்தார் தத்தம் பக்குவத்திற் கேற்ப அவனருளாற் சமத்துவ சாயுச்சியமடையுங்காறும் அவ் வுருவகதியை நீங்கா தங்கே யிருப்பரெனல் பொருளா மென்பதூஉம் அறியக் கிடக்கின்றன. அழிவிலாமுதல்வ னுருவடைந்தாருருவை மாற்றுந்தொழிலு மவ னருளுக்கேயன்றி ஏனையோ ரெவர்க்கு மெதற்கு முரித்தன்றென் பதும், மாற்றிச் சாயுச்சியத் துய்க்குஞான்று அவ்வுருவ ஐசுவரியம் முதல்வன் றிருவருளைச் சார்ந்துவிடு மென்பதும் அறியக்கிடக்

கின்றன. இக் கதியெய்தினோர் மீளத் திரும்புவாரல்ல ரென்றல்— மிருகேந்த்ராகம பரமோக்ஷ நிராசப்ரகரணம்—

(அ) " முக்தஸ் ஸ்ருஷ்டௌபும்வரோப்யேதிநாத: "

என்றும், பஞ்சக்ருத்யப்ரகரணம்—

(ஆ) " யாந்விமோசயதிஸ்வாபே சிவாஸ்ஸத்யோபவந்திதே।
ஸம்ஹ்ருதௌவாஸமுத்பூதா வணவ: பதயோதவா ॥ "

என்றும், பௌஷ்கராகம பதிபடலம்—

(இ) " ததாலயாஹ்வயம்தத்வம் சிவதத்வம்ததேவச । " என்றும்,

(ஈ) " யோஜிதாலயதத்வேயே தேமுக்தாநாபரத்ரச । "

என்றுங் கூறுமாற்றானும் வலியுறுகின்றது. பொருள்:—(அ) சைவத்தின் முத்தனுயுள்ளோன் சிருட்டியாரம்பத்திலும் ஈசுரனாகவேயிருக்கின்றனன். (ஆ) சங்காரத்திற்குப் பின்னே சிவன் எவர்கட்கனுக்கிரகஞ் செய்வனோ அவரெல்லா முடனே சிவத்துவமடைவர்: சங்காரகாலத்துஞ் சிருட்டிகாலத்தும் அனுக்கிரகிக்கப்படுவோர் அதிகார பதித்தன்மையையேனும் அஃதில்லாத முத்தியையேனுமடைவர். (இ) இலயமெனும் பெயருடைத் தத்துவமே சிவதத்துவம். (ஈ) எவர்கள் சிவதத்துவத்திற் சேர்க்கப்பட்டார்களோ அவர்கள் முத்தர்கள்: இதற்குக் கீழாய தத்துவங்களிற் சேர்க்கப்பட்டோர் முத்தரல்லர். எனவாம். முற்படலத்து சஎ - ன் உரைக்கண் "ஏதேஷாம்" என்றற் றொடக்கத்ததாய்க் காட்டப்பட்ட பௌஷ்கரச் சுலோகங்களும் ஈண்டுக் கருதத் தக்கன.

மூவிடத்துமெய்துங் கதியினளவு இவ்வாறு மாற்றானும், அவை பெருத்து ஒன்றையொன்றடுத்து ஒன்றற்கொன்று பெரிதாயிருக்கு நீர்மையிற் பிரமமெனப்படுமாற்றானும் இச் செய்யுளுரையின் ஆரம்பத் தெடுத்துக்கொள்ளப்பட்ட உபநிஷத்துக்கள் 'பிரமலோகத்திலிருந்து மீளத்திரும்புவாரல்லர்' 'நீங்காவுலகத்தை யடைகின்றனர்' என்று கழறுகின்றன. இன்னணங் கழறுதலினாற்றான் வேதம் மறைபொருளுடைத்தென்று அவ்வேதமே கூறிற்று. அக்கூற்றும் முற்படலத்து அங - ன் உரைக்கட் பிரமாணிக்கப்பட்டுளது. 'இதன் ஆதாரம் இங்கே சொல்லத் தகாதது' என யாஞ்ஞவற்கியர் கூறிய கூற்றும் இம் மறைக்கூற்றேயன்றோ. இத்திற மறையானது மகாவாக்கியங்களிற் பரமசிவத்தைப் பிரமமெனக் கூறிக்கொண்டதற்கியையக் கதிநிலையையும் அச் சத்தத்தானே கூறியிட்டதை நோக்கிய

வியாசமாமுனிவரர் சிவாஞ்ஞை யிருந்தவாறு (அதாதோ ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா — அதாதோப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா=) "பின்பு, ஆகலிற் பிரமத்தையறிய ஆசை" என்னும் முதற் சூத்திரத்தின்கண்ணேயே அந்தப் பிரம சத்தத்தை வருவித்துக்கொண்டு "திரும்பிவருதலில்லையென வேதங்கூறலின், திரும்பிவருதலில்லையென வேதங்கூறலின்" எனும் பொருளுற (அநாவ்ருத்திஃஶப்தாத் அநாவ்ருத்திஃஶப்தாத்) "அநாவ்ருத்திச்சப்தா தநாவ்ருத்திச்சப்தாத்" எனக் கூறிமுடித்த இறுதிச் சூத்திரத்திற்கு மேற்கோளாய் நிற்கும் வேதவாக்கியங்களும்— "பிரமலோகத்தை யடைந்தவன் (நசபுநராவர்த்ததே நசபுநராவர்த்ததே=) மீளத்திரும்புவானல்லன் மீளத்திரும்புவானல்லன்" எனும் பொருளவாகலின் அச்சூத்திர சாத்திரமும் (ப்ரஹ்மஸூத்ரம்) "ப்ரஹ்மஸூத்ரம்" எனும் பெயர்பெற்றதென்க. இவ்வாறு பொருள்கொள்ளாக்காற் பிரமனுலகிற்கு மேலுள்ள விட்டுணுவுலகுஞ் சிவனுலகும் இலவென்றுதலோடு அனந்தச் சுருதியாதி பிரமாண விரோதமுமேற்படும். முற்படலத்து ௩ - ன் உரையில் "சிருட்டிக்குமுன்னே ஆன்மா வொன்றேயிருந்தது" எனும் பொருளிற் காட்டப்பட்ட ஐதரேயோபநிஷத் வசனத்தின்படி அனைத்துக்கும் பிரளய மெய்துகின்றது. ஆவதேல், சாயுச்சியமெய்துங்காறுஞ் சிவசாரூபஞ் சத்தியமாயிருக்குமென் றீண்டோதுதல் எவ்வாற்றாலேயுமெனின்,— பிரளயகாலத்திற் பெத்தவுயிர்கள் மாயாகர்ப்பத்துழை யடங்கிக் கிடத்தல்போற் கிடவாமற் பிரகாசமயமான சிவ தத்துவத்தினுள்ள அக்கதியினர் அங்கண் அந்தர்ப்பாவமுற் றிருப்பார்கள், கருப்ப சிசுவைக் கருப்பத்தடக்கி யொருத்தியே யிருந்தனளெனக் கூறுதல்போல அந்த ஐதரேயங் கூறிற்றென்புழி அக்கதி பாதிக்கப்படாது. இதனை,

> "ஸர்வாங்லோகாங்உத்க்ருஹ்ணத்யஜஸ்ரம்
> ஸ்ருஜதிவிஸ்ருஜதிவாஸயதிதஸ்மாதுச்யதஏக꞉"

என்னும் அதர்வசிரோபநிஷத் வசனமு நிலைபெறுத்தும். பொருள்:— "எல்லா வுலகங்களையுந் தன்கண் ணொடுக்கிக்கொள்வோனுவன்: சிருட்டிக்கின்றனன்: சங்கரிக்கின்றனன்: காக்கின்றனனாகலின் ஏகனெனப்படுகின்றனன்" எனவாம். இது, சிவனுக்கு ஏகனெனும்பெயர் போந்தமைக்குக் காரணங் கூறியவாறு. சாந்தோக்யோபநிஷத்தின் அ - ம் பிரபாடகத்து கூ - ங் கண்டமும், கடோபநிஷத்தின் கூ - ம் வல்லியும் (ஶதஞ்சைகாச ...) "சதஞ்சைகாச

ஹ்ருதய'' என்றற்றொடக்கத்தனவாய்க் கூறுமொழிகள் "இருதயத்திலுள்ள ௧0௧ - நாடிகளுள் ஒன்று (= சுழுமுனை) சென்னி வழியாக வந்துளது. அதன் வாயிலாக மேலேபோய் அமிருதத்துவத்தை யடைவன் : மற்றை நாடிகளும் வெவ்வேறிடஞ்செல்ல உற்கிரமண காலத்தி லுபயோகப்படும்'' எனுமருத்தந் தருதலின் உத்தராயண மார்க்கத்திற் சிவலோகம்புக்குச் சிவத்துவமடைவோர் சென்னிநாடி வாயிலாகவும், தக்ஷிணாயன மார்க்கத்திற் கந்தர்வலோகாதிகளை யடைவோர் மற்றைநாடி வாயிலாகவும் இறுதிநாளிற் செல்வரென்பது மிங்ஙனறியக் கிடக்கின்றது.

கூறப்பட்டபடி தக்ஷிணாயன மார்க்கத்திற்செல்வான் இவ்வுலகிற் சரீரம்விட்ட சீவன் சூக்கும தேகத்தோடு சூக்குமபூத அப்புக்களுடன் சேர்ந்து சோமராஜாவாய் அமிர்தமயமாய விசேடவுடம்புடன் தேவர்களோடு அங்கே விசேடபோகங்க ளனுபவித்து நல்வினைப்பய னொழிந்தபின் அவ்வப்புக்களோடு இவ் வுலகடைந்து பிறத்தலையும், உத்தராயணமார்க்கத்திற் செல்லும் ஆன்மாக்களுள்ளுஞ் சிவத்துவமடையா ஆன்மா மீளத்திரும்புதலையும், கூறிய இருதிற மார்க்கமுமின்றி நரகமெய்திய ஆன்மாக்கள் இவ்வுலகடைந்து பிறத்தலையும், இவ ணுடம்பு விட்டவுடன் பிறிதோ ருடம்பினுழைக்கப்படும் அற்பவுயிர்கள் ஒல்லையி லொல்லையி விறந்து பிறத்தலையும் "சென்றுவரல்'' எனவெடுத்துக்கொண்ட ஆசிரியர்— சிவதத்துவமெய்தி அங்கிருந்தவாறே மீளாக்கதியடைதலையும், யாண்டுஞ் செல்லாமே இங்குத்தானே திருவருட்பிரகாச ஞானியாகி விதேகமுத்தி யடைதலையுமே அங்ஙனம் "அற்றநிலை'' என்று மறிவுறுப்பா ராயினர்.

ஓமன் = பிரணவப்பொருளாய குகேசன் ; உரிய சுருதி முதலிய பிரமாணங்கள் பாயிரத்து உ - ன் உரைக்கண்ணேயே வந்துள்ளன. அத்திறப் பிரமாணங்களுண்மையின் "ஓங்காரத் துட்பொருளை'' என்று அச்சோப்பதிகத்துழித் தமிழ்மறையுஞ் சாற்றுவதாயிற்று. என்னுணை - என்பது சத்தியமென்பதை யுணர்த்துவதாயிற்று. எம்மிறைவ - தன்னினத்தாரை யுளப்படுத்திக் கொண்ட உளப்பாட்டுத் தன்மைப்பன்மை. "இறைவ'' "மைந்த'' என்பன அண்மை விளி ; முற்படலத்து அ௬ - ன் உரையிற் காட்டலுற்ற தொல்காப்பியச்சூத்திரங் காண்க. மன், ஒ - அசை. ] (௧)

சொற்றவெளி யுள்ளது பிதாமனைவி மக்கள்
சொத்துட லகத்துளது பற்றுபுல னைந்தோ

டுற்றகர ணங்களென வுள்குதி யிவற்றை
　யோட்டிடல் புறத்துறவு ளூட்டுறவெ ஞநூல்
கற்றவர் நொடிப்பர்முறை யேவிடுந ருய்வர்
　கந்தனே வழங்கிறை கலாணிழ றுறந்தே
நற்றவர் களுக்கருள வந்தநடை யாலே
　ஞாலமுளர் தள்ளவொரு ஞாயமு மெழாதே.

மேற் கூறப்பட்ட புறப்பற்றுவது பிதா, மனைவி, மக்கள், சுயார்ச்சித பிதிரார்ச்சிதப் பொருள்கள், தூலதேகம் (ஆகிய இவற்றின்மேல் வைக்கும் பற்று) ஆம். அகப்பற்றுவது விடயங்களைப் பற்றும் ஐம்பொறிகளும், அந்தக்கரண சதுட்டயமும் (ஆகிய இவற்றின் மீது வைக்கும் பற்று) ஆமென் றறிவாயாக. அப் பற்றுக்களை யொழித்திருத்தலே அகத்துறவு, புறத்துறவென்று ஞானசாத்திரங்களில் வல்லுநர் கூறுவர். இப்பற்றுக்களைக் கிரமமாகவிடுபவர் கடைத்தேறுவர். குமாரமூர்த்தியைத் தந்த பரமசிவன் தனித்த சன்னியாச கோலங்கொண்டு வந்து கல்லாலி னீழலின்கட் சனகாதியராகிய நல்ல தபோதனர்கட்கு உண்மை புணர்த்தியருளிய நெறியானே அந்தச் சன்னியாசத்தை உலகத்தார் அங்கீகரியாதிருக்க ஒரு நியாயமு முண்டாவதின்று.

[ (ஸ்கந்த:) ஸ்கந்தன் என்னும் வடமொழிப்பெயர் தமிழிற் கந்தனென வழங்கப்படுவதாயிற்று. "பார்வதீ! நின்மைந்தன் மூவுலகினும் பராக்கிரமத்துடன் நிகரின்றிச் சஞ்சரித்தமையின் ஸ்கந்தனெனப்படுகின்றனன்" என்று உமாநாயகன் உமாதேவி முன்னிலையி லுரைத்தருளின னென்பதை ஸ்காந்தமஹாபுராண சம்பவ காண்டத்து ௩௫ - ம் அத்தியாயத்துப் ௧௧ - ஞ் சுலோகம் வெளியிடுதலின் இப்பெயர்ப்பொருளறியக்கிடக்கின்றது. தமிழ்க் கந்தபுராணத்துத் திருவிளையாட்டுப் படலத்திற் "சேயவன் வடிவ மாறுந் திரட்டிநீ யொன்றாய்ச் செய்தாய்—ஆயத னாலே கந்த னெனு நாமம் பெற்றான்" என்பது கூறப்பட்டுளது. இப்பொருள்— (ஸ்கந்த:) ஸ்கந்தம், (ஸ்கந்தம்) ஸ்கந்தம் என்னும் வடசொற்கள் 'தோள்' எனப்படுமாற்றானே தோள்வரையிலும் உமாதேவியா லொருங்குறச் சேர்க்கப்பட்ட திருவுருவுடையா னென்பது குறித்துச் சொற்றதாக நிச்சயித்தல் வேண்டும்.

*ஸ்வவஸ்து - என்னும் வடமொழி 'சொத்து' என விகாரப்பட்டது. பற்றுபுலன் - வினைத்தொகை; கூப்புகரம் என்றாற்போல. கலானிழற்கண் - என்னுங் கண்ணுருபு விகாரத்தாற் றொக்கது.]* (உ)

உட்டுறவு கூடிடில் வெளித்துறவ தேன்வே
 ரொன்றுகளை யிற்றளிர் தளிர்ப்பதிலை யென்னின்
முட்டுதைய நின்றசெடி மூலம தகைக்க
 முன்னர்வெளி யுள்ளதழை வத்தனையு மெற்றல்
பெட்டின்முறை கண்ணசன காதியரை மானப்
 பெட்புடைய முப்புரையு மற்றுவரு நல்லார்க்
கொட்டுமது மற்றவர்க ளுக்குவெளி வீக்க
 மொருவினல துட்டுறவு வாய்த்திடுவ தின்றால்.

*அகத்துறவு கூடுமாயிற் புறத்துறவாற் பிரயோசனமென்னை? வேரை மட்டுங் களைந்துவிடிற் செடி தளிர்ப்பதில்லையே யெனின்,— முட்கள் நிறைந்துள்ள செடியின்வேரைக் களைவதற்கு, புறத்தே யுள்ள அதன் றழைவனைத்தையும் முதலிலறுத்துவிடல் சிறந்த கிரமமே. கண்ணன் சனகன் முதலினோரைப் போலப் பெருமையுள்ள (காமம், வெகுளி, மயக்கமென்னும்) முக்குற்றங்களு நீங்கிப் பிறந்த நல்லார்க்கே புறத்துறவின்றி அவ் வகத்துறவு பொருந்தும். மற்றவர் களுக்குப் புறப்பற்று நீங்கினல்லது அகத்துறவு வாய்ப்பதில்லை.*

*[செடியின்றழைவு புறப்பற்றுக்கும், அதன் வேர் உட்பற்றுக்கு முவமை செய்யப்பட்டன. கண்ண சனகாதியர் முள்ளிலாச்செடி போன்றோரென்பதும், ஏனையோர் முட்செடிபோன்றோ ரென்பதும் இங்கே கருத்து. சிவதன்மங்களால் நற்சித்தமடைந்தார்க்கு அவ் வுடம்பு நீங்கிய பின்னரும் முன்போலப் பிரகாசிக்குங் குணம் சாமுசித்திகமென்பதும், உலகபுத்தி குரு சாத்திரமாகிய மூன்றேதுக் களாலும் பிரகாசிக்குங் குணம் வைநயிகமென்பதும், உடம்பிருக்கும் போதிருந்து அஃதில்லாதபோது இன்மையுறுங் குணம் பிராக்கிருதமென்பதும் மிருகேந்த்ராகம கலாதிப்ரகரணத்திற் பெறப்படு மாற்றானே பிராக்கிருதருக்கும் வைநயிகருக்கும் மேலான சாமுசித்தரே "முப்புரையு மற்றுவரு நல்லார்" எனப்பட்டாரென ஈண்டுக் கோடல் வேண்டும். கண்ணன் கோர ஆங்கிரசரென்னு முனிவரைக் குருவாகக் கொண்டிருந்த செய்தி* சாந்தோக்யோபநிஷதம் *"தத்தைதத் கோர ஆங்கிரஸ: க்ருஷ்ணாயதேவகீபுத்ராயோக்த்வோ*

வாசாபிபாஸஏவஸ பபூவஸோந்தவேளாயாமேதத்ரயம் ப்ரதிபத்யே தாக்ஷிதமஸ்பச்யுதமஸி ப்ராணஸம்சிதமஸீதிதத்ரைதே த்வேரு சௌபவதஃ।" என்று கூறிச் செல்லுதல்கொண் டறியப்படுதலின் அக் கண்ணனை வைநயிகனென்பதும், தசோபநிஷத்துக்களு ளொன்றாய இது கண்ணனுக்குப் பின்னுண்டாயதென்பது மேற்படுகின்றன.

என்னின்=என்று சொல்லின்; சொல்லெச்சம். அது ஒட்டும் என மாறுக. பெட்பு= பெருமை.] (௩)

அட்டாவ தானமது ளுற்றுந ருறழ்ந்தே
யவ்விருமை யும்புரியொ ணுதுகொ லெனிற்கேள்
ஒட்டாதவ் வட்டாவ தானம்வெளி வேலை
யொன்ருக நின்றே யுளுற்றவிய லுஞ்சூர்
விட்டேகு மாறுற லிரண்டென் பவற்றுள் [ரோர்
வெளியொன்று முள்ளொன்று மென்றிடலி னென்
கெட்டாலு மேதுறவு கீழன்று வேழங்
கெம்பீர மதமுற்ற பண்பென்ன வாமால்.

அட்டாவதானஞ் செய்வோரை யொத்து இல்லத்திருந்துகொண்டே அவ்விரண்டையுஞ் செய்யொணுதோவெனின்,—பொருந்தாது; அவ்வட்டாவதானத்தி னுறுப்புக்களெல்லாம் வெளிவேலையாகலின் அவற்றிலெல்லாம் ஒருங்கு கூடி நிற்கு ஞாபகசத்தியால் அவற்றைச்செய்தல் சாத்தியமாகும்: சனன மரண துக்கங்கள் விட்டேகுமாறு பெரியோர் பொருந்துதல் இருவகைத் துறவே: (இருவகையும் அட்டாவதான வுறுப்புக்கள்போல வெளியிலுள்ளனவாகவில்லாமல்) அவற்றுளொன்று வெளித்துறவாகவும், ஒன்று உட்டுறவாகவுங் கூறப்படுதலின் என்று ஓர்வாயாக. புறப்பற்றொழித்து நிற்குந் தன்மையாலே துறவி ஏழையெனவாயினும் அவன் நிற்குநிலை கீழ்மையுள்ளதன்று. யானையானது கட்டுத்தறி கடந்து போந்து கெம்பீரமான மதத்தைக்கொண்ட தன்மைபோலாகும் அந்நிலை. இன்னும் யான்கூறுவதைக் கேட்பாயாக.

[ (க) வாய் வேலுமயிலுமெனச் சொல்லல்,

(உ) கையால் இலாடசங்கிலி கழற்றல்,

(௩) எண்மர் கருத்தின்படி கவிசொல்லல்,

(ச) முதுகிலெறியப்படுங் கல்லளவு நெல்லளவு சொல்லல்,

(நு) திரைமறைவில் வைக்கப்படுங் கல்லணியளவு சொல்லல்,

(சு) மறைவிடத்தில் விளையாடப்படுஞ் சொக்கட்டான் சதுரங்க மிவற்றிற்கு யுத்தி சொல்லல்,

(எ) அயலொருவர் சொல்லுங்கவியை அவதானித்துச் சொல்லல்,

(அ) உடலிற் பன்னிருதானத் தெழுத்தாணிவைத் தெழுதல் என்பனவே அட்டாவதானம்.

"உஞற்றுநர்" என்றதில் ந் - பெயரிடைநிலை. கொல் - ஐயப்பொருட்டு. சூர் = துன்பம்; பிங்கலநிகண்டு காண்க.] (ச)

இல்லறத்து ஞானம திரும்பின்மணி யாமவ்
 வில்லொழித்த ஞானமது பொன்னின்மணி யாமிந்
நல்லறத்தை நாடுநர்க ணில்வருத்து செல்ல
 னண்ணுவதில் வண்பரம விண்கதி விழாவுக்
கல்லலற்ற வீதுரிய காப்பெனொரு கட்டா
 மாக்கையுள தேலிதுந லச்சனன மாகும்
வல்லரக்க ருந்துறந்து நன்னரடை வாரேன்
 மாணுறு கதிக்கிது வலாதுபுக லேதே.

(பூர்வ புண்ணியபலத்தால் இல்லறத்தும் ஞானமுண்டாகலாம். இதுவும், துறவறஞானமும் உயர்வு தாழ்வில்லா இரத்தினம் போல்வனவா மெனக்கொள்ளினும்) இல்லத்துண்டாகு ஞானம் இரும்பிற் பதித்த இரத்தினம் போல்வதாகும். துறவறத்துண்டாகு ஞானம் பொன்னிற்பதித்த இரத்தினம் போல்வதாகும். இந் நல்லறமாகிய துறவறத்தை நாடுவோரிடத்தே கிருகாச்சிரமத்தில் வருத்துகின்ற துன்பமொன்றும் நெருங்குவதில்லை. வளப்பத்தோடு கூடிய மோட்ச கதியாகிய திருவிழாவுக்கு, துன்பமற்ற இத் துறவறம் உரிய இரட்சா பந்தனமாகும். இன்னுமொரு சரீரம் வரவிருப்பினும் இத்துறவறமே அச் சரீரத்துக்குரிய நல்ல சனனமாகும். வன்மையுடைய அரக்கரும் புறத்துறவடைந் திழைக்குந் தவசுவாயிலாக உலகினையாளுஞ் சிறப்பினை யடைவாராயின் அதனினும் மேம்பாடுடைய நற்கதிக்கு இத் துறவறத்தைவிட வேறு தகுதியுடைய மார்க்கம் யாது? யாது மில்லை.

[சுயார்ச்சித பிதிரார்ச்சிதப் பொருள்களையும், மனைவி மக்கண் முதலியோரையும், ஊரையும், தூலவுடம்பையு நீங்கிநிற்கும் மரணம்

போன்றது துறவாகலின் அத் துறவினிற்குமுடம்பு மறுபிறப்பென்ப தறிவுறுத்துவார் “இது நல் அச்சனனமாகும்” என்றார். இத்திறச் சனன முடையானே ‘துவிஜன்’ எனப்படுவனாகலின், தனக்கு இன்னுமொரு பிறப்பெய்து மென்பதைத் தெரிந்துகொண்டோன் உடனே துறவறம்புக்கு முத்திபெறலா மென்பது மிங்ஙனுணரக் கிடக்கின்றது.

அறம் = இன்னவை செய்யத்தக்கவையென நூல்களால் வரையறுக்கப் பட்டவை; அற - பகுதி; அம் - செயப்படுபொருள் விகுதி. செல்லல் = துன்பம்; சூடாமணிநிகண்டு காண்க. ஆக்கை - யாக்கை யென்பதன் மரூஉ. வல்லரக்கரும் என்னும் உம்மை இழிவுசிறப்பு. “நன்னர்” என்பதில் நர் - பண்புப்பெயர் விகுதி. ‘எது’ எனும்வினா எதிர்மறைப்பொருள் குறித்தது.] (கூ)

ஏர்க்கரம் வளார்வசி பரித்தவர்கள் கொல்லா
　ரென்பதிலை யன்னண மிழுக்குவிட யந்தான்
பார்ப்புல மருந்துநரை நீத்தவ ரெனார்காண்
　பண்புடைய தக்கவர் பராபரவின் பத்தைத்
தீர்க்கமொடு சேர்தறனி யாகுதுற வாலே
　செப்புமதை விட்டவர்கள் பற்றொழிய மாட்டா
தூர்க்குருவி போற்பெணி னுடம்புவெறி கொண்டே
　யூழூ ழெனச்சொலி யுழன்றுதிரி வாரால்.

அழகிய கரத்திற் கூர்மைபொருந்திய வாளாயுதத்தைப் பிடித்துக்கொண் டிருப்போரைக் கொல்லாவிரதியரென்று கூறுவது (இவ்வுலகில்) இல்லை. அதுபோலக் குற்றமாகிய பஞ்ச விடயங்களையும் இவ்வுலகத்தின்கண் ணனுபவித்துக்கொண் டிருப்போரைத் துறவிகளென்று (யாரும்) கூறுவதில்லை; காண்பாயாக. சித்தசுத்தியுடைய அதிதீவிர பக்குவிகள் சிவானுபூதி யின்பத்தை முடிவாகவடைதல் தனிப்பட்டு நிற்கும் ஒப்பற்ற துறவறத்தினாலேயே. இவ்வாறு கூறப்பட்ட அதனை விரும்பாதவராது பற்று ஒழியமாட்டாது. (மற்று அவர் செய்கையைக் கூறப்புகின்) ஊர்க்குருவிபோலப் பெண்களின் உடம்பு விருப்ப மயக்கமே மீக்கொண்டு, (இஃதென்னையென வினவுவோர்க்கும்) தலைவிதி தலைவிதியென்று கூறிக்கொண்டு அலைந்து திரிவர் (எனவாம்).

[ “தக்கவர் பராபரவின்பத்தைத் தீர்க்கமொடு சேர்தல் தனியாகு துறவாலே” என்றது—

(𑌨𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌨𑌪𑍍𑌰𑌜𑌯𑌾𑌧𑌨𑍇𑌨𑌤𑍍𑌯𑌾𑌗𑍇
𑌨𑍈𑌕𑍇𑌽𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌮𑌾𑌨𑌶𑍁𑌃 । )

"நகர்மணாநப்ரஜயாதநேநத்யாகே நைகேஅம்ருதத்வமாநசு: ।"

என்னுங் கைவல்யோபநிஷத மந்திர முடிபாக விருக்கின்றது. பொருள்:— "முத்தி கன்மத்தினாலுமில்லை: சந்ததிகளாலுமில்லை: தனத்தினாலுமில்லை: இவற்றைத்துறக்குஞ் சன்னியாச மொன்றினாலேயே பெரியோர் அமிருதத்துவத்தை யடைந்தனர்" என்று ஆசுவலாயனருக்குப் பிரமதேவர் சொல்லியருளினர் எனவாம். முத்தி வேட்போர் உலகவின்பங்களிற் சிறந்த பெண்போக மொழித்தல் வேண்டுமென் றிங்ஙன நூலாசிரிய ரறிவுறுத்துதல்போல—

"ஸத்யேநலப்யஸ்தபஸாஹ்யேஷஆத்மா ஸம்யக்ஜ்ஞாநேந
ப்ரஹ்மசர்யேணநித்யம் । அந்தச்சரீரேஜ்யோதிர்மயோஹி
சுப்ரோயம்பச்யந்தியதய: க்ஷீணதோஷா: ||"

என்று முண்டகோபநிஷத்து மறிவுறுக்கின்றது. தமிழ்:— "தோடமில்லாத யதிகள் சரீரத்தினுள்ளே சோதிமயனைத் தூய்மையோனைத் தரிசிக்கவுள்ள இவன் (=ஈசன்) சத்தியம், தபசு, ஆன்ம மெய்ஞ்ஞானம், நித்தியப் பிரமசரியம் இவைகளா லடையப்படுவன்" எனவாம். பிரமசரியம்= மகடூஉ சம்பந்தமின்மை. மகடூஉ=பெண்.

"அஸம்பாஷேத்ஸ்த்ரியாகாஞ்சித் பூர்வத்ருஷ்டாஞ்சநஸ்மரேத் ।
அதாஞ்சவர்ஜயேத்தாஸாம் நபச்யேல்லிகிதாமபி ॥

ஏதச்சதுஷ்டயம்மோஹாத் ஸ்த்ரீணமாசரதோயதே: ।
சித்தம்விக்ரியதேவச்யம் தத்விகாராத்ப்ரணச்யதி ||"

என்று நாரதபரிவ்ராஜகோபநிஷத்தின் ச - ம் உபதேசமு நவில்கின்றது. தமிழ்:— (க) மகடூஉவுடன்பேசுதல் ஆகாது: (உ) முன்னே கண்ணுற்ற எம்மகடூஉவின் ஞாபகமும் ஆகாது: (ந) மகடூஉவைப் பற்றிய கதைகளையும் (படியாமே கேளாமே) விடல்வேண்டும்: (ச) மகடூஉவுருவச் சித்திரிப்புக்களையும் உற்றுநோக்கொணாது. மாதர் சம்பந்தமான இந்நான்கனையும் மோகத்தால் ஆசரிக்கும் யதியினது சித்தம் அவசியம் விகாரத்தையடையும். எனவாம். அவசியம் விகாரத்தையடையு மென்றமையானும்,

(அந்நஸ்யபரிபாகேந ரஸவ்ருத்தி:ப்ரஜாயதே ।
ரஸேவ்ருத்திம்கதேநித்யம் வர்த்தந்தேதாதவஸ்ததா ||

தாதூநாம்வர்த்தநேநைவ ப்ரபோதம்வர்த்ததேதநௌ ।
தஹ்யந்தேஸர்வபாபாநி ஜந்மகோட்யார்ஜிதாநிச || )

"அன்னம் நன்கு சீரணமாயின் இரசவிருத்தியுண்டாம்: இரச விருத்தியினாலே தாதுவிருத்தியாம்: தாதுவிருத்தியினாற் சரீரத்திற் பிரபோதம் (=ஞானம்) விருத்தியாம்: பல சனனங்களில் ஈட்டப் பட்ட சருவபாவங்களுந் தகிக்கப்பட்டுப்போம்" என்று வராஹோப நிஷத்தின் ரு - ம் அத்தியாயம் பகர்கின்றமையானுந் தாதுவிருத்தி யைபழித்து அறிவைக்கெடுக்கும் பெண் நசையையுடையார் யாவரே யாயினும் அவர் முத்திசாதன சித்தசுத்தியும் பிரபோதமும் பேசு தல் போலியேயாமென்பது சாதிக்கப்படும். திருநாவுக்கரசுகளது தமிழ்மறை— திருக்கடவூர்ப்பதிகத்திற் "சேலினே ரனைய கண்ணார் திறம்விட்டுச் சிவனுக் கன்பாய்" என் றோதுவதூஉம் மேற்காட் டப்பட்ட வடமொழிமறை மாற்றங்களோடுவைத் தெண்ணத்தக்க தன்றோ. இவற்றையெல்லாம் உய்த்துநோக்கியே "ஞண்டுச் சூல்போ லொண்டொடி விழைவு" என்று ஞானவாக்கியத்துங் கூறலாயினர்.

பெண் - என்பது விரும்பப்படுவளெனும் பொருளுடைத்து. உடம்பு - மறைத்துமொழி கிளவி. ] (௬)

கலிவிருத்தம்.

வீணான விடயத்தை யும்பந்த மேவா
மாணாரு மமுதத்தை யுங்கருது மாந்தர்
நாணாதன் வெயிலுக்கு மிருளுக்கு நசைசெய்
கோணான புல்லுணர்வு கொண்டவனை யொப்பார்.

வீணான விடய நுகர்ச்சியையும், பாசம்பொருந்தா மாண்பார்ந்த மோட்சத்தையும் ஏக காலத்திலடைய விரும்பு மானுடர்—சூரிய னுடைய பிரகாசத்துக்கும், இருளுக்கும் ஆசைப்படுகின்ற வக்கிர கதியான அற்ப புத்தியுடையோரை யொப்பார்.

[ மாண் = மாண்பு ; சூடாமணிநிகண்டு காண்க. மாந்தர் - ஒருமையின் றி யெக்காலும் பன்மையிலேயே வருமொரு பெயர். ] (எ)

பொல்லாத கழுதுள்ள தெனுமிற் புலத்தை
அல்லான பின்னெவரு மடையார்க ளதுபோற்
கொல்லாது கொல்லும் பிறப்பைக் குறிப்பார்
எல்லாரு மதன்மூல விழிவிற்கு ணுழையார்.

கொடிய பேய்வாழு மிடமென்னப்படுமோர் கிருகத்தில் இராப்பொழுது வந்த பின்னர் எவரும் பிரவேசியார். அதுபோலக்

கொல்லாமற் கொல்லுஞ் சனன பயத்தை நிதானிப்போ ரனைவரும் அச் சனனத்தின் மூலமாகிய இழிகன்மங்களிற் பிரவேசியார்.

[சனனம் மரணத்தையுந் தருவதொன் றாகலின் அது, கொல்லும் பிறப்பெனப்படும். அவ்வாறு கொல்லுவது ஒருமுறை யென்பதின்றிப் பன்முறையாய்ப் பற்பல பேதமாயிருத்தலிற் "கொல்லாது கொல்லும் பிறப்பு" எனப்பட்டது. எனவே, இனியொரு பிறப்புமின்றென வரையறை செய்து கொல்லும் பிறப்பு இங்குணர்த்து முண்மைத்துறவே யென்பதூஉம் அருத்தாபத்தியாற் கொள்ளக் கிடக்கின்றது.] (அ)

ஈன்றாரை விடலாவ தோவென்னி லீன்றாள்
நான்றா னெனச்சொல்ல நடுவேது முண்டோ
சான்றான வருண்மெய்த்த தாய்தந்தை யாகும்
ஆன்றோ ரடைந்தபய னத்தனையு மோர்தி.

பெற்றோரை விடல் நியாயமோ வென்னில்,— அனாதியாகப் பெற்றவள் நானொருத்தியேயென்று சொல்ல ஏதாவது நியாயமுண்டோ? உலகத் தோற்ற நிலை யிறுதிகட்குச் சான்றாகநிற்குந் திருவருளே உண்மையான தாய் தந்தையாம். அதனை அவ் வண்ணங் கொண்டு நம்பிநின்ற பெரியோரடைந்த பிரயோசனங்கள் அவ்வளவையும் நன்றாகக் கருதுவாயாக.

[ஈன்றாரை விடலாமென்பது— (ஶிகாம்யஜ்ஞோபவீதம்பிதரம் புத்ரம்களத்ரம் கர்மசாத்யயநம் மந்த்ராந்தரம் விஸ்ருஜ்யைவ பரிவ்ராஜத்யாத்மவித்) "சிகாம்யஜ்ஞோபவீதம்பிதரம் புத்ரம்களத்ரம் கர்மசாத்யயநம் மந்த்ராந்தரம் விஸ்ருஜ்யைவ பரிவ்ராஜத்யாத்மவித்" என்னுஞ் சுருதிகொண்டு வற்புறுத்தப்படும். நாரதபரிவ்ராஜகோபநிஷத்தின் ரு - ம் உபதேசத்தி லுள்ள இதன்றமிழ்:— "சிகை, யஞ்ஞோபவீதம்(=பூணூல்), தந்தை, தனயர், மனைவி, கன்மம், அத்தியயனம், பிற மந்திரங்கள் ஆகிய விவற்றை விட்டுத் துறவியாகின்றனன்" எனவாம். திருநாவுக்கரசுகளது தமிழ்மறையில்— தந்தையார் தாயா ருடன்பிறந்தார் தாரமார் புத்திரரார் தாந்தாமாரே—வந்தவா றெங்ஙனே போமா றேதே மாயமா மிதற்கேது மகிழ வேண்டாம்" என வருதலும் ஈங்குச் சிந்திக்கற் பாற்று.

"உண்டோ" என்பதில் ஓ - எதிர்மறைப் பொருட்டு. ஓர்தி - ஏவலொருமை முற்று; ஓர் - பகுதி, இ - விகுதி, த் - எழுத்துப்பேறு.] (கு)

மனைமக்க ளென்செய்வர் துறவுக்கு வந்தால்
எனையொப்ப வவண்யாரு மிலையென்னி லெம்மான்
தனைவிட்ட வறிவீனர் தமைமெச் சகந்தை
யினையொக்கு மதுதீர்வை யிலையே குழந்தாய்.

யான் துறவறநிலைக்கு வந்துவிடின் என்னுடைய மனைவியு மக்களும் அன்ன வத்திராதிகளுக் கென்செய்வர்; அவற்றைச் சம்பாதித்து அவர்கட்குக் கொடுக்க என்னைப்போல யாரு மங்கில்லையே யென்று மகனே! நீ கூறில், இஃது எம்முடைய ஆன்மநாயகனை மறந்திருக்கும் அறிவீனர்கள் தங்கள் சாமர்த்தியத்தால் அனேக காரியங்களை முடித்து விடுவதாகத் தங்களைத் தாங்களே புகழ்ந்து பேசிக்கொள்ளும் அகங்கார வார்த்தைகளை யொக்குமேயன்றி ஆன்றோர் கூறும் முடிவுரையென விருப்பதில்லை.

[மனைவியையும், மக்களையும் விட்டு நீங்கலா மென்பதற்காய சுருதி மேலைச்செய்யு ளுரைக்கண்ணேயே வந்துளது.

மனை = மனைவி. மனைமக்கள் - உம்மைத்தொகை.] (க0)

புத்தான நரகேக வேவந்த புத்ரர்
செத்தார்கள் கிரியைபல செய்வார்க ளென்னிற்
கத்தாவை யடையாத கன்மபல மெல்லாம்
வித்தார வுவர்வீசு வெண்டிரையை யொக்கும்.

புத்தென்னு நரகம் தாய் தந்தையர்க் கெய்தாதபடி யுற்பவித்த புத்திரர்கள், இறந்தார்க்கு நற்கதியுண்டாகு நிமித்தம் அபரக்கிரியைகள் பலவுஞ் செய்வரே யென்னில், கடவுளையடையும் பலனல்லாத மற்றைக் காமிய பலன்களெல்லாம் பெரிய சமுத்திரமானது ஒப்வின்றி வீசுகின்ற தரங்கங்களைப்போற் பிரவாகானுதிபாய்வருஞ் சனன மரண காரணமாகவே யிருக்கும்.

[புத்ரர் - வடநூன் முடிபு. வார் = நீர்; கடலுக் கிலக்கணை.] (கக)

பிதிர்பூசை யிலதேல்வெல் பிதிர்சாப மெய்தும்
அதினலோர் சன்யாச மாகா தெனிற்கேள்
அதியோக சிவஞானி யைத்தென் புலத்தார்
பதியாக நினைவார்கள் பணிதேவர் பணிவார்.

பிதிரர் பூசனையை யாருஞ் செய்யாமல் விடுவரேல் அவ்வவ் வமிசத்தினரை அவ்வப் பிதிரராலிடப்படுந் தடையற்ற சாபம் வந்தடையு மாகலிற் றனியாகு சன்னியாசங் கூடாதென்னின், யான் கூறுவதைக் கேள்; அத்தியாச்சிரம யோகத்தையடைந்த சிவஞானியை (அந்தப்) பிதிரர் ஈசுவரனாகக்கொள்வர். (அவரால்) வணங்கப்பட்ட தேவரும் அவரை வணங்குவர்.

[இச்செய்யுள்— அடியிற் காட்டப்படு சுருதியாதி பிரமாணங்களை யுட்கொண் டுளது. 'ஸ்வதா' என்னும் மந்திரங் கொண்டு பிதிரர்க்கு நல்கும் ஆகுதியையுந் துறவி செய்யவேண்டியதின்றென்பது (நிஸ்ஸ்வாகார ஏவச) "நிஸ்ஸ்வதாகார ஏவச" என்னும் நாரதபரிவ்ராஜகோபநிஷத்தின் ரு - ம் உபதேசு வசனத்தா லறியப்படுதலிற் "பிதிர்பூசை யிலதேல்" என்னும் வியவகாரம் ஈண்டுத் தொடுக்கப்படுவதாயிற்று.

"ஸயதி பித்ருலோக காமோபவதி ஸங்கல்பா
தேவாஸ்ய பிதரஸ் ஸமுத்திஷ்டந்தி"

என்னுஞ் சாங்தோக்யோபநிஷத்தின் அ - ம் பிரபாடக வசனம் "முத்தனுயுள்ளான் பிதிர்லோகத்தைவிரும்பின் அவனது சங்கற்ப மாத்திரையினாலேயே பிதிரர் (அவனை) எதிர்கொள்ளுமா றெழுகின்றனர்" எனுந்தமிழைத் தருகின்றது. இப்படலத்து க - ன் உரைக்கட் காட்டப்பட்டதாய் "ஓங்கார இரதத்திலேறி விட்டுணுவைச் சாரதியாகக்கொண்டு பிரமலோகபதத்தைத் தேடிச் செல்வான் உருத்திர ஆராதனையிற் பேரன்புடையான்" எனும் பொருளைப் பயக்கின்றதாயுள்ள சுருதியும், "பரம வத்துவித சைவமெய்ஞ் ஞானி பாரளந் தவன்முத லோரால்—வரமுறப் பூசை புரிந்திடத் தக்கோன்" என்று சூதசங்கிதையும், "சிவடுண்டி தவயோகன்றான்... உடலை விடுத்தான்...கண்ணுதலார் விமானம்விட வதனிலேறி அனப்பிரமன் விண்டுவே முதல தேவ ரதிகவரி சைகள்செய்தே யருகுசூழ" என்று சிவரகசியத்தின் ரு - ம் அமிசத்து உ - ங் காண்டத்து சஎ - ஞ் சருக்கமுங் கூறுகின்றன; அறிக.

ஓர் - ஒரு என்பது உகரம்பெறும னின்றது; ஒன்றென்பது ஈறு கெட்டு, ன் - ர் ஆயவழி உகரம்பெறுவதே 'ஒரு'.] (க௨)

சரியைக்கு ணின்றே சதாமுத்தி பெறுவேன்
குருசொற்ற வணமென்று கூறத் துணிந்தாற்

புரிவுற்ற வதனுலொர் புலராத மோக்கம்
வருகைக்கு வழியின்று சாலோகம் வருமால்.

குரு கூறியருளியபடி யான் சரியாபாதத்தைக் கடவாமல் அதி னின்றுகொண்டே நித்தியமுத்தியைப் பெறுவேனென்று (நீ) சொல்லத்துணிந்தால், உன்னல் விரும்பப்பட்ட அவ்வனுட்டானத் தால் எக்காலத்தும் அழியா நிலைமைத்தாகிய மோட்சம் வருதற்கு வழியில்லை. பதமுத்தியிற் சாலோகந்தான் வரும்.

[சரிகை யிற்றென்பதும், அதன் பயனும்—

"ஆவலாலெமக்காமலர்மரங்களாக்கலம்மலர்பறித்தலம்மலரால்
தாவிலாவகைத்தார்பலசமைத்தறணப்பிலெம்புகழ்சாற்றலன்புடனும்
மேவுமாலயமலகிடன்மெழுகல்விளங்கநல்விளக்கிடுதலெம்மடியார்க்
கேவலானவைசெய்யுமிச்சரியையியற்றவல்லவர்க்கெம்முலகளிப்போம்."

என்னுந் திருவாதவூரர்புராணச் செய்யுளினறிக. இச் செய்யுட் கண்ணும், இதனைத் தொடர்ந்துவரு செய்யுட்கண்ணு மிருக்குஞ் செய்திகள் திருவாதவூரடிகட்குச் சிவபிரான் ஆசாரியமூர்த்தியா யிருந் தருளியனவாக வுள.] (கரு)

கிரியைக்கு ணின்றே கெடாமுத்தி பெறுவேன்
விரகற்ற துறவெற்கு வெகுதூர மென்னிற்
பரிவுற்ற வதனுலொர் பவமற்ற மோக்கம்
வருகைக்கு வழியின்று சாமீபம் வருமால்.

வைராக்கிய முள்ளோர்க்குரிய துறவறமானது அவ் வைராக் கியமில்லாவெனக்கு வெகுதூரத் துள்ளதாகலின், கிரியாபாதத்தைக் கடவாமல் அதி னின்றுகொண்டே நித்தியமுத்தியைப் பெறுவே னென்னில், அன்புகொண்டு செய்யப்படும் அவ்வனுட்டானத்தால் நிர்விகாரமுத்தி யுண்டாதற்கு வழியில்லை. சாமீப பதப்பிராத்தி தான் வரும்.

[கிரியை யிற்றென்பதும், அதன்பயனும்—

"கந்தவர்க்கமுங்கிளர்மணப்புகையுங்கவின்கொடீபமும்புனிதமஞ்சனமுங்
கொந்தவிழ்ந்தநன்மலருமற்றுளவுங்கொண்டுமொயையின்குணத்திலொன்றில
ஐந்துசுத்திசெய்தகம்புறமிறைஞ்சியங்கியின்கடன்கழித்தருள்வழிநின் [ராய்
றிந்தநற்பெருங்கிரியையன்புடனேயியற்றவல்லவரெம்மருங்கிருப்பார்."

என்னுந் திருவாதவூரர்புராணச் செய்யுளினறிக. இதனிற்போந்த ஐந்து சுத்தி.—பூதசுத்தி, ஆன்மசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தி யென்பன; அங்கியின் கடன்=அக்கினிகாரியம்.

தன்னிலையினின்றும் வேறுபடா வீடுபேறு "பவமற்றமோக்கம்" எனப்பட்டது; பவம்=சனிப்பு. பரிவு=அன்பு.] (கச)

யோகுக்கு ணின்றேமெய் யோர்முத்தி பெறுவேன்
தேகத்தை யழியாது செய்தென்பை யேனீ
பாகிக்க விடனற்ற பரமுத்தி யதனால்
ஏகப்ப தவையின்று சாரூப மேய்வை.

யோகமார்க்கத்தைக்கடவாமல் அதினின்றுகொண்டே தேகத்தை யழியாத்தன்மைய தாக்கிக்கொண்டு பெரியோரெய்திய முத்தியை யடைவேனென்று நீகூறின், அம் மார்க்கத்தினால் தேச கால வத்து பரிச்சேதமென்னும் பாகுபாடுசெய்தற் கிடமில்லாத பரமுத்தியில் நீ பிரவேசிக்க மார்க்கமில்லை. சாரூபத்தைத்தான் சார்வாய்.

[யோகம் இற்றென்பதும், அதன்பயனும்—

"மூக்குணம்புலனைந்துடனடக்கிமூலவாயுவையெழுப்பிருவழியைச் [போய்த்
சிக்கெனும்படியடைத்தொருவழியைத்திறந்துதாண்டவச்சிலம்பொலியுடன்
தக்கவஞ்செழுத்தோரெழுத்துருவாந்தன்மைகண்டருடரும்பெருவெளிக்கே
புக்கழுந்தினரெமதுருப்பெறுவர்புவியில்வேட்டுவனெடுத்தமென்புழுப்போல்"

என்னுந் திருவாதவூரர்புராணச் செய்யுளினறிக. தேசம், காலம், வத்துவெனப் பாகுபாடு செய்யப்படு பரிச்சேதங்களில்லாத பரிபூரணமே பரமுத்தியாகலின் அது, "பாகிக்க விடனற்ற பரமுத்தி" எனப்பட்டது. அதர்வவேத மஹாநாராயணோபநிஷதம்— (தேசகாலவஸ்துத: பரிச்சேதரஹிதம்ப்ரஹ்ம । ஸர்வபரிபூர்ணம்ப்ரஹ்ம ॥) "தேசதஃகாலதோவஸ்துதஃ பரிச்சேதரஹிதம்ப்ரஹ்ம । ஸர்வபரிபூர்ணம்ப்ரஹ்ம ॥" என்றும், நிராலம்போபநிஷதம்—(தேசகாலவஸ்துபரிச்சேதராஹித்ய சிந்மாத்ர ஸ்வரூபம்) "தேசகாலவஸ்துபரிச்சேத ராஹித்யசிந்மாத்ர ஸ்வரூபம்" என்றும் உரைத்தலுமது. (நித்யம் காலாநவச்சேதா த்வைதத்யாந்நப்ரதேசகம் ।) "நித்யம் காலாநவச்சேதா த்வைதத்யாந்நப்ரதேசகம் ।" என்று மிருகேந்த்ராகம பதிலக்ஷண பரீக்ஷாப்ரகரணம்பகர்தலும்

இம்முடியி லுளது. இவ்விடத்துண்டு அவ்விடத்தின்றென்னு முடிவு தேசபரிச்சேதம். இக்காலத்துண்டு அக்காலத்தின்றென்னு முடிவு காலபரிச்சேதம். வியாபக வியாப்பிய அத்துவிதங் கூறுமே இப்பொருள் அப்பொருளென்னுந் துவித முடிவு வத்துபரிச்சேதம். பரிச்சேதம்=முடிவு.

என்பையேல் அதனல் நீ எனவியைக்க. பரமுத்தியில் என்னும் ஏழனுருபு விகாரத்தாற் றெக்கது. பதவை=வழி; பிங்கலநிகண்டு காண்க. சாரூபத்தை - என இரண்டனுருபு விரித்துரைக்க. ஏய்தல்=பொருந்தல்; "வாய்ந்தபூந்தராய் ஏய்ந்தனே" என்னுந் தமிழ்மறைக் கூற்றினுணர்க.] (கரு)

சாரூப மேஞான சாயுச்ய மென்னிற்
சீராய கிரியையினர் செப்பார்கொ லதுபோற்
பேராயி ரப்பரமர் பேசாது பேசித்
தாராத பொருடந்த தன்மைதனை முன்னாய்.

சாரூபமே ஞானத்தாலடையுஞ் சாயுச்சிய மென்று நீ கூறிற் சிறப்போடு கூடிய கிரியாமார்க்கத்தினர் தாங்களடைய விருக்குஞ் சாமீபத்தையும் நீ கூறியது போல வுயர்த்திக்கூற மாட்டார்களோ? ஆயிர நாமங்களையுடைய பரமேசுரனுர் கல்லாலி னடியிலிருந்து சொல்லாமற் சொல்லி, அன்று காறு மளிக்கப்படாதுள்ள மெய்ப்பொருளை யங்ஙன மளித்தருளிய இரகசியத்தை யோசித்துப்பார்.

[இப்படலத்து க - ன் உரையிற் காட்டப்பட்ட தைத்திரீயாருணசாகை நாராயண வசனங்களில் "ஆதித்யஸ்ய ஸாயுஜ்யம்" "சந்த்ரமஸஸ் ஸாயுஜ்யம்" என்பனவெய்துதல் கேட்கப்படுதலின், அதுகொண்டே சாரூபத்தைச் சாயுச்சியமென்று கூறலாமேயென்னு மொரு வாதமுஞ் சீடனது பரமாக ஈண்டெடுத்துக் கொள்ளப்பட்டது. தோழர்க்குரிய வுரிமைபோல அவ்வத் தேவர்களோ டொத்தவடிவும் ஒத்த அணிகலனும் ஒத்தபோகமும் பெறீஇ வாழ்தல் சாரூபமென்றும், அங்ஙனம் வாழ்தன்மாத்திரையே யன்றி அவ்வத் தேவர்களா னடத்தப்படு நீர்மையில் அவ்வத் தேவ ரதிகாரங்களையுஞ் செய்துகொண்டு வாழ்தல் சாயுச்சியமென்றுங் கூறு மளவையுட்பட்டதே அச்சுருதியிற் போந்த சாயுச்சியமாகலின் அது கருதி அகண்டத்துவ சிவஞான சாயுச்சியத்தையுஞ் சாரூபமாக நிச்சயஞ் செய்து கோடற்கு எத்துணையுமிடனின் றென்பார் "பரமர் பேசாது பேசித் தாராத பொருடந்த தன்மைதனை முன்னாய்" என்றார். பெத்த

நிலையினர் தரிசிக்கக் கூடாப் பிரமானுபவ வத்துவை அங்ஙனம் வெளிப்படுத்தியருளிய இரகசியமே "தாராத பொருடந்த தன்மை" எனப்பட்டது. இச்செய்யுளி லறிவுறுத்தப்படுவது சின்முத்திரை யாதலின், முற்படலத்து க0எ - ஞ் செய்யுளுரைகளை நோக்குக.

பொருளை - என்னும் இரண்டனுருபு விகாரத்தாற் றொக்கது. ] (கசூ)

**பொய்யாத வறிவொன்றை யேயோர்தல் பொருளென்**
**றையான னற்கினிய வறுமா முகத்தே**
**மெய்யா யுரைத்தவகிர் மேலென்னின் மந்தஞ்**
**செய்யோக மெவ்வா று திணிமுத்தி நல்கும்.**

மறையாதொளிரும் அகண்ட ஞானத்தையறிதலே பிரணவத்தின் பொருளென்று பஞ்சமுகமுடைய பரமசிவனுர்க்கு அவருடைய பிரியமகவாயுள்ள சண்முகப் பெருந்தெய்வம் உண்மையாக வுரைத்த நெறி, உத்தமோத்தம மார்க்கமாகிற் பரிபூரணானந்தத்தைக் காட்டாமே இழியின்பு காட்டும் போகம் எப்படி (அம்) மகத்துவ மோட்சத்தைக் கொடுக்கும்.

[ பாயிரத்து சூ - ன் உரையில் விளக்கியவாறு அறுமுகக்கடவுள் பாற் சிவபெருமான் பிரணவார்த்தங் கேட்டபோது அக்கடவுளாற் சொல்லப்பட்டமையே இங்கெடுத்துக் கூறப்படுவதாயிற்று. அச்சொல்லிற் போந்த பொருள் "அறிவை யறிவது பொருளென வருளிய—பெருமாளே" என்று அருணகிரிநாதப்பெருமான் "குமர குருபர குணதர நிசிசரர் திமிர தினகர சரவண பவகிரி" என்றற் றொடக்கத்துத் திருப்புகழில் விளக்கப்பட்டதாதலின் அதுவே "பொய்யாத வறிவொன்றை யேயோர்தல் பொருள்" என்று ஈண்டு ஞான விசேடம்பற்றி மேற்கோளாயெடுத்துக் காட்டப்படுவதாயிற்று. பரிபூரணானந்தங் காட்டாது இழியின்பு காட்டுவது யோகமாகலின் "மந்தஞ்செய் யோகம்" என்றார்; இது—

" கருமிகட் கீகை நிற்குங் கலந்தொரு பிறப்பிற் கற்ற
பெரியராந் தவத்தோர்க் கீகை பிறப்பொரு நூறு நிற்கும்
அரியமந் திரத்தார்க் கீகை யாயிரம் பிறப்பு நிற்கும்
உரியயோ கிக்கு ஞானிக் கூழிபே ரூழி நிற்கும். "

என்னுஞ் சிவதருமோத்தர ஆகமச் செய்யுளகத்தே பகிர்முக ஆராதன கருமிகளினு முயர்ந்தோர் உடல்வருந்த விரதம்புரி தவசிகள்: இத் தவசிகளினு முயர்ந்தோர் மந்திரஞ் செபிப்போர்; இச்

செபமுடையோரினு முயர்ந்த யோகிகட்குதவுபலன் பிரமகற்ப ஊழியளவாம்; ஞானிகட்குதவுபலன் மா சங்காரப்பேரூழியளவா மென வுறு பொருட்கண்ணும் பெறப்படுகின்றது. முற்செய்யுளிற் சாதிக்கப்பட்ட முடிபையே வேறோராற்றானும் வலியுறுத்தற் கெழுந்தது இச்செய்யு ளென்க. இதுவேயுமன்றிப் பல்லாற்றானும் யோகமார்க்க மொன்றனையே விதந்து கூறுவார் பல்லோராகலின் அவ்வாறெல்லா மெடுத்துக்கொண்டு கூறு நியாயங்களும் உள - ஞ் செய்யுள் காறும் பெறப்படுகின்றன.

திணிமுத்தி நல்கா தென்பது குறிப்பெச்சம். அத் திணிமுத்தி யெனச் சுட்டு வருவிக்க. வகிர் = வழி.] (கஎ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மூச்சடக்கும் யோகதனு லுடலூக்க
மாய்நெடுநாண் முடிவின் றெங்கும்
ஆச்சரியஞ் சொலவுமினுஞ் சடமதனு
லொருகாலத் தழியும் பின்னும்
பூச்சனனம் வருமிஙனம் புசுண்டர்கதை
புகலவெனிற் போக்கு மீட்சிப்
பேச்சும்வரு மவர் நிலைமை வேறெனவும்
வாசிட்டம் பேசு மன்றே.

வாயுவின் கமனுகமனங்களைத் தடுத்து வசப்படுத்தும் வாசி யோகத்தினுற் றேகந்திடப்பட்டு நெடுங்காலம் எல்லாரும் அதிசயம் பேசத்தக்க சித்திகளுடன் வாழ்ந்திருக்கினும் அவ்வாயுவுந் தேக முஞ் சடமாகையால் ஒரு காலத்திற் றேகமழிந்துவிடும். அஃதவ்வா றழியவே இந் நிலவுலகின்கண் மறுபடி பிறப்பெய்தும். இங்ஙனம் சாவில்லாத புசுண்டயோகியார் கதையைச் சொல்லத் துணிந்தால் அக் கதையாலும் ஒருவிதப் போக்கு மீட்சிச்செய்தி யேற்படும். அன்றியும், அப் புசுண்டயோகியார் நிலைமை—யோகத்துக்கும் ஞானத்துக்கும் வேறான வொன்றென்றும் இக் கதையைக்கூறும் அவ் வாசிட்டமே சொல்லும்.

[ வாசிட்டமே - என ஏகாரங்கூட்டியுரைக்க. அன்று, ஏ- அசை. ] (கஅ)

கும்பகத்தி னின்றரிய பரவெளியைக்
காண்பலெனக் கூறு வாயேற்

றம்பதியி னிறுவியுணர் தற்போத
மங்கில்லை சகல மாய
கம்பிதமின் றனந்தப் பரவெளியைக்
காணறிவு காண மாட்டா
தம்பரிச தாய்நின்றங் கறிவலெனிற்
றற்போத மடங்கா தந்தோ.

பிராணுயாமத்தின் பயனுகிய பூரண கும்பகத்திருந்து பர வெளியைத் தரிசிப்பேனென்று நீ கூறுவாயாகிற் பிராணவாயுவோ டுங் கூடியுள்ள ஆன்மாவானது தம்பதியருளில் நிறுத்தி யறிவதை யறிய அறிவாகியபோதம் அக் கும்பகத்திலில்லை. சகலாவத்தை யாகிய அசைவுமில்லை. (ஆகலின், மூர்ச்சைக்கொப்பாக வெண்ணப் படும்) அந் நிலைக்களத்தே பரமாகாசத்தைக் காணும்படியான ஞானம் உதயமாக மாட்டாது. அவ்விடத்தே ஓரழகிய வுணர்ச்சி யாய் நின்றறிவே னென்னில், ஐயோ! தற்போத மன்ருே சீவித் திருக்கும்.

[தற்போத மடங்காது: ஆகலின் அஞ்ஞானியாகவே யிருப்பாய் என்பது குறிப்பெச்சம். அந்தோ - இரக்கக்குறிப் பிடைச்சொல். உணர எனப் படுவது உணர் - என நின்றது. கம்பிதம் = அசைவு. பரிசு = குணம்; இஃ திங்கே உணர்ச்சியை யுணர்த்திநிற்ப தாயிற்று.] (௧௧)

அப்போதந் தனையடக்க வுன்ஞலே
யாகாநல் லருளைச் சாரின்
எப்போது மடங்கியறி வேயுறுவா
யதனுன்மெய் யிறையைக் காண்பாய்
துப்பேறக் குறங்குகுத்தி யுடன்மறந்த
தாய்நினையிற் றுயில்வா ராபோல்
ஒப்பாத வளியோகி லறிவான
வானந்த வுறக்க மின்றே.

அந்தப் போதத்தை யடக்குங் காரியமும் உன்னுலேயாவ தன்று. அனுக்கிரகிக்கத் தக்க திருவருளைச் சார்ந்தாற் கருவிகளுஞ் சீவபோதமுங் கழலுமாறு நீ அடங்கி அறிவே யுருவாயிருக்கு நிலை யினையடைவாய். அந் நிலையிலிருக்கு நீ, அந்தத் திருவருளாற்றுனே உண்மையான சிவசொரூபத்தையுங் காண்பாய். சிவப்பு ஏறும்படி

தன்னுடைய தொடையைத் தானே மர்த்தனஞ் செய்துகொண்டு தன்னை மறக்குநிலை வந்ததாகப் பாவிக்கிற் றுயில் வாராது; அது போல, ஞானிகளா லங்கீகரிக்கப்படாத் துன்பமுள்ள வாயுயோகத்தால் அறிதுயிலாகிய ஆனந்தநித்திரை வருவதில்லை.

[ "வளியோகு" என்றதனால் மூச்சைப்பிடித்துச்செய்யுங் கன்மயோகத்தை விசேடித்துரைப்பார் கோட்பாடே யிங்கு மறுத்துரைக்கப்படுகிறதென்ப தறியற்பாற்று.

" துருத்தி யெனுர்படி கும்பித்து வாயுவைச் சுற்றிமுறித்
தருத்தி யுடம்பை யொறுக்கிலென் ஞஞ்சிவ யோகமெனுங்
குருத்தை யறிந்து முகமா றுடைக்குரு நாதன்சொன்ன
கருத்தை மனத்தி லிருத்துங்கண் டீர்முத்தி கைகண்டதே."

என்று அருணகிரிநாதப்பெருமானுங் கூறியுள்ளார். 'ஆகாது' 'வாராது' என்னுந் துவ்வீறுகள் விகாரத்தாற் றொக்கன. ஆய் = ஆக என்பதன் றிரிபு. வருவது - என்பது சொல்லொழிபு. வளி = வாயு.] (உ0)

அணிமாதி யட்டசித்தி யதிலுளவென்
றுயர்த்துவையே லவற்றான் மோகம்
பணியாதோ ருருமறைத்தோ ருருக்காட்ட
லாதார பதுமந் தோறும்
மணியரவு போலேறி யொன்றிழிய
வொன்றடைதன் மாயை யாக்கை
நணுகனன வாதியுறல் காண்டலா
லெக்காலு நலனு காதே.

அணிமாமுதலிய எட்டுச் சித்திகளும் அந்த யோகமார்க்கத்திற்றா னுள்ளனவென்று அந்த யோகத்தைச் சிரேட்டமாகக் கூறுவாயாயின், அவற்றால் அரிசட்வர்க்கத்தி லொன்றாகிய மோகமென்னுந்தோட மடங்கமாட்டாது. மூலாதாரம் முதலிய ஆதார கமலங்கள் தோறும் அழகிய சர்ப்பம் மேலேறிச்செல்வதுபோ லேறி ஓரிடமிழிய வோரிடமடைதலும், (ஆங்காங்குச் சிந்திக்குமாறுறு) ஆதார மூர்த்திக ளுருவங்களுள் ஒன்றை மறைத்து ஒன்றைக்காட்டுதலும், காரண சரீர மாயையினுள் அமிழ்ந்திக்கிடத்தலும், (மீளத்திரும்பும் வழிச்) சாக்கிரம் முதலிய அவத்தைகளை யடைதலுமாகிய இவ்விகாரங்க ளேற்படலால் எக்காலத்தும் அந்தயோகம் உத்தம பலனுள்ளதாகாது.

[அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் ஆகிய எட்டுமே அணிமாதி அட்டசித்தி. அணிமா = அணுவாதல், மகிமா = பெரிதாதல், இலகிமா = இலேசாதல், கரிமா = பாரமாதல், பிராத்தி = விரும்பிய வுலகடைதல், பிராகாமியம் = விரும்பியவற்றை யடைத்தல், ஈசத்துவம் = முத்தொழிலிழைத்தல், வசித்துவம் = யாவரையும் யாவற்றையுந் தன்வயமாக்கல் எனவாம். இவற்றுண் முன்னைய நான்குந் தேகசித்தியும், பின்னையவைந்தும் அந்தக்கரண சித்தியுமாம். தேகசித்தியிற் பிரமனுலகங்காறும் வியாபியாய் நிற்கு மகிமாவே விசுவரூபம். இவ்வெட்டாலும் மோகமடங்கமாட்டாது; பந்தமேயா மென்பது—

(அணிமாத்யஷ்டைச்வர்யாசா ஸித்தஸங்கல்போபந்தஃ)

"அணிமாத்யஷ்டைச்வர்யாசா ஸித்தஸங்கல்போபந்தஃ"

என்று நிராலம்போபநிஷத்தும்,

(அநாத்மவிதமுக்தோபி ஸித்திஜாலாநிவாஞ்சதி ।
த்ரவ்யமந்த்ரக்ரியாகால யுக்த்யாப்நோதி முநீச்வர ॥)

"அநாத்மவிதமுக்தோபி ஸித்திஜாலாநிவாஞ்சதி ।
த்ரவ்யமந்த்ரக்ரியாகால யுக்த்யாப்நோதி முநீச்வர ॥"

என்று வராஹோபநிஷத்தின் ௫ - ம் அத்தியாயமுங் கூறுதலினறிக. முறையே தமிழ்:— "அணிமாதி அட்டைசுவரியஞ் சித்திக்கவேண்டுமென்னும் ஆசை பந்தம்" எனவும், "முனீசுவரனே! ஆன்மஞானமில்லாதவனும் முத்தனல்லாதவனும் சித்திகளை விரும்புகிறார்கள்: திரவியம் மந்திரம் கிரியை காலம் யுத்தி ஆகிய இவற்றால் அச் சித்தியை யடைகிறான்" எனவுமாம். குதத்திற்குங் குய்யத்திற்கும் மத்தியிலுள்ள மூலாதாரமும், குய்யத்திலுள்ள சுவாதிட்டானமும், நாபியிலுள்ள மணிபூரகமும், இருதயத்திலுள்ள அநாகதமும், கண்டத்திலுள்ள விசுத்தியும், புருவமத்தியிலுள்ள ஆஞ்ஞையுமாகிய ஆறுமே ஆறாதாரம். இவ் விவரமும், கமலதள விவரமும், பிறவும் யோகசிகை, ஸாமவேத யோகசூடாமணி யென்னும் உபநிஷத்துக்களிற் சொல்லப்படுகின்றன. யஜுர்வேத யோககுண்டலி, ஹம்ஸம், கர்ப்பம் முதலிய உபநிஷத்துக்களிலும் மூலாதாரம் முதலிய ஆறாதாரங்கள் கூறப்பட்டுள.

**ஆதாரயோகத்தைக் கீழ்ப்படுத்தினமையின் நிராதாரயோகமுண்டென்றவாறு. எண்ணும்மைகள் விரித்துரைக்க.]** (௨௧)

கருவிகளை நேதிசெய்து திருவருளாற்
றனையறியுங் கருத்தை நீத்தக்
கருவிகளிற் பிராணனையு மனத்தினையுங்
கனவாதை புரிந்து மேலே
மருவுபிர மத்தொளையி னிறுத்தியதின்
மறையிலறி வாக வென்றும்
நிருமலசம் பூரணவெள் ளிடையாக
நிறுவொரு சமாதி யாமோ.

கருவிகளை இஃதன்று இஃதன்று எனக்கழித்து நிற்கு நிலையிற் றானென்றுந் திருவருளாற் றன்னையறியுமறிவை விட்டுவிட்டு, அக்கருவிகளிற் சேர்ந்தனவாய பிராணவாயுவையும் மனத்தையும் மிகவும் வருத்திச் சிரசின் மேலிடத்துள்ள பிரமரந்திரத்திற் கொடுபோய்த் தாரணைசெய்து, அவ்விடத்தின் மறைந்திருக்கில், அறிவாகவும் எக்காலத்தும் நின்மலப்பெருவெளியாகவும் நிறுத்துகின்ற நிருவிகற்ப சமாதி கைகூடுமோ.

[நேதி - 'இஃதன்று' எனும்பொருளைத் தருமொரு வடசொல். கருவிகளை இஃதன்று, இஃதன்றெனக் கழித்துச்சேறலே "கருவிகளை நேதி செய்து" எனப்பட்டது. ஓகாரம் - எதிர்மறை.] (உஉ)

கரிசுள்ள சடத்தையுறிற் சடமயமன்
றருண்மயமாக் காண்ப துண்டோ
புரிதிறவத் துயர்க்கரும யோகதனுற்
பொலிசடமாம் விந்து நாத
தரிசனமன் றதிகமிலை யவைசுத்த
மாயைவயிற் சனித்த வாகும்
பெரியபொரு ளவையென்று பேசிடிற்சித்
தாந்தங்கள் பிழையென் னுவோ.

குற்றத்தோடு கூடிய சடமயக் கருவிகளைப் பொருந்தினாற் பொருந்திய ஆன்மாவை அச் சடமயமாகக் காண்பதல்லது அருண்மயமாகக் காண்பதுண்டோ? வருந்திச் செய்யுந் துக்கரூபமாகிய அக் கருமத்தாற் பொற்புறு சடமாகிய விந்துநாத தரிசனமுளவாமே யன்றி விசேடபல னென்றுமின்று. (ஏனெனில்) அவ் விந்துநாதங்

கள் சுத்தமாயையிற் றேன்றியனவாகும் (ஆகலின்). அவ் விந்து நாதக் காட்சிகளையே சிவபரம்பொருளென்று கூறிற் சித்தாந்தநூல் கள் (அக்கொள்கை) தவறெனக் கூறுவோ ? (கூறும்).

[ "போகத்தை ஸ்வரத்தோடு சேர்க்கவேண்டும் : பரத்தை ஸ்வரமில்லாததாகப் பாவிக்கவேண்டும்" எனுந் தமிழைத்தருவதாய் (ஸ்வரேணஸம்ஸயேத்யோகம் அஸ்வரம்பாவயேத்பரம்।) "ஸ்வரேண ஸந்தயேத்யோக மஸ்வரம்பாவயேத்பரம்।" என்றுரைக்கப்படுவதா யுள்ள அம்ருதபிந்தூபநிஷத் வசனம்—யோகம் நாதபரியந்தமே யென் பதற்கும், நாதத்தின் மேம்பட்டது பரம்பொருளென்னுஞ் சித்தாந் தத்தை வற்புறுத்துதற்கும் பிரமாணமாயிருத்தல் காண்க. ஸ்வரம்= நாதம். முற்படலத்து எ - ன் உரையிற்காட்டப்பட்ட சிவஞானசித்தி யார் விருத்தத்தில் "வித்தை யாதி— எய்துதத் துவங்க ளேயு மொன்றுமின் றெம்மி றைக்கே" என வருவதும், சங்கற்பநிராக ரணத்தில் "என்றனை கருவிக ளியாவு மசேதனம்" எனவருவதும் அச் சித்தாந்தமே யன்றோ. சுத்தவித்தை, ஈசுரம், சாதாக்கியம், விந்து, நாதம் ஆகிய ரு - தத்துவங்களுமே 'வித்தையாதி யெய்து தத்துவங்கள்' எனப்பட்டன. இன்னுமிதற் கேற்புடை மேற்கோள் கள் முன்னரும் வந்துள்ளன. இன்னும் வந்துழி வந்துழிக் காண்க.

மயமா - மயமாக என்பதன் சிதைவு.] (உரு)

திக்கோடந் தரமுழுது மறையவிழி
  மூடாது திரையிட் டென்னுந்
தக்காரொத் துறுபோத மொடுக்காது
  வாயுவினைத் தடைசெய் மார்க்கம்
எக்காலு மொவ்வாதந் நிலைவிட்ட
  பின்சகல மெழவே செய்து
முக்காடிட் டுறங்கலெனக் கருவியுளே
  மறைத்து முற்போன் மூடா நிற்கும்.

அட்டதிசைகளும் ஆகாசமுந் தோன்றுதிருக்கக் கண்களை மூடாமல், திரைகட்டினுல் யாதுபயன் ? (பிரபஞ்சந்தோன்றுதிருக் கச்) சிவானுபவ முடையாரைப்போன்று பொருந்திய போதத்தை யொடுங்கும்படி செய்யாமல் வாயுவைத்தடுக்குங் கருமயோக மார்க் கம் எக்காலு மங்கீகார மில்லாததேயாகும். (என்னை?) அந்த யோக

நிலை— நிற்குநிலையை விட்டபின்னர்ச் சகலாவத்தையுண்டாகும்படி செய்து, முக்காடிட்டுத் தூங்குவதுபோலப் பிராணவாயு முதலிய கருவித்திரைக்குள்ளே மறைத்து, முன்செய்தவாறே மூடிக்கொண் டிருக்கும் (ஆகலின்).

[ பிரபஞ்சம் மறையவேண்டுமாயிற் சிவபோதமடங்க நிற்பதே தகுதித்தென்பது இச் செய்யுட்கருத்தா யிருக்கின்றது. இப்போதம் இற்றென்பதும், இதன் நிரோதத்திற் பிராணவாயு முதலியனவு மடங்கிவிடுமென்பதும் முற்படலத்து கககக - ன் உரைக்கண் மிழற்றப் பட்டன ; கடைப்பிடிக்க.

என்னும் - இழித்துரைத்தற்கண் வந்தது. என்ன - என்பதன் விகாரமே என ; இஃது உவமவுருபு. ] (உச)

கண்ணிமையா நாட்டமுறல் கருத்தையொரு
தானத்திற் கருத வைத்துப்
பண்ணன்முத லத்தனையு மனமிறவா
நனவாமுற் பகர்போ தந்தான்
எண்ணமதை யொடுக்கிடவு மதையெண்ண
மொடுக்கிடவு மியைவ தின்றால்
விண்ணெனவே யொன்றேடுந் தாக்கற்று
விகற்பொருவ நிற்கி லாகும்.

கண்களை இமையா நாட்டத்தில் வைத்திருத்தல், மனத்தை யொரேயிடத்திற் றங்க நிறுத்தி அங்ஙனம் யாதொன்றை நினைத் திருத்தன் முதலிய வனைத்தும் மனமொடுங்காத சாக்கிராவத்தை யாகும். முற்கூறிய சிவபோதமானது மனத்தை யொடுக்கவும், அதனை மனமொடுக்கவுஞ் சாத்தியப்படுத லில்லை. ஆகாசத்தைப் போல வொன்றேடுந் தாக்குதலின்றி விகற்பநீங்க நிற்கில், நிருவிகற்ப சமாதி கைகூடும்.

[விண்ணெனவே யொன்றேடுந் தாக்கற்று விகற்பொருவ நிற்ற லாவது எல்லாஞ் சிவன்செயலே எற்கொரு சுதந்திரமு மின்றென் னும் உறுதிபிறந்தவழிச் சும்மாவிருத்தலும், அது சுவபாவமாய் நிலைத்தலுமாய சிவபோதவிருத்தி லயமேயாம். இந் நிலையி னின்றக் கால் திருவருள் தீண்டும்; சமாதிநிலை கைகூடுமென்பதே— " நிற்கில் ஆகும் " என் றறிவுறுக்கப்பட்டது.

இறவா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். ஆல் - அசை.] (உரு)

இன்னண நிற் பதுதானே யெழின்ஞான
சிவயோக மென்பார் நீத்தோர்
பன்னெடுநா ளிருக்குதுமென் றடயோகப்
படுகுழியுட் படுத்த தற்காத்
தின்னுமருந் துண்டுழல்வ தெல்லாம்வீ
ணிச்சைநடை சிவஞா னிக்கெந்
நன்னயமு மெண்சித்தி முத்திகளு
முளவருளா னனிதேர் வாயே.

இவ்வாறு நிற்குநிலைதான் நல்ல சிவஞானயோகமென்று உண்மைத் துறவிகளுரைப்பர். அடயோகப் படுகுழிக்கட் கிடந்து இனி, நெடுநாளழியாத தேகத்தோ டிருப்போமென்று அதற்காக வுண்ணும் ஔடதங்களையுமுண் டலைவதெல்லாம் பயனற்ற ஆசைநடையாகும். சிவஞானிக்கு எவ்வித நல்ல நயப்பாடும், எட்டுவித சித்தி முத்திகளுந் திருவருளா லுள்ளன. நன்றாகத் தேர்ந்து கொள்வாயாக.

[அடயோகம் அறிவில் இழிநிலை யென்பதறியா துயர்நிலையென வெண்ணி அதினிற்போர் விடுதலைபெறுவ தரிதாகலின் அதனைப் படுகுழியென்றார்.

(𑌯𑌮𑌾𑌦𑍍𑌯𑌾𑌸𑌨𑌜𑌾𑌯𑌾𑌸 𑌹𑌠𑌾𑌭𑍍𑌯𑌾𑌸𑌾𑌤𑍍𑌪𑍁𑌨𑌃𑌪𑍁𑌨𑌃 ।
𑌵𑌿𑌘𑍍𑌨𑌬𑌾𑌹𑍁𑌲𑍍𑌯𑌸𑌂𑌜𑌾𑌤 𑌅𑌣𑌿𑌮𑌾𑌦𑌿𑌵𑌶𑌾𑌦𑌿𑌹 ॥
𑌅𑌲𑌬𑍍𑌧𑍍𑌵𑌾𑌪𑌿𑌫𑌲𑌂𑌸𑌮𑍍𑌯𑌕𑍍 𑌪𑍁𑌨𑌰𑍍𑌭𑍂𑌤𑍍𑌵𑌾𑌮𑌹𑌾𑌕𑍁𑌲𑍇 ।)

"யமாத்யாஸநஜாயாஸ ஹடாப்யாஸாத்புந:புந: ।
விக்நபாஹுள்யஸம்ஜாத அணிமாதிவசாதிஹ ||
அலப்த்வாபிபலம்ஸம்யத் புநர்பூத்வாமஹாகுலே ।"

என்று வராஹோபநிஷத்தின் ச - ம் அத்தியாயமுங் கூறிற்று. பொருள்:— "இயமம் முதலிய ஆசனங்களா லுண்டாகும் ஆயாச அடயோக அப்பியாசத்தினால் மீள மீள மிக்க விக்கினங்களிற்றோன்றும் அணிமாதி சித்திகட் குட்பட்டவன் நறியபலனை யடையாமே மீட்டும் நற்குலத்திற் பிறப்பன்" எனவாம். சீந்திற்றண்டு, வீழி சமூலம், நூறுவருடத்து வேம்பு, செங்கற்றாழை, செம்முள்ளி முதலிய ஓடதிகளையும் மற்றிவற்றிற் கேற்புடைப் பொருள்களையுங் கொண்டு செய்யப்படுங் காயகற்பமெனும் ஔடதமே ஈண்டு மருந்தெனப்பட்

டது. பூருவ தபோபலமாகவாயினும், பிறர்க்கிரங்கியருளும் அற்புதாதிக ளாகவாயினு நிகழ்வன திருவருளின் காரியமாகலின் "எந்நன்னயமு மெண்சித்தி முத்திகளு முளவருளால்" என்றார்; என்னே? சித்திகளை விரும்பாதுள்ளோன் சிவஞானியாகலின்.

அடயோகப் படுகுழியிற் படுத்து, பன்னெடுநா ளிருக்குதுமென்று என மாறுக. தானே - கட்டுரைச் சுவையுற நின்றது. பன்னெடுநாள் - ஒரு பொருட் பன்மொழி ; குழிந்தாழ்ந்தகண் என்றாற்போல. (ஹ௦யொ௦) ஹடயோகம் என்னும் வடசொல் 'அடயோகம்' என விகாரப்பட்டது. மருந்து முண்டு - என உம்மை விரித்துரைக்க. நனி - மிகுதிப்பொருட் டருமோருரிச்சொல்.] (உ௬)

தற்போத மிரியாதே லுட்டுறவு
சார்வதில்லை சாரா யோகி
பொற்பாய துறவியல்ல னீயந்த
யோகமதைப் பொருந்திப் பின்னர்
நற்பாதை யடைகுவலென் றதிர்ப்பையே
லபக்குவர்க ளுடு வானஞ்
சிற்பரமன் விதித்தசோ பானமது
வதினிற்கிற் றேற லெந்நாள்.

தற்போதங் கெடாவிடில் அகத்துறவுண்டாவதில்லை. அத்துறவில்லாத யோகி மேம்பாடுடைய சன்னியாசியாகான். நீ, (முன்னர்) அந்த யோகத்தையடைந்து பின்னர்ச் சன்மார்க்கத்தை (=ஞானநெறியை) அடைவேனென்றுரைக்கில், அபக்குவர்கள் அப்பியாசிக்குமாறு நம்முடைய ஞானமூர்த்தியாகிய பரமசிவன் விதித்த சோபானம் (=ஏறுபடி) அந்தயோகம். அதில் நிற்கில் எக்காலம் மேனிலையெய்துவாய்.

[ ஈண்டிதுகாறும் என் சொல்லியவாறோவெனின்,—வாயுவழியேயும்போகம் பந்தமென்றும், ஞானமொன்றே வீடுபேற்றிற் குரியதென்றும், அந்த ஞானத்தை உ௬ - ஞ் செய்யுளிற் சொல்லப்பட்ட சிவஞானயோகங் காட்டுமென்றுங் கூறியவாறா மென்க. "மேற்சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டியல்லது மோக்ஷத்தைக் கொடாவாகலான்." எனச் சிவஞானபோதத்து அ - ஞ் சூத்திரத்திற் கூறப்பட்டதும் இம்முடிபேயன்றோ. முற்படலத்து ௩௩ - ன் உரையிற் சிவபோதம் முனைத்

துத் தோன்றவுள்ள யோகமானது சருவகருமரகிதப் பிரமநிட்டை யன்றெனப் பிரமாணவாயிலாக விளக்கியுள்ளதையும் ஈண்டுக் கருதிக் கொள்க. ஞானமென்பது சுவானுபவ சமாதியிற் றன்னையுந் தலைவனையு மறியுமறிவு. அது, திருவருளென்னுஞ் சூரியப்பிரகாசம் ஆணவவிருளை யடக்கி ஆன்மஞானமென்னுங் கண்ணுக்கொளியா யுடங்கியைந்து நிற்பது. இது, தற்போத விருத்திலய முண்டாய விடத்துத் தனது அந்தரியாமிபாய பரமான்மாவினது பேரறிவு தனக்குப் பயன்பட்டு நிற்கு நிலையேயாம். (𑌸𑍍𑌵𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌂𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍 । 𑌸𑌰𑍍𑌵𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌕𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍 । 𑌨𑌿𑌰𑌾𑌵𑌰𑌣𑌚𑌿𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍 ॥) "ஸ்வப்ரகாசம்ஜ்ஞானம் । ஸர்வப்ரகாசகம்ஜ்ஞாநம் । நிராவரணசிந்மாத்ரம் ஜ்ஞாநம் ॥" என்று ஸர்வஸாரோபநிஷதஞ் சாற்றுதலும் அது. பொருள்:— "தனது பிரகாசமாயுள்ளது ஞானம்: யாவற்றையும் பிரகாசிப்பிக்கின்றது ஞானம்: மறைவின்றி அறிவுமாத்திரையாயுள்ளது ஞானம்" எனவாம். ஸ்வ - என்பது தனது சம்பந்தத்தையே காட்டுமொரு சொல். "தருமரன் ஞானத்திற் றன்செய லற்றால்—திரிமலந் தீர்ந்து சிவனவ னாமே" எனுந் திருமந்திரக் கூற்றும் ஈங்குக் கருதத் தக்கது. இஞ் ஞானமும், அதன்பயனும்—

"பரந்தவான் கலைமுழுதுமாகமநூற்பகுதியும்பலசமயசாத்திரமுந் [தெளிந்து
தெரிந்துசேர்ந்ததில்வாய்ந்தமுப்பொருளின்செய்தியேபொருளெனமனம்
புரிந்துபோந்துளசிற்றறிவனைத்தும்போக்கியவ்வறிவெனச்சிவபோதம்
விரிந்துதோன்றுநெஞ்சுடையவித்தகரேமேன்மையானநம்மெய்ப்பதம்பெ
[றுவார்."

எனத் திருவாதவூரர்புராணத்துங் கூறப்பட்டுள. முப்பொருள்= பதி, பசு, பாசம்; மெய்ப்பதமென்றது சிவசாயுச்சியத்தை. சரியை முதலியவற்றிற்குரிய பயன்களைக் கீழ்ப்படுத் துரைக்கு மாற்றானே ஆங்காங்கு இயைபுபற்றி நூலிற் கூறப்பட்ட வுயர்பயனெல்லாம் இச் சாயுச்சியமே யென்க. ஆன்ம சன்னிதியில் நித்தியத்துவமாய் ஆன்மோபாதியாய்க் காணப்படு மூலாவத்தை ஆன்மஞானமின்றி நசியாதெனும் பொருளைத் தரத் தக்கதாய் முற்படலத்து ௬ - ன் உரையிற் பிரமாணிக்கப்பட்டதாயுள்ள ஸர்வஸாரோபநிஷத் வசனமும், யாவர்க்கும் ஞானமார்க்கத்தினாற்றான் கைவல்லியமுத்தி: கருமம் சாங்கியம் யோகமெனும் உபாசனை முதலியவற்றால் அன்றெனும் அருத்தந்தரத்தக்கதாய் ௩௩ - ன் உரையிற் காட்டப்பட்டதாயுள்ள முக்திகோபநிஷத் வசனமும், இப்படலத்து உக - ன் உரையிற் காட்டப்பட்ட வராஹோபநிஷத் வசனமும், கஉ, கஎ - ன் உரைகளிற்

காட்டப்பட்ட சூதசங்கிதைச் செய்யுளும், திருப்புகழ் மொழிகளும் ஞானமே சிரேட்டமென்பதை நன்கு புலப்படுத்துவனவா யுள. "பணத்திற் பெரியவன், வயதிற்பெரியவன், வித்தையிற்பெரியவ னெனும் இன்னோர் ஞானத்திற் பெரியவனுக்கும், அவனுடைய சீடர் கட்கும் வேலைக்காரர்களாவார்கள்" எனுமருத்தத்தில் "தநவ்ருத் தா வயோவிருத்தா வித்தியாவ்ருத்தாஸ்ததைவச। தேஸர்வேஜ்ஞாந வ்ருத்தஸ்யகிங்கராச்சிஷ்யகிங்கராஃ॥" எனவரு மைத்ரேயோபநிஷதச் சுலோகமுமது. (ஜ்ஞாநமாப்நோதி ஸம்ஸாரார்ணவநாசநம்। தஸ்மாதேவம்விதித்வைநம் கைவல்யம்பதமச்நுதே॥) "ஜ்ஞாநமாப்நோதி ஸம்ஸாரார்ணவநாசநம்। தஸ்மாதேவம்விதித்வைநம் கைவல்யம்பத மச்நுதே॥" என்னுங் கைவல்யோபநிஷத்தின் ஈற்று மந்திரம்—"சமுசார சாகரத்தை நாசஞ்செய்பத்தக்க ஞானத்தை யடைகின்றா னாதலின் இவனையறிந்து கைவல்லியத்தை யடைகின்றான்" எனுந் தமிழைத் தருமாற்றானும் ஞானத்தினாலேதான் பரமுத்தியென்ப தனையுணர்த்துகின்றது. "பிரமவித்தென்னுந் தன்மையைக் கொண்ட வளவிலேயே நூற்றொருகுலத்தைக் கரையேற்றுகின்றனன்" எனும் பொருளிலே "ப்ரஹ்மவிந்மாத்ரேணகுல மேகோத்தரசதம் தாரயதி" எனவரு பைங்கலோபநிஷத் வசனமும் ஞானம் உயர்வுடைத் தென்பதைக் குறிக்கின்றது. இன்னன பலவுள. இவ்வாறு வேதத் தின் ஞானகாண்டத்து உபநிடதங்களிலும் ஞானம் நன்கு கூறப்பட் டிருப்ப; சித்தாந்த நூல்கள் படித்தாருட்சிலர் யோகம்வரையிலும் வேதங் கூறிற்றேயன்றி ஞானங்கூறிற்றிலையென்றுங் கூறுப. அவர தபிப்பிராயம் தெள்ளிதாமா றின்றென்பதை— "யோகத்தை ஸ்வ ரத்தோடு சேர்க்கவேண்டும்: பரத்தை ஸ்வரமில்லாததாய்ப் பாவிக்க வேண்டும்" எனுமருத்தத்தில் உஙு - ன் உரையுளிக்காட்டப்பட்ட சுருதி யொன்றானுமே அறியலுறுவாரறிவரால். இங்ஙனம், பாவனை வரையுமே வேதம் விளம்பிநிற்கும்; அதன் அதீதஞ் சித்தாந்த சாத் திரத்திற் கூறப்படுமென்னின்,—

(மாபவக்ராஹ்யபாவாத்மா க்ராஹகாத்மாசமாபவ।
பாவநாமகிலாம்த்யக்த்வா யச்சிஷ்டம்தந்மயோபவ॥)

"மாபவக்ராஹ்யபாவாத்மா க்ராஹகாத்மாசமாபவ।
பாவநாமகிலாம்த்யக்த்வா யச்சிஷ்டம்தந்மயோபவ॥"

என்று வராஹோபநிஷத்தின் ச - ம் அத்தியாயமும், மைத்ரே யோபநிஷத்தின் உ - ம் அத்தியாயமுங் கூறுதலை யுய்த்துணர்ந்தார்

பாவனதீதமும் வேதத்திற் கூறப்பட்டதே யென்பரென்க. உபநிஷத மொழிப்பொருள்:— "அறிகிறவனையும் அறியப்படுகிறவனையும் வேறு படாமல், எல்லாப் பாவனையையும் விட்டு எஞ்சியதெதுவோ அதன் மயம் ஆகுக" எனவாம். இஃதிவ்வாறுயினும் ஓங்காரத்தினும் மேனிலை வேதங் கூறியதுண்டோ? என்னின்,—

(த்வே வாவ ப்ரஹ்மணீ அபித்யேயே ஶப்தஶ்சாஶப்தஶ்சாத ஶப்தே
நைவாஶப்தமாவிஷ்க்ரியதே தத்ர ஓமிதி ஶப்தோ நேனோர்த்வ
முத்க்ராந்தோ ஶப்தே நிதநமேத்யதாஹைஷா கதி:)

"த்வேவாவப்ரஹமணீ அபித்யேயேசப்தச்சாசப்தச்சாதசப்தே
நைவாசப்தமாவிஷ்க்ரியதே தத்ரஓமிதிசப்தோநேநோர்த்வ
முத்க்ராந்தோசப்தேநிதந மேத்யதாஹைஷாகதி:"

என்னும் மைத்ராயண்யுபநிஷத்தின் சு - ம் பிரபாடக மொழிக ளாற் கூறியதுண்டென்க. பொருள்:— "தியானிக்கப்படு பிரமம் சப்தம், அசப்தமென இருவகைத்து; சப்தப்பிரமத்தினல் அசப்தப் பிரமம் பிரகாசப்படுத்தப்படும். அச் சப்தப்பிரமமெனும் ஓங்காரத் தினல் மேலே கிளம்பிச் செல்வோன் அசப்தப் பிரமத்தி லொடுங்கு வன்; இதுவேகதி" என்றபடி. "ப்ரணவோதநுச் சரோஸ்யாத்மா ப்ரஹ்மதல்லக்ஷ்யமுச்யதே।" என்று முண்டகோபநிஷத்தின் உ - ம் முண்டகமுங் கூறுகின்றது. பொருள்:— "பிரணவம் வில்: ஆன்மா அம்பு: இலக்ஷியப்பொருள் அந்தப் பிரமமென்று சொல்லப்படும்" என்றபடி. இன்னன பலவுள. ஓங்காரம் சுத்தமாயையாகலிற் சுருதி அதனைச் சத்தப்பிரம மெனுமாற்றனே மாயையும் பிரமமெனப்படு மென்றல் பெறப்படுகின்றது. ஓங்காரநியாய மிவ்வாறுயினும் போக்கு வரவின்றி யிங்கிருந்தவாறே யடைதற்காமொரு ஞானமுத்தியை உபநிடதங்க ளுரைத்த துண்டுகொலோ? என்னின்,— உண்டென் பதை—

(க) (ஸ்வரூபானுஸந்தானம் விநாந்யதாசாரபரோ ந பவேத்
ததாசாரவஶாத் தத்தல்லோகப்ராப்தி: ஜ்ஞானவைராக்ய
ஸம்பந்நஸ்ய ஸ்வஸ்மிந்நேவ முக்திரிதி)

"ஸ்வரூபாநுஸந்தாநம் விநாந்யதாசாரபரோநபவேத்
ததாசாரவசாத்தத்தல்லோகப்ராப்தி: ஜ்ஞாநவைராக்ய
ஸம்பந்நஸ்ய ஸ்வமிந்நேவமுக்திரிதி"

என்று நாரதபரிவ்ராஜகோபநிஷத்தின் ரு - ம் உபதேசமும்,

(உ) (𑌶𑍁𑌕𑍋𑌵𑌿𑌹𑌙𑍍𑌗𑌮𑌃𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑍋 𑌵𑌾𑌮𑌦𑍇𑌵𑌃𑌪𑌿𑌪𑍀𑌲𑌿𑌕𑌾 ।)
(𑌶𑍁𑌕𑌮𑌾𑌰𑍍𑌗𑌂𑌯𑍇𑌽𑌨𑍁𑌸𑌰𑌨𑍍𑌤𑌿𑌧𑍀𑌰𑌾𑌃 𑌸𑌦𑍍𑌯𑍋𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌸𑍍𑌤𑍇 𑌭𑌵𑌨𑍍𑌤𑍀𑌹𑌲𑍋𑌕𑍇 ।)

"*சுகோவிஹங்கமஃப்ரோக்தோ வாமதேவஃபிபீலிகா ।*"

"*சுகமார்க்கம்யேநுஸரந்திதீராஸ் ஸத்யோமுக்தாஸ்தே பவந்தீஹலோகே ।*"

என்று வராஹோபநிஷத்தின் ச - ம் அத்தியாயமும்,

(௩) (𑌪𑍍𑌰𑌾𑌰𑌬𑍍𑌧𑌕𑍍𑌷𑌯𑌾𑌤𑍍 𑌦𑍇𑌹𑌤𑍍𑌰𑌯𑌭𑌙𑍍𑌗𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑍋𑌪𑌾𑌧𑌿 𑌵𑌿𑌨𑌿𑌰𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑌘𑌟𑌾𑌕𑌾𑌶𑌵𑌤𑍍𑌪𑌰𑌿𑌪𑍂𑌰𑍍𑌣𑌤𑌾𑌮𑍇𑌤𑌿 𑌵𑌿𑌦𑍇𑌹 𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌸𑍍𑌸𑍈𑌵𑌕𑍈𑌵𑌲𑍍𑌯𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌰𑌿𑌤𑌿)

"*ப்ராரப்தக்ஷயாத் தேஹத்ரயபங்கம்ப்ராப்யோபாதி விநிர்முக்தகடாகாசவத்பரிபூர்ணதாமேதி விதேஹ முக்திஸ்ஸைவகைவல்யமுக்திரிதி*"

என்று முக்திகோபநிஷத்தின் க - ம் அத்தியாயமும்,

(ச) (𑌯𑌤𑍍𑌰𑌯𑌤𑍍𑌰𑌮𑍃𑌤𑍋𑌜𑍍𑌞𑌾𑌨𑍀 𑌯𑍇𑌨𑌵𑌾𑌕𑍇𑌨𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌨𑌾 । 𑌯𑌥𑌾𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌂𑌵𑍍𑌯𑍋𑌮 𑌤𑌤𑍍𑌰𑌤𑌤𑍍𑌰𑌲𑌯𑌂𑌗𑌤𑌃 ॥)

"*யத்ரயத்ரம்ருதோஜ்ஞாநீ யேநவாகேநம்ருத்யுநா ।*
*யதாஸர்வகதம்வ்யோம தத்ரதத்ரலயம்கதஃ ॥*"

என்று பைங்கலோபநிஷத்தின் ச - ம் அத்தியாயமுங் கூறுதல் கொண் டறியலாம். பொருள்:— (க) அன்னியமல்லாத சொரூபானுசந்தான மொன்றனையே அனுசரிப்பவனாதல் வேண்டும்: அன்னிய ஆசாரத்தினால் அந்த அந்த (த் தேவதைகளுடைய) உலகங்களை யடைகிறான்: ஞானவைராக்கிய மடைந்துளானுக்குத் தன்னிடத்திலேயே முத்தி. (உ) சுகமார்க்கமானது விகங்கம் (=பறவை) ஆம்: வாமதேவ மார்க்கமானது பிபீலிகை (=எறும்பு) ஆம்: இவ்வுலகிற் சுகமார்க்கத்தை எத்தீரர்கள் அனுசரிக்கிறார்களோ அத்தீரர்கள் சத்தியோ முத்தர்களாகிறார்கள் (=உடம்பு விட்டவுடனே பரமுத்தர்களாகிறார்கள்). (௩) பிராரத்தக்ஷயத்தினால் (தூலசூக்கும காரணமென்னும்) மூன்று சரீரங்களையும் வென்று உபாதியொழிந்த கடாகாசம்போல பரிபூரணத்தை யடைகிறார்கள்: அதுவே விதேக முத்தி: அதுவே கைவல்லிய முத்தி. (ச) ஞானி எவ்வெவ்விடத்திலெவ்விதமாக மரணமடையினும் யாண்டும் பரவிய ஆகாசம்போல

அவ்வவ்விடத்திலேயே இலயமடைகிறான். எனவாம். ஞானம் சிரேட்டமென நிமித்தம்பற்றி மேலே காட்டப்பட்ட சுருதிகளும் இப்பொருட்குரியனவாகவே கோடல் வேண்டும். இங்குச் சொல்லப்பட்ட ஞான முதலியன சில உபநிடதங்களுட் கூறப்படாமை.—சிவஞானசித்தியார் முதலிய சித்தாந்த நூல்களில் விரித்துக் கூறப்பட்ட பலவும் வடமொழி தென்மொழிச் சிவஞானபோத நூல்களிற் கூறப்படாமையை யொக்கும். மேலுரைத்தவாறு வடமொழிமறை கூறுதலிற் றென்மொழி மறையுங் கூறு மென்றே கோடல்வேண்டும். கூறியதை—

"ஊனி லுயிர்ப்பை யொடுக்கியொண் சுடர்
ஞானவிளக்கினை யேற்றிநன் புலத்
தேனைவழிதிறந் தேத்துவார்க்கிட
ரானகெடுப்பன வஞ்செழுத்துமே."

"நல்லவர் தீய ரெனாதுநச்சினர்
செல்லல்கெடச்சிவ முத்திகாட்டுவ... அஞ்செழுத்துமே."

என்று ஞானசம்பந்தப்பெருமானது தேவாரமும்,

"ஊன்கெட் டுயிர்கெட் டுணர்வுகெட்டெ னுள்ளமும்போய்
நான்கெட்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ"

"நாமுமெ லாமடி யாருட னேசெல நண்ணுது மாகாதே"

"பாவனை யாய கருத்தினில் வந்த பராவமு தாகாதே"

"மும்மைமல மறுவித்து முதலாய முதல்வன்றான்
நம்மையுமோர் பொருளாக்கி நாய்சிவிகை யேற்றுவித்த
அம்மையெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே"

என்று திருவாசகமும், முன்னுரைகளிற் பிரமாணிக்கப்பட்டவற்றுட் சிலவுங் காட்டுமென்க; இன்னு மிக்கருத்துடையன பலவுள. "சேருஞ் சிவமானா ரைம்மலந் தீர்ந்தவர்" என்று திருமந்திரந் தெரித்தலுமது. காரணசரீரம், ஆணவமல மென்பவற்றின் நீக்கம் சிவஞான சாயுச்சியமேயாம். உபநிடதங்களின் ஈற்றில் அத்தியயனஞ் செய்வார்க்குறு பலன்கள் கூறப்பட்டபடி தேவாரப் பதிகங்களின் ஈற்றுப் பாசுரங்களுட் சிலவற்றினும் பாராயண புண்ணிய மேலீட்டாற் பின்னெய்து பலன்களு ளொன்றாகக் கூறப்பட்டது சிவலோகமாகலின் அச் சிவலோகத்தின்கண்ணேயே முற்றி நின்றது தமிழ்மறையென நினைக்கொண்ணாது.

இனி, வேதாந்த நிச்சய மிவ்விதமாயின் வேதாந்த தரம் சித்தாந்தமென்று சித்தாந்தநூல் கூறுவதென்கொலோ வென்னின்,—

"வேதமொ டாகம மெய்யா மிறைவனூல்—ஓதுஞ் சிறப்பும் பொதுவு மென் றுள்ளன" என்று திருமந்திரங் கூறு நெறியானே வேதம் சூத் திரம்போற் பொதுவாகவும், ஆகமம் பாடியம்போற் சிறப்பாகவு மிருத்தல் கருதி அவ்வாறு கூறலாமென்க. தரம்=சிறப்பு, தெளிவு. புராணம் முதலியவற்றைச் சிறப்புநூலென்பதும் இம் முடிபேயாம். இம்முடிபை— "வேதாந்தத் தீதில் பொருள்கொண் டுரைக்குநூல் சைவம்" எனச் சிவஞானசித்தியார் அ-ஞ் சூத்திரத்துப் கரு-ல் வருவதூஉம், "வேதாந்தத் தெளிவாஞ் சைவ சித்தாந்தம்" எனச் சிவப்பிரகாசத்துப் பாயிரத்தில் வருவதூஉம், "வீடு வைதிகசைவம் பகரும்" என உ-ஞ் சூத்திரத்துப் கஅ-ல் வருவதூஉம் உறுதிப் படுத்துத லோர்க. இங்கடு விடுத்துப் பாடியத்துக்குச் சூத்திரந் தாழ்ந்தது எனின் அது மரபு வழுவாம். இஃதேயுமன்றி, வேத நிந்தை செய்தோன் புன்புலாலுண்ணும் புலையனுவன், வேதாந்த நிந்தை செய்தோன் கொடிய கொலைத்தொழில் புரி வேடனுவன், வேதநெறியறிந்த ஞானியை நிந்தித்தோன் பைத்தியங்கொண் டுழி தருவோனுவனென்று சிவதருமோத்தரமெனும் ஆகமம் சனனபல னுகக் கூறுமென்பதை— "வேதநிந் தகனே புன்மை விடக்குணும் புலைய னுவான்—வேதநல் லந்த நிந்தன் வெவ்வினை வேட னுவான்— வேதக ஞானி நிந்தை விளம்பினன் பித்த னுவான்" எனுமிக் கூற் றுக்க ளுணர்த்துகின்றன வாகலின் வேதாந்தத்தையும், வேதாந்த ஞானியையும் இழித்துக்கூறல் பழுதென்பதும், அவ்வாகமம்— "ஒப்பிலி யனுதி முத்த னேதிய வேத மாதிக்—கொப்புயர் வுரைப் பார் நிந்தை யுரைப்பவ ருன்னு வாரும்—வெப்பெரி நிரயந் தன்னுள் வீழ்ந்துவெந் துருகி வீயா தெப்பொழு தேறு வாமென் றிளைத்திளைத் தேங்கு வாரே." என்றறிவுறுத்து மாற்றுனே அங்ஙனமெரிவாய் நரகு மெய்துமென்பது மறியக் கிடக்கின்றன. இழித்துக்கூறல் நிந் தையின்பாற்படும். இவற்றையெல்லா நோக்கியே "வேதாந்த சித் தாந்த சமரச நன்னிலை" என்று தாயுமானுருங் கூறியுள்ளார்; இரண்டற்கும் பொதுமையில் 'நன்னிலை' எனப்பட்ட சொற்கிடக் கையையும், "நாத னுரையிவை நாடி லிரண்டந்தம்— பேதமதென் பர் பெரியோர்க் கபேதமே" என்னுந் திருமந்திரக் கூற்றையு முணர் வார் ஒன்றைத் தாழ்த்தியு மொன்றை யுயர்த்தியுங்கூற நினையார். முற்படலத்து ககரு-ன் உரையிற் காட்டப்பட்ட மகுடாகம வசனம் "இவ்வேதாந்தப்பொருளாய ஞானம் பரமசுபமாகிய சித்தாந்தம்" எனுந்தமிழைத் தருதலையும், மேலைச் சிவஞானசித்தியார்—

" ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராணம்
நல்லவாகமஞ் சொல்ல அல்லவா மென்னும்
ஊனத்தா ரென்கடவ ரஞ்ஞா னத்தால்
உறுவதுதான் பந்தம் "

என மிழற்றுதலையு நன்குணர்ந்தார் இருதிறத்தும் வீடுபேற்று ஞானங் கூறப்பட்டதெனத் துணிந்துரைப்பரால். இவற்றிற்கெல்லாம் மாறுகோளாக, " கன்மம், தவம், செபம், தியானம், ஞானமெனுஞ் சைவ பரமதருமம் ஐந்தனுள் தியானயோக பரியந்தமாயதுதான் சுருதிசிரம் (=வேதாந்தம்) என்பதிலமைந்தது " என்று சைவ மஹாபுராண வாயுசங்கிதையின் பூர்வபாகத்து உஅ-ம் அத்தியாயங் கூறுதல் யாதாமென்னின்,— சைவாகமத்தை யிழித்துரைக்கத் துணிந்த சில வேதியர் நிமித்தம் அவ்வாகமத்தைப் புகழும் அர்த்த வாதமாக வெழுந்தது அவ்வளவை யெனல்வேண்டும். அல்லாக்கால் அஃது அவைதிகமாக வந்ததென்று வரையப்படும். வேதாகமங்கள் கூறிய ஞானானந்தானுபவத்திற்றானே காமிகாகமங்கூறியவழியே ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி, சிவசொரூபம், சிவதரிசனம், சிவானந்தமேலீடு என உண்மைநெறிவிளக்கத்திற் கூறப்பட்டனவும், பிறவும் அனுபவ பேதங்களா யடங்கும். வெண்மை, செம்மை, பொன்மை, கறுப்பு, நீலம், புகை, மிகுவெண்மை, பன்னிறக்கலப்பு ஆகிய எண்ணிற ஒளி நிட்டைகளும் அந்த ஞானநிட்டையல்ல வென்பதூஉம், ஒன்றரை யங்குலத்தினின்று தன்னைத் தரிசிக்கமாட்டாமே ஆறங்குலத்தினிற்பார்க் குறுவது திரிகால ஞானமாகலின் அதுவும், பதமுத்திக்குரிய சாத்துவிககுண பசுஞானமும் உயர்ஞானமல்ல வென்பதூஉம் ஈண்டறிந்துகொள்வோர்— முற்படலத்து அ-ன் உரையிற் காட்டப்பட்ட வாயுசங்கிதைச் சுலோகம்— பரமசிவ அட்டமூர்த்தங்களுள் ஏழினும் மேம்பட்டுள்ள சின்மூர்த்தம் ஆன்மாவென வுணர்த்தலையும் தைத்திரீயாருணசாகை நாராயணம்— " ஆத்மாயநம꞉ । ஆத்மலிங்காயநம꞉ ॥ " என்றும், திருமந்திரம்— " உள்ளம் பெருங்கோயி லூனுடம் பாலயம்—வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்—தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம் " என்றும், திருக்களிற்றுப்படியார்— " தம்மிற் சிவலிங் கங் கண்டதனைத் தான்வணங்கி " என்று மியம்புமாற்றானே ஆன்மா சுயம்புலிங்கமென் றறிவுறுத்தலையும் பசுபதி நாமார்த்தத்தையு முணர்ந்து, ஆன்மாவின்கண்ணே சிவபரஞ்சோதியைத் தியானித்து நிற்கும் அந்தரியாக யோகிகளே அந்த ஞானத்தை யெய்துவர் ;

மற்றை வெளிமுக அன்னிய வழிபாடுடையார் எய்தாரென்பதையு மறிந்துகொள்வர். என்னை? அத்துவிதமாயுள்ள ஆன்மசொரூபம் ஞானமாகலின். உபநிடதங்களுட்பலவும் இவ்வான்ம ஞானத்தையே பிரதிபாதிக்கின்றன வாதலின் அவை, ஞானசாத்திரங்களேயாம். இது, மேற்காட்டப்பட்ட காட்டுக்களிலும்,

> "தன்னிற் றன்னை யறியுந் தலைமகன்
> தன்னிற் றன்னை யறியிற் றலைப்படும்
> தன்னிற் றன்னை யறிவில னுயிடில்
> தன்னிற் றன்னையுஞ் சார்தற் கரியனே."

என்னுந் திருநாவுக்கரசுகளது தமிழ்மறைத் தூக்கிலு மறியக் கிடக்கின்றது. ஆன்மாவின்கண்ணேபுரியும் அந்தரியாகவழிபாடு மேனீர்த்தென்பதும், வெளிமுக அன்னியவழிபாடு கீழ்நீர்த்தென் பதும்—

> "அகத்திற் புரிவா ருச்சனையை யரிய பலத்தை யடைந்திடுவர்
> சகத்திற் புரிவார் சங்கரனைச் சார்வ ரதனிற் றணியபலம்"

என்னுஞ் சிவதருமோத்தர ஆகம மொழிகளிற் பெறப்படுமாற்று னும் எடுத்துக்கொண்ட கோட்பாடு எறுழுறுகின்றது.

ஞானத்தி லேறுவதற்கு யோகஞ் சோபானமென்பது இச்செய் யுளில் வெளிப்பட்டமையிற் சரியைமுதலியமூன்றும் ஒன்றற்கொன்று சோபானமே யென்பதுங் கொள்ளக்கிடக்கின்றது. ஈண்டு, யாதொரு சோபானத்தில் ஒவ்வொருவரும் ஆயுள்காறும் நிற்கவேண்டுமெனு நியதியை யேற்படுத்திக் கொண்டக்கால், ஒருவரும் ஒருசன்மத் தும் உயர்கதி யடைவதில்லையென்ப தேற்படுதலின் அந் நியதி கூடா தென்பதற்கும், எவ்வுலகும் வேண்டா; என்னையும் என்முதலையும் அறியவேண்டும்; மேல் இருங்கதி யுறுதல்வேண்டு மெனுந் துணிபு பிறந்துளார் யாவரும் இப்பிறப்பிற்றானே மேனிலை பற்றலாமென்னு நியாயத்தை நிலைபெறுத்தற்கும் "சோபானமது வதினிற்கிற் றேற லெந்நாள்" என்பது கூறப்பட்டதாயுளது. இது, "ப்ரவ்ருத்திலக்ஷணம்கர்ம ஜ்ஞாநம் ஸந்யாஸலக்ஷணம்" என்னும் நாரதபரிவ்ராஜ கோபநிஷத்தின் ரு-ம் உபதேச வசனத்தானும், (உ-த்ஸ-ந்நா-க்நி-ர-ந க்நிகோவாயத ஹரேவ விரஜேத் தத ஹரேவப்ரவ்ரஜேத்) "உத்ஸந் நாக்நி ரநக்நிகோவாயதஹரேவ விரஜ்ஜேத் ததஹரேவப்ரவ்ர ஜேத்" என்று மேலை ரு-ம் உபதேசமும் யஜுர்வேத ஜாபாலோபநிஷ

தமுங் கூறு வசனத்தானும் பெறப்படுகின்றது. முறையே தமிழ்:— "பிரவிருத்திலக்ஷணம் கன்மம்: சன்னியாசலக்ஷணம் ஞானம்" எனவும், "(யாக) அக்கினியை விட்டாயினும் அக்கினியை மூட்டாமலாயினும் எந்த நாளில் விரத்தி தோன்றிற்றோ அந்தநாளிற்றானே துறவறங்கொள்க" எனவுமாம். நியாய மிவ்வாறிருத்தலினாற்றான் சோபானங்கள் ஒரெல்லையிலாமல் வைக்கப்பட்டனவாயுள வென்பதும் இங்ஙனுணர்ந்து கொள்க. சரியையாதி நான்கும் அரும்பு, மலர், காய், கனியாகிய விவற்றை யொக்குமென்பதும் இப்படலத்து ௩ - ன் உரைக்கண் விளக்கப்பட்ட பிராக்கிருதர்க்குத் தொடர்நெறியாக நிற்குமேயன்றி வைநயிகர் சாமுசித்தரென்பார்க்கு அவ்வாறு நிற்கமாட்டா. என்னை? அவ் வைநயிக சாமுசித்தர்களுடைய குணம் முற்பிறப்பிலேயிழைத்து நின்றதை (விட்டகுறை தொட்டகுறையாயுளதை) யே தொடர்ந்து பொருந்துமாகலின். அன்னோர் பூத்துக்காய்க்கும் மரம்போன்ற அந்தப் பிராக்கிருதர்க்கு வேறாய்ப் பூவாது காய்க்கும் மரம்போலுள்ளாரென்க. அவரும் பலதிறப்படுவரென்க. பெரியபுராணத்துள்ள பெரியார்சரிதம் பலவும், அன்ன பிறவும் நோக்குக. வளியோக பரியந்தந் தற்போதம் உள்ளபடி யொடுங்கிற்றில்லையென்பதும், ஒடுங்குங்காறும் ஒருவன் உட்டுறவடைந்த வுண்மைத்துறவி யாகானென்பதும் இச் செய்யுட்கட் பெறப்படுதல் 'சன்னியாசலக்ஷணம் ஞானம்' என்னுஞ் சுருதி முடிபே. சன்மார்க்கமெனு நன்னெறியே ஈண்டு 'நற்பாதை' எனப்பட்டது. "நன்னெறியாகிய ஞானத்தை" என்று சிவஞான போதமுங் கூறிற்றே.] (உஎ)

இச்சனனம் போய்மீண்டு வருசனனந்
தனின்ஞான மெய்தி யிச்சூழ்
இச்சையிற நிற்பலெனி னிம்மதியன்
றுறுங்கொல்லோ வெளியோ யிஞ்ஞான்
றச்சமற நில்லாது போவையெனின்
விரைந்தோடு மாற்றி லோர்கால்
வெச்செனவே தவறிவிழு வோன்சுழலு
மாறுடலை மேவி மாய்வாய்.

(யான் பல பிறப்புக்களுக்குப் பின் முத்தி யடையலாமென நினைக்கவில்லை) இப் பிறப்புச்செல்லாகி மறுபடி வருபிறப்பில் ஞானத்

தையடைந்து இவ்வாசையெல்லாங் கெட நிற்பேனென்று சொல்லு வாயாயின், இப்போதிருக்கும் நற்புத்தி அப்பிறப்பில் வருமோ? அறிவிலெளியோய்! (சொல்வாயாக). இப் பிறப்பிற்றானே நிர்ப்பய மாக அதனில் நில்லாமற் போவாயாயின் விரைந் தோடிக்கொண் டிருக்கும் ஆற்றில் ஒருமுறை வெய்தெனத் தவறிவிழுவான் அவ் வாற்று நீரின் வசப்பட்டுப் பலமுறை சுழன்று சுழன்று போதல் போலச் சனன மரண சாகரத்தில் வீழ்ந்து வீழ்ந்து மாளுவாய்.

[எனின் = ஆயின்; அனுமப்படலத்துழை, "சிறிதாயொடுக்கு மேனின் மேனி யற்ப வணுவான திற்பெரியனும்" என்றார் ஒட்டக்கூத்தரும். வெய் தென - என்னும் விரைவுக்குறிப்புச்சொல் 'வெச்சென' எனப்பொருந்திற்று; அனுகரண வோசை யெனினுமாம்.] (உஅ)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அரியவிவ் வூக மானுட யாக்கை
  யழியுமுன் றுறவற மடைவேன்
விரிமய னுகரிப் பருவம தொழிந்தாம்
  விருத்தமுற் றிடுபொழு தென்னின்
நரியுவர் வறளுங் கானறு மீனை
  நசையற வருந்துவ லென்னுத்
திரைகட லோரங் காப்பதொவ் விடுமித்
  தீழ்ப்புடை மதியையும் விடுதி.

அருமையான விவேகத்தோடு கூடிய இம் மனித வுடம்பு அழியு முன்னரே, விரிந்த இம்மாயாலோக வின்பங்களை யனுபவிக் கும் இக் கௌமார பருவங்கழிந்து நிராசைக்குரிய வயோதிக பருவ முறும்போது துறவறத்தை யானடைவேனென்று நீ யுரைக்கில், இது— நரியானது இவ்வுவர்நீரெல்லாம் வற்றுங்காலத்தில் நல்லமீன் களை என்னாசையடங்கத் தின்பேனென்று கடலோரத்திற் காத்திருப் பதையொக்கும். (ஆதலின்) இந்தத் தாழ்ந்த புத்தியையும் விடுவா யாக.

["அரியவிவ் வூக மானுட யாக்கை" என்றது (𑌦𑍁𑌰𑍍𑌲𑌭𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌮𑌾𑌨𑍁𑌷𑍍𑌯𑌂 𑌤𑌤𑍍𑌰𑌾𑌪𑌿 𑌨𑌰𑌵𑌿𑌗𑍍𑌰𑌹𑌮𑍍 ।) "துர்லபம்ப்ராப்ய மாநுஷ்யம் தத்ராபி நரவிக்ரஹம்!" என்னுஞ் சுருதிப் பொருளா யிருக்கின்றது. வராஹோபநிஷத்தின் உ - ம் அத்தியாய வசனமா

கிய விதன்றமிழ்:— "மானுடதேகம் அருமைத்து: அதனினும் புருடதேகம் அருமைத்து" எனவாம்.

உவர் நீரை 'உவர்' என்றுபசரித்தார். ஒவ்விடும் என்பதில் இடு - துணிவுப்பொருளுணர்த்துஞ் சொல். தீழ்ப்பு - தீட்டு என்பதன் விகாரம்; ஈண்டு இழிவெனும் பொருட்டு; அல் விகுதி புணர்ந்த 'தீண்டல்' என்னுந்தொழிற் பெயர் தீண் - என நின்று பு - விகுதியொடு புணரின், தீட்பு எனவாம். தீண்டு - என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயரே தீட்டு; பெண்கள் பூப்பு முதலிய அசுத்தமுணர்த்தாநின்ற மறைத்துமொழி கிளவி.] (உகூ)

மடமுடைப் பாலை தனிலறி வின்மை
மருவிடுங் காளையிற் கடனேர்
தடநெடுங் கண்ணார் மயல்வெறி யலைக்குஞ்
சரைதனிற் றாங்கிய குடும்ப
விடயவன் காப்பான் மெலிவுறு மிவற்றுண்
மிழற்றிய பின்னிரண் டனையுந்
திடமனத் தவர்நீத் திறையடி நாடுந்
திறனுள தனையினிச் சேராய்.

இளமையுடைப் பாலியத்தில் அறியாமை கூடியிருக்கும். யௌவனத்திற் கடலை நிகர்த்த விசாலமான நெடிய கண்களுடைய காரிகையார் மயக்கவெறி யலைக்கும். வயோதிகத்திற் பொறுத்துக்கொண்ட குடும்பவிடய பாரமான பாதுகாப்பால் வருத்தமுண்டாம். இவற்றுட் பிற்கூறப்பட்ட பெண்ணாசை குடும்பந்தாங்கு பாரம் எனுமிரண்டனையுந் திடசித்தமுள்ளோர் ஒழித்து, இறைவன்றிருவருளை விரும்புமொருதிறம் அவ்விரு பருவத்துமேயுள்ளது; அதை யினிச் சேர்வாயாக.

[பாலியம், யௌவனம், வயோதிகம் ஆகிய இம்மூன்றையுங் குறித்துரைத்த இழிவுகள் (ஃஜ்ஞாநோபஹதோபால்யே யௌவநே வநிதாஹத: । ஶேஷே களத்ரசிந்தார்த்த:) "அஜ்ஞாநோபஹதோபால்யே யௌவநேவநிதாஹத: । சேஷேகளத்ரசிந்தார்த்த:" என்னுஞ் சுருதி நியாயமாயிருக்கின்றன. மஹோபநிஷத்தின் ௬ - ம் அத்தியாய வசனமாய விதன்பொருள் வெளிப்படை.

உடை - உடைய என்பதன் விகாரம். பால்யம் - என்னும் வடசொல் 'பாலை' என விகாரப்பட்டது. காளை = எருது; அதற்குள்ள வலி, பூரிப்பு முதலிய தன்மையுள்ளோனுக்கு உவமையாகுபெயர். (ஒ௫௨o) த்ருடம் - என்ற வடசொல்லின் விகாரமே திடம்; உறுதியெனும் பொருட்டு.] (௩0)

இன்றுளர் நாளை யிருப்பரென் றுள்கற்
 கெனதுணி வுளதெஃது மயக்கம்
என்றறி முனையுவ் வாலுள வாணு
 ளிறைவனைக் கருதலின் ஞெழியிற்
பின்றவ நோற்க வருவதுண் டோவிப்
 பிழைநினை யேகுறு காதின்
றென்றடை யிருப்பி னுந்துற வோம்பி
 யிருநயத் திருந்துயர் வாயே.

இன்றிருக்கின்றவர் நாளையு மிருப்பரென் றெண்ணுவதற்கு உறுதிப்பாடு யாதுளது? அவ்விடயம்பற்றிக் கூறப்படுபவற்றுள் எதுவும் மயக்கமென்றறிவாயாக. முன்னைப் பிறவிகளிற் செய்த தபோபலத்தால் இப் பிறவியுடற்கு வாய்ந்துள்ள வாணாள் ஆன்மநாயகனைத் தியானித்தலிலேயே கழியாமல் வீணாயிற் பின்பு தவஞ் செய்யப் பிறப்பதுண்டோ? இப்படிச் செய்யவேண்டிய சற்கருமத்தைச் செய்யாதுவிடுந் தற்குற்றம் நின்னை யடையாதிருக்கும்வண்ணம் எவ்விதத் தடைகளிருப்பினும் இப்பொழுதே வெளித்துறவையடைந்து அதனைப் பரிபாலித்து உட்டுறவெனும் பெருநயத்தி லமர்ந்து உயர்வாயாக.

[இச்செய்யுள்— "இன்று நன்று நாளைநன் றென்று நின்ற விச்சையாற்— பொன்று கின்ற வாழ்க்கையைப் போக விட்டுப் போதுமின்— மின்ற யங்கு சோதியான் வெண்மதி விரிபுனற்— கொன்றை துன்று சென்னியான் கோடி காவு சேர்மினே." என்னும் ஞானசம்பந்தப் பெருமானது தமிழ்மறைத் தூக்கின் பொருளை யுட்கொண்டிருக்கிறது. பிரமசரியம், கிருகத்தம், வானப்பிரத்தமெனும் மூன்றாச்சிரமங்களையும் முறையே யடைந்தவன் பின்னர்ச் சன்னியாச தருமத்தை யெய்துதல்வேண்டுமென்னுந் தடை, யஞ்ஞகன்மத்தாற் றேவர்கள் கடன்றீர்த்தல் வேண்டுமென்னுந் தடை, புத்திரப்பேற்றாற் பிதிரர்கள் கடன்றீர்த்தல் வேண்டுமென்னுந் தடை, நூல்களையோதி இருடிகள் கடன்றீர்த்தல் வேண்டுமென்னுந் தடை, இம்முக்கடன்களையும் இறுக்காது முத்தி விரும்புவோன் அதோகதி யடைகின்றனனென்னுந் தடை, தேவர்கள்கடனைச் செய்தாற் பிரியப்படுந் தேவர்கள் அக்கடனைவிட்டுப் பிரமஞானத்திற் றலைப்படுங்காரியம் புரியிற் பிரியப்படுவதில்லை, இடையூறு விளைப்பரென்னுந் தடை

ஆகிய நூல்வழக்குத் தடைகளும்; இவற்றிற்கு வேறாய பல்வேறு திற வுலகவழக்குத் தடைகளு முளவாகலின் "என்றடையிருப்பினும்" என்று கூறுவாராயினர். அதோகதியடைகின்றனனென்னுந் தடைவரையுள்ள தடையனைத்தும் மநுஸ்ம்ருதியின் சு - ம் அத்தியாயத்திலும்; முக்கடன்களும், அவியுண்ணுந் தேவர்களது பிரியமின்மையும் பிருஹதாரண்யகோபநிஷத்தின் க - ம் அத்தியாயத்து ச - ம் பிராஹ்மணத்திலுமாகக் கூறப்பட்டன. இந்தப் பிராஹ்மணத்தில் "ஏஷாம்தந் நப்ரியம் யதேதந்மநுஷ்யா வித்யு:" என அந்தப் பிரியமின்மை வருதல் காண்க. பொருள்:—"மனிதர்கள் எதனால் இப்பிரமத்தையறிவார்கள் அதனில் இத்தேவர்கட்குப் பிரியமில்லை" என்றபடி. இதனால், தேவர்கள் தங்காரியகன்மப் பிரியர்களென்பதூஉம், அவர்கள் கன்மநூல்களே யியற்றுவார்களென்பதூஉம் ஏற்படுகின்றன. "எந்த நாளில் விரத்தி தோன்றிற்றோ அந்த நாளிற்றானே துறவறங்கொள்க" என்று நாரதபரிவ்ராஜகமும் ஜாபாலமும் ஒன்றுபட்டுரைத்த வசனம் உஎ - ன் உரையிற் காட்டப்பட்டதாகலின் அதனாலும், "பிரமசாரியாயிருந்தாயினுங் கிருகத்தனாயிருந்தாயினும் வானப்பிரத்தனாயிருந்தாயினுஞ் சன்னியாசங் கொள்க" எனும் பொருளதாய் (𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌰𑍍𑌯𑌾𑌦𑍇𑌵 𑌪𑍍𑌰𑌵𑍍𑌰𑌜𑍇𑌤𑍍 𑌗𑍃𑌹𑌾𑌦𑍍𑌵𑌾 𑌵𑌨𑌾𑌦𑍍𑌵𑌾) "ப்ரஹ்மசர்யாதேவப்ரவ்ரஜேத் க்ருஹாத்வா வநாத்வா" என நாரதபரிவ்ராஜகத்தின் க - ம் உபதேசத்திலும், பரமஹம்ஸ பரிவ்ராஜகத்திலும், யஜுர்வேத யாஜ்ஞவல்கியத்திலும் வருமொழியானும் ஆச்சிரமத் தடையை மீறிநடக்கலாமென்பது மேற்படுவதாயிற்று. 'முக் கடன்களையும் இறுக்காது முத்தி விரும்புவோன் அதோகதி யடைகின்றனன்' என்பது உலகை வெறுக்காதோன் மேற்று.

கிரது என்பாரெழுதிய ஸ்ம்ருதி, பிரஹ்மபுராண முதலியவற்றுட் கலியுகத்திற் சன்னியாசஞ் செய்துகோடல் கூடாதென்றும், கமண்டலந் தரிக்கொண்ணாதென்றுங் கூறியிருத்த லறியப்படுகின்றமையின் ஈண்டவை யெப்பொருள் படுத்தத் தக்கனவென்னின்,—அரைஞாண் கௌபீன மென்பனவுமில்லாத் துரியாதீதம், அவதூதமென்னுஞ் சன்னியாசங்களைக் கொண்டக்காற் கலியுகத்தார் பழித்தும் வெறுத்தும் பாவமெய்துவரென்னுங் கருத்தானும், கௌபீனம் கந்தைத் துணி கமண்டல மிவற்றையுடையனாய் ஓரிடத்துண்ணுங் குடீசகனையும் அங்ஙனங் கமண்டலமுந்தாங்கிப் பல்லோரகத்தும் ஐயமேற்றுண்

ணும் பஹூ-பிதகனையுங் கலியுகத்தார் ஒரு சிறிதும் மதியாமே எள்ளி ஏனந் தேடுவரென்னுங் கருத்தானும் அவ்வாறு கூறு மென்று பொருள்படுத்தத் தக்கனவென்க. இந் நியாயத்தால் எல்லா வருணத் தா ரகத்துண்டலுஞ் சால்புடைமை யன்றென்பதூஉம், அதுவு நூல் களி னுவலப்பட்டதென்பதூஉ மறிக. இதுவேயுமன்றி முந்தை யுகங் களிற் கிருகத்தன் வீட்டிற் றுறவி யுறங்குதலிருந்தது; இக் கலியில் அதுவுஞ் செய்யொண்ணுதென்று பொதுவிதியிற் புகலப்பட்ட நூல் வழக்கானது துறவியினுடைய திடசித்தமும் சன்மார்க்கமும் இல் விற்குடையாரின் பரமபத்தியு மொழுக்கமு மாகிய சிறப்பினைக் கொண்டு மறுக்கப்படுவதே. "பழையன கழிதலும் புதியன புகுதலும்— வழுவல கால வகையி னனே" என்னுமொரு நறு நியா யத்தின்படி முந்து நூல்களில் விதிக்கப்பட்டிருந்த கன்மங்களுட் பலவும் பின்றை நூல்களில் விலக்கப்பட்டவாறே, பின்றை நூல்களுள் ளும் விதிக்கப்பட்டவற்றுட் பலவும் பல்லாயிர வருடங்கட்குப் பிற் பட்ட இஞ்ஞான் றியைபுபற்றி விலக்கப்படுதல் ஏற்புடைமையே யாகும். கலியுகம் கலியுகமென்னுங் காலவாதமும் இயைபுபற்றியே கொள்ளப்படும். நான்காம் வருணத்திற் சன்னியாசி யிலனென்றுஞ் சிலர் மொழிப. அது சாலாதென்பதற்குரிய மேற்கோள் முதலிய நியாயங்கள் பலவும் வேதவியாசத்து உ௬, உ௯ - ம் வினவிடைகளில் விளம்பப்பட்டமையின் ஆங்கிடைக் காண்க. அங்ஙனங் காட்டப் பட்ட மநுஸ்ம்ருதியின் உ - ம் அத்தியாயத்து (ஶ்ரத்தாநஶுபாம்) "ச்ரத்தாதாநச் சுபாம்" என்றற் றொடக்கத்துச் சுலோகம்— "மேலான வித்தை சூத்திரனிடத்திருப்பினும், மோக்ஷகருமஞ் சண்டாளனிடத்திருப்பினும், பெண்மணி இழிகுலத்திருப்பினும் அவற்றை யன்புளோன் கிரகிக்கக்கடவன்" எனும் பொருளைப் பயக்குமாற்ரு னொரு நற்றருமத்தை வெளியிடுகின்றது. இன்னன பல்ல. அ - ம் அத்தியாயத்து உ௬அ - ல் "அனியாயமாகச் சூத் திரனை ஏசிய பிராமணனுக்குப் பன்னிரு பணமே தண்டமாக விதித் தல் வேண்டும்" என்பதும், உஎக - லே "சாதி பெயர் குறித்து இருபிறப்பாளரை ஏசிய சூத்திரனுக்கு அவனது வாயிற் பத்தங்குல முள்ள உருக்குக்கம்பியை நெருப்பிற் காய்ச்சி யெரிய வெரிய வைத் தலையே தண்டமாக விதித்தல் வேண்டும்" என்பதும், ௩எ௯ - லே "தலைமயிரைச் சிரைத்துவிடுவதுதான் பிராமணனுக்கு விதிக்குங் கொலைத்தண்டமாகும்: கொல்லுவதே மற்றைச்சாதியார்க்கு விதிக் குங் கொலைத்தண்டம்" என்பதும், ௯ - ம் அத்தியாயத்து ௩௨ள - லே

"பிராமணன் ஞானியாயிருப்பினும், மூடனாயிருப்பினும் அவனே மேலானதெய்வம்" என்பதும், கO - ம் அத்தியாயத்து ருஉ - லே "பிணத்தின் மீதிடலாய துணியை யுடுக்கவேண்டும்: உடைந்த சட்டியி லுண்ணவேண்டும்: இரும்பு பித்தளை யென்பவற்றாலாகிய பூடணமே பூணவேண்டும்: எக்காலுந் தொழிலுக்காகத் திரிந்து கொண்டிருக்கவேண்டும்: இவைகளே சங்கரஜாதி (=கலப்புச்சாதி) யாயுள்ளவர்க்குரிய தன்மத்தொழில்" என்பதும் பெறப்படுமாற்றாற் பிராமணரென்பார் தஞ் சாதியபிமானத்தி னெழுதிவைத்த ஓர முடிபுக ளறியப்படுகின்றன. இன்னன பல்ல. தென்றிசைக்கடவுளுடைய தண்ட நியாயத்திற் பிராமணரென்பார்க்குத் தொக்க தண்டமும் மற்றையர்க்கு மிக்க தண்டமு முளவெனல் எந்நூற்கண்ணும் வெளிப்படாமையே அம்முடிபுகளை மறுத்து உண்மையை நிறுவும். மரீசிமுதலிய பிரஜாபதிகளைச் சிருட்டித்த மனுப்பிரஜாபதியினாற் சொல்லப்பட்டதாகவுள்ள இந்த ஸ்ம்ருதியிற் பாரதம் வரையப்பட்ட பிற்றைஞான்று அனேகவிடயங்கள் சேர்க்கப்பட்டனவென நிச்சயித்தற்கு கூ - ம் அத்தியாயத்து ருச - ல் வியாசர், திரிதராட்டிரன் முதலினோ ருற்பத்திகளை யெடுத்துக்காட்டியிருத்தலே சான்றும். மற்றுள்ள ஸ்ம்ருதிகள் பிற்பட்டனவாம். பிறப்பாற் பிராமணரென்பாரை இக்காலத்தே கோறல்புரிந்தார்யாரையும் பிரஹ்மஹத்தி தொடராமையானும், சூத்திரரெனப்படு சூதமுனிவரைக் கோறல் புரிந்த பலராமரைப் பிரஹ்மஹத்தி தொடர்ந்ததெனுஞ் சரிதங் காணப்படுகின்றமையானும் பிரமவித்தை தவம் உடையார் யாவரே யாயினும் அவரே யுள்ளபடி, பிராமணரென்பது அஞ்ஞான்று மிஞ்ஞான்று மறியக்கிடக்கின்றது. ஸாமவேத வஜ்ரஸூசிகோபநிஷதம்— பிராமணத்தன்மைக்குரியது சீவனன்று, உடம்பன்று, சாதியன்று, கல்வியறிவன்று, கன்மமன்று, தன்மமன்றெனத் திருட்டாந்த வாயிலாக விளக்கிச் சுவானுபவப் பிரமஞானமுடையவனே பிராமணனென்றோதி இதுவே, (ஶ்ருதிஸ்ம்ருதிபுராணேதிஹாஸாநா மபிப்ராய:) சுருதிஸ்ம்ருதி புராணேதிஹாசங்களின் அபிப்பிராயம் என்று முடிவுரையு மொழிந்துளது. மஹாபாரதத்து வனபர்வத்து உOகூ - ம் அத்தியாயமுதற் பல அத்தியாயங்களிற் பகரப்பட்ட தர்மவியாதரென்னும் வேடரும், அந்தப் பாரதத்திற் பலவிடத்துங் கூறப்பட்ட விதுரரென்னுஞ் சூத்திரரும் மகாஞானிகளாயிருந்தன ரென்பதையறியலாம். இத்திறத்தோரும் பலரே. இன்னோர், பிராமணராப்பிறந்திருந்த சன்மாந்தரத்தில் ஆர்ச்சித்த ஞானம் அழியா

திருந்ததனுற் பிரமநிட்டராயினரென்று அவர்கள் நிலைக்கொரு போக்குக்காட்டினும் அஃது அத்திறமுள்ளா ரிக்காலத்துமிருப்பர், இனிவருங்காலத்துந் தோன்றுவரென்பதையும்; சன்மார்ந்தரத்தில் ஆர்ச்சித்த அறியாமை அனீதி அழியாமலிருந்தோரே அனீதிகளை யெழுதிவைத்தார், அவற்றைப் பிரமாணமாக வெடுத்துங் காட்டு கின்றாரென்பதையும்; பிரமவித்தைக்கும் பிரமோபாசனைக்கு முரி யோர் பிராமணசாதியிற் பிறந்தவரேயல்லால் இதரரல்லரென் றியம் பிக்கொண்டு கல்வி யறிவுமில்லாதிருப்போரும் அவரொத்தவரே யென்பதையு நிலைபெறுத்தும். பிரஜாபதியின் முகம், தோள், தொடை, காலெனுமிடங்களில் முறையே பிராமணனும், க்ஷத்திரி யனும், வைசியனும், சூத்திரனும் பிறந்தனரென்று நுவறல்— முகம் (பிரமவித்தையாகிய) வாக்குக்கும், தோள் வெற்றிக்கும், கால் ஒருவனைச் சரணடைந்து ஊழியஞ்செய் துயிர் வாழ்தற்கும், தோளுக்குங் காலுக்கும் இடையிலுள்ள தொடை நடுநாவுடைத் துலையினுக்கும் அருத்த மாதலைக் காட்டவல்லதாமேயன்றிப் பிறப் பிடமே அவைகளெனக் காட்டவல்லதாகாது. வல்லதாமென்னின், மேற்சொல்லப்பட்ட சூதமுனிவரும், பிறமுனிவருள் வியாசர் முதலா யினர் பலரும் பிறப்பிடத்தா லிழிந்தோராவரெனுந் தீர்வை யேற் படும். இது நிற்க. குறிப்பிட்ட தொழில்களை யுடையாரெல்லாம் அவ்வத்தொழி லிழைக்குங்காறும் அவ்வச்சாதியாரென விருத்த லுங் கண்கூடன்றே. முனிவர் சரிதைகளையுங் கருதுக. பூணூல் பலதொழிலாளருந் தரிக்கின்றமையின் அதனையொரு பெரிதாக நினைப்பதும், இருபிறப்பாளரென்பார் அத்துவித ஆன்மஞானவே தம் தமக்கே யுரித்தென்பதற்கியைய ஆசாரமுள்ள மற்றையர் அவ் வேதத்தைக் கைவிடலும் அறிவுடைமையாகா.

மேற்காட்டப்பட்ட நாரதபரிவ்ராஜகம், ஜாபாலம், பரமஹம்ஸ பரிவ்ராஜகம், யாஜ்ஞவல்கியமென்னும் உபநிஷத்துக்களும்; கூ - ன் உரையிற் காட்டப்பட்ட மந்திரத்தாற் கைவல்யம், மற்றுரைகளிற் போந்துள்ள ஸ்கந்தம், பைங்கலம், மண்டலப்ராஹ்மணம், அந்ந பூர்ணை, பிருஹதாரண்யகம், மைத்ரேயமென்னும் உபநிஷத்துக் களும்; யஜுர்வேத பிக்ஷுகம், துரீயாதீதாவதூதம், ஸாமவேத ஸந்ந்யாஸம், குண்டிகை முதலிய உபநிஷத்துக்களும் சன்னியாசத் தைத்தொகுத்தும் விரித்துங் கூறுவனவாயுள. சைவமஹாபுராண கைலாஸ ஸம்ஹிதையின் இறுதிப்பாகத்திலுஞ் சன்னியாசவுயர்வு கூறப்பட்டுளது.

இன்று - சுட்டடியாப்பிறந்த இடைச்சொல். "எஃதும்" என்பது— "குறியதன் முன்ன ராய்தப் புள்ளி— உயிரொடு புணர்ந்தவல் லாறன் மிசைத்தே." என்னும் **தொல்காப்பியச்** சூத்திர விதிவழி வந்தது. தானெடுத்து மொழிதலென்னும் உத்தியால் இச்சூத்திரமே நன்னூலாராலும் எழுத்தியலிலொரு சூத்திரமாகச் சொல்லப்பட்டது. வாணாள் - வாழ்நாளென்பதன் மரூஉ; அம்பலவாணனென்றாற் போல; மரூஉ அன்று; புணருமாறு புணர்ந்ததே யெனற்கும் **வீரசோழியத்தில்** விதியுண்டு. இன்றி என்னும் வினையெச்சம் இன்று - என நின்றது. ஓகாரம் ஐயப்பொருட்டு. தடை - ஐ விகுதிபெற்ற தொழிற்பெயர்.] (கக)

சொனவணங் குடும்ப மொழித்திவண் டானே
சுகதவ வேடமே பூண்டு
கனவெழில் குலவ மடாலய மமைத்தக்
கருணையை நாடுவ லென்னின்
மனையறந் துறவு மிலாவிடை யாகி
வருந்துவை விடயமும் வாட்டும்
முனைநலர் செய்தா ரென்னினன் னேரு
முடிவினி னிவிர்த்தியை நயந்தார்.

கூறியவண்ணங் குடும்ப பாரத்தை யொழித்து (எவ்விடத்துஞ் செல்லாமே) இவ்விடத்திற்றானே சுகமான தவ வேடமே தாங்கி, மகத்தான அழகமைய ஓர் மடாலயமேற்படுத்திக்கொண்டு, அதிலிருந்து திருவருளை நாடுவேனென்னில்,— இல்லறம் துறவறமென்னும் இரண்டுமில்லாத மத்தியநிலையி லகப்பட்டு வருந்துவாய். உலக விடயங்களும் உன்னை வருத்தும். முன்னிருந்த நல்லார் பலரும் மடாலயங்களி லிருந்தனரே யென்னின், அவர்களும் அவற்றை நீங்கிநிற்கு நிலையையே கடைசிக்காலத்திற் பெரிதும்விரும்பினார்கள்.

[ மைத்ரேயோபநிஷத்தின் உ - ம் அத்தியாயம்— "வித்வாம்த் ஸ்வதேச முத்ஸ்ருஜ்ய ஸந்ந்யாஸாநந்தரம் ஸ்வத:।" என்னும் வசனத்தால் 'வித்துவானான துறவி தானாகவே தனது ஊரை விடல் வேண்டும்' என்பதை வெளியிடுதலின், இச்செய்தி நாரதபரிவ்ராஜகோபநிஷத்தின் எ - ம் உபதேசத்துங் காணப்படுதலின் அவ்வாறு செய்தல் தகுதியே. துறவியாய்த் தமதூரைவிட்டு வந்த இந்நூலாசிரியரும் பின்னர் அவ்வூரை யெய்தாது நிற்பவரேயாயினார். இல்லறம் 'மனையறம்' எனப்பட்டது; கிருகத்தாச்சிரம மென்பது மிதுவே. இவ் வறச்செயல்களை "இறந்து ளோர்க்கு மிரவலர்க் குந்தனி—

துறந்து ளோர்கட்குந் துப்புர வீதலால்—அறந்த வாத்துய ரில்லற மாற்றுதல்—சிறந்த தென்ன வினிதுளந் தேறினன்." "இல்ல றத்தி னிசைந்து கிளையொடும்—புல்லிப் பாத்துண னீத்தவர் பூந்திரை—மல்கு நீர்படி யாதவர் மாண்பொருள்—நல்கி டாரிவ ரேநர கெய்து வார்." எனுங் **காசிகாண்டச்** செய்யுள்களினறிக.

'இருந்து' என்பது சொல்லெச்சம். நிவிர்த்தியையே எனத் தேற்றே காரஞ் சேர்த்துரைக்க.] (ருஉ)

கரும்பினைத் தேனைக் கண்டினை யிழுதைக்
 கனியினை யமிழ்தினைப் பழித்த
அரும்பரை போக மருந்தியச் சிவத்தை
 யடைவது பெரியபெ றென்று
இருந்துற வுறுவர் நுண்டெளி வுடையா
 ரேனையர் தீழ்ப்புடை மலத்தை
மருந்தென வயிலு மெறுழியைப் போல
 மாயையின் போகமே துய்ப்பார்.

கரும்பு, தேன், கற்கண்டு, நெய், பழம், தேவாமுதம் ஆகிய இவை யனைத்தையும் பழித்துள்ள அருமையாகிய பரைபோகமெனும் ஆனந்தத்தை நுகர்ந்து சிவானந்தமேலீடாகிய சிவத்தையடைவது பெறுதற்கரிய பெரும்பேறென்று மகத்தான துறவறத்தை நுண்ணறி வுடையோர் பற்றுவர். மற்றையோர் இழிவுள்ள மலத்தைத்தானே அமுதமென்று புசிக்கும் பன்றியைப்போல மாயாமய விடயபோகங் களையே நுகர்வர்.

[கனிந்தது 'கனி'; இது பால்பகாவஃறிணைப்பெயர். மதுரச்சுவை பொருந்திய வாழைக்கனி, பலாக்கனி, மாங்கனி முதலியனவாகக் கொள்க. பேறு 'பெறு' எனப்பட்டது குறுக்கல்விகாரம். பெறப்படுவது பேறு; செயப்படுபொருளுணர்த்தும் ஐ - விகுதி புணர்ந்து கெட்டு முதனீண்ட சொல்; செல்வமெனும் பொருட்டு. ஈண்டுச் சிவானுபூதியே செல்வமாகலின் அது பெரியபே றெனப்பட்டது. அனுபவத்தெய்துதல் அடைதலெனப் பட்டது.] (ருங)

மடமது வும்பற் றெனவுனி யேயென்
 மனைசுதர் தமரையுந் துறப்பின்
இடம்பொரு ளேவற் கெதுபுரி வேனீ
 யிசையெனி லிருமகி யுண்டு

படர்புரி வடியா ருளர்வைக் கெல்லாம்
 பாரமார்த் திகவரு ளுண்டு
மடமக ளுதரத் துனைத்திதி புரிந்த
 மகிமையை மறந்துமற் றறையேல்.

மடாலயமும் பற்ருக முடியுமென்று அதனை வெறுத்து என் மனைவி மக்கள் சுற்றத்தாரையும் விட்டு நீங்கின் (எனக்கு வேண்டிய) இடம் பொருள் ஏவல்களுக்காக யாது செய்வேன், நீயே சொல் என்னில், இப்பூமியாகிய பெரிய இடமுண்டு. ஏவல் செய்யச் சிறந்த அன்புள்ள சிவனடியாருளர். இவற்றிற்கெல்லாம் பாரமார்த்திக ஆதாரமான திருவருளென்னும்பொருள் நிரந்தரமாகவுள்ளது. இளநலமுள்ள உன்தாயின் கர்ப்பாசயத்தில் நீ தங்கியிருந்த காலத்தே உன்னைக்காத்து இரட்சித்த அருமைப்பாட்டை மறந்து (மேலும் மேலும்) குறை கூறற்க. (ருச)

துறவறத் தாஞேர் திருவருண் ஞானத்
 துலக்கமற் றிருக்கவுங் கண்டேன்
அறுதியிட் டெனையத் துறவற மடையென்
 றருளினென் னுகுமென் பாயேற்
செறியுமுட் செடியைக் களைந்துழி யதன்வேர்
 தேர்ந்தரி யாததைக் கடுப்பப்
பொறியகல் விரத்தி யடைந்துமுட் டுறவு
 பொருந்தலில் குறைவின ரவரே.

துறவற மார்க்கத்திற் சென்றோர் திருவருண்ஞானப் பிரகாசமின்றி யிருக்கவுங் கண்டுள்ளேன். என்னை யொரு முடிவினுட்படுத்தி அவ்விதத் துறவறத்தையடையென்று கூறின், யாது கைகூடுமென்று கூறுவையாயின், முட்க ணெருங்கியுள்ள வொருசெடியின் மேற்பாகத்தைக் களைந்தவிடத்து அதன் வேரை யாராய்ந்தறுத் தெரியாமல் விட்டுவிட்டதுபோலப் பொருட்செல்வ நீங்கிய புறத்துறவினையடைந்தும் உட்டுறவு பொருந்துதலில்லாத குறைவுடையாரே உன்னுற் கண்ணுறப்பட்ட துறவறத்தார்.

[ இச் செய்யு ணிச்சயம்— சிவஞானசித்தியார் அ - ஞ் சூத்திரத்து ருடு - ல் " அகப்பற்றற் றிருப்பர்—நோக்கியிது புரியாதோர்

புறப்பற்றற் ருது நுழைவர்பிறப் பினின்வினைக ணுங்கி டாவே'' எனவும் வருதல்காண்க.

என்னை அறுதியிட்டு என மாறுக. எழனுருபு விகாரத்தாற் றொக்கது. பொறி - எழுத்து, செல்வம், அடையாளம், மரக்கலம், இந்திரியம் முதலியன வுணர்த்தும் பலபொரு ளொருமொழி ; பிங்கலநிண்டு காண்க.] (௩௫)

வாசனை நறும்பூப் பணியலங் காரம்
வனப்புறு தழுவணைப் படுக்கை
போசனப் பிரீதி யறுசுவை வேட்கை
புலையுண விலகரி யடைக்காய்
பேசிடு குறிசோ திடமருத் துவம்வீண்
பேச்சதி சயம்பெரு நகைப்பின்
ஞேசையென் பவற்றை விரும்பினுட் டுறவாங்
கோங்குவ தின்றென வுணர்தி.

சுகந்த வத்துக்கள், வாசனையுடன்கூடிய புட்பங்கள், ஆபரணலங்காரம், அழகிய தலையணை பக்கவணைகளோடு கூடிய சயனம், போசனப்பிரியம், அறுசுவை வேட்கை, மாமிசாகாரம், கள் சாராயம் கஞ்சா முதலிய இலகரி வத்துக்கள், தாம்பூலம், புகழ்ந்துரைக்கப்படுஞ் சாமுத்திரிகம், சோதிடம், வைத்தியம், பொழுதுபோக்கான வீண்வார்த்தைகள், அதிசயவிடயங்கள், பெருநகை விளைக்கும் விவகாரங்கள், சங்கீதம் ஆகிய இவற்றின்பேரில் விருப்பமிருக்குமாயின் அந்தத் துறவறநிலையில் உட்டுறவானது தலையெடாதெென வுணர்வாயாக.

[போசனப்பிரீதியை விரும்பொண்ணு தென்பது மிதாகாரத்தைக் குறிக்கின்றது. அறுசுவை= தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, காழ்ப்பு, கைப்பு. உவர்ப்பு - கூர்ப்பெனவும், காழ்ப்பு - உறைப்பெனவும்படும். மனத்தடிப்பிரிதற்காகக் காரம், புளி, உப்பு நீக்கியுண்ணவேண்டுமென்பதும் (கட்வாம்லலவண த்யாகீ க்ஷீரபோஜந மாசரேத் ।) "கட்வாம்ல லவணத்பாகீ க்ஷீரபோஜநமாசரேத் ।" என்னும் யோகசூடாமண்யுபநிஷத் வசனத்திற் பெறப்படுகின்றது. தியாநபிந்துபநிஷத்திலும் இச்செய்தியுளது. இத்திற நீக்க வுணவுடையாரே இந்நூலாசிரியரும். புலை - புலாலெனப்படுதலைப் "புறணி புலாலே புலையு மாகும்" என்று பிங்கலநிகண்டு கூறுதலினறிக.

புலால் புல்- என நின்று ஐகாரச்சாரியை பெறுமிடத்துப் புலை யெனவாம். நாரதபரிவ்ராஜகோபநிஷத்தின் ௪-ம் உபதேசம்— மருத்துவஞ்செய்தல் தருமஞ்செய்ய வேண்டுமென்னும் பிடிப்புத் துறவிக்கு ஆகாவென்பதுபற்றி, (விகித்ஸாயஊுஸாஹஸம்) "சிகித் ஸாதர்ம ஸாஹஸம்" என்று கூறிச்சேறலின் மருத்துவ நீக்க முணர்க. சங்கீதஞ் செவிக்கினிதாகலின் அஃது 'இன்னோசை' எனப்பட்டது. இந்திரிய நிக்கிரகஞ் செய்வார்க்கு இஃதுமொரு தடையாகலின் அதனையும் வரைந்தார். "வீணை முரன்றெழு மோசையி லின்ப மிகுத்திடு மாகாதே" என்று தமிழ்மறை திரிபுடிசகிதார்த்தத்தி லுரைக்குமுரைகளும் இதனை வற்புறுத்தவுள. காசி காண்டம்—

"ஓங்கு செல்வமுறு கந்தருவர் வாழுலகமே"

"ஆதி நம்பனுரு நாதவுரு வாகுமெனமுன்
ஓது கின்றமறை யாவையு முரைத்திடுதலாற்
கீத மீசன்முன நாளுநவில் கேண்மையுடையோர்
தீதி லிவ்வுலகு சேர்குவ ரெனவுரைசெய்தார்."

என்றுரைக்குமாற்றானே, ஈசனது உருவம் நாதமேயெனு நிச்சயமும், யாழ் முதலிய கருவிகளைக்கொண்டு பாடும் ஓசையே அஃதென்பதுங் கொண்டு ஈசனைப்பாடுங் கீதப்பிரியர்களெய்துகதி கந்தருவலோகமே யென்பது மறியப்படுகின்றது. இன்னணம் எவ்வெவ்வுலக காரியங்களில் ஈசனைச் சம்பந்தப்படுத்திக்கொண்டா ரெவரெவரோ அவரெல்லாம் அவ்வக் கதிகளை ஈச சம்பந்தத்தோ டடைந்து புண்ணியந் தீர்ந்தவுடன் அவ்வச் சம்பந்த வாசனையோடு மிவ்வுலகிற் பிறப்பவரேயாவரென்பதும், உலகிலெதனையும் விரும்பாது நிற்கும் அத்துவித பரமான்மநிலையே யுலகமில்லாப் பரகதியாமென்பதும் ஈண்டறிந்து கொள்க. "யாரெப்படிச் செய்கின்றனரோ யாரெப்படி யாசரிக்கின்றனரோ அவரப்படியாகின்றனர்" என்னுஞ் சுருதியும் முற்படலத்து அஅ-ன் உரையுழைக் காட்டப்பட்டதன்றோ.] (௩௬)

சீடர்க ளீட்டந் தேசமொ டமையந்
திகைமதம் வருணநொ ளுமை
ஏடணை யைப்பா தகமக வற்ற
மெதுவுமி லாநிவிர்த் தியினின்

ரூடர னடியா ரயருப சார
  மனைத்தையு மீசுரார்ப் பணஞ்செய்
தீடறு கைகாட் டாங்குறிப் பதிலே
  யிருப்பது துறவிக ணிலையால்.

சீடர்கள் கூட்டம், நல்லதேசம், நல்லகாலம், நல்லதிசை, மதம், சாதி, பொருமை, ஏடணைகள், பஞ்சமாபாதகம், இதயத்துள் அச்சம் ஆகிய விவற்றில் ஏதுமின்றித் துறவறத்திினின்று, பஞ்சகிருத்திய நடனத்தைப்புரி அரனடியார் செய்யும் உபசாரங்களைச் சிவார்ப் பணஞ் செய்துகொண்டு, சமானமற்ற சின்முத்திரையாற் குறிக்கப் பட்ட நாட்டத்திலே யிருப்பது உண்மைத் துறவிகளுடைய நிலை யாகும்.

[சீடர்கள் கூட்டங் கூடாதென்பதை "நசிஷ்யாநநுபத்நீத க்ரந் தாந்நைவாப்யஸேத்பஹூந் ।" என்று நாரதபரிவ்ராஜகோபநிஷதம் ரு - ம் உபதேசத் தோதுதலினறிக. பொருள்:— "சீடர்களைக்கூட் டாதிருத்தல்வேண்டும்: மிக்க கிரந்தங்களை அப்பியாசஞ்செய்தல் கூடாது" எனவாம். முற்படலத்து ௩௩ - ல் "தேவர்வாழ் ஊரில் உள்ளடங்கவே யுயர்ந்த நிட்டை செய்குதி" என்று கூறி, இங்ஙனம் 'நறிய தேசநிவிர்த்தி' கூறுத லென்கருதியோவெனின்,—சீவபோத அடக்கமுறு சித்தசுத்தி யெய்துமெல்லையுந் தேவர்வாழ் ஊரின்கண் ணிருத்தல் நலனென்பதுகருதி அங்ஙனமவ்வாறு கூறப்பட்டதென் பதை 'உள்ளடங்க' என்றதே காட்டும். சித்தசுத்தியுற்ற துறவி யெவ் விடத்துஞ் சஞ்சரித்தல் கூடுமென்பது கருதி இங்ஙனம் அத்திறத் தேச நிவிர்த்தி கூறப்பட்ட தென்க. இதற்குரிய சுருதி வருஞ்செய்யு ளுரைக்கட் காட்டப்படும். கருவிக் கூட்டங்களிலேயே சமயக்கூட் டங்க ளடங்குதலின் மதநீக்கங் கூறப்பட்டது. "சைவமுத லாவள வில் சமயமும் வகுத்துமேற் சமயங் கடந்தமோன சமரசம்வகுத்தநீ" என்று தாயுமானர் கூறியதும், பிறவும் முற்படலத்து ௩0 - ன் உரை யில் விளக்கப்பட்டமையின் ஆண்டுநோக்குக. மைத்ரேயோபநிஷத்தில் (வர்ணாஶ்ரமாசாரயுதா விமூடா꞉ கர்மாநுஸாரேண ஃபலம் லபந்தே ।) "வர்ணாச்ரமாசாரயுதாவிமூடா꞉ கர்மாநுசாரேண பலம்லபந் தே।" எனவருவசனம்— "வருணாச்சிரம ஆசாரத்தோடு கூடிய மூடர்கள் கருமானுசார பலனையே யடைகிறார்கள்" எனுமொண் பொருள் பயத்தலின் வருணவுயர்வு பாராட்டுதல் பொருந்தாதென் னுங் கருத்தால் அதுவுந் தள்ளப்பட்டது.

“ நசர்மணோநரக்தஸ்ய நமாம்ஸஸ்யநசாஸ்திநஃ ।
நஜாதிராத்மநோஜாதிர் வ்யவஹாரப்ரகல்பிதா ॥ ”

என்னும் நிராலம்போபநிஷதச் சுலோகமும் “ ஜாதியானது தோலுக்குமின்று : இரத்தத்திற்குமின்று : தசைக்குமின்று : எலும்புக்குமின்று : உயிருக்குமின்று : ஜாதியானது வியவகார கற்பிதமாயுள்ளது ” எனுமருத்தந் தருதலுங் காண்க. விருப்பமென்னும் பொருளுடைய ‘ ஏஷணா ’ என்னும் வடசொல்லே “ ஏடணை ” எனப்பட்டது. இது புத்திரன், வித்தம், லோகமெனப் பகுக்கப்படுதலையும், இம்மூன்றனையும் விட்டுத் துறவறம் புகவேண்டுமெனலையும் பிருஹதாரண்யகோப நிஷத்தின் ரு - ம் அத்தியாயத்து ரு - ம் பிராஹ்மணம்— “ ஏதம்வைதமாத்மாநம்விதித்வா ப்ராஹ்மணாஃ புத்ரைஷணாயாச்ச வித்தைஷணாயாச்ச லோகைஷணாயாச்ச வ்யுத்தாய । அதபிக்ஷாசர்யம் சரந்தி ” என்று கூறிச்செல்லும்வழிக் காண்க. இந்நூலகத்தும் பின்வரு எரு - ஞ் செய்யுளில் “ ஏடணையோர் மூன்றும் ” என அது கூறப்பட்டுளதுமறிக. வித்தம்=பொன். லோகம்=மண். புத்திரனென்பதைத் தாரமென்பதிலேற்றிப் ‘ பெண் ’ என்று கூறுதலுமுண்டு; அதனை, முற்படலத்து அரு - ல் “ அருத்தம் பெண் மண் ணெனுநசை ” எனப் பிரதிபாதிக்கப்பட்டது கொண்டுமோர்க. ஏஷணா - என்பதை ‘ ஈஷணா ’ என்று கூறுதலு முளது ; அதனை, மைத்ரேயோபநிஷதம் (ஸர்வேஷணாஸிஷு) “ஸர்வேஷணாஸிஷு” என்று கூறுதலினறிக. கொலை, களவு, பொய், கள், காமமென்னும் மாபாதகமைந்துமே ‘ ஐம்பாதகம் ’ எனப்பட்டன. இவற்றின் பிரபாவங்களைத் தகராலயரகசியத்தின் உ - ங் காண்டத் துரைத்தனராகலின் ஆண்டுக்காண்க. உபசாரங்களை ஈசுரார்ப்பணஞ் செய்தல் அவசியமென்பது “ அதன்வழியில் வருபவமுமிலை யீசுரார்ப்பணத்திற் கவையா மாயின் ” என்று இந்நூலாசிரியர் ஜீவயாதனையைக் குறித்தவியாசத்தி லறிவுறுத்தவாற்று னறியப்படுகின்றது. “ கைகாட்டாங்குறிப்பு ” என்றது முற்படலத்து கOள - ன் உரையில் விளக்கப்பட்ட சின்முத்திரையே யாகலின் அதனை ஆவயிற் காண்க. “ ...... த்வைதவர்ஜிதே । இத்யேவமாசரேத்தீமாந் ஸஏவம்முக்திமாப்நுயாத் ॥ ” என்னும் ஸ்கந்தோபநிஷத வாக்கியம்— “ துவிதமில்லாத (=அத்துவிதநிட்டை யுடைய)வனா யிருத்தல்வேண்டும்; இவ்வாறு நடக்கும் புத்திமானெவனோ அவன் முத்தியடைகின்றனன் ” எனும்பொருளைப் பயக்குமாற்றானுந் துறவிகள் நிற்கும் அந்நிலை யறியப்படுகின்றது.

முற்செய்யுளினும் இச்செய்யுளினும் உட்டுறவுக் கிடையூறுகள் இன்னனவென்பதும், அவை நீங்கி நிற்குநிலையுங் கூறப்பட்டன.

நொனுமை - குறுக்கல்விகாரம். 'குறிப்பதில்' என்பதில் அது - பகுதிப்பொருள் விகுதி.] (கூஎ)

பாரமார்த் திகத்தே வொன்றையே யுளத்திற்
　பதித்துயுந் துறவியை யோம்பு
சீரிய சமுசா ரியும்பொறி யடையத்
　திருவருள் கூட்டிடுங் கள்ளூன்
ஆரமு தெனவுண் போரருங் கலைசித்
　தடைந்தவ ரென்னினு மவரை
வாரவு வந்தார் பெறுநல னென்னே
　மதியில ராத்திகைப் பாரே.

பாரமார்த்திகமார்க்கத் தெய்வமொன்றையே மனத்திற்பதிய வைத்துத் தியானித்துக்கொண்டு உஜ்ஜீவனத்தை யெய்தவிருக்குந் துறவியைக் காப்பாற்றிவருங் கிருகத்தனும் சிறந்த இலக்குமிவிலாசமடையும்படி திருவருள் கூட்டிவைக்கும். கள்ளையும் ஊனையும் தமக்குக்கிடைத்த தேவாமுதமென வுண்போர் அருமையாகிய சாத்திரவுணர்ச்சியுஞ் சித்துக்களுமுடையரா யிருக்கினும் அவரைப் பெரிதும் விரும்பிநிற்போர் பெறத்தக்க நன்மை யொன்றுமின்று. மற்றங்ஙனம் அவரடையும் பயனல் நல்லறிவிழந்து மயங்கியே யிருப்பர்.

['பாரமார்த்திகத் தே வொன்றையே யுளத்திற் பதித்துய்யுந் துறவி' என்றமையிற் பலதெய்வ வழிபாடுள்ளோன் மேம்படு துறவியல்ல னென்பதூஉஞ் சித்தித்தது. 'சமுசாரியும் சிறந்த செல்வத்தையடையத் திருவருள் கூட்டிடும்' என்றது (முண்டகோபநிஷத் திகாரம்) "ஆத்மஜ்ஞம் ஹ்யர்சயேத் பூதிகாம:" என்னுஞ் சுருதி முடிபி னுளது. முண்டகோபநிஷத வாக்கியமாகிய இதன் றமிழ்:— "செல்வத்தை விரும்பினவன் ஆன்மஞானியை வழிபடக் கடவன்" எனவாம். நாரதபரிவ்ராஜகோபநிஷத்தின் கூ - ம் உபதேசத்தில் (மாத்யதிப்ரமதாந்த்ருஷ்ட்வா ஸுராம்பீத்வா சமாத்யதி ।) "மாத்யதிப்ரமதாந்த்ருஷ்ட்வா ஸுராம்பீத்வாசமாத்யதி।" எனவும், எ - ம் உபதேசத்தில் (ராத்ராந்நபலல) "ராத்ராந்நபலல

மிவ" எனவும் வருவாக்கியங்கள்— துறவியாயுள்ளான் கள், ஊன் உண்டல் கூடாதென்பதை விதிக்கின்றன. பொருள்:— "மாதர் களைப்பார்த்து மத்தனாகின்றனன்: கள்ளைக் குடித்து மத்தனாகின் றனன்" எனவும், "இராத்திரியுணவைப் புலாலைப்போல (நினைத்தல் வேண்டும்)" எனவுமாம். ஊனுண்டல் அடாதகாரியமென்பதை உ௩ரு - செய்யுள்களா னிரம்பியுள்ள ஜீவயாதனையைக் குறித்த வியாசத்திலே தக்க கடாவிடைகளாற் சாலவும் விளக்கியுள்ளார் இந் நூலாசிரியர். போராடப் பிரீதியுள்ளார் அவ் வியாசத்தோடுபோ ராடுக.

இவ்வாறாயின், "நாரத! பிரமஞானியா யுள்ளார்க்கு விதியு மின்று: நிடேதமுமின்று: தள்ளத்தக்கதுமின்று: கொள்ளத்தக் கதுமின்று: அவ்விதமே மற்றதுமின்று" எனுமருத்தந்தோன்ற "நவிதிர்நநிஷேதச்ச நவர்ஜ்யாவர்ஜ்யகல்பநா। ப்ரஹ்மவிஜ்ஞாநிநா மஸ்தி ததாநாந்யச்ச நாரத॥" என்று அந்த சு - ம் உபதேசத்தி லேயே கூறியிருத்தல் யாதுகருதியெனின்,— அகம் புறமாகியஈரிடத் தும் பகைமையற்ற அன்னோர், திருவருள் வயப்பட்டு நிற்குங்காலத் துப் பாலர் பேயர் பித்தர் தன்மையையும் ஏகதேசம் பொருந்துதல் கூடும்; அத்தருணம் அவர் யாது புரியினும் ஏனோ ரிகழ்ந்து கெடா திருக்கவேண்டுமெனுந் தருமத்தையும், சாந்தோக்யோபநிஷத்தின் ச - ம் பிரபாடகம்—

"யதாபுஷ்கரபலாச ஆபோநச்லிஷ்யந்த
ஏவமேவம்விதிபாபம் கர்மநச்லிஷ்யத"

என்று கூறுதலின், தாமரையிலையிற் றண்ணீ ரொட்டாதது போலப் பிரமஞான முற்றவன்பாற் பாவகன்மமொட்டாது எனவறி யப்படு தருமத்தையுங் கருதி அவ்வாறு கூறிற்றென்க. கூறப்பட்ட தன்மையுறாதார் விதி நிடேதங்களை மீறுதல் அடாதகாரியமா மென் பதூஉம் நாரதபரிவ்ராஜகத்தின் ரு - ம் உபதேசம்—

"ததஃ ப்ரவ்ருஜ்யசுத்தாத்மா ஸஞ்சரேத்யத்ரகுத்ரசித்।"

என்றியம்புதலி னறியப்படுகின்றது. பொருள்:— "பின்பு சித்த சுத்தியுள்ளோன் பரிவ்ராஜகனாய் எவ்விடத்துஞ் சஞ்சரிக்கலாம்" எனவாம். இவ்வாறு கூறினும் அனாசாரவுணவுமுதலியன ஏற்காமே அதிகவருத்த முறாமே உலகம் பழிக்குநடை கொள்ளாமே நிற்றலே யியைபுடைமையாம்.

சமுசாரியும் - என்றவும்மை இழிவுசிறப்பு. சமுசாரியும் சீரிய பொறியடைய எனவியைக்க. 'கள், ஊன்' 'கலை, சித்து' என்பன உம்மைத் தொகை. ஊ - என்னும் இறைச்சிப்பெயர் னகரச்சாரியை பெற்று ஊன் என வாயிற்று. அருமை + அமுது = ஆரமுது. அருமையெனும் பண்புப் பெயர் ஆர் - என்று விகாரப்பட்டது.] (கூஅ)

## உ. வக்கிரநிருவிகற்பவசன கண்டனம்.

பத்தியந் தீர்ந்து சுகமடைந் ததற்பின்
பாகலுண் டிடிலெனை யென்று
குத்திரம் பேசு கபடசன் ஞசக்
குணுங்குக ணுப்பறை யடங்கச்
சித்திர மாய்நான் மிழற்றுவ லீங்கே
சிறுகறு நிருவிகற் பந்தான்
ஒத்துறின் மண்கூ ழினும்வெறுப் புவப்பின்
றுண்பதற் குடன்படல் வேண்டும்.

பத்தியமாயிருக்கவேண்டிய காலங் கடந்து சுகநிலையிற் றேகமிருக்குங்கால், பாகற்காயை யுண்ணில் யாது கெடுதி விளையும்? (ஒரு கெடுதியும் விளையாது.) அவ்விதமாகவே சாத்திய தசையை யடைந்துள்ள யாங்கள் கள்ளும் ஊனுமுண்ணலாங் கேடுறுதென்று சாமர்த்தியமாகப் பேசுங் கபடசன்னியாசிகளாகிய பேய்களுடைய நாப்பறை யடங்கும்படி விநோதமாக நானிங்கே கூறுவேன் (நீ கேட்பாயாக). குறைவற்ற நிருவிகற்ப நிலை அவர் கூற்றுப்போற் சமத்துவமாய்க் கூடியிருக்குமாயின் மண்ணினிடத்து வெறுப்புஞ் சோற்றினிடத்து விருப்புமின்றி அவற்றை யுண்பதற்குச் சம்மதித்தல் வேண்டும்.

['பாகல்' என்றது ஆகுபெயராய் அதன் காயை யுணர்த்திற்று. எம் மருந்துக்கும் முக்கிய விரோதப்பொருள் பாகற்காயாதலின் அஃதீண் டுவமைக் கெடுத்துக் கொள்ளப்பட்டது. 'பாக லுண்டிடிலென்னை' என்றதனால் உண்ணலாமென்பது குறிப்பெச்சம். குணுங்கு = பேயெனும் வேதாளம்; "வேதாளங் கூளி யழனே சவங்குணுங்கு" என்று உரிச்சொல் நிகண்டு கூறுதலினறிக. சூடாமணிநிகண்டிலே 'குணங்கு' என வருகின்றது. உடன்படாவிடில் அவர் கூற்று வக்கிரநிருவிகற்பவசனமா மென்பது குறிப்பெச்சம்; வக்கிரம் பொய்யின் மேற்று. மண் கூழ் - வெறுப் புவப்பு நிரனிறைப் பொருள்கோள். இன்றி - இன்றெனத் திரிந்துநின்றது. (கூக)

ஊணுடை யல்லால் வேறெஃது மேற்கா
 வுபேட்சையி னுட்டெளி வோடு
நாணுயிர்ச் செயலே விடுத்தவன் செயலி
 னயவுப சாந்தியை யெய்தி
ஆணவ நீலங் கடிந்தருண் மயமா
 யருந்துவ வருந்தி நின் றிடுதல்
மாணவர் கூடுந் திருவருட் டுறவு
 மற்றவை கிடைநசை மயக்கே.

ஊணும் உடையுமல்லாமல் மற்றெதனையும் பெற்றுக்கொள்ளாத உபேட்சையினல் உள்ளத்தின்கண் ணுற்ற தெளிவோடு நாணம் முதலிய சீவச்செயல்களை விடுத்துச் சிவச்செயலால் நயப்பாடுள்ள உபசாந்தத்தையடைந்து, ஆணவவிருளை யொழித்து, அருண்மயமாகி, உண்பதற்கு யோக்கியமான சுத்தவுணவை யுண்டிருப்பது மாட்சிமைப்பட்ட பெரியோர் கூடுந் திருவருட்டுறவாகும். மற்றவை நிலவுலக ஆசையின் மயக்கமேயாம்.

[(ஹைக்ஷாவரெ தெஹரக்ஷணெ – பைக்ஷமாசரேத் தேஹரக்ஷணே =) "தேக சம்ரக்ஷணர்த்தமே பிக்ஷை பெறல்வேண்டும்" என்று ஸ்கந்தம், மைத்ரேயம் என்னும் உபநிடதங்களும், இராத்திரியுணவை யொழித்தல்வேண்டுமென்று சுருதி கூறியாங்கு "அச்சிவ னுண்ணின்ற வருளை யறிந்தவர்—உச்சியம் போதாக வுள்ளமர் கோவிற்குப்—பிச்சை பிடித்துண்டு பேத மறநினைந்—திச்சைகெட் டேகாந்தத் தேறி யிருப்பரே." என்று திருமந்திரமுந் தெரிக்கின்றபடி துறவிக்கும் உண்டி பவசியமே யாயிற்று. அவ்வுண்டியும் உடையுமே பெறல்வேண்டுமென்னும் ஓரளவை (அயாசிதம் யதாலாபம் போஜநாச்சாதநம் பவேத் ।) "அயாசிதம் யதாலாபம் போஜநாச்சாதநம் பவேத் ।" என்னும் நாரதபரிவ்ராஜகோபநிஷத்தின் ரு - ம் உபதேசத்தும் பெறப்படுகின்றது. பொருள்:— "உண்டியும் உடையும் யாசிக்கா இலாபமாகக் கிடைப்பனவாதல் வேண்டும்" எனவாம். மேலே வரையப்பட்ட கள், ஊன் அல்லாச் சுத்தபதார்த்தங்களை யுண்டல்வேண்டுமென்பார் "அருந்துவ அருந்தி" என்றார்.

உண்ணப்படுவது ஊண்; உண் என்னு முதனிலை முன்னர்ச் செயப்படு பொருளுணர்த்தும் ஐ - விகுதி புணர்ந்துகெட்டு முதனீண்டசொல்.] (௪0)

## கூ. மெய்த்துறவில், மூலமலநிவிர்த்தியிலார் பெறும் பலம்.

எவ்வறங் களுக்கும் வியனற மாக
　வியம்பிடு துறவறங் குறுகி
வவ்வுல மரன்மா சொன்றற வேகன்
　மட்சயம் வந்துளார் களுமுண்
டவ்வியல் புடையா ரருங்கதி யடைதற்
　கருகரன் றாயினுங் கடையிற்
செவ்வைவிஞ் ஞான கலப்பிராத் தியினைச்
　சேருவ ரவலமெய் தாரே.

எந்த அறங்களுக்கும் மேலான அறமாகச் சாத்திரங்களிற் கூறப்பட்ட துறவறத்தையடைந்து, ஆன்மஞானத்தை ஆவரித்துத் துன்பப்படுத்துந் தன்மையுள்ள ஆணவமலமட்டும் நீங்காது பொருந்தியிருக்கக் கன்மக்ஷயம் பெற்றவர்களு முண்டு. அத்தன்மையினர் அருமையாகிய ஞானசாயுச்சியத்தை யடைதற் கதிகாரிகளல்லராயினும் பிராணோற்கிரமணகாலத்தில் நல்ல விஞ்ஞானகலராகும் பேற்றைப் பெறுவரேயன்றி வீணிற் சென்றவராகார்.

[ எவ்வறங்களுக்கும் துறவறம் வியனறமென் றியம்பப்பட்டமை— உஎ - ன் உரையிலே "பிரவிருத்திலக்ஷணம் கன்மம், சன்னியாச லக்ஷணம் ஞானம்" எனு மருத்தத்திற் காட்டப்பட்ட சுருதியினும்,

"அறந்தா னியற்று மவனிலுங் கோடி யதிகமில்லந்
துறந்தா னவனிற் சதகோடி யுள்ளத் துறவுடையோன்
மறந்தா னறக்கற் றறிவோ டிருந்திரு வாதனையற்
றிறந்தான் பெருமையை யென்சொல்லு வேன்கச்சி யேகம்பனே."

என்னும் பட்டினத்தடிகள் திருவாக்கினும் இனிது தெளியக் கிடக்கின்றது. "சன்னியாச மொன்றினாலேயே பெரியோர் அமிருதத்துவத்தை யடைந்தனர்" என்பதற்குரிய கைவல்யோபநிஷத மந்திரம் கூ - ன் உரையிற் காட்டப்பட்டது. அதனையும்,

(ஸந்ந்யாஸேநைவ தேஹத்யாகம்கரோதி ஸக்ருதக்ருத்யோபவதி)
"ஸந்யாஸேநைவ தேஹத்யாகம்கரோதி ஸக்ருதக்ருத்யோபவதி"

என்னு நாரதபரிவ்ராஜகோபநிஷத்தின் கூ - ம் உபதேச வாக்கியத்தையும் இங்ஙனங் கருதிக்கொள்க. பொருள்;— "சன்னியாசத்

தோடு உடம்பினை விடுவோன் செய்யவேண்டிய யாவுஞ் செய்தோனுவன்" எனவாம். பிராரத்த கன்மவொழிவி னுடம்பிழத்தல் கூடுமேயன்றி, இடையிற் றனே ஊறுகோ ளிழைத்திழத்தல் கூடாதென்பதும் இச்சுருதி வாக்கியத்துணை யறியக்கிடக்கின்றது. இத்திற மெய்த்துறவில் ஆணவமல நிவிர்த்தியிலார் பெறும்பலம் விஞ்ஞானகலப் பிராத்தி யென்றது—

(......ஸந்ந்ராஸாத்வா வரிக்ஷயெ ।
கமூணாம் தத்தாயத்தமாயாயாஶ்வ வரிக்ஷயாத் ।
மலவகொவிஶிஷ்டஸ்ஸ்யா தஸ்மாத்விஜ்ஞாநகெவலாஃ ॥)

"......ஸந்யாஸாத்வாபரிக்ஷயே।
கர்மணாந்துததாயத்தமாயாயாச்ச பரிக்ஷயாத்।
மலஏகோவிசிஷ்டஸ்ஸ்யாத் தஸ்மாத்விஜ்ஞாநகேவலாஃ ॥"

என்று பௌஷ்கராகமம் பசுபடலத்திற் கூறுதலி னறியக்கிடக்கின்றது. பொருள்:—"சன்னியாசத்தினுலு முண்டாகு கன்மநாசத்தில் அக்கன்மாதாரமாயிருக்கும் அசுத்தமாயாநாசத்தில் ஆணவமலமொன்றுமே எஞ்சியிருக்கும்: அதனுல் விஞ்ஞானகேவல ராவார்கள்" எனவாம். இப்படலத்து க - ன் உரையில் அர்ச்சிராதிமார்க்கப் பிரமலோகம் பற்றிக் காட்டப்பட்ட சுருதியனைத்தும் 'விஞ்ஞானகேவலராவார்கள்' என்னும் இவ்வாகமமுடிபி னுள்ளனவே. இதனுற் பதிஞான மெய்தவேண்டிய துறவிகள் அதனை யெய்தாவிடினும் அந் நிலையினின்றவாறே யுடம்பை விடுவராயின் அந் நிலைக்குரிய விஞ்ஞானகலப் பிராத்தியை அவரடைதலுண்மையின் "அவலமெய்தாரே" என்றூர். விஞ்ஞானகல ரிருக்கைகளை முற்படலத்து அ௫ - ஞ் செய்யுளுரைகளிற் காண்க.

வியன் - பெருமையெனும் பொருளைத்தருமோ ருரிச்சொல். கன்மக்ஷயம்=கன்மக்கேடு; கர்மக்ஷயம் என்பது வடநூன்முடிபு. கர்மக்ஷயமே மாயாமலக்ஷயமுமா மென்பது கணித்துக் கர்மக்ஷயமே கூறப்பட்டது; என்னை? தொழிலாயுள்ள கன்மமலமும், உடம்பாயுள்ள மாயாமலமும் பீஜாங்குர நியாயத்த வாகலின்.] (௪௧)

### ௪. சாத்திரபடனஞான சரதம்.

கலிவிருத்தம்.

இவ்வித மிறைசொல வெழுந்து சீடனுஞ்
செவ்வென வுணர்கலைச் செல்வர் தாமுமிவ்

வுவ்வுறு துறவை யுறுத வுண்மையெற்
கொவ்வுற வறைகென வுரைத்தன் மேயினன்.

இவ்விதமாக ஆசிரியர் கூறலும்; அவற்றைக் கேட்டிருந்த சீடன் வணக்கத்துட னெழுந்துநின்று, நன்றாகச் சாத்திரவாராய்ச்சி செய்த கல்விச்செல்வ முள்ளோரும் இந்தத் தபோமகிமையுள்ள துற வறத்திற் பிரவேசியாதிருக்கின்ற வுண்மைக்கருத்தினையும் எனக்குத் திருத்தியாகும்படி கூறியருளல்வேண்டு மென்று விண்ணப்பிக்க; ஆசிரியர் கூறத்தொடங்கினர்.

['எழுந்து' என்றமையின் 'நின்று' என்பது வருவித்துரைக்க. ஒவ் வுற=பொருந்தும்படி; உறு - துணைவினை. அறைகென - வியங்கோளீறு தொகுத்தல். மேவினன் என்பது 'மேயினன்' எனத் திரிந்தது.] (சஉ)

அன்னவ ரருங்கட வையரும் பாதைசெம்
பொன்னிதி காத்திடு பூதம் போல்வரென்
றுன்னுதி வாயுறழ் வோதி லுள்ளொளி
மின்னுமோ வினையது வேட்கை யார்ப்பரோ.

அத்தன்மையினோர், ஏறிச்செல்வாரையேற்றிவிட்டுத் தானேற வறியாதிருக்கும் அரிய ஏணியையும், நடப்பாரை நடக்கவிட்டுத் தான் நடவாது கிடக்கும் அரிய பாதையையும், உடையாருழைச் சேர்ப்பதற்காக அழகிய செம்பொன்னைக் காத்துக்கொண்டிருக்கும் பூதத் தையு மொத்தவரென்று நினைப்பாயாக. வாயினால் ஞானம்பேசின் உள்ளிடத்துள்ள ஆன்மஞானம் பிரகாசிக்குமோ? இவ்வித வாய்ஞான மானது ஆசையின் ஆரவாரமேயாம்.

[சாத்திரஞானமெனும் அபரவித்தையே "வாயுறழ்வு" என் றும், இஞ்ஞானத்தின்மேற் சிரவணத்திற்குப் பின்னுண்டாகும் பிர த்தியக்க அனுபூதிஞானமெனும் பரவித்தையே "உள்ளொளி" என் றுங் கூறப்பட்டன. இவ் விருதிற வித்தைகளும் முண்டகோபநிஷத் தின் ஆரம்பத்திற்றானே—

"தத்ராபராருக்வேதோ யஜுர்வேதஸ் ஸாமவேதோ அதர்வ
வேதச்சிக்ஷாகல்போ வ்யாகரணம் நிருக்தம் சந்தோ
ஜ்யோதிஷமிதி । அதபராயயாததக்ஷரமதிகம்யதே ||"

எனும் வாக்கியங்களி லினிதறியக் கிடக்கின்றன. பொருள்:— "இருக்கு, யஜுர், சாமம், அதர்வமெனும் வேதங்களும்; சிக்ஷை,

கற்பம், வியாகரணம், நிருத்தம், சந்தம், சோதிடமெனும் அங்கங்களும் அபரவித்தையாம்: எதனாலே அக்ஷரம் (சிவம்) அறியப்படுமோ அது பரவித்தையாம்" என்றவாறு. அபரவித்தையைப் பரோக்ஷஞானமென்றும், பரவித்தையை அபரோக்ஷஞானமென்றும் வராஹோபநிஷதம் முதலியன கூறும். இவ் விருதிற ஞானமும் சிவஞானசித்தியார் சுபக்கத்திற் "பரஞானத்தாற் பரத்தைத் தரிசித்தோர் பரமே பார்த்திருப்பர் ...... வாச்சியவாசகஞானம்" என்று கூறியவாற்றானு மறியக்கிடக்கின்றன. இவற்றுள் அபரவித்தை ஞானச்சரியையாகிய கேட்டல், ஞானக்கிரியையாகிய சிந்தித்தலெனவும்; பரவித்தை ஞானயோகமாகிய தெளிதல், ஞான ஞானமாகிய நிட்டை யெனவும் பகுக்கப்படும். "வேதம் முதலிய ஞானசாத்திர விசாரத்திற் றேர்ந்தவன் பரப் பிரமத்தை யடைகின்றனன்" எனும் பொருள்—

(ஶப்³த³ப்³ரஹ்மணி நிஷ்ணாத꞉ பரம் ப்³ரஹ்மாதி⁴க³ச்ச²தி ।)

"சப்தப்ரஹ்மணிநிஷ்ணாத꞉ பரம்ப்ரஹ்மாதிகச்சதி ।"

என்னும் அம்ருதபிந்தூபநிஷத் வசனத்திற் பெறப்படுகின்றமையின், அதுவும், "கற்றல் கேட்டலுடை யார்பெரி யார்கழல் கையாற் றொழுதேத்தப்— பெற்ற மூர்ந்தபிர மாபுர மேவிய பெம்மா னிவனன்றே" எனத் தமிழ்மறையில் வெளிப்பட்டமையின் அவ் வபரவித்தையும் பரவித்தை விழைவார்க்கு வழிகாட்டியாயிருத்தல் கருதியே அஃதுடையாரையும் ஏணிக்கும் பாதைக்கு மொப்பாக்கி யுரைத்தார். இது கொன்னும் பொருத்தமே.

கடவை = ஏணி; சே - திவாகரங்காண்க. பொற்செம்பொன் நிதி எனவியையும். மின்னுமோ - என்றதிலுள்ள ஓகாரம் எதிர்மறைப் பொருட்டு.] (௬௩)

வேடம தாலருள் விளங்கு மாயினுப்
பாடம தாலுமே பலிக்கு மென்னலாம்
மூடமி லாயிதன் முடிவைத் தேரெனக்
கேடிலி யாரியன் கிளக்கி னனரோ.

சன்னியாசவேடந் தரித்தன்மாத்திரையிற் றிருவருள் ஞானம் வெளிப்படுமாயின் ஞானசாத்திரங்களை நாப்பாடமாகக் கூறன்மாத்திரையிலும் அது பலிதமாகுமென்று கூறலாம். அறியாமையை யொழி

த்தவனே! இவ் வியவகாரத்தின் முடிவை யாராய்வாயென்று கேட்டற்றவராகிய ஆசிரியர் கூறினர்.

[ சன்னியாசவேடந் தரித்தன் மாத்திரையின் ஞானம் வெளிப்படுதல் இன்றெனல் யாவருமொப்புமோ ருண்மையாதலின் அதனோடு வைத்தெண்ணப்படு சாத்திர வாய்ஞானத்தும் அந்த ஞானம் இன்றென்றறிதல் அறிவுடையார்க்கெல்லாம் எளிதாதலின், "மூடமிலாயிதன் முடிவைத்தேர்" என்றறிவுறுத்தார்.

முற்செய்யுளிற் போந்த நியாயமே இச்செய்யுளிலும் வேறோருவமான முகத்தான் விளக்கப்பட்டது.

வேடம் - ஈண்டுச் சன்னியாசவேடத்தை யுணர்த்திற்று. கேடிலி ஆரியன் - என்றது இருபெயரொட்டுப் பண்புத்தொகை; வேழக் கரும்பு என்றாற் போல.] (சச)

## ரு. சற்சீடன்வெளிப்பற்றகற்றி விளதல்.

கட்டுரை யுடையவெங் கருணைப் பண்ணவ
விட்டுள னுரைப்படி வெளிப்பற் றினையினி
உட்டுற வடைகுவ னுன்றண் ணளிகொடு
சிட்டனென் றுளனச் சீடன் போற்றினன்.

உறுதி மொழிகளை யுரைக்குங் காருண்ணியமுடைய தெய்வத்தை யொத்த எம் ஆசாரிய மூர்த்தியே! கட்டளையிட்டருளியபடி புறப்பற்றை யொழித்துவிட்டேன். இனி, நினது தண்ணிய கிருபையைக்கொண்டு அகத்துறவையுமடைவேன். இவன் நல்லொழுக்கமுள்ளோனென அங்கீகரித்து, என்னை ஆட்கொள்ளவேண்டுமென்று சீடன் றொழுதனன்.

[ சிட்டன் - (ஶிஷ்ட꞉) சிஷ்டன் என்னும் வடசொல்லின்விகாரம்; ஒழுக்கமுள்ளோ னெனும்பொரு ளுடைத்து. அவ்வொழுக்கம்:— முத்தியையருளும் முதல்வனே இவ்வாசிரியனென வெண்ணுதிருத்தல், அவன் முன்னிலையில் அரசற்குரிய சிறப்புக்களோடு செல்லல், ஒருதாண்மீ தொருதாளை யேற்றிக்கொண்டிருத்தல், நகைத்தல், எதிரே நிற்றல், படுத்துறங்கல், பாயிட்டிருத்தல், படுத்துக்கிடத்தல், எண்ணெயிட்டுக் கொள்ளல், வாகனமேறல், பாதரக்ஷைபிடல், தாம்பூலந் தின்றல், சீற்ற முறல், அவனுரை மறுத்தல், அவனியற்றிய

நூல்களைப் படியாதொழிதல், அவனடிகளைப் புகழ்ந்து தொழாது நிற்ற லென்பவற்றெஃது மில்லாமையும் ; அவனெழிற் றானுமெழல், அவன் இருவென்று சொற்றபின் பக்கலி லிருத்தல், அவன் போவென்று சொற்றபின் வந்தனித்துப்போதல், அவன் வாவென்றபடி வர லென்பவற்றெஃதும் விடாமையும் ; பிற நன்னடைகளுமேயாம். இவ் விவரமெல்லாம் நூலாசிரியரே சேந்தன்சேந்தமிழ் வெண்பாக் களிற் கூறியுள்ளார். இவ்வொழுக்கமிலான் சற்சீடனாகானென்பதையும் " சிட்டனென்றாள் " என்பதிற் பெறுக.

எம் - தன்னையொத்தாரைக் கூட்டிக்கொண்ட உளப்பாட்டுத் தன்மைப் பன்மை. கொடு - கொண்டு என்னு மூன்றாவதன் சொல்லுருபு தொகுத்தல். (சரு)

போற்றிய பினரவன் போத நூல்பயின்
றேற்றவா றுழலுந ரேது பிறப்பிறப்
பாற்றிடு செயலுமி லமல நாமெனச்
சாற்றிடு நிலைமையெத் தகைமைத் தென்றனன்.

இவ்வாறு தொழுதபின்னர் அச்சீடன் ஞானசாத்திரங்களிற் பழகித் தங்கண் மனம்போனவண்ணந் திரிபவர் எமக்குச் சனனந் தான் ஏது ? மரணந்தான் ஏது ? செய்யுங் கன்மங்களு மில்லை. பரிசுத்த பரம்பொருளே நாம் என்று கூறுங்கொள்கை யெத்தன்மைத் தென வினவினன்.

[ இல்லை யென்பதை புணர்த்தி நிற்கின்ற ஏது - என்பதைப் பிறப்பு இறப்புக்களோடு தனித்தனி கூட்டுக.] (சசு)

## ௬. கபடஞான கண்டனம்.

ஏசறு மைந்தகே ளிதுவு முன்சொன
ஆசுறு கபடசன் ஞசை வலகைகள்
பேசிடு கூற்றிவட் பெருக்கிக் கூறுவல்
நீசெவி கொடுவென நிகழ்த்தன் மேயினுன்.

குற்ற மற்ற மைந்தனே ! கேட்பாயாக. இக்கொள்கையும் முன்னே கூறப்பட்ட குற்றமுடைக் கபடசன்னியாசப்பேய்கள் கூறுங் கூற்றேயாகும். இங்ஙனம் அதனையும் வித்தாரமாகவெடுத்துக் கூறுவேன் ; நீ கேளென்று ஆசிரியர் கூறத் தொடங்கினர்.

[ அது - என்னுஞ் சுட்டுப்பெயரும், இரண்டனுருபும், சாரியையும், உம்மையும் வருவித் துரைக்க. 'கூறுவல்' என்பதில் அல் - விகுதி; வ் - எதிர்காலவிடைநிலை. ] (சஎ)

இறப்பொடு பிறப்பிலை யென்பர் கீரிஙன்
மறப்பொடு நினைப்பிலா வத்து வாயொரு
குறிப்பற நிற்கினெவ் வும்பொய் யாயிடின்
அறக்கடை போந்தவ ரறைகொன் சொல்லதாம்.

சனன மரணங்க ளில்லையென்போர் கூற்றானது, இவ்வுலகத்தே நினைப்பு மறப்புக்களில்லாத பரப்பிரம வத்துவாகி யெவ்விதக் குறிப்புமிலாதிருக்கில் ஒவ்வும். அந்நிலை பொய்ப்படுமாயின், மிகவுங் கடைப்பட்டவர் கூறும் பயனற்ற வாக்கியமாய் முடியும்.

[ ஒடு - இரண்டும் எண்ணொடுவாதல் "நன்மையொடு தீமைதரு சேதனனுக்கு" எனச் சிவப்பிரகாசத்தில் வருமாற்றானு மறிக. கீர்=சொல். கொன்சொல்=பயனிலாச்சொல். அது - பகுதிப்பொருள் விகுதி.] (சஅ)

அமலம தேற்பசித் தசனந் துவ்வுமோ
திமிரம துட்கருள் சேர்பு நிற்குமோ
எமதுட னொந்ததென் றிரங்கி வாடுமோ
குமரமும் விருத்தமுங் கொண்டு வீயுமோ.

பீமணம் போக்கவார் வாங்கிப் பெய்யுமோ
காமநோய் கழிக்கமென் றோள்கள் புல்லுமோ
நாமரூ பங்களை நணுகி நிற்குமோ
ஓமெனி லமலமெங் கொவ்வு மன்மையே.

அமலம் (பரிசுத்த முளது) ஆயின், பசிவாதனைக்குட்பட்டு ஆகாரத்தைப் புசிக்குமோ. இருட்டிடத்துள்ளே யாதொன்றையுங் காணுந்தன்மை யின்றி அவ்விருளையே சேர்ந்து நிற்குமோ. எவர் முன்னிலையிலேனும் எமது தேகம் நோயால் வருந்திற்றென இரக்கப்பட்டு வாடுமோ. குமரப்பருவத்தையும் வயோதிக பருவத்தையு மடைந்து (பின்னர்ச்) சாக்காடுறுமோ.

மலத்தின் துர்க்கந்தத்தைப் போக்கற்கு நீர் வாங்கி அம்மல மொட்டிய விடத்தே விடுமோ. காம வாதையைக் கழித்தற்கு நாரியரின் மெல்லிய தோள்களை யணையுமோ. நாம ரூபங்களைப்பெற்று

நிற்குமோ. அப்படியுஞ் செய்துகொண் டிருக்குமென்னில், அந்த அமலம் யாங்ஙனம் பொருந்தும்! அல்லாத தன்மையே பொருத்தமாம்.

இதுகாறும், கபடசன்னியாசிகளுடைய கூற்றுக்களுள் சகூ - ற் போந்த "அமலம் நாம்" என்பதைக் கண்டித்த வாறு.

கருள் = இருள்; பிங்கலநிகண்டு காண்க. சேர்பு - செய்பு என்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம். 'எமது' என்பதில் எம் - இயல்பு பற்றிய தனித்தன்மைப்பன்மை. 'பவ்வீ' என்றிடக்கரடக்கலாக மறைத்துக் கூறத்தக்க சொல்லை அவ்வாறு கூறாது "பீ" என்றமை— கபடஞானம் பேசுவார் மீதுற வெறுப்பைக்காட்டிற்று. இதனை, "மறைக்குங்காலை மரீஇய தொராஅல்" எனுந் தொல்காப்பியச் சூத்திரத்தின்பாற் படுத்துக. வார்= நீர். இரண்டனுருபுகள் விரிக்குமிடந்தோறும் விரித்துரைக்க. ஓகாரங்கள் எதிர்மறைப்பொருள. பிரிநிலைப்பொருள வெனினு மிழுக்காது.] (சகூ. ௫0)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இந்த வுபாதியெ லாமெமக் கிலையவி
  ரிரவியின் சன்னிதி மரைமலர்போல்
எந்த மபேதசன் னிதிமா யாசகி
  தற்குள வென்றிறுத் திடுவாரேல்
அந்தவெய் யோனுறழ்ந் தொன்றினுந் தாக்கற
  வலங்கிட லவர்மாட் டுளதாயிற்
பந்த வுடம்பினி லேகொள்ளி கொடுசுடிற்
  பாதை யுறுநிலை வேண்டுமரோ.

மேற் கூறிய வுபாதிகளெல்லாம் பிரமமாகிய எமக் கில்லை; பிரகாசிக்கின்ற சூரியனுடைய சன்னிதானத்துத் தாமரை மலரைப் போன்ற எம்முடைய சன்னிதான அபேத மாயாசகித சீவனுக்கே யுள்ளனவென்று இங்ஙனம் சமாதான விடை சாற்றுவரேல், அச் சூரியனைப்போன்று ஒன்றினுந்தாக்குதலறப் பிரகாசிக்குந் தன்மை அவரிடத்து முள்ளதாயிற் பந்தமாகிய தேகத்திலே கொள்ளியாற் சுடில் எவ்வித வருத்தமும் பொருந்தாநிலை யிருத்தல்வேண்டும்.

[அவிர் இரவி - வினைத்தொகை. போன்றவென்னும் பெயரெச்ச வுவம வுருபு 'போல்' என நின்றது; "பெருமா னருள்போற் றிருமேனி" என் புழிபோல. எந்தம் சன்னிதி அபேத மாயா எனவியையும். மாயாசகிதன் -

வடநூன்முடிபு. பாதை - (வ்யதா) பாதா என்னும் வடசொல்லின் விகாரம்; வருத்தமெனும் பொருட்டு.] (ருக)

கொள்ளிகொ டேசுடு காற்றுயர் கூர்வது
குற்சித பாச னகோசரமாம்
ஒள்ளிய பிரமமெ னுமல்ல மென்னுரை
யோதுவ ரென்னினவ் வுயிராக
உள்ளவ ரல்லதப் பிரமம தாகா
ருண்டெனின் வெள்ளறி வாளருமே
எள்ளுவ ரிம்மதி யகந்தைய தாமங்
னெண்ணுறு சண்டனு நகைத்திடுமால்.

கொள்ளியாற் சுடும்போது வருந்துவது பொலிவில்லாத சிதாபாசனே யொழிய 'அகோசர மாகிய சுத்தப்பிரமமென்னு நாமல்லம்' என்று (இதன் மேலும்) கூறுவாராயின், (அவர்) அச்சிதாபாசனுகவுள்ளவ ரன்றி அந்தப் பிரமப்பொருளாகார். ஆனது உண்டென்னில் (சாத்திரவாராய்ச்சி, ஆன்றோர்கேள்வியென்பவற்றென்று மில்லாத) சாதாரணமனிதரும் பரிகசிப்பர். இப்புத்தி அகங்காரத்துடன் கூடியதாகும். இவ்வகங்காரத்தை யிறுதிக்காலத்திற் கருதிப் பார்க்கும் நமனும் இது நல்லஞானமென்று நகைப்பன்.

['கொடே' என்பதில் ஏ - அசை. கூர் - பகுதி; மிகுதிப்பொருடரு மோ ருரிச்சொல்; "கூர்ப்புங் கழிவு முள்ளது சிறக்கும்" என்பது **தொல்காப்பியம்.** பாசன், உயிரென்பன வொருபொருட் கிளவிகள். அல்லது - என்பது அன்றியென்னும் வினையெச்ச வாய்பாடு; **சிவப்பிரகாசம்** "யானலது பிறரொருவர்" என்புழிப் போல.] (ருஉ)

இம்முறை நொடிக்குநர் மரிக்கினம் மறல்விளித்
திரும்பொரு ளாமுமைத் தண்டமிடேம்
மம்மரி லுமக்கொ ரரந்தையு மின்றுமுன்
வாய்மை யிலாதது நாமெனவே
விம்மிய வகந்தைபொய் சொனவுயிர்க் கேயிவண்
வெய்துற னல்குது மென்றிடுகால்
நம்முரை வழிநமை வருத்துமிப் படரிலை
நமக்கெனப் புலம்பலு மவர்க்கழகே.

இவ்விதமாகப் பேசுவோர் இறந்தால் அந் நமன் இவர்களை யழைத்து, நீர் கூறியவண்ணஞ் சீவனேயிருந்தும் அச் சீவனாகா திருக்கும் பரம்பொருளாகிய வும்மை நாம் தண்டிப்பதில்லை. மயக்க மில்லாத வுமக்குத் துன்பமு மில்லை. இதற்குமுன் உண்மைக்கு விரோதமாய் அது நாமென்று பேரகங்கார வசனமும், பொய்யும் புகன்ற சீவனுக்கே யிப்போது நரகயாதனையை விதிப்போமென்று விதிக்குங்கால், நம்முடைய வார்த்தை வழியாகவே நம்மை வருத்து கின்ற இத் துன்பம் நமக்கில்லையென முன்போலப் புலம்புதலும் அவர்களுக்கு அழகே.

[பொய் புகல்வோனைக் குறித்துப் பிரச்னோபநிஷதம்— (ஸமூலோவா ஏஷ பரிசுஷ்யதி யோऽந்ருதமபிவததி) "ஸமூலோவா ஏஷ பரிசுஷ்பதி யோந்ருதமபிவததி" என்று கூறுதலைக் கவனிக்க. பொருள் :— "பொய் புகல்கின்றவ னெவனோ அவன் அடியோடு கெடுகின்றனன்" எனவாம்.

மறல்=வலி ; ஆகுபெயராய் நமனுக்காயிற்று ; **நகரவேதுகை** காண்க. சொன, நமை, இலை - தொகுத்தல். தும் - என்ற தன்மைப்பன்மை விகுதி எதிர்காலங் காட்டிற்று. நமக்கு இலை என மாறுக.] (௫௩)

ஒப்புறு தத்வ விசார மிலாதவ
 ரோதிய வணமிவ ணுவல்வாரேற்
செப்பிய வகந்தைபொய் யுடைமைகொண் டந்தகன்
 றீர்வையை யடைகுவ ருணர்ந்தார்தாம்
எப்படி நரகடை வாரடை யாரென
 வியம்பிடு வாரெனிற் சொனவணமே
துப்பொடு தத்வ விசார மடைந்தருட்
 டுவெளி கண்டவர் துனியிலரே.

எல்லாராலு மங்கீகரிக்கத்தக்க தத்துவ விசார மில்லாதார் மேற் சொன்னபடி சொல்லுவாராயின், முன்னர்க்கூறிய அகங்கார மும், அசத்தியமு முடையாராகி யமதண்டனையை யடைவர். தத்துவ விசார முணர்ந்தா ரெப்படி நரகப்பிராத்தி பெறுவர்? பெறமாட்டா ரென்று சொல்லுவ ரென்னில், அவர் சொன்னபடியே நற்புத்தி யுடன் தத்துவ விசாரஞ்செய்து திருவருட் பரவெளியைத் தரிசித் தோர் துன்பமில்லாதவரே யாவர்.

[இதன்கட் போந்த தத்துவ விசாரம்—

தஸ்மாத்ஸதாவிசாரயேஜ் ஜகஜ்ஜீவ பரமாத்மந: ।
ஜீவபாவஜகத்பாவ போதேப்ரத்யகபிந்நம்
ப்ரஹ்மைவாவசிஷ்யத இதி ॥)

" தஸ்மாத்ஸதாவிசாரயேஜ் ஜகஜ்ஜீவ பரமாத்மந: ।
ஜீவபாவஜகத்பாவ போதேப்ரத்யகபிந்நம்
ப்ரஹ்மைவாவ சிஷ்யத இதி ॥ "

என்னும் பைங்கலோபநிஷத்தின் உ - ம் அத்தியாய வசனங்களி லறியக்கிடக்கின்றது. பொருள்:— " ஆகலிற் சகம் சீவன் பரமான்மா வென்பவற்றை யெஞ்ஞான்றும் விசாரித்தல் வேண்டும்: சீவ பாவமுஞ் சகற்பாவமுந் தெரிந்தக்காற் பிரத்தியக்கிற்கு வேறு படாத (அத்துவிதப்) பிரமந்தான் விஞ்சும்" எனவாம். ' பிரத்யக் ' என்றது (கூடஸ்தேப்ரத்யகாத்மநி) " கூடஸ்தேப்ரத்யகாத்மநி " என்னும் ௩ - ம் அத்தியாய வாக்கியத்தின்படி பிரத்தியகான்மா வாகிய கூடத்தனையே. இவ்விவரம் முற்படலத்து ௬௪ - ன் உரையில் ஸர்வஸாரோபநிஷத வாக்கியத்தோடும் விளக்கப்பட்டது. இவ் வான்மா அந்தக்கரணப் பிரதிபிம்பித சைதன்னியமென்பதும்; இது, சுழுத்தியில் அஞ்ஞானத்தான் மறைக்கப்பட்ட (பாரமார்திகஜீவ:) பாரமார்த்திக ஜீவன் பிராஞ்ஞனென்றும், சொப்பனத்திற் பிராதி பாசிகன் தைசசனென்றும், சாக்கிரத்தில் வியாவகாரிகன் விசுவ னென்றுஞ் சொல்லப்படுமென்பதும் மேலே உ, ௩ - ம் அத்தியாயங் களிற் கூறப்படுகின்றனவாகலிற் ' சீவன் ' என்றது இத்திற அவத் தாபேத நாமங்களோடு பாரமார்த்திக சீவனுயுள்ள ஆன்மாவையே. இவ்வாறு ஆன்மபேதங் கூறுதல்— ஆன்மா, வுடம்பைப் பற்றிய வழிப் பூதான்மாவெனவும், அகத்தின்கண்ணுள்ள வாக்குக்களைப் பற்றியவழி அந்தரான்மாவெனவும், சூக்குமபூத தத்துவங்களைப் பற் றியவழித் தத்துவான்மாவெனவும், புருடதத்துவமாய் நின்று சுக துக்கங்களை நுகரும்வழிச் சீவான்மாவெனவும், மந்திரமயமாய் நிற்கும்வழி மந்திரான்மாவெனவும், அத்துவிதபாவனையின் இவ் வைவகைப் பெயரினீங்கியவழிப் பரமான்மாவெனவு நிற்குமென்று ஸர்வஜ்ஞானோத்தராகமம் " பூதாத்மாஹ்யந்தராத்மாச தத்வாத்மா ஜீவஸம்ஜ்ஞக: । மந்த்ராத்மா பரமாக்யச்ச " என்று கூறிச்செல்லு மாற்றான் ஆகமத்திற்கும் உடம்பாடேயென லறியப்படுகின்றது.

முற்படலத்து கூ - ன் உரையில் அந்தக்கரணப் பிரதிபிம்பிதம் (பிரதிபலிதம்) இனைத்தென்பது தெளிக.

தத்வவிசாரம் - வடநூன் முடிபு. "அடைகுவர்" என்பதில் கு - சாரியை. தாம் - கட்டுரைச் சுவைக்கண் வந்த அசை.] (ருச)

அந்த விசாரநல் லரம்பையை யுரித்ததத
னகத்தெழு தண்டினைக் கண்டிடல்போற்
பந்த நளிமுழுதுங் கழற்றியுண் ணிற்குமொர்
பரம்பொரு ளினையறிந் துய்ம்மினென்று
அந்த மறையறையு மனுபவ மிலரிதை
யடைவொடு சொல்லல் விசாரமெனின்
எந்த விதமமையுஞ் சருக்கரை யென்றசொல்
லினிப்பதின் றாகலின் வெறுங்கூற்றே.

அந்த விசாரம் நல்ல வாழைமரத்தை யுரித்து அதன் மத்தியில் வெளிப்படு தண்டினைக் காண்டல்போலவே, தத்துவமாகிய பந்தக்கூட்டம் அனைத்தையுங் கழித்து உள்ளேகாணப்பட்டு நிற்கும் ஒப்பற்ற பரம்பொருளின் பிரபாவத்தையறிந்து பிழைப்பீராகவென்று அந்தவேதங் கூறும். அனுபவமில்லாதவர் இதனை, வரிசைக்கிரமமாகக் கூறுவதே தத்துவவிசாரமென்று கூறில் எப்படிப்பொருந்தும்? சருக்கரையென்றசொல் இனிப்பதில்லையாகலின், அவ் விசாரவுரை வெற்றுரையேயாம்.

[அனுபவ மில்லாதார் ஞானம்பேசி மகிழ்வதுபற்றிச் சுருதி கூறுவதியாதென்னின்,—

(அநுபூதிம்விநாமூடோ வ்ருதாப்ரஹ்மணிமோததே।
ப்ரதிபிம்பிதசாகாக்ர பலாஸ்வாதநமோதவத்॥) [Grantha script]
அநுபூதிம்விநாமூடோ வ்ருதாப்ரஹ்மணிமோததே।
ப்ரதிபிம்பிதசாகாக்ர பலாஸ்வாதநமோதவத்॥)

"மரத்தின் கிளைகளிலிருக்கும் பழங்களின் பிரதிபிம்பங்களைத் தண்ணீரிற்கண்டு அவற்றை யயின்று மகிழ்வானைப்போல அனுபூதி (ஞானம்) இல்லாமூடன் பிரமத்தின்கண் வாளா மகிழ்கின்றனன்" என்பதே. இது மைத்ரேயோபநிஷத்தின் உ - ம் அத்தியாயத்தது. நிராலம்போபநிஷதம் "மஹாவாக்யார்த் தாநுபவஜ்ஞாநாத் ப்ரஹ்மைவாஹமஸ்மி" என்று கூறுதலும் அப்பொருட்டு. அருத்தம்:—

"மகாவாக்கியார்த்த அனுபவ ஞானத்தினால் நான் பிரமமாகவே யிருக்கிறேன்" எனவாம்.

(𑌪𑌰𑌾𑌞𑍍𑌚𑌿𑌖𑌾𑌨𑌿𑌵𑍍𑌯𑌤𑍃𑌣𑌤𑍍𑌸𑍍𑌵𑌯𑌂𑌭𑍂𑌸𑍍𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌪𑌰𑌾𑌙𑍍𑌪𑌶𑍍𑌯𑌤𑌿
𑌨𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌨𑍍 । 𑌕𑌶𑍍𑌚𑌿𑌦𑍍𑌧𑍀𑌰𑌃 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌗𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑌐𑌕𑍍𑌷
𑌦𑌾𑌵𑍃𑌤𑍍𑌤 𑌚𑌕𑍍𑌷𑍁𑌰𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌮𑌿𑌚𑍍𑌛𑌨𑍍 ॥)

"பராஞ்சிகாநிவ்யத்ருணத்ஸ்வயம்பூஸ்தஸ்மாத்பராங்பச்யதி
நாந்தராத்மந் । கச்சித்தீரஃ ப்ரத்யகாத்மாநமைக்ஷ
தாவ்ருத்த சக்ஷுரம்ருதத்வமிச்சந் ॥"

என்னுங் கடோபநிஷத் வசனம்— "சுயம்புவானவன் இந்திரியங்களை ஆன்மாவுக்கு அன்னியமானவற்றையே யறியுமாறு சிருட்டித்தானாகலின் அவை அன்னியமானவற்றையே காண்கின்றன: அந்தரான்மாவை யறிவதில்லை: தீரனாயுள்ளோன் இந்திரியங்களைத் திருப்பிக்கொண்டு அமிர்தத்துவத்தை விரும்பினவனாய்ப் பிரத்தியகான்மாவைப் பார்க்கிறான்" எனும்பொருள் பயத்தலின் அனுபவம் வெளிமுகத்தார் பேச்சிலின்றெனுஞ் செய்யுட்கருத்துக் கொன்னும் வலியுறுகின்றது. பைங்கலோபநிஷத்தின் ௩-ம் அத்தியாயத்தில்—

(𑌧𑍍𑌯𑌾𑌤𑍃𑌧𑍍𑌯𑌾𑌨𑍇𑌵𑌿𑌹𑌾𑌯 𑌨𑌿𑌵𑌾𑌤𑌸𑍍𑌥𑌿𑌤𑌦𑍀𑌪𑌵𑌦𑍍𑌧𑍍𑌯𑍇𑌯𑍈𑌕𑌗𑍋𑌚𑌰𑌂
𑌚𑌿𑌤𑍍𑌤𑌂𑌸𑌮𑌾𑌧𑌿𑌰𑍍𑌭𑌵𑌤𑌿 । 𑌤𑌦𑌾𑌨𑍀𑌮𑌾𑌤𑍍𑌮𑌗𑍋𑌚𑌰𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌯𑌸𑍍𑌸𑌮𑍁𑌤𑍍𑌥𑌿𑌤𑌾
𑌅𑌜𑍍𑌞𑌾𑌤𑌾𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 । 𑌤𑌾𑌸𑍍𑌸𑍍𑌮𑌰𑌣𑌾𑌦𑌨𑍁𑌮𑍀𑌯𑌨𑍍𑌤𑍇 । 𑌇𑌹𑌾𑌨𑌾𑌦𑌿𑌸𑌂𑌸𑌾
𑌰𑍇𑌸𑌞𑍍𑌚𑌿𑌤𑌾𑌃𑌕𑌰𑍍𑌮𑌕𑍋𑌟𑌯𑍋𑌽𑌨𑍇𑌨𑍈𑌵𑌵𑌿𑌲𑌯𑌂𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 ॥)

"த்யாத்ருத்யாநேவிஹாய நிவாதஸ்திததீபத்யேயைகோசரம்
சித்தம்ஸமாதிர்பவதி । ததாநீமாத்மகோசராவ்ருத்தயஸ்ஸமுத்திதா
அஜ்ஞாதாபவந்தி । தாஸ்ஸ்மரணாதநுமீயந்தே । இஹாநாதிஸம்ஸாரே
ஸஞ்சிதாஃ கர்மகோடயஅநேநைவவிலயம்யாந்தி ॥"

என வருவனவற்றையுங் கருதிக்கொள்க. தமிழ்:— "தியானிப்போன் தியானமென்னு மிவற்றைவிட்டுக் காற்றில் களத்திருக்குந் தீபம்போற் றியானிக்கப்படு பொருளாய்ச் சித்தமிருக்கு நிலை சமாதியாகிறது: அங்ஙனம் ஆன்மசம்பந்த விருத்திக ளுண்டாகின்றன: அவை யறியப்படுவனவல்ல: ஸ்மரணத்தினா லனுமானிக்கப்படுகின்றன. இவ்வனாதி சமுசாரத்தின் ஈட்டியுள்ள கன்மகோடிகள் இதனாலேயே யொழிவடைகின்றன" எனவாம்.

தத்துவவிசாரம் இற்றெனவுணர்த்தி, அதற்குவேறு கூறுவார் கூற்று உவமான முகத்தானும் மறுக்கப்பட்டது.

நளி=கூட்டம்; பிங்கலநிகண்டு காண்க. அந்தமறை= வேதாந்தமாகிய உபநிடதம். சொல்லலே - எனும் பிரிநிலை ஏகாரம் விகாரத்தாற்றொக்கது. 'வெறுங்கூற்றே' என்பதற்கு முன்னே அவ்விசாரம் என்பது வருவித்துரைக்க.] (ருரு)

தரவுகொச்சகக்கலிப்பா.

கொள்ளிகொடு சுடுவதெது
  கொள்ளிச்சூ டேற்பதெது
கொள்ளியென விருந்ததெது
  கூறரிய வதுவென்னிற்
கள்ளமிலா வத்துவுக்குக்
  கண்டமின்மை சொலற்கொவ்வுங்
கள்ளவுயிர்க் கோதலொரு
  காலுமமை யாதஙனே.

கொள்ளிகொண்டு சுடுவதெப்பொருள், அக் கொள்ளிச்சூட்டைத் தாங்குவதெது, கொள்ளியென்றுகூற இருந்த வத்துத்தான் எவ்வத்து, (யாவும்) கூறுதற்கரிய அந்தப் பொருளல்லவோவென்னின்,— (பசு, பாசமெனுமிரண்டற்குந் தலைமைவகித்து அவற்றை) நீங்காது நிற்கும் அத்துவித பதிப்பொருட்கு அகண்டத்துவங் கூறுநிலைக்கே (நுங்கூற்றுக்கள்) பொருந்தும். அத்தன்மையில்லாச் சீவனுக்கு அங்ஙனங்கூறல் ஒருகாலத்தும் பொருந்தாது.

[ருஉ - ஞ் செய்யுளுள்ளுழைக் "கொள்ளிகொடு சுடுகால்" எனப் போந்ததைத்தானே அனுவாத முகத்தா னெடுத்துக்கொண்டு வேறோராற்றான் விவகரிப்பாரது கூற்றும் ஈண்டுக் கண்டிக்கப்பட்டது. களம் - கள்ளமென விரிக்கப்பட்டது. களம்= நிலைக்களமெனப்படுமிடம்; சூடாமணிநிகண்டு காண்க. தேச பரிச்சேதமில்லாதது பரம்பொருளாகலின் அது "கள்ளமிலாவத்து" எனப்பட்டது. அப் பரிச்சேதத்தது பசுவாகலின் அது கள்ளவுயிரெனப்பட்டதென்பதூஉம், கள்ளமென்பது களவுக்கும் பெயராதலின் ஞானிகளுடைய ஞானத்தைச் சொல்லளவாகக் களவாடிக்கொண் டுரைக்குமுயிர் அவ்வாறு கூறப்பட்டதென்பதூஉம் இரட்டுறமொழித லென்னும் உத்தியாற் கொளக்கிடக்கின்றன.] (ருசு)

பொன்றனே பணியாக
விருப்பதென் று புகறலுண்டேற்
குன்றுத வப்பணிதான்
குகைவாயிட் டிருக்காமற்
பொன்றனே யாகுங்கொல்
புகல்பணிதிப் பெயர்போங்கொல்
நன்றுநா முருக்கிவிட்டோ
மெனு நினைவா னகைபோங்கொல்.

பொன்னேயன்றே ஆபரணமாக வாயினதென்று நூல்களுரைத்தனுளதாயின், குறைவற்ற அவ்வாபரணம் (இனிக்) குகையிலிட் டிருக்கப்படாமல் தானகவே பொன்னயிடுமோ? உரைக்கப்பட்ட ஆபரண மென்னும்பெயரும் போமோ? நன்றாக வுருக்கிவிட்டோ மெனுமொரு நினைவினலே ஆபரணவுருவம் போமோ?

[பொன்னை ஆன்மாவுக்கும், பணியை உடம்புக்கும் உவமானமாகச் செய்துகொண்டு அபேதம் பேசிநிற்பார் கூற்றினை, அப் பணியுருக்கப்படுதலைத்தானே தத்துவநீக்க அனுபவத்திற்கு உவமானமாகச் செய்துகொண்டு பிறர்தம் மதமேற் கொண்டு களைவென்னும் மதத்தான் மறுத்தவாறும். ஆன்மாவு முடம்புமொன்றெனல் காரண காரிய விரோதத்தின்பாற் படுமென்பது முற்படலத்து அ - ன் உரையில் விளக்கப்பட்டமையின் ஈண்டதுபற்றி யொன்றுங் கூறவில்லை.

குகை - என்பதற்கு முன் இனியென்பது கூட்டியுரைக்க. 'உருக்காமல்' என்புழிப் படுசொற் றெக்குநின்றது. ஆகுங்கொல் = ஆமோ; போங்கொல் = போமோவெனும் பொருள்களில் வந்தன. அங்ஙனம், ஆகாது போகாது என்பன குறிப்பெச்சம்.] (கஎ)

பணிதியென்ப தேயில்லை
பசும்பொன்னே யிருப்பதெனிற்
றுணிவுநவி லிக்கதையுந்
தோன்றிடவோ ரிடனின்றல்
கணிதமிலா வம்மெளனக்
கடைகாணில் விகாரமுண்டோ
தணிவுடைமை தான்காணி
லசத்தியத்தி லசத்தியமே,

ஆபரண மென்பதேயில்லை; பசும்பொன்னே யிருப்பதென்னில்,— முடிவுகூறும் இவ்வார்த்தையும் உண்டாதற் கோரிடமில்லை. மனாதீதமாகிய அம் மௌனாந்தநிலை அனுபவமாயின் விகாரம் ஏது. அந் நிலையின்றிக் கீழ்நிலை காணப்படுமாயிற் பேசியபேச்சுப் பொய்யினும் பொய்யே.

[ "பணிதியென்பதே யில்லை பசும்பொன்னே யிருப்பது" என்றது உடம்பென்பதேயில்லை ஆன்மாத்தா னிருப்பதென்பதைக் காட்டிற்று; அங்ஙனமாயின், இல்லை உண்டென்னும் இப்பேச்சும் பிறத்தற் கிடமில்லையேயென்று அதனை மறுத்துரைப்பார் "இக் கதையுந் தோன்றிடவோ ரிடனின்று" என்றார். பணிதியை யொப்புக்கொண்டுரைத்த வாதிக்கு வேறாக அதுவுமின்றெனும் வாதிகூற்றை இது மறுத்தவாறும். ஓ - எதிர்மறை.

ஈண்டாசிரியர் ஒப்புக்கொள்ளும் அனுபூதிநிலை கூ௨. - ஞ் செய்யுட்கண்ணதாகலின், அஃதாண்டே விளக்கப்படும்.] (௫௮)

அலல்கடிவோய் பொன்னலக்குந்
 தீதினுக்கு மாமந்நேர்
மலம்விரவு தற்போத
 மாய்ந்திடுவா னத்துவிதஞ்
சொலுமறையா கமமுடிவு
 துலக்கமுள ஞானிகட்கு
நலனையுமஞ் ஞானிகட்கு
 நடலையையு நல்கிடுமே.

பிறவியல்லலை யொழிக்கும் (வண்ணம் முயலும்) சீட! பொன்னானது நன்றுக்குந் தீதுக்கு முபயோகப்படும். அது மான ஆணவமல சம்பந்தமுடைய சீவபோதத்தை யொழிக்கும் வண்ணம் அனுபவார்த்த அத்துவிதத்தைக் கூறும் வேதாகம முடிவானது, அறிவு விளக்கமுள்ள ஞானிகட்குச் சுகத்தையும், அவ் விளக்கமில்லா அஞ்ஞானிகட்குத் துன்பத்தையுங் கொடுக்கும்.

[அரும்பொருளாயுள்ள நிதி அத்துவிதத்திற்கு உவமை செய்யப்பட்டது. அந்நிதியானது யோக்கியர் பாலருந்துதற்கும், அயோக்கியர் கள்ளருந்துதற்கும் உபயோகப்படுமாறு ஞானிகளுடைய ஞானானுபவத்திற்கும் அஞ்ஞானிகளுடைய அஞ்ஞானானுபவத்திற்கும்

அனுபவார்த்த அத்துவிதம் உபயோகப்படுவதாமென்னும் இச் செய்யுட்கருத்து வருஞ்செய்யுள்களானும் விளங்கவைத்தலெனும் அழகின் விரித்து விளக்கப்படுகின்றது. வேதமுடிவும் ஆகமமுடிவும் அத்துவிதஞ் சொல்லுதலை முற்படலத்துத் ௬௬ - ன் உரையிலோர்க.

'நலத்துக்கும்' என்னும் அத்துச்சாரியை விகாரத்தாற்றொக்கது; (நன்னூல்) "மாடக்குச் சித்திரமும்" என்புழிப்போல. 'நீதினுக்கும்' என்பதில் உ - சாரியை. நலம் - என்னும் மகரவிறுதிப் பெயரில் ன் - போலி.] (௫௯)

முதனூல்கண் முடிவுணரார்
  தத்தநினைப் பின்படிபன்
மதமாக விரித்திடவம்
  மானூல்க ளிருந்தமைபோற்
சதமான வறிவிலிக
  டந்தசைக்காக் கிக்கெடற்குந்
நதமான வனுபூதி
  ஞானிகள்வாக் கிருந்தனவே.

வேத சிவாகமங்களாகிய முதனூல்களின் முடிவான கருத்தை யறியாதவரெல்லாம் தங்கள் தங்கள் கருத்துக்களின்படி அவற்றின் வாக்கியங்களைப் பலமதங்களாக வகுத்துக்கொள்ள அம் மகாசாத்திரமாகிய வேதாகமங்கள் இடங்கொடுத் திருத்தல்போல, நிலையான அறிவிலாதோர் தங்கள் தங்கள் பரிபாகத்திற் கியைய வலிந்து பொருள்கொண்டு கேடுறுதற்கு உத்தமோத்தமமான அனுபூதிமான்களுடைய வாக்குக்களும் இடங்கொடுத் திருந்தன.

[ஞானிகள் வாக்குக்களை இந் நூலுரை மேற்கோள்களிலேயே யறியலாம்.

உந்நதம் - வடநூன்முடிபு. வாக்குக்களும் என்னும் விகுதியும் உம்மையும் விகாரத்தாற் றொக்கன.] (௬0)

இதுபுரைய வெல்லாநீ
  யாம்பிரம மெனச்சூர
பதுமனுக்கு வெள்ளிசொலப்
  பவமறங்க ளெண்ணுனய்ச்
சதமகனு தியர்க்கிடர்தான்
  றந்தவனற் றிருவிழந்த

விதமிவரு மகந்தைசொலி
வேட்கைநெறித் திரிந்தவிவார்.

இதுபோல, எல்லாமாகவிருக்கும் பிரமம் நீ யென்று சூரபன் மனுக்குச் சுக்கிர னுபதேசிக்க; அவன் பாவ புண்ணியங்களெனும் வியவத்தை யில்லாதவனுகி, இந்திரன் முதலிய தேவர்கட்கெல்லாந் துன்பமே விளைத்து, (அது காரணமாகத் தனக்குக் கிடைத்திருந்த) ஒப்பற்ற சம்பத்தை யிழந்தபடி இம் மூராணுறு கொள்கையினரும் நாம் பிரமமெனும் அகங்கார வார்த்தைகள் பேசி, இச்சாமார்க்கத் திலே திரிந்து, சிறுமையெய்துவர்.

[ நிஅ - ஞ் செய்யுளிற் பணிதியில்லை, பொன்றுனிருப்பதென்ப தாகக் கூறுவார் கூற்றே இச்செய்யுட் டொடக்கத்தில் "இது" என வெடுத்துக் கொள்ளப்பட்டது. சூரபதுமனுக்குச் சுக்கிர னுபதே சித்த விவரத்தை—

"ஆவியென வொன்றிலை யருந்தளையு மித்தை
யண்ண லுரு வங்கடொறு மங்கட வினத்துள்
மேவிய வியோமமென மேவியழி வின்முன்
விண்ணென விருப்பன்வினை புண்ணிய முயன்றால்
ஈவதவை யென்னபலன் மித்தையத னுனி
யின்னவற மின்னமற மென்னவுள முன்னேல்
தேவரை வருத்துதி மகத்திறை நமக்குத்
தெவ்வனவ னைச்சிறைசெய் செய்தியிது செய்தி."

எனக் கந்தபுராணச்சுருக்கத்தில் வருஞ் செய்யுளினறிக.

பவமறங்கள் - உம்மைத்தொகை; 'நன்மை தீமைகள்' என்றாற்போல. அவிதல்=சிறுகல்; சே - திவாகரங் காண்க. ] (சுக)

அச்சூர பதுமன்றேல்
லமரரிரும் பகைமைபொரு
தச்சோக வத்துவிதந்
தனையகந்தை வழிக்காக்கிப்
பொச்சாப்பிற் பொறிதுறந்து
போனதுபோ லிவர்பிறர்செய்
அச்சுறுத்தல் கண்டார்த்தவ்
வத்துவிதஞ் சொலியவிவார்.

அந்தச் சூரபன்மன் பண்டைத்தேவர்கள் தன்குலத்து முன்னோர்க்குப் பாராட்டிய பெரு விரோதத்தைப் பொருளுகி அத்துவிதத்தை யுணர்த்தும் அந்தச் (ஸோஹம்=அவன் நான்) சோகம் என்னும் வாக்கியத்தைத் தனது அகங்கார வொழுக்கத்திற் காமாறு பொருள்படுத்திப் பரமசிவத்தை மறந்து நின்ற தன்மையினுற் றனது ஐசுவரியத்தை நீங்கி யொழிந்ததுபோல, இவர் (விதிநிடேதங்களை யெண்ணுது நடப்பதைப் பார்த்து இந்நடை நரக ஏதுவாமென்று) தமக்கு வேருன நடையுள்ளோர் பயமுறுத்துதலைக்கண்டு (நாம் பிரமமன்றேயெனச்) சண்டையிட்டு அந்த அத்துவிதம் பேசிச் சிறுமையடைவர்.

[முற்செய்யுளின் மொழியப்பட்ட அகந்தை வழியேயும் வேட்கை நெறியை வேறொரு திறத்தான் விளக்கிக்காட்டிற்றிது.

போனது - போயதென்பதன் சிதைவு.] (சுஉ)

வஞ்சி விருத்தம்.

இவ்வ கந்தையி லேபிரான்
அவ்வி யத்த மடைந்துசூர்
வவ்வு தேகி வயங்கலாற்
றெவ்வர் நாத்திகஞ் சேருமால்.

இவ் வகங்காரத்திலே பரமேசுரனது திருவருண் மறைந்து துன்பத்தைப் பற்றுஞ் சீவனே வெளிப்பட்டு நிற்றலால் இது, விரோதிகள் பேசும் நாத்திகத்தைச் சேரும்.

[நாத்திகம்= கடவுளில்லையெனுங் கொள்கை. இது— பிரத்தியக்ஷ அளவையொன்றே பிரமாணமாகலிற் பெண்புணர்ப்பின்பமே சுவர்க்கம்; அது பெருது பகை, நோய், வறுமை முதலியவற்ருற் றுன்புறுதலே நரகம்; இவைபற்றிற்கு வேருகப் பாவ புண்ணியங்களின் பலனுகச் சுவர்க்க நரகங்க ளுளவென்பது பொய்; அப்புணர்ப்பின்ப அனுபவத்திற்குரியதும், நிலம் நீர் தீ காற்றெனு நான்கு நித்தப்பொருள்களின் கூட்டரவாலாயதுமாகிய தூலதேகமே ஆன்மா; தேகத்திற்கு வேருக ஆன்மாவுளதென்பதும், பரமான்மாவுளதென்பதும் பொய்யென்னும் உலகாயதசமய மாகவும், இதனைத் தழீஇ வரும் இந்திரிய ஆன்மவாதம் முதலிய தேகான்மவாத மனைத்துமாகவும் விரிந்து நிற்கும்.

பிண்டத்திலுள்ள நீரிற்கும், நெருப்பிற்கும், (மூக்கின்வழிவரு) காற்றிற்கும் வேறாக அண்டத்தில் நீரும், நெருப்பும், காற்றுமிருத்தல் காட்சியளவையாகலின், இவ்வளவைவழியே பிண்டத்திலுள்ள அறிவிற்கு வேறாக அண்டமுதலிய வெவ்விடத்தும் ஒரு பேரறிவிருத்தல் வேண்டுமென்பது இனிதறியக் கிடக்கின்றமையானும், பிண்டநீர் முதலியவற்றிற்கு அண்டநீர் முதலியன ஆதாரமாகவிருத்தல் கண்டவாறு பிண்ட அறிவிற்கு அண்ட அறிவே யாதாரம் அவ்வாதாரம் இல்வழிப் பிண்ட அறிவு சீவியாதென்பது பிண்டநீர் முதலிய வியல்பானு மறியப் படுகின்றமையானும், அறிவெனுங் குணமுடைக் குணிப்பொருளே சீவான்மா வெனப்படுமாறு அதனுதாரப் பேரறிவுடைப் பரம்பொருளும் பரமான்மாவெனப்படும், அஃதே கடவுளெனுமாற்றானும், தேகமாகிய சடமே அறிவாகிய சித்தாகுமெனல் காரணகாரிய விரோதமாமெனு நியாயவாற்றானும் மூக்கினுள்ள காற்றே காற்று வேறுகாற்றிலதென் றோதுதலையொத்த அந்நாத்திகமதம் மறுக்கப்படுவதேயாம். தேகத்தைத் தாங்கியிருப்பது சீவனெனக் கண்டவாறு, யாவையுந் தாங்கியிருப்பது பரமான்சத்தியென வறிவதும்; அன்னணந் தாங்கப்பட்ட சீவதேகம், யாதானுமோ ருறுகோளால் அழிந்தொடுங்குதன் மான அச் சத்தியாற் றாங்கப்பட்ட சடவிருத்தியனைத்துஞ் சங்காரசத்திகாரியத் தழிந்தொடுங்கும் பெற்றியுடையனவென வறிதலும்; ஆன்மா நித்தப்பொருளாயுள்ள சித்தாகலின் அதனகத்தே (எப்பொருட்கண்ணும் விரவியிருக்கும்) பரமான்மாவே அந்தரான்மாவாக வுளதெனவறிதலும் ஈண்டைக்குச் சால்புடையன. ஆத்திக விரோதி நாத்திகமாகலின், "தெவ்வர் நாத்திகம்" என்றார். "சேரும்" என்றது, அத்துவிதத்தை அகங்கார பரமாக்கிக்கொண்டார் கொள்கையும் இத்திற நாத்திகவாதத்துட்படுகின்ற தென்பதற்காமாறு மாட்டி நிகழ்த்தினமையாம்.

"நைராத்ம்யவாதகுஹகைர் மித்யாத்ருஷ்டாந்தஹேதுபி꞉
ப்ராம்யங்லோகோநஜாநாதி வேதவித்யாந்தரந்துயத் ।"

என்று மைத்ராயண்யுபநிஷத்தும் எ - ம் பிரபாடகத்தி லியம்பிற்று. பொருள்:— "பொய்த்திருட்டாந்தங்களையும் ஏதுக்களையுமுடைய கபடமான நிராத்துமவாதங்களிற் பிரமைகொண்ட மனிதர்கள் வேத வித்தைக்கும், அதன் விரோத வித்தைக்குமுள்ள பேதத்தையறிகின்றிலர்" என்றவாறே,

நாஸ்திகம், ஆஸ்திகமென்பன வடசொற்கள். ஆஸ்திகம்=கடவுளுண்டெனுங் கொள்கை. 'இது' - வருவித்துரைக்க. சூர்=துன்பம். பிரான் - எனும் ஆண்பாற் கடவுட்பெயர் பிரியான் என்பதன் மரூஉ ஆகக் கொள்ளப் படும். பிரியான்= எப்பொருட்கண்ணு நீங்காதிருப்போன். (பிராட்டி என்பது பெண்பால்)]　　(௬௩)

நாஞ்சொன் ஞான நிரந்தரற்
காஞ்சொ லன்றெனி லன்றெனு
ஏன்சொ லாதெழிக் காதெனின்
நான்சொன் ஞாயமெய்ந் நாட்டரோ.

நாங் கூறிய ஞானமானது எப்போதுமுள்ள ஈசன் ஏன்று கொள்ளுஞ் சொல் அன்றாயின், அத்திறவீசன் இப்போது அவ்விதமாக ஏன் சொல்லாதிருப்பன்? ஏனென்னைக் கொல்லாதிருப்பன்? என மேலுமவர் வாதித்தால் நான் சொல்லு நியாயவுண்மையை நீ நிலைநாட்டிப் பேசு.

[ஈசன் சொல்லாதிருத்தலும், கொல்லாதிருத்தலுமே எமதுரை தவறன்றென்பதை யுறுதிப்படுத்துமென்பார் கூற்றை, இனி யான் சொல்லு நியாயத்தைக்கொண்டு மறுவெனச் சீடற்கோதினரென்பதே யிதன்றாற்பரியம்.

இச்செய்யுள் மூன்றாமெழுத் தொன்றெதுகைத்து. இரண்டாமெழுத்துக்களும் இனவெதுகையாம். இவ் விவரம் முதலியன இலக்கியநூலாகவுமுள்ள திருவலங்கற்றிரட்டின் உ - ங் கண்டத்தறியற்பாலன.]　　(௬௪)

மன்ற லாற்று மணாளனை
அன்றி வேறனை நங்குருந்
தொன்றை யீனுவ தும்பிரான்
றன்றொ ழிற்றிறந் தானரோ.

அத்தி றத்தையங் கீகரித்
தொத்துக் கொள்ளினிங் கோதலும்
ஒத்துக் கொள்ளுமிவ் வுண்மையிற்
கத்தன் சம்மதங் காண்பிரால்.

(ஒருத்தி) அக்கினி சாட்சியாக விவாகஞ் செய்துகொண்ட புருடனையன்றி வேறொருவனையுங் கூடி அழகியவோர் மகவைப் பெறுவதும் அவ்வீசனது தொழிற்றிறமைதான்.

அப்படி மகவு பிறப்பதுண்டென்பதை யங்கீகரித்து, அதுவும் ஈசன் றொழிற்றிறமே யென்பதை நீவிரொப்புக்கொள்ளின், நீர் இங்ஙனம் ஈசுர சம்மதங்காட்டி எஞ்சொல்லே சரியென் றோதினதும் நடுவுநிலையிற் பொருந்தியிடும். இவ்வுண்மையில் அவ் வீசுரனது சம்மதம் இற்றென்பதையுங் காண்பீராக.

[வியபிசாரத்தும் மகவு பிறத்தலின் அஃதும் ஈசுரசம்மதமே யெனக்கொள்வுழி, யாவரும் விபசாரம்புரியலாமென்ப தேற்படுமால்; புரியலாமென்பது நுமக் கங்கீகார மாகாவிடின் நுங்கூற்று விடயத்தும் இஞ்ஞான்று யாதுஞ்செய்யாதிருந்த ஈசுரசம்மதமும், அதன்வழி நுங்கூற்று நிலைபெறுதலாக நீயிர் நினைப்பதும் யாவர்க்கும் அங்கீகாரமாக மாட்டாவேயெனுந் தேற்றப்பொருளைக் குறிப்பாக வுணர்த்துவார் "இவ் வுண்மையிற் கத்தன் சம்மதங் காண்பிர்" என்றுங் கூறினர். ஈசுரன் பேசாதிருக்குந்தன்மை யினைத்தென்பதை வருஞ்செய்யுளிற் பெறுக.

நீர் - என்னு முன்னிலைப்பெயர் வருவித்துரைக்க.] (௬௫. ௬௬)

விரும்பி நீரயர் வெவ்வினைப்
பெரும்பல் காழ்தழை பெற்றமேற்
றரும்ப லன்றரத் தாணுவாம்
அரும்பி ரான்புரி வானரோ.

நீங்கள் விரும்பிச் செய்யுங் கொடிய வினையெனும் பலபெரு வித்துக்கண் முளைத்துத் தழைகள் செறிய வளர்ந்தபின்னர் அவைகள், நுங்கட்குத் தரத்தக்க பலனைத்தரும்படி நிலைபேறாயுள்ள அந்த அரிய ஈசுரன் செய்வன்.

[பனை பதினைந்தாண்டின் மேலும், தெங்கு நாலாண்டின்மேலும், வழுதுணை (= கத்தரி) இரண்டு திங்களினும், கீரை பதினைந்து நாளினும் பலன்றரல்போல வினைகளும் தத்தம் வன்மை மென்மைக்கேற்பப் பலகால வளவைகளில் இம்மையினும் மறுமையினும் பலன்றரவுள்ளனவாகலின், வினையைக் காழெனவும், அதன் வளர்ச்சியைத் தழைபெறுகையெனவு மமைத்துக் கூறுவாராயினர். காழ் = வித்து. மேற்போந்த அகங்காரம் வித்துக்கும், அகங்காரிசெய்கை அவ்வித்தினை விதைத்தமைக்குமே கொள்ளக்கிடத்திலிற் பலனை யினியுறும்

படி தாணுவாகிய ஈசன் செய்யுமாறு செய்வனென்பது தோன்றத் "தரும்பலன்றரத் தாணுவாம் அரும்பிரான் புரிவான்" என்றார்.

பல் பெருங்காழ் எனவியையும்.] (சுஎ)

கலி விருத்தம்.

என்றேது தியினுமன்னவ ரியல்பாவன வறைவேன்
ஒன்றேயெனு முடிபானதை யுணராமுர ணாலே
நன்றாயசு கருமந்தனை நணுகாவிதி கூறிப்
பொன்றாவிழை வாலேகறை போகாவினை புரிவார்.

என்று (அவ்வகங்காரிக ளிடத்துக்) கூறுக. இன்னும் அவர் தன்மைகளைக் கூறுவேன்; ஏகம் எனும் முடிவுவாக்கியத்தின் உண்மைப்பொருளை நல்லோர்வாய்க்கேட் டுணராத முரணுறு கொள்கையினாலே நல்லதாகிய சுபகர்மத்தைச் சாராதுள்ள விதிகளைப் பிறர்க்கு ஓதித் தாங்களும் ஒழியாத வாசையினாற் பரிகாரத்தும் நீங்காப் பாவகாரியங்களைச் செய்வர்.

[உண்மைக்கு விரோதமாகப் பொருள்படுத்துமா றெடுத்துக் கொள்வாரது அத்வைதமே ஈண்டு 'முரண்' எனப்பட்டது. முரணெனுஞ்சொல் விரோதப்பொருளுடைத்து; ரகரவேதுகை காண்க. அத்வைதமென்பது ஒன்றெனும்பொருளைத் தராதென விளக்கினமை முற்படலத்துத் சுசு - ன் உரையிற் சாலப்பெரிதன்றே.

'முடிபானது' என்புழி ஆனது - பகுதிப்பொருள் விகுதி. சுபகருமம் - சுகருமம் என விகாரப்பட்டது.] (சுஅ)

ஈயுஞ்செய றனிலேயிவ ரிருசெங்கையு மிலராய்
மாயந்தர மேற்றுண்புழி யழுராமனை யீன்றான்
ஓயும்படி செய்தாரிறை போலுங்கர முளராய்
மேயன்சொன வில்லந்துற வில்லாததுள் விழுவார்.

இவர், இல்லையென்போர்க்கு ஈயும் விடயத்தில் இரண்டு செவ்வியகைகளுமிலராகி, மரணபரியந்தம் ஏற்றுண்ணும் விடயத்திற் பரசுராமருடைய பிதாவாகிய சமதக்கினி முனிவரைக் கொன்றோர்களுடைய அத்தனான கார்த்தவீரியார்ச்சுனனைப் போலவும் ஆயிரங் கரங்களையுடையராகி, மிகப்பெரியோ ரெனப்பட்ட திருவள்ளுவதேவர் கூறிய இல்லறந் துறவறமென்னு மிரண்டனுள் ஒன்றினுஞ் சேராத பாழ்ங்கதியில் வீழ்வர்.

[பாரதம் ஆரணியபருவத்துத் தீர்த்தயாத்திரைச்சருக்கத்துள்ளே "அந்தரத் தவர்க ளஞ்சு மாயிரம் புயத்தோன் மைந்தர்— தந்திரத் துடனே சூழ்ந்து சமர்புரிந் திட்ட காலை" எனவருமாற்றங்களானே கார்த்தவீரியார்ச்சுனன் ஆயிரங் கரங்களுடையா னென்பதோர்க. இல்லறப்பதகதி 'இல்லம்' எனப்பட்டது. துறவறப்பரகதி 'துறவு' எனப்பட்டது. இவ்விரண்டும் 'இல்லாததுள் விழுவார்' என்றது நிரயத்தில் வீழ்வரென்பதை யுணர்த்துவதாயிற்று.] (கூகூ)

கரவொண்மதி மகனேயிவர் களையும்புலை மலமூத்
திரமுண்பவர் தமையுந்திமிர் சீவக்கொலை ஞரையும்
உரனின்றிழி பாசங்களை யுனிவாழுநர் தமையும்
பரதந்திர மனுவிற்கெடு பதரேயென மதியே.

ஒள்ளிய பிரகாசத்தோடுங் கூடிய புத்தியுள்ள புதல்வனே! மேலேகூறப்பட்டவர்களையும், புலால் மலம் மூத்திரம் ஆகிய இவற்றையுண்போரையும், விருத்தியுள்ள வுயிர்க்கொலை செய்வோரையும், நல்லறிவின்றிப் பேய்களைத் தியானித்துச் சீவிப்போரையும் பரதந்திரமுடைய மனுடசனனத்தில் இழிந்த பதர்களென மதிப்பாயாக.

[மலத்தை மூலப்புளியெனவும், மூத்திரத்தை அமுரியெனவும், இவை இறப்பில் பேற்றைத் தரத்தக்க காயகற்ப மருந்துகளாமெனவும் மதித் தவற்றையுண்போரே "மலம் மூத்திர முண்பவர்" எனப்பட்டனர்.

உண் - பொதுவினை; இங்கே புசித்தலுங் குடித்தலுமாம். 'கொலைஞர்' என்றதிலுள்ள ஞ் - பெயரிடை நிலை. 'இன்றி' இன்று - எனத் திரிந்து நின்றது. பாசங்கள் = பேய்கள். 'மனுடப் பிறப்பு' மனு - எனப்பட்டது. (எ0)

அருளுண்டெனினருளாளரையொத்தேயொருபுதுமை
புரிகென்றிடினதுசித்தெனவெள்ளித்திரிபுவனம்
தரவந்தபினினியென்செயவென்னுஞ்சககாலத்
திருடன்றனைமதியாதுயர்தெளிவேறியசுதனே.

ஏற்றமுள்ள நல்லறிவோடுகூடிய மைந்த! உங்கள்பாற் றிருவருளிருந்தால் அருளாளரைப் போன்று ஓரற்புதச்செயலையேனும் நாங் காணச் செய்யுங்களென்று சொன்னால், அது சித்துவித்தையென்று அவ்வருட்காரியத்தை யிகழ்ந்து, பிரமமாயுள்ள யாம் (சுவர்க்

கம் மத்தியம் பாதலமென்னும்) மூன்றுலகங்களையும் படைக்க; அவை களுங் காண்பார்க்குப் பிரத்தியட்சமாக வந்துவிட்டபின், இனியெத னைச்செய்யவென் றுரைக்குஞ் சகசாலத்திருடனை நீ இலட்சியஞ் செய்யாமற் சுவானுபவத்தி லுபர்ந்திருப்பாயாக.

[ திரி புவனங்களையுஞ் சிருட்டித்த பரம்பொருளின் கிருத்தி யத்தைக் கபடஞானத்துள்ளோன், தனதாகக் கூறல் கரவடநீர்மை யாகலின் அவனைச் "சகசாலத்திருடன்" என்றார்.] (எக)

ஏறும்வெறி வடியுண்டவ ரெவணேகினு மவர்வாய்
நாறுந்திற மொளியாதது போலொண்டிரு ஞானப்
பேறுண்டென ரேன்றுங்குக பெருமானடி யார்கண்
கூறுந்திற னறிவோயவர் கூற்றுக்கரி தெவனே.

புத்தியை மயங்கச்செய்யும் வெறிமிக்க கள்ளுண்டவர்கள் எங் குச்செல்லினும் அவர் வாயானது அக்கள்மயமாய் நாறுந்தன்மையை மறைத்துக் கொள்ளாது. அதுபோலக் குகபெருமானுடைய அடி யார்களிடத்தே பரிசுத்தத் திருவருட்பே றுளதென்பது மறையாமல் (ஒருகாலத்தேனும்) வெளிப்பட்டு நிற்கும். யான் கூறுந்திறமெல் லாம் அறியும் வலியுடையாய்! அத் திருவருளாளர் கூற்றுக்கரியது யாதுள்ளது.

[ 'வெறி எறும் வடி' எனவும், 'குகபெருமா னடியார்கண் ஒண்டிரு ஞானப்பே றண்டெனல் தோன்றும்' எனவுமியைத்துப் பொருள்கொள்க. வடி = கள்; பிங்கலநிகண்டு காண்க; முதனிலைத் தொழிற்பெயர். 'அரி தெவன்' என்னும் வினவில் அரிதொன்றுமின்றேயெனுந் தேற்றங் குறிப் பாகக் காணப்படுகின்றது.] (எஉ)

அயலார்புரி யனுரேதுமெய் யருளாளரை யணுகா
துயர்வாரென நாவுக்கர சுடைமான்மிய சரிதம்
வெயில்போலுள கோரக்கர்கை வீசேதியின் வெட்டாற்
றுயரேதுமு றுவல்லமர் தூநீர்மையு முளதே.

அயலார் செய்யும் எவ்வகைத் துன்பமும் உண்மையாகவே அருட்சகாய முடையாரை நெருங்காது. அங்ஙனமவர் இன்பத் துபர்ந்திருப்பவரே யாவரென்பதற்குத் திருநாவுக்கரசு மூர்த்திக ளுடைய சரிதங்கள் சூரியப்பிரகாசம்போ லுள்ளன. கோரக்க சித் தர் வீசிய கைவாளின் வெட்டால் எவ்வகைத் துயரமுமடையாத அல்

லமதேவருடைய பரிசுத்தப் பிரணவதேகத்தன்மை (யைக் கூறு சரிதை) யும் உள்ளது.

[''கொள்ளிகொடே சுடுகாற் றுயர்கூர்வது குற்சித பாசன்; பிரமமென்னு நாமல்லம்'' என்றார் கூற்றைத் துயர்கூரு முயிராக வுள்ளவர் பிரமமாகமாட்டாரென்பதனான் மறுத்த ஆசிரியர், இவைபு பற்றி மேலே கூறுவனவற்றைக் கூறி, இங்கே அவ்வுயிர்த்தன்மை யொரீஇயிருந்த அருளாளர் தன்மைகளை முடிவிடங் கூறலென்னும் உத்திபாலெடுத்துக்காட்டித் தமது மறுப்பை வலியுறுத்தியதே இச் செய்யுட் டுணிபாதலறிக. முற்படலத்து அ - ன் உரையிற் காட்டப் பட்ட சுவேதாச்வதரம், முண்டகமெனும் உபநிஷத்துக்களில் வரு வசனம்—''மற்றொருவன் கன்மபலத்தை யுண்ணுமற் (சாக்ஷிமாத்திர மாய்ப்) பார்த்துக்கொண்டிருக்கின்றனன்'' என்று பதிப்பொருளின் றன்மையை வெளியிடுதலின் அதனருள் பதியப்பெற்றாரும் அத்தன் மையராகவே யிருப்பரென்ப தமையுமாற்றானும், இப் படலத்து கூஅ - ன் உரையிற் போந்த சாந்தோக்யோபநிஷத் வசனத்திலே 'தாமரையிலையிற் றண்ணீ ரொட்டாததுபோலப் பிரமஞான முற்ற வன்பாற் பாவகன்ம மொட்டாது' என ஞானிநீர்மை யறியப்படுமாற் றானும், அன்ன பிறவாற்றானும் இத்துணிபே யெறுழுறும். ஈங்கெடுத் துக்கொள்ளும் நாவுக்கரசுகளுடையமான்மியம்:—பகைமைகொண்ட சமணராசனாகிய பல்லவன தேற்பாட்டின்படி ஏழுநாள் காறும் நீற் றறையிலிருந்தும், விடங்கலந்தளித்த பாலினையுண்டும், மிதித்துக் கொல்லுமா றேவப்பட்ட யானையால் ஒருறுமின்றியிருந்தும், கற்றூ ணிற் பிணிக்கப்பட்டுக் கடலிற் றள்ளப்பட்டஞான்று அத்தூணைத் தெப்பமாகக்கொண்டு கரையேறியும் உய்ந்தமையே.

'கோரக்கர் வீசு கை ஏதியின் வெட்டால்' என வியையும். ஏதி= வாள்.] (எகூ)

## எ. உட்டுறவின் * மானவு.

வெண்டளையான்வந்த தரவுகொச்சகக்கலிப்பா.

மாசிகந்த பேரறிவான் மல்குமருட் பானுவெனுந்
தேசிகன்பொய் மெய்யிரண்டுந் தேரவிவ்வா றோதிடலும்
பாசமக லுட்டுறவிற் பண்ணுபதி நிட்டைநிசம்
பேசியருள் கென்னுமகன் பெற்றியுணர்ந் தோதுமிறை.

---

* மானவு=தெளிவு; ''தெருளு மானவு முணர்வுந் தேறலுந்—தேற்ற மும் துணிவுந் தெளிவின் றிறத்த.'' என்பது பிங்கலநிகண்டு.

குற்றமற்ற பதிஞானத்தாற் பிரகாசிக்குந் திருவருட் சூரிய னென்னுந் தேசிகர், கபடசன்னியாசம் சத்தியசன்னியாச மாகிய இரண்டிலக்கணத்தையுந் தேரும்படி இவ்வாறு கூறியவளவிலே, பாசம் நீங்கும்படி அகத்துறவிலிழைக்கும் பதிநிட்டையின் யதார்த் தத்தை இனிக் கூறியருள்கவென்று விண்ணப்பித்த சீடனுடைய பரி பக்குவத்தன்மையை யுணர்ந்து, தேசிகர் கூறத் தொடங்கினர்.

['ஓதிடலும்' உம் - விகுதிபெற்ற இறந்தகால வினையெச்சம்; ஓதிடு - பகுதி, அல் - சாரியை. 'அகல' என்னும் அகரம் விகாரத்தாற் றொக்கது. அருள்கென்னும் - அருள்கவென்னும் என்பதன் விகாரம். எதிர்காலங்காட் டும் இனி - என்னுமிடைச்சொல் கூட்டியுரைக்க.] (எசு)

**தேகத்தை யுள்ளபடி தேர்ந்துநீங் கிற்புறம்ப**
**தாகச்சைம் பூதத்தின் காரியமோ ரையைந்தும்**
**மோகப்பொய் யேடணையோர் மூன்றுநிமிர் நாடிபத்தும்**
**ஏகக்கண் டேகொளலா மென்புரிவுக் காமதலாய்.**

உடலிலக்கணத்தை யுள்ளபடி விசாரித்து அந்தச்சம்பந்த நீங்கி னாற் புறக்கருவியாகிய ஆதார பஞ்சபூதத்தின் காரியம் இருபத்தைந் தும், மோகப் பொய்யாயுள்ள மூன்றேடணைகளும், நெருங்கிய தச நாடிகளும் ஒடுங்கிநிற்க எனதன்புக்குரிய மைந்தனே! (அருளேகண் ணாகக்) காணலாம்.

[பிருதிவியின் கூறாயுள்ள தோல், மயிர், தசை, நரம்பு, என்பென் னும் ரு - ம், அப்புவின் கூறாயுள்ள நீர், இரத்தம், மச்சை, மூளை, விந்து வென்னும் ரு - ம், தேயுவின் கூறாயுள்ள உண்டி, உறக்கம், மகடூஉ விழைச்சு, பயம், சோம்பலென்னும் ரு - ம், வாயுவின் கூறா யுள்ள ஓடல், நடத்தல், நிற்றல், இருத்தல், கிடத்தலென்னும் ரு - ம், ஆகாயத்தின் கூறாயுள்ள குரோதம், மதம், மாற்சரியம், மோகம், உலோபமென்னும் ரு - ம் ஆகிய விருபத்தைந்துமே "பூதத்தின் காரியமோ ரையைந்து" என்றதி லறியக் கிடக்கின்றன. நள - ன் உரையுழி விளக்கப்பட்ட புத்திரன், வித்தம், லோகமென்பனவே ஏடணை மூன்று; மூன்றுஞ் சூக்கும ஆகாயத்தின்கூறு யுள்ளன. (ஸுஷும்நா) சுழுமுனை, (இடா) இடை, (பிங்களா) பிங்கலை, (காந் தாரீ) காந்தாரி, (ஹஸ்தி) அத்தி, (ஜிஹ்வா) சிகுவை, (அலம்புஸா) அலம்புசை, (பூஷா) பூடை, (குஹூ) குகு, (சங்கிநீ) சங்கினிபென் பனவே நாடிபத்து. சாண்டில்யம், வராஹமெனும் உபநிஷத்துக்கள்

இப்பத்தோடு (ஸரஸ்வதீ) சரச்சுவதி, (வாருணீ) வாருணி, (யசஸ்விநீ) யசசுவினி, (விச்வோதரீ) விசுவோதரி, (பயஸ்விநீ) பயசுவினியெனும் ஐந்து நாடிகளையுங் கூட்டியுரைக்கின்றன. யோகசிகை, தியாநபிந்து முதலிய உபநிஷத்துக்கள் சில குறைவுறக்கூறுகின்றன. கூட்டியுரைக்கப்பட்டவை பத்தின்கண்ணவே யடங்கும்.

ஆகு + அச்சு + ஐம்பூதம் = ஆகச்சைம்பூதம். பண்டி அச்சுப் போலப் பூதகாரிய வுடம்பினைத் தாங்கியிருப்பன பூதங்களாகலின் "அச்சைம்பூதம்" என்றார். அச்சைம்பூதம் - உவமத்தொகை. ஏ - அசை.] (எரு)

**காதுமுத லிந்தியமோ ரைந்தனையுங் கண்டேகின்**
**ஓதைமுத லைந்துஞ்செய் யிந்திரிய மோரைந்தும்**
**பூதமுமல் வாக்காதி யோரைந்தும் பொன்றுமன**
**மாதிநான் காய்ந்தகலின் வாக்கென்னு நான்குமறும்.**

செவிமுதலிய ஐந்தையுங் கண்டு கழித்துச் சென்றாற் சத்தாதியைந்தும், கன்மேந்திரியமைந்தும், பூதமைந்தும், வலிய வசனாதியைந்தும் ஒடுங்கும். மனம் முதலிய அந்தக்கரண சதுட்டயத்தைத் தேர்ந்து சென்றால் வாக்கு நான்கும் ஒடுங்கும்.

[காதுமுத லிந்தியமோரைந்து = (தைஜஸ) தைசச அகங்காரமும் (ஸாத்விகம்) சாத்துவிகமுங் கூடியவிடத்துத் தோன்றுஞ் செவி, உடம்பு, கண், நா, மூக்கென்னு ஞானேந்திரியங்கள். ஓதைமுதலைந்து = பூதாதியகங்காரமும் (தாமஸம்) தாமசமுங் கூடியவிடத்துத் தோன்றுஞ் சத்தம், பரிசம், உருவம், இரசம், கந்தமென்னுந் தன்மாத்திரைகள் ; ஓதை = சத்தம். செய்யிந்திரிய மோரைந்து = வைகாரிக அகங்காரமும் (ராஜஸம்) இராசசமுங் கூடியவிடத்துத்தோன்றும் வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தமென்னுங் கன்மேந்திரியங்கள். பூதம் = பூதகாரண தன்மாத்திரைகளின் றூலரூபப் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயமென்னும் பூதங்கள். வாக்காதியோரைந்து = வசனம், கமனம், தானம், மலவிசர்க்கம், ஆனந்தமென்னும் வாக்கு முதலிய கன்மேந்திரிய விடயங்கள். இவ் விடயங்கள் பைங்கலோபநிஷத்தில் "வசநாதாநகமநவிசர்க்காநந்தாஸ் தத்விஷயா :।" என்றுரைக்கப்படுகின்றன. மனமாதி நான்கு = தைசசஅகங்காரமுஞ் சாத்துவிகமுங் கூடியவிடத்துத் தோன்று மனம், சாத்துவிகம் மிக்கவிடத்துத் தோன்றும் புத்தி, முக்குணமுஞ் சமப்பட்டவிடத்துத் தோன்றுஞ் சித்தம், புத்தியிற்றோன்றி மூன்றாகப் பகுக்கப்படும்

அகங்காரமென்னும் அந்தக்கரணங்கள். வாக்கென்னு நான்கு= விந்து தத்துவத்திற்றோன்றிய (ஸூக்ஷ்மா) சூக்குமை, (பச்யந்தி) பைசந்தி, (மத்யமா) மத்திமை, வைகரி யென்பன. இவ் வாக்குக்கள் யஜுர் வேத யோககுண்டல்யுபநிஷத்திற் கூறப்பட்டிருத்தலை, "பராயாமங்குரீபூய பச்யந்த்யாம்த்விதளீக்ருதா । மத்யமாயாம்முகுளிதா வைகர்யாம்விகஸீக்ருதா ॥" என்பதினறிக ; ருக்வேத அக்ஷமாலிகோபநிஷத்திலுங் காணலாம். 'பரா' என்பதே சூக்குமை.

இந்தியம் - இந்திரியமென்பதன் விகாரம்.] (எசு)

முக்குணங்க டேர்ந்தகலின் மூலச்சு பாவம்போம்
அக்கணமி தாகிதகன் மஞ்சீவி யாததனாற்
பொக்கமெனப் போநியதி காலமிவை போயபின்னர்ப்
பக்குவவான் மாநுகராப் பண்பணைந்து நிற்குமன்றே.

முக்குணங்களையுங் கண்டு நீங்கினால் மூலப்பிரகிருதி யொடுங்கும். அக் கணத்திலேயே சுகதுக்கானுபவ காரணமாகிய கன்மமுஞ் சீவியாது. அது காரணமாகக் காலம் நியதி யென்னுந் தத்துவங்களுஞ் செயலடங்கி நிற்கும். இவைக ளடங்கியபின் பக்குவப்பட்டிருக்கும் ஆன்மாவானது கன்மபலத்தை யனுபவியாத தன்மையை யடைந்து நிற்கும்.

[முக்குணம்= அவ்வியத்தத்தினின்று வெளிப்பட்ட இராசசம், தாமசம், சாத்துவிகம். அவ்வியத்தம் குணதத்துவ மகத்திற்கும், மகத்து (ஸூதாதிঃ) பூதாதியெனும் அகங்காரத்திற்கும், பூதாதி தன்மாத்திரைகட்கும் ஆதாரமென்பது யஜுர்வேத ஸுபாலோபநிஷத்திற் பெறப்படுகின்றது. மூலச்சுபாவம்= அவ்வியத்த மெனவும், அக்ஷர மெனவுமுள்ள மூலப்பிரகிருதி ; இஃது அசுத்தமாயையின் கலையிற் றோன்றியது.

இதாகித கன்மம் - ஹிதாஹித கர்மம் என்பதன் விகாரம். பக்குவவான்மா - தமிழ்நூன்முடிபு. ] (எஎ)

அச்சமய மிச்சைஞா னங்கிரியை யாடாவே
மிச்சையெனப் போயிடுங்க லாதிமே லேயவைதுண்
டுச்சிதங்கொள் சுத்ததத்வ மோரைந்து நீங்குமஙன்
நிச்சலன மின்றசைபி ராணனென்று நின்றிடுமால்.

அச் சமயத்திற் சீவனுடைய இச்சா ஞானக் கிரியைகள் சீவியாவாம். கலாதிகள் பொய்யெனும்படி போம். பின்பு, அவற்றைப் பிரேரிக்குஞ் சிரேட்டமுள்ள சுத்த தத்துவங்களைந்தும் நீங்கும். அங்ஙனம் பிராணவாயுவாகிய ஒருகருவி மாத்திரம் அசைந்துகொண்டிருக்கும்.

[ஆணவமலத்தைச் சிறிதகற்றியிடுங் கலையினாற் றூண்டப்படுவதே கிரியாசத்தி. வித்தையினாற் றூண்டப்படுவதே ஞானசத்தி. அராகத்தாற் றூண்டப்படுவதே இச்சாசத்தி. ஆன்மசத்திகளாய இம்மூன்றுட் கிரியை அறிஞரைத் தொழுவதாகவும், ஞானம் பேரறிவாகவும், இச்சை அறிஞரோடு மருவுவதாகவுஞ் சீவன்முத்தி தசையிற் பிறங்குமாகலின் அத் தசையினுமேம்படு விதேகமுத்தி தசையில் அவை பரமான்மாவினுடைய இச்சா ஞானக் கிரியா சத்திகளிலடங்கிச் சீவியாமல் அம்மயமாய் நிற்குமெனல் கருதி "ஆடாவே" என்றார். பரமான்மாவினுடைய இச்சா ஞானக் கிரியாசத்திகள்— பஞ்சப்ரஹ்மோபநிஷத்தில் ஸத்யோஜாதம், அகோரம், வாமதேவமென்பவற்றின் விவரம் விளம்பும்பாங்கர் விளம்பப்பட்டன. கலாதி - என்றது கலை, வித்தை, அராகம், புருடன், காரியமாயை யென்பவற்றை. சுத்ததத்வமோரைந்து - என்றது சுத்தவித்தை, ஈசம், சாதாக்கியம், விந்து, நாதமென்பவற்றை. பரமான்மாவினுடைய ஞானசத்தியாற் செலுத்தப்படு நாதம் காரியமாயையையும், சுத்தவித்தை வித்தையையும், கிரியாசத்தியாற் செலுத்தப்படு விந்து கால கலை நியதிகளையும், சாதாக்கியம் புருடனையும், இச்சாசத்தியாற் செலுத்தப்படும் ஈசம் அராகத்தையுஞ் செலுத்துவனவாகலின் "அவை தூண்டுச்சிதங்கொள் சுத்ததத்வ மோரைந்து" என்றார். ஐந்தனுள் நாதம் ஞானமயமாயும், விந்து கிரியையாயும், சாதாக்கியம் மேலையவிரண்டுமொத்துளதாயும், ஈசம் ஞானங்குறைந்து கிரியை மிக்குளதாயும், சுத்தவித்தை கிரியைகுறைந்து ஞானம் மிக்குளதாயு மிருக்கும்.

ஞானேந்திரியம் - ரு, தன்மாத்திரை - ரு, கன்மேந்திரியம் - ரு, பூதம் - ரு, அந்தக்கரணம் ச - ஆகிய உச - ம் ஆன்மதத்துவமெனவும், நியதி, காலம், கலாதி ரு - ஆகிய எ - ம் வித்தியாதத்துவமெனவும், சுத்த தத்துவம் ரு - ஞ் சிவதத்துவமெனவுங் கூறப்படுமென்பதும்; இந்த ௩௬ - மே உட்கருவிகளெனப்படுமென்பதும் முற்படலத்து ௩0 - ன் உரையில் விளம்பப்பட்டுள. இவைகள் வேதத்

திற் கூறப்பட்டுளவெனல் மேலைப்படலத்து அரு - ன் உரையிலறிக. அவ்வாறே மிருகேந்த்ரம், பௌஷ்கரம் முதலிய ஆகமங்களிலுங் கூறப் பட்டுள. வேதாகமங்கள் கூறியாங்கு வேதோபப் பிருங்கணமும் (ஶாயாகாலமவாஸ்ருஜக், நியதிஞ்ச கலாம்வித்யாம் கலாதோராகபூருஷௌ ।) "மாயாகாலமவாஸ்ருஜத், நியதிஞ்ச கலாம்வித்யாம் கலாதோராகபூருஷௌ ।" என்றும், (நாதாத்விநிஸ்ஸ்ருதோபிந்துர் பிந்தோர்தேவஸ்ஸதாஶிவ: । தஸ்மாந்மஹேஶ்வரோஜாதஶ்ஶுத்தவித்யாமஹேஶ்வராத் ॥) "நாதாத்விநிஸ்ஸ்ருதோபிந்துர் பிந்தோர்தேவஸ்ஸதாசிவ: । தஸ்மாந்மஹேச்வரோஜாதச் சுத்தவித்யாமஹேச்வராத் ॥" என்றும் அந்த வித்தியாதத்துவ சிவதத்துவங்களைக் கூறுதலோர்க. இவ் வுபப்பிருங்கணம் சைவமஹாபுராண வாயுசங்கிதையின் உத்தரபாகத்தது. ஆன்மதத்துவம் பிரகிருதியிலும், வித்தியாதத்துவம் அசுத்தமாயையிலும், சிவதத்துவஞ் சுத்தமாயையிலுந் தோன்றியுள்ளன. இவ்வாறு வேதாகமாதி பிரமாணங்களால் நிர்ணயிக்கப்பட்ட முக்கியதத்துவம் (௩௬) முப்பத்தாறாயிருக்க ;

"ஐயஞ்சி னப்புறத் தானு மாரூரமர்ந்த வம்மானே"

என்று திருநாவுக்கரசுகளது தென்மொழிமறை செப்புமாறென்னையெனின்,— அம் மறைக்கூற்றில் ஆன்மதத்துவம் ௨௪ - னு மேம்பட்ட புருடதத்துவம் ௨௫ - வதாகலின் அஃதே 'ஐயஞ்சு' எனப் பட்டது. அப் புருடன் கலாதி பஞ்ச கஞ்சுகமெனுங் கலை, நியதி, காலம், வித்தை, அராகம் ஆகிய ஐந்து மொன்றுபட்ட விடத்தே தோன்றுவ னாதலானும், அக் கலையின் காரணம் மாயையாதலானும் புருடன் வாயிலாக வித்தியாதத்துவம் எ - ங் கொள்ளக் கிடக்கின்றன. இவைபற்றின் மேலேயுள்ள சிவதத்துவத்திருப்போன் சிவபிரானாகலின் அந்தப் பிரானே 'ஐயஞ்சின் அப்புறத் தான்' எனப்பட்டனன். அத் தத்துவம் சுத்தவித்தை, ஈசுரம், சாதாக்கியம், சத்தி (=விந்து) என்பவற்றையுந் தன்மாட்டடக்கிச் சிவதத்துவம் ஐந்தெனும்படியிருத்தலிற் சுத்தமாயாதத்துவம் ரு - ங் கொள்ளக்கிடக்கின்றன. இக் கிரமத்தின் அம்முப்பத்தாறுமே கூறப் பட்டனவென்க. இப்படியுந் தொகுத்துக்கூறல் வடமொழி மறைக்கும் ஆகமத்துக்கு முடம்பாடே யென்பதை—

(ஜீவ: பஞ்சவிம்ஶக: ஸ்வகீயதத்த்வவிம்ஶதிதமம் பரித்யஜ்ய ஷட்விம்ஶ: பரமாத்மேதி நிஶ்சயாஜ்ஜீவந்முக்தோ பவதி ।)

" ஜீவ:பஞ்சவிஞ்சக: ஸ்வகல்பிதசதுர்விஞ்சதிதத்வம்பரித்யஜ்ய
ஷட்விஞ்ச: பரமாத்மாஹமிதிநிச்சயாஜ்ஜீவன்முக்தோபவதி।"

என்பதனானும்,

" எண்ணுக பிரதா னத்தை யிருபத்து நாலாம் வேறென்
றெண்ணுக புருடன் றன்னை யிருபத்தைந் தாவா னென்றே
யெண்ணுக விருபத் தாறும் பொருளென வீசன் றன்னை
யெண்ணுக வினையி லீச னிருபத்தே ழாவா னென்றே."

என்பதனானு மறியலாம். இவற்றுண் முன்னர்த்தாய சுத்தாத்வைத மண்டலப்ராஹ்மணோபநிஷத் வசனம்— " உ௫ - ஆந் தத்துவனான சீவன் தன்னால் அபிமானிக்கப்பட்ட (ஆன்மதத்துவமெனும்) உ௪ - தத்துவங்களையுந் தள்ளி உ௬ - வதான பரமான்மா நானேயெனும் (சோகம்பாவனை) நிச்சயத்தினாற் சீவன் முத்தனாகிறான்" எனும்பொருளைப் பயக்கின்றது. புருடதத்துவமயமாய் நிற்கும் ஆன்மாவே சீவனெனப்பட்டது. புருடதத்துவத்தையே புருடனென்பதும், சீவனென்பதுஞ் சில சுருதிகளிலுள்ளன. இவைபு பற்றியே அவை கொள்ளப்படுவன. பின்னர்த்தாய சைவாகம உபபேத சிவதருமோத்தரச் செய்யுளில் ஆன்மதத்துவம் உ௪ - ன் காரணமான பிரகிருதியே பிரதானமெனப்பட்டது. உ௫ - வதாகச் சொல்லப்பட்ட புருடன் வாயிலாக அந்த வித்தியாதத்துவம் எ - ம் அறியக்கிடக்கின்றன. இச் செய்யுட்கு முன்னுற்ற செய்யுட்கண் " ஆரகனதிகன்" (=சங்கரிப்பவன் சிரேட்டன்) எனப்பட்ட குணருத்திரமூர்த்தியே உ௬ - ம் பொருளெனப்பட்டமையின் இவ்விருபத்தாறை விலக்கிக்கொள்வுழி உஎ - எனப்பட்ட இணையிலீசனே அத்தென்மொழி வடமொழி மறைகளிற் போந்த உ௬ - ஆந் தத்துவ சிவபிரானெனல் கொள்ளக்கிடக்கின்றது. இவ்வுண்மை யுணரமாட்டாதார் தத்தமக்கேற்றவாறு சாற்றிச் சொற்குணம் பொருட்குணம் வாளா போவர்.

பூதகாரியம் - உ௫, ஏடணை - ௩, நாடி - க0, கன்மேந்திரியவிடயம் - ௫, வாக்கு - ௪, குணம் - ௩, வருஞ் செய்யுளில் விளக்கப்படு வாயு க0 - ஆகிய ௬0 - ம் புறக்கருவிகளாம். இவைகளும் வேதத்திலுளவென்பது உரையி லுணரக்கிடக்கின்றது. வாக்குக்கள் விந்துவின்கண் அதன் காரியமாய்த் தோன்றினமையாலும், குணங்கள் வைராக்கிய மோக துக்கங்களாய் அந்தக்கரணங்களி லடங்குகின்றமையாலும் அவைகள் புறக்கருவியைச் சேர்வனவாயின.

கலாதி, சுத்ததத்வம், நிச்சலனம் - வடநூன் முடிபு. உச்சிதம் - (உஷி்ரதஃ) உச்ரிதம் என்னும் வடசொல்லின் விகாரம்; மேலானது, விருத்தியெனும் பொருளுடைத்து; அமரஸிம்ஹ நாநார்த்தவர்க்கங் காண்க. இஃது உசிதமெனவுமாதல் கூடும். 'இன்றி' இன்று - எனத்திரிந்து நின்றது செய்யுளாகலின்.] (எஅ)

அவ்வாயுத் தன்னையுள்ள வாறறிந்து நீங்கிடின்மற்
றெவ்வாயு வுந்துஞ்சு மேங்கசபை நாதமும்போம்
அவ்வாயு வைய்யறிந்த சித்தேதா னச்சித்திற்
கிவ்வாறு தான்காட்டி நின்றதரு ளென்றறியே.

அந்தப் பிராண வாயுவையும் உள்ளபடி கண்டு நீங்கினல் ஏனைய வாயுக்களுமொடுங்கும்; ஒலிக்கின்ற அஜபாநாதமுமடங்கும். அந்தப் பிராணவாயுவைபறிந்த சித்தே தனதான்மசொரூபம். அச் சித்திற் கிவ்வாறு எல்லாவற்றையு மறிவித்து உபகரித்து வந்தது திருவருளென் றறிவாயாக.

[ "மற் றெவ்வாயுவும்" என்றதனலே முன் மொழிந்துள்ள பிராணனுக்கு வேறாகக் கணக்கிடப்படும் அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயனெனும் கூ - ம் உணரக்கிடக்கின்றன. இவற்றை "ப்ராணுபாநவ்யாநோதாந ஸமாநா ஃ ப்ராணவ்ருத்தய ஃ। நாககூர்மக்ருகரதேவதத்த தநஞ்ஜயாஉபப்ராணு ஃ॥" எனவரு பைங்கலோபநிஷத் வசனத்தா லறிக. நாகன் முதலிய உபப்பிராணன் ஐந்திற்கும் ஆதாரமான பிராணன் முதலிய ஐந்தையும் மைத்ராயண்யுபநிஷதம் (யஃவ்ராணொவாநஸ்ஸாமாந உஷாநொவ்யாநஇதி) "ய ஃ ப்ராணோபாநஸ்ஸமாந உதாநோவ்யாநஇதி" என்று கூறுதலி னறிக. இவ் வைந்தும் பிரச்நம், ஸுபாலம் முதலிய உபநிஷத்துக்களிலுங் கூறப் பட்டுள. ஆகமமெடுத்துக் கூறியதையும் முற்படலத்து ககக - ன் உரையிற் காணலாம். இப் பத்து வாயுவுக்கும் பிறப்பிடம் சூக்குமவாயுவாம். "நாதமும் போம்" என்றது தியாநபிந்தூபநிஷதம் (ஸிநூநாஃகளாதீதம்) "பிந்துநாதகளாதீதம்" என்றும், அதர்வசிகோபநிஷதம் (நாஃாஞவரஸாத்மநி) "நாதாந்த பரமாத்மநி" என் றுங் கூறுதலி னமையும். "(வாக்குக்க ளாகிய) இவற்றினின்றும் மிக்க பந்தமில்லை" எனு மருத்தத்திலே (ஆஹ்யாநவரமொவநூஃ) "ஆப்யோநபரமோபந்த ஃ" என வரூஉம் பௌஷ்கராகம பிந்து

படலவாக்கியமும் இங்ஙனுறுதல் காண்க. வாக்கு - அனுதி சூக்குமநாதமெனும் பொருட்டு.

"வாயுவைய்யறிந்த" என்பதில் யகரவொற்று விரித்தல்விகாரம்.] (எக)

நீயறியு மவ்வருளி னீ நிற்கி னவ்வாயுப்
போயடையும் போதமலம்பொய்த்திடும்பின்போதைநனி
மேயநலின் பேநுகர்ந்து வீடுபெத்தத் தும்விலகா
ஞேயசிவத் தோடணவி நிற்றலுயர் முத்தியரோ.

நீ தரிசித்த அவ் வருளில் நீ அடங்கிநிற்கில் அந்த வாயுவொடுங்கும். (அங்ஙனமே) சீவபோதத்திற் காதாரமாயுள்ள மூலமலமுந் தன் சத்திகெட்டு நிற்கும். அதற்குமேல் மூதறிவுபொருந்திய நிலையில் ஆனந்தானுபவத்தை யனுபவித்துப் பெத்தத்திலும் முத்தியிலும் விட்டு நீங்காத ஞேயசிவத்துடன் அனுபவத்திற் பொருந்தி நிற்றலே பரமுத்தியாம்.

[திருவருட்பிரகாச சிவசத்தியில் ஆன்மா வழுந்திநிற்குஞான்றுண்டாம் ஆனந்தானுபவத்தின்மேலே சிவசாட்சாற்கார சிவானந்த மேலீடெனும் பரிபூரணானந்தானுபவமாகலிற் 'போதை நனிமேய நல்லின்பமே நுகர்ந்து' 'ஞேயசிவத்தோடணவி நிற்றலுயர்முத்தி' என்றார். இப் படலத்து எ௬ - முதல் இச் செய்யுள்காறும் விளக்கப்பட்ட கிரமநிட்டைக்கு முற்படலத்து ககக - ற் றொகுத்துச் சுட்டலென்னும் உத்தியாற் கூறப்பட்டது சுருக்கமாதலின் அச் செய்யுளுரை மேற்கோள்களும் இங்ஙனங் கருதத்தக்கன. எஞ்ஞான்றுந் தன்னோடிருந்தும் அனுபவப்படாச் சிவம் தனக்கனுபவமாதலே 'அணவிநிற்றல்' எனப்பட்டது.

அறியும் - என்னும் பெயரெச்சம் இறந்தகாலப்பொருட்டு. மலமும் - என்னும் உம்மை விகாரத்தாற்றொக்கது. 'பெத்தத்தும்' என்பதிலுள்ள உம்மையை 'வீடு' என்பதனோடுங் கூட்டுக. போதை - (बोधा) போதா என்னும் வடசொல் ஈறு திரிந்தது; அறிவெனும்பொருட்டு.] (அ0)

## அ. நிமலஞானநிட்டானுபவ நியதி.

கலிநிலைத்துறை.

காட்டு மவ்வரு டன்னை நீ நோக்கினுங் காணும்
வீட்டு வத்துவை நாமென வுள்ளினும் வேறு

நாட்டி முன்னினு மிரண்டறு மைக்கிய நணுகா
தீட்ட மாந்திரி புடிகெடுத் துண்மையை யெய்தாய்.

உன்னைக் காட்டியருளிய அவ் வருட்பிரகாசத்தை நீ முன்னிட்டுப் பார்த்தாலும், (அந்தப் பிரகாசத்தினால்) நீ தரிசிக்கும் முத்தியிலைப் பரம்பொருளை நாமேயென எண்ணினாலும், வேறாக வைத்துத் தியானித்தாலும் அவிதம் அற்ற அனுபவநிலை வாராது. கூட்டமாகிய திரிபுடியொழித்துச் சிவத்தொடு அத்துவிதமாயிருக்கு முண்மைநிலையினை யடைவாயாக.

[ அத்துவித சிவானந்தமேலீடெனும் அனுபவமே "இரண்டறு மைக்கியம்" எனப்பட்டது. ஐக்கியார்த்தம் முற்படலத்து கO௯ - ன் உரையில் விளக்கப்பட்டது ; ஆவயிற் றெளிக. காண்பான், காட்சி, காட்சிப்பொருளென்பனவே திரிபுடி ; விவரம் கககக - ன் உரையில் விளக்கப்பட்டுளது.

வேறு - வேறாகவென்பதன் விகாரம். ஈட்டம்= கூட்டம்; பிங்கல நிகண்டு காண்க. ] (அக)

தன்னைத் தானறி யாப்பதங் கேவல சகலந்
துன்னல் போற்சிவ தசையினு முண்டவை சொல்லிற்
றன்னைத் தானறிந் திட்டபின் றோன்றருட் காட்சி
தன்னை யேமுத்திச் சகலமென் பாரருட் சான்றோர்.

அந்த மாசக லங்கழ றலுமஙன் றோன்றும்
நிந்தை தீர்பரை யோகினைக் கேவல நிலையென்
றிந்து ஞானிகண் மிழற்றுவ ரிவ்விரண் டையுநீத்
தந்த மாஞ்சுகா தீதசுத் தமுறலே யைக்கம்.

தன்னைத் தானறியாதகாலத்தில் (=பெத்ததசையில்) கேவலாவத்தையுஞ் சகலாவத்தையுந் தன்னை நெருங்கியிருத்தல்போல முத்திதசையிலுங்கேவலமுமுண்டு: சகலமுமுண்டு. அவற்றினிலக்கணங்களைக் கூறப்புகின், தன்னைத் தானருட்டுணைகொண்டறிந்தபின்னர்த் தனது ஞானக்கண்ணுக்குப் புலப்பட்டுநிற்குந் திருவருட்காட்சியையே முத்திச்சகலமென்று அருணிரம்பியுள்ளோர் கூறுவர்.

அந்த முத்திச்சகல நீங்கியவளவிலே அந்நிலைக்களத்தே தோன்றும் பழிப்பொழிந்த பரையோகத்தையே முத்திக் கேவலநிலை

யென்று இந்த இந்துதேசத்து அனுபவஞானிகள் கூறுவர். இவ் விரண்டவத்தையுந்துறந்து முடிவாகிய சுகாதீத பரிசுத்தமடைதலே சுத்தாத்துவித சிவானுபவ நிலை.

[ அ௦ - ஞ் செய்யுளுழைக் கூறப்பட்ட அருணிலை பொருணிலை யென்னும் இரண்டனுள் அருணிலைமீதெய்தும் பொருணிலை திரிபுடி ரகிதத்தி லாதற்பாற்றென்பது அக - ஞ் செய்யுட்கண் அறிவுறுத்தப் பட்டது. அவ்வருட்டரிசனத்தை நின்மல சகலாவத்தை யெனவும், அவ் வருளிலழுந்தும் பரையோகத்தை நின்மல கேவலாவத்தை யெனவும், அது மேலைய அ௦ - ற் கூறப்பட்ட இன்பமென்னுஞ் சுக நிலையெனவும், அச் சுகநிலையின் மேம்பட்ட பொருணிலையே சுகாதீத மெனவும், அவ் வதீதமே சிவானந்தமேலீடெனுஞ் சுத்தாத்துவித சிவானுபவ பரிபூரணநிலையெனவுங் கூறப்படுமென்பது அஉ, அ௩ - ஆகிய இச் செய்யுள்களி லறிவுறுத்தப்பட்டது.

"மாயநட் போரையு மாயா மலமெனு மாதரையும்
வீயவிட் டோட்டி வெளியே புறப்பட்டு மெய்யருளாந்
தாயுடன் சென்றுபின் றாதையைக் கூடிப்பின் றாயைமறந்
தேயு மதேநிட்டை யென்றா னெழிற்கச்சி யேகம்பனே."

எனும் பட்டினத்தடிகள் திருவாக்கும் இங்ஙனங் கருதத்தக் கதே. இவ்விந்துதேசமல்லாப் பிறதேசங்களிலுந் தெய்வ வழிபாடுக ளுள்ளனவேனும் அவையெல்லாம் ஆன்மாவின்கட்புரியும் பரமான் மோபாசனையும், அவ்வழி ஆன்மாவைத் தரிசித்தெய்தும் அனுபூதி ஞானமுமல்லாப் பகிர்முகத்தவாகலின் அத்திற ஞானமுணர்த்தும் இத்தேச ஞானிகளை "இந்து ஞானிகள்" என்றார்.

பதம் = காலம்; தகரவேதுகை காண்க. பதத்தில் என ஏழனுருபு விரிக்க. கேவலசகலம் - வடநூன்முடிபும்மைத்தொகை; "வல்லி - மலகன்மம்" என்றாற்போல. "துன்னல்போற சிவதசையினு முண்டு" என்றதில் 'உண்டு' என்னும் முற்றேடு துன்னல் கூட்டி யுரைக்கப்படும். காட்சி - தொழிற்பெயர்; காண் - பகுதி, சி - விகுதி, ண் - ட் ஆதல் விகாரம்.

ஐக்கம் - ஐக்கியமென்பதன் சிதைவு. இதற்குமுரிய அருத்தம் முற்பட லத்து க௦சு - ன் உரையில் விளக்கப்பட்டதேயாம்.] (அஉ. அ௩)

இனைய வாறரு டன்னைமுன் னிட்டுற லின்றுன்
மனதி னுலறி வேனெனி னம்மன மறதி
நினைவு மாமது கண்டதை நினைவுறு மதனாற்
கனவி னுங்கணு றச்சிவங் கருதவொண் ணுதால்.

இவ்விதமாக அருளை முன்னிட்டுக்கொண் டெய்துதலில்லாமல் உன் மனதினாலேயே அறிவேனென்னில், அம் மனதின்றன்மை மறப்பு நினைப்பாகும். மேலும் அது, சாக்கிராவத்தையிற் கண்டதையே நினைக்கும். அத்திற மனத்தாற் சொப்பனத்தினுங் கண்ணுறப்படாத சிவத்தை யறிதல் கூடாது.

[ தூல நேத்திரங்கொண்டு பார்த்ததையே மனம் நினைக்குந் தன்மைத்தென் றீண்டறிவுறுத்தினமை அனுபவத்தும் பொருந்துதலின், யாதொரு தியானம்புரிய முயலுநரெல்லாம் விழிப்புலமான வடிவத்தைத்தான் பாவிக்கத் தக்கவராவ ரென்பதூஉம் ஏற்படுகின்றது. இத் தூலமனத்திற்கு வேறாய பரமனமே பரத்தைச் சிந்தித் துணரத்தக்கதென்பது வருஞ்செய்யுளிற் பெறுக.

"கணுறுச்சிவம்" என்புழிப் படுசொல்லும், இரண்டனுருபும் விகாரத்தாற் றொக்கன.] (அச)

அற்ப மாமுயிர்ப் போதமு மதிலெழு மனமும்
ஒற்க மானபின் பெழும்பர வுணர்வதை யுணரும்
ஒற்க மாகவென் றொடுக்கிட வுன்னிலுன் னிழலைப்
பொற்கை யான்மணல் போட்டு மறைப்பது பொருவும்.

அற்பமாகிய சீவபோதமும் அதினின்றெழு மனமும் அடங்கிய பின்னர் வெளிப்படும் பேரறிவே அந்தச் சிவத்தை யறியும். அவைக ளடங்குக வென்று அவற்றை நீயே யொடுக்க நினைக்கின், அஃது உனதுடற்சாயையை அழகிய கையால் மணலைப்போட்டு மறைத்தலையே யொக்கும்.

[ உடம்பினிழலை மறைக்கு நிமித்தம் மணலை அள்ளியள்ளிப் போடுநோன்று அது மறையாமே மேலுமேலுந் தோன்றி நிற்றல் போல மனத்தையடக்க முயலுமிடத்தும் முயலும் மனந் தோன்றித் தோன்றி நிற்றலின் "மணல்போட்டு மறைப்பது பொருவும்" என்றார். நிழல் மறையவேண்டுமாயிற் றனதுடம்பை யாதொரு சார்பிற் சாரவைப்பதே சான்றகாரிய மாதல்போலச் சீவ சுதந்திரபோதத்தைத் திருவருட்கே கையடைசெய்து அசைவற நிற்றலே மனவடக்க நிலையென்பது மிங்ங னுணரக்கிடக்கின்றது. இப் படலத்து உரு - ல் ஆண்டைக்கியைபுறக் கூறப்பட்டது மிப்பொருளுடைத் தன்றோ.

'அவை யொற்கமாக' எனப் பன்மைச் சுட்டுப்பெயர் வருவிக்க. 'மணலை' என இரண்டனுருபு விரிக்க. போடல்=எறிதல்; போகவிடுதல் என்பதன் மரூஉ. "பொய்யர்கைப் புகுத்தி னூர்கள் பொருளினை யிழந்தார் போட்டே" என்றார் சிவதருமோத்தர மொழிபெயர்ப் பாசிரியரும். போட்டு - வினையெச்சம்.] (அரு)

**கண்ணைப் போலுள நீசிவ மாம்பிறை காணத்**
**திண்ணப் பேரருள் விரலைமுன் னுக்கொடு தெரிசி**
**எண்ணெய்த் தாரையொத் தேய்ந்திடு மவ்வரு ளுன்னுள்**
**விண்ணைப் போனிலை கொண்டுள புறஞ்செல வேண்டா.**

கண்ணைப்போலக் காணுந் தன்மையோடுள்ள நீ, சிவமாகிய பிறையைக் காணவேண்டில், உறுதிப் பாடுடைப் பேரருளாகிய விரலை முன்னிட்டுக் கொண்டு தெரிசிப்பாயாக. அனுபவத்திலே தைலதாரையை யொத்துப் பொருந்தும் அவ்வருள், உனக்குள் ஆகாசம்போல நிலைத்திருக்கின்றது. (ஆகலின்) அதனைக்காண நீ வெளிமுகமா யெவ்விடத்துஞ் செல்ல வேண்டா.

[இளம்பிறை, மிக்க சேய்மைக்கண்ணதாய ஆகாயத்தில் உற்று நோக்குவார்க்கன்றி ஏனையோர்க்கு வெளிப்படா நுண்ணிதாயுள்ள தேய்ப்பப் பரையோகநிலையிற் பரம்பொருட்காட்சியுங் கூறக்கிடத்தலிற் "சிவமாம் பிறை" என்றார். "புறஞ்செல்ல வேண்டா" என்றது— மைத்ரேயம், ஸ்கந்தம் என்னும் உபநிஷத்துக்கள் (𑌦𑍇𑌹𑍋 𑌦𑍇𑌵𑌾𑌲𑌯𑌃 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌸𑍍𑌸𑌜𑍀𑌵𑌃 𑌕𑍇𑌵𑌲𑌶𑍍𑌶𑌿𑌵𑌃। 𑌤𑍍𑌯𑌜𑍇𑌦𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌰𑍍𑌮𑌾𑌲𑍍𑌯𑌂) "தேஹோதேவாலய: ப்ரோக்தஸ் ஸஜீவ: கேவலச்சிவ:। த்யஜேதஜ்ஞாநநிர்மால்யம்" என்று கூறுவசனம் "தேகந் தேவாலயமென்று சொல்லப்படுகிறது: அதன்கண் ணிருக்குஞ் சீவன் சிவனே: அஞ்ஞானமாகிய நிருமாலியத்தைத் தள்ளவேண்டும்" எனும்பொருளைப் பயத்தலினாலும்; இவ்வண்ணமாக வடமொழிமறை கூறியாங்குத் திருஞானசம்பந்தசுவாமிகளது தென்மொழிமறையும்—

" ...... கானப்பேர்
உள்ளமே கோயிலா வுள்குமெ னுள்ளமே"

" எண்ணொன் றி நினைந்தவர் தம்பால்
உண்ணின்று மகிழ்ந்தவ னூராம்......பனையூரே"

என்று கூறுதலினாலும்; திருநாவுக்கரசுகளது தென்மொழி மறை—

“ தேடிக்கண்டுகொண்டேன்றிருமாலொடுநான்முகனுந்
தேடித்தேடொண்ணாத்தேவனையென்னுளேதேடிக்கண்டுகொண்டேன்.”

என்றும், திருவாதவூரடிகளது தென்மொழிமறை—

“ இன்றெனக்கருளியிருள்கடிந்துள்ளத்தெழுகின்றஞாயிறேபோன்று
நின்றநின் றன்மை ”

என்றுஞ் சுவானுபவ வுண்மையை யுரைத்தலினாலும் அறியக் கிடக்கின்றது. திருமந்திரமுனிவர்—

“ முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்
அகத்திற் கண்கொண்டு காண்பதே யானந்தம் ”

என இடித்துரையாடினதும் அது. இப் பொருளிலே ஈங்குக் காட்டப்பட்ட இரண்டுபநிடதங்களின் வசனமேயன்றி வேறு பலப் பல வுபநிடத வசனங்களும், ஆகம வசனங்களுட் பலவும், வேறு சிலவும் உரைகளில் வந்துள்ளனவே. சிவன் சிவமூர்த்தமாகிய சிவலிங்கமாயிருத்தலிற் ‘ சிவன் சிவனே ’ என்று போந்த சுருதிகள் கூறுவனவாயின. என்னை ? அங்ஙனம் ‘ நிருமாலியத்தைத் தள்ள வேண்டும் ’ என்றது சிவலிங்ககிரியையை யுணர்த்திற்றாகலின். சிவன் சிவலிங்கமென்பது இப் படலத்து உஎ - ன் உரையிற்போந்த தைத்திரீயாருணசாகை நாராயணவசனத்தும், திருமந்திரம் திருக் களிற்றுப்படியா ரென்பவற்றின் கூற்றின்கண்ணும், அட்டமூர்த்த முணர்த்து பிரமாணங்களிலும் பெறப்படுதலின் இப்பொருளேற் புடைத்தென்க.

(ஃஂஹுஷ்வாதெ³ஶ ஶரீரமாத்ரம்ப்ரதீ³பப்ரதாபவத்
த்³விஸ்த்ரிதாஹி தத்³ப்³ரஹ்மாபி⁴த்⁴யேமாநம்
மஹாதே³வோ பு⁴வநாந்யாவிவேஶ ।)

“ அங்குஷ்டப்ராதேச சரீரமாத்ரம்ப்ரதீபப்ரதாபவத்
த்விஸ்த்ரிதாஹி தத்ப்ரஹ்மாபிஷ்யேமாநம்
மஹாதேவோ புவநாந்யாவிவேச । ”

என்னும் இதுவுமதுவென்க. மைத்ராயண்யுபநிஷத்தின் கூ - ம் பிரபாடகத்திலுள்ள இதன்பொருள் :— “ சரீர இதயத் தானத்தில் அங்குட்டமாத்திரமாய் இரண்டு மூன்று (மந்தம் மத்தியமம் உத்தம மெனும்) திறமான தீபாகாரமாய் யாண்டுந் துதிக்கத்தக்க மகாதேவனுப் விளங்கிக்கொண்டிருக்கும் அந்தப் பிரமம் புவனம் யாவையும்

வியாபித்துளது" எனவாம். இவ் வுண்மையாற் பகிர்முகக்கோவில்கள் பலவற்றுள்ளுஞ் சிவலிங்கத்தை நாப்பட்கொண்டுள்ளனவே உள்ளபடி யமைக்கப்பட்ட வுண்மைக்கோவில்க ளென்பதூஉம் இனிதுணரக் கிடக்கின்றதன்றோ.

தாரையை - என இரண்டனுருபுவிரிக்க. நிலைகொண்டுளது - என்னுந் துவ்வீறு விகாரத்தாற்றொக்கது. 'புறஞ்செல' என்பது ஏழாம்வேற்றுமைத் தொகை.] (அசு)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நிகழ்த்து மாறுயர் தத்துவ
நேதி செய்துன துணர்வினைச்
செகுத்தி டாது செகுக்குமோர்
திறத்தி னின்றிட லப்பெரும்
பகத்த ருள்வச மாவதாம்
படரு மந்தர விருளிலாழ்ந்
தகத்தை நீங்கிடு நிலைமையஃ
தாவ தன்றென வோர்வையே.

மேலே விளக்கியபடி யுயர்ந்தமார்க்கமாகிய தத்துவ நேதியினைச்செய்து உனது போதத்தை நீ கெடுக்காது கெடுக்குமொரு திறத்தி னிற்றலே அந்த அறுகுண ஐசுவரியப் பெருந்திருவருள் வசப்படுவதாம். உனக்குள் வியாபித்திருக்கும் அந்தர (அஞ்ஞான) இருளிலழுந்தி யுணர்வை நீங்கிநிற்கு நிலைமை மேற்கூறிய திருவருணிலையாவ தன்றென வறிவாயாக.

[பிருதிவிமுதல் நாதமீறாகிய பிரபஞ்சத்தை ஒரோவொன்றாகச் சுட்டிப் பரம்பொருள் இஃதன்று இஃதன்றெனக் கண்டு கழித்துச் செல்லுதலே "தத்துவநேதி" எனப்பட்டது. அவ்வாறு கழித்த வழித் தரிசிக்கப்படுவதாய்க் கழிக்கப்பட்டவற்றுள்ளுங் கலந்து நிற்பதாயுள்ள சச்சிதானந்த நீர்மையும் யாண்டுமுள்ள பரம்பொருளதேயென வுணர்ந்து நிற்றல், அவ்வருணிலையென வறியக்கிடக்கின்றதாதலின் இது பாரிசேட வளவையாம். ஐசுவரியம், திரு, வீரியம், வைராக்கியம், புகழ், ஞானம் ஆகிய ஆறுகுணமும் (ஸஹ:) பகம் எனப்படும். நிகண்டு - அமரஸிம்ஹம் (ஸஹஸ்ரீகாமமாஹாத்ம்ய வீர்யயத்நாகீர்திஷு) "பகச்ஸ்ரீகாமமாஹாத்ம்ய வீர்யயத்

நார்க்க கீர்த்திஷு" என்று நாநார்த்தவர்க்கத்தில் நவிலுமாற்றான் ஸ்ரீ, காமம், மாஹாத்ம்யம், வீர்யம், (ப்ர) யத்நம், அர்க்கன், கீர்த்தி யென்பவை பகமென வறியப்படுகின்றன.

முற்செய்யுளிற் கூறப்பட்ட திருவருளையடைதலானது, உணர்வு கெடாது கெடுமொரு நிலையிலெய்தும்; அந்நிலை யுணர்வுகெட்டுநிற்ப தன்றென்பது இதன் கருத்தென்க. இக் கருத்தே "சிற்றறிவு முற்சிதையிற் சேர்வாரின் ருஞ்சிறிது—மற்றதனி னிற்கிலருள் மன்னுவாம்" என விளுவெண்பா விளம்புமாற்றானும் பெறப்படும்.

ஆம் - வினைப்பயனிலை. அகம்= உள்ளிடம்; ஆகுபெயராய் உணர்வுக் காயிற்று. சுட்டு முதலாய ஆய்தத்தொடர்மொழிக் குற்றுகர வீற்றின்முன் உயிர்க்கணமல்லன வருமாயின் அவ்வாய்தம் நிலைபெறாதென்பதை "ஏனை முன் வரினே தானிலை யின்றே." என்பதஞன் விதிக்குந் தொல்காப்பியம்—"முன்னுயிர் வருமிடத் தாய்தப் புள்ளி—மன்னல் வேண்டு மல்வழியான." என்னுஞ் சூத்திரத்தால் அவ்வாய்தம் நிலைபெறுமாறு முணர்த்திற் ருகலின் 'அஃது' என்பதன்முன் 'ஆவது' என உயிர்வந்தமையின் "அஃதாவது" என ஆய்தவெழுத்து நிலைபெற்றது. (அஎ)

உணர்வி றந்தது முத்தியென்
றேதின் மூர்ச்சை யுறக்கமும்
உணர்வின் மாகதி யாகலா
மூக மற்றுள பாறையொத்
துணர்வி றப்பது முத்தியென்
றுரைசெய் வாதம தாகுமீ
துணர்வி வேகிகள் கொண்டபே
ருணர்வ தாதலு மெங்ஙனம்.

உணர்வு சீவியாதநிலையே முத்திநிலையென்று கூறினல் மூர்ச்சையும், உறக்கமும் உணர்வில்லாத மோட்சநிலையாகலாம். இஃது எத்துணையு முணர்வற்றதாகிய பாறையை யொத்துக் கிடப்பதே முத்தியென்று கூறும் பாடாணவாதமாக முடியும். இது, தத்துவத்தையுணர்ந்த விவேகிகள்கொண்ட பேரறிவாதலும் எங்ஙனம்? (ஆதலில்லை யென்றபடி.)

[இது, மஹோலயமென்பதற்கு உணர்வு முற்றுங்கெட்டுநிற்பதே பொருளெனக்கொள்வார் கொள்கையை மறுத்து மேற்கூறிய நிலையை

வலியுறுத்தவாறும். "பாறை பொத்து உணர்விறப்பது முத்தி" என்னும் பாடாணவாதம்—

(𑌸𑌂𑌶𑌾𑌨𑍍𑌤𑌸𑌰𑍍𑌵𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑌾 𑌯𑌾 𑌶𑌿𑌲𑌾𑌵𑌦𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃 ।
𑌜𑌾𑌗𑍍𑌰𑌨𑍍𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌵𑌿𑌨𑌿𑌰𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑌾 𑌸𑌾 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃 𑌪𑌰𑍇𑌤𑌿 ॥

ஸம்சாந்தஸர்வஸங்கல்பா யாசிலாவதவஸ்திதி ঃ।
ஜாக்ரந்நித்ராவிநிர்முக்தா ஸாஸ்வரூபஸ்திதி ঃ பரேதி ॥)

"சருவசங்கற்ப சாந்தமாய் விழிப்பும் உறக்கமுமில்லாததாய்க் கல்லைப்போ லிருப்பதாயுள்ள நிலைமை யெதுவோ அது, மேலான சொரூபத்தி னிருப்பு" என்னும் மைத்ரேயோபநிஷதச் செய்தியை ஆதாரமாகக்கொண் டெழுந்ததாகும். அத்திற வாதார்த்தத்தை இச் சுருதிச்செய்தி பயப்பதின்று; என்னை? அறிவுகெட் டுறங்கு முறக்கமு மில்லாதது அந்நிலைமையென்றலின். கல்லைப்போலிருப்பது அசைவறவிருத்தலின் மேற்று. சிலா, பாடாணம் = கல், பாறை.

உறக்கமும் - என்றதிலுள்ள உம்மையை மூர்ச்சையோடுங் கூட்டுக. ஊகம் = நினைத்தல்; சூடாமணிநிகண்டு காண்க. ஈது - என்றது ஊக மென்றதாதியாக முன்னின்றதனோடும், உணர்விவேகிக ளென்றதாதியாகப் பின்னின்றதனோடும் மத்திம தீபமாகக் கூடிற்று. எங்ஙனம் - என்னும் வினாவில் இடமே யில்லையெனுந் தேற்றப்பொருள் குறிப்பாகக் காணப்படுகின்றது.] (அஅ)

நனவும் பள்ளியு நண்ணுறு
  நாப்ப ணுவது முள்ளதோ
எனவி னுவிடி லரிசியு
  மேற வெந்தழி கூழுமின்
றனம்வி ளங்குதல் போலவே
  யமல நிட்டை யலங்குமீ
தெனது நானெனல் வெந்துசித்
  தேறு வாரக முண்டரோ.

விழிப்பிலும், உறக்கத்திலுஞ்சேராத மத்தியிலுள்ள ஓர் நிலையு முண்டோவென்று வினவிடில், வேகாத அரிசியும், மிகவும் வெந்து பதங்கெட்ட கூழுமில்லாமல் அன்னமென்பதொன்று இனிது காண விருத்தல்போல (அவ்விழிப்பு உறக்கமென்னும் இரண்டற்கும் மத்தியில்) அமலநிட்டை பிரகாசிக்கும். இந்நிட்டை நான் எனதென்பன வேகப்பெற்று ஞானமேறுவாரிடத் துள்ளது.

[நாப்பண்=நடு; ஈண்டு முற்படலத்து கூச - ஞ் செய்யுளுரைகளிற் சொல்லப்பட்ட கேவலாவத்தைக்குஞ் சகலாவத்தைக்கும் நடுவிலுறு சுத்தாவத்தையெனும் பொருட்டு. இது —

" யோஜாகர்திஸுஷுப்திஸ்தோ யஸ்யஜாக்ரந்நவித்யதே ।
யஸ்யநிர்வாஸநோபோதஸ் ஸஜீவந்முக்தஉச்யதே ॥ "

என்னும் வராஹோபநிஷத்தின் ச - ம் அத்தியாய வசனத்துமறியப்படுகின்றது. தமிழ்:— " எவனுக்கு விழிப்பில்லையோ, சுழுத்தியுறக்கத் துள்ளவன் அவ் வுறக்கத்தினீங்கி (விழியா) விழிப்பிலிருக்கின்றனனோ, எவனது போதம் வாசனையற்றதாக விருக்கின்றதோ அன்னோன் சீவன்முத்தனென்று சொல்லப்படுகின்றனன்" எனவாம். உயிருண்ணிப்பத்தில் " எனைநானென்ப தறியேன்பக லிரவாவது மறியேன்— மனவாசகங் கடந்தானெனை மத்தோன்மத்தனாக்கி " என்றருளிச்செய்தார் மாணிக்கவாசகனாரும். எனது நானென்பன முறையே உடம்பென்றும், உயிரென்றும், அவைகளினொழிவு பரமானந்த சாகரமென்றும் பிரார்த்தனைப்பத்திலே " பரமானந்தப் பழங்கடல்சேர்ந்— தாவியாக்கை யானெனதென் றியாதுமின்றி யறுதலே" என்று அம் மாணிக்கவாசகனார் திருவாய்மலர்ந்தருளினதும் இச் செய்யுண்முடிபி லுளதன்றோ.

(𑌸𑌰𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌾𑌨𑍍𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯 𑌨𑌿𑌰𑍍𑌮𑌮𑍋 𑌨𑌿𑌰𑌹𑌂𑌕𑌾𑌰𑍋
𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌕𑌂 𑌶𑌰𑌣𑌮𑍁𑌪𑌗𑌮𑍍𑌯)

" ஸர்வதர்மாந்பரித்யஜ்ய நிர்மமோநிரஹங்காரோ
பூத்வா ப்ரஹ்மைகம் சரணமுபகம்ய "

என்று நிராலம்போபநிஷதமுங் கூறிற்று. தமிழ்:— " எல்லாத் தருமங்களையும் விட்டு நான் எனதென்பன இல்லாதவனாய்ப் பிரமமொன்றையே சரணமாகவடைந்து" எனவாம். நான் எனதென்பவற்றைச் 'செருக்கு' என்பர் சிவஞானபோதாசாரியர் கo - ஞ் சூத்திர ஏதுவில். பிரார்த்தனைப்பத்தில் ஆவியென்றது உயிர்ச்சுதந்திர போதத்தையே. இப்போத விவரம் முற்படலத்து ககக - ன் உரையிலறியற்பாற்றே. அந்தச் சுத்தாவத்தையானது இதயத்துறு நின்மல சாக்கிரமெனவும், கண்டத்துறு நின்மல சொப்பனமெனவும், தாலுமூலத்துறு நின்மல சுழுத்தியெனவும், புருவமத்தியத்துறு நின்மல துரியமெனவும், பிரமரந்திரத்துறு துரியாதீதமெனவும் பகுக்கப்படுமென்றும்; இத் துரியாதீதம், உன்மனைகலைக்கு மேற்பட்டிருத்தலின் இதனைப்பெறவே நிவிர்த்தி பிரதிட்டை வித்தை சாந்தி சாந்தியதீதை

யெனும் பஞ்சகலைகளும், அகாரம் உகாரம் மகாரம் விந்து நாத மெனுஞ் சூக்கும பஞ்சாக்கரமும், சூக்குமை முதலிய நான்கு வாக்குக்களோடு பஞ்சமையென்னுமொரு வாக்கும், அன்னமயம் பிராணமயம் மனோமயம் விஞ்ஞானமயம் ஆனந்தமயமெனும் பஞ்ச கோசங்களும், ஆணவாதி பஞ்சபாசங்களும், சர்வோபாதிகளு நீங்கு மென்றுங் கூறுவார் கூறுப.

(க) ௩ - மாத்திரையுள்ள ஔகாரமென்னும் மேதைகலை— அக்கினிச் சுவாலைபோன்ற நிறமும், பிருதிவிமுதற் பிரகிருதி யீறாயுள்ள உ௪ - தத்துவமுமுடைத்து; தானம் இதயமென்றும்,—

(உ) உ - மாத்திரையுள்ள ஊகாரமென்னும் (க்ஷோவ்யா:) க்ஷமாக்யகலை— சூரிய சந்திரப் பிரகாசம்போன்ற நிறமும், பிரகிருதி முதற் கலாதத்துவ மீறாயுள்ள ௬ - தத்துவமுமுடைத்து; தானம் கண்டமென்றும்,—

(௩) க - மாத்திரையுள்ள மகாரமென்னும் விஷகலை— மின்னல் போன்ற நிறமும், மாயையென்னுமொரு தத்துவமுமுடைத்து; தானம் தாலுமூலமென்றும்,—

(௪) அரை மாத்திரை (அர்த்தமாத்ரா – அர்த்தமாத்ரா) உள்ள விந்துகலை— தீபம்போன்ற நிறமும், சுத்தவித்தை ஈசுவரமென்னும் உ - தத்துவமுமுடைத்து; தானம் புருவநடுவென்றும்,—

(ரு) கால் மாத்திரையுள்ள அர்த்தசந்திரகலை,

(௬) அரைக்கால் மாத்திரையுள்ள நிரோதினிகலை ஆகியவிரண்டும் அர்த்தசந்திரப் பிரகாசம்போன்ற நிறத்தனவாயும்,

(எ) வீச மாத்திரையுள்ள ஊர்த்துவ தண்டவடிவ நாதகலை,

(அ) அரைவீச மாத்திரையுள்ள நாதாந்தகலை ஆகியவிரண்டும் முறையே இரத்தினமும் மின்னலும்போன்ற நிறத்தனவாயும் விளங்கிக்கொண்டிருக்கும்; இந் நான்கும்— சாதாக்கியம் சத்தியென்னும் உ - தத்துவங்களை யுடையன; இந் நான்கிற்குந் தானம் (ப்ரஹ்மரந்த்ரம்) பிரமரந்திரமென்றும்,—

(௯) கால்வீச மாத்திரையுள்ள சத்திகலை— நூறு சூரியப் பிரகாச நிறமுடைத்தாயும்,

(க0) அரைக்கால்வீச மாத்திரையுள்ள வியாபினிகலை— ஆயிரஞ் சூரியப்பிரகாச நிறமுடைத்தாயும்,

(கக) அரைக்கால்வீச மாத்திரையி லரைக்கூறுள்ள சமனு கலை— கோடி சூரியப்பிரகாச நிறமுடைத்தாயும்,

(கஉ) அளவைக் கடங்கா நுண்ணிய மனோமாத்திரையுள்ள உன்மனுகலை— அளவிடக்கூடாத சூரியப்பிரகாச நிறமுடைத்தாயும் பிரகாசித்துக்கொண் டிருக்கும்; இந்நான்கிற்குந் தானம் பிரமரந்திர முதல் க, ௩, ௪, ௪ - ஆகப் பன்னிரண்டு அங்குலத்தின் மீதுள தாய துவாதசாந்தம் வரையிலு மாமென்றும்,— ௩ - மாத்திரை முதல் இதுகாறுங் காட்டியுள்ள பன்னிரண்டுமே துவாதசப் பிராசாத மந்திரகலை யெனப்படுமென்றும்,— க, உ, ௩ - ங் கலைகளினீக்கம் ஆதிசூனியமெனவும், ௪, ரு, ௬ - ங் கலைகளினீக்கம் மத்திய சூனியமெனவும், எ, அ, கூ - ங் கலைகளினீக்கம் அந்த சூனியமெனவும், இவ் வொன்பதிற்கும் மேலே யெஞ்சியுள்ள மூன்றனுள் வியாபினியினீக்கம் ஆதிசூனியமெனவும், சமனையினீக்கம் மத்தியசூனியமெனவும், உன்மனையினீக்கம் அந்த சூனியமெனவும் பகுக்கப்படுமென்றும்,— இவ் வுன்மனையைக் கடந்த கலாந்தத்திலே தத்துவாதீத பரசிவப்பொருள் விளங்கிக்கொண்டிருக்குமென்றுந் திரிலோசன சிவாசாரியரால் ஆகமசாரமாய் வடமொழியிலியற்றப்பட்ட சித்தாந்த சாராவளியின் கிரியாபாதமும், அதற்கு அனந்தசிவாசாரியராற் செய்யப்பட்ட வியாக்கியானமும் விளம்புகின்றன. ராரதபரிவ்ராஜகோபநிஷத்தின் அ - ம் உபதேசம்— (க) அகாரம், (உ) உகாரம், (௩) மகாரம், (௪) அர்த்தமாத்திரை, (ரு) நாதம், (௬) விந்து, (எ) களா, (அ) களாதீதம், (கூ) சாந்தி, (க0) சாந்தியதீதம், (கக) உன்மனி, (கஉ) மனோன்மனி, (க௩) புரீததி, (க௪) தனுமத்தியமை, (கரு) பதி, (க௬) பரையென்னும் பதினாறு மாத்திரை சொரூபத்தை (ஷொடஶ மாத்ராத்மகத்வம் - ஷொடச மாத்ராத்மகத்வம்) எடுத் தோதுகின்றது. மேலே விளக்கப்பட்ட பன்னிரண்டின் கண்ணவேயே இப் பதினாறு மடங்குமென்பதும், சிலவற்றின் பெயர்கள் வேறுபட்டுளவென்பது மிங்ஙனுணரக்கிடக்கின்றன. சூனியம்= 'விளங்கி நில்லாமை' என்பது முற்படலத்து எக - ன் உரையிலேயே தெரிக்கப்பட்டது. அங்ஙனம் "பாவையுஞ் சூனியஞ் சத்தெதிர்" எனச் சிவஞானபோதங் கூறியதும் அப்பொருட்டிலென்பதூஉ மறிவுறுக்கப்பட்டதன்றே. சூனியம் (ஶூந்யம்) – தமிழ்முடிபிலே 'பாழ்'எனப்படும்.

எனது நானெனல் வெந்து - என்னும் வினை, சித்தேறுவார் - என்னும் வினைகொண்டு முடிந்தது; (அனுமப்படலம்—) "வயிறுகள் பெருஞ்சா

லென்னப்— பூதம தென்ன வீங்கிப் புரண்டனர்" என்புழிப்போல. ஒன்றன் பாற் குறிப்புவினையா லணையும்பெயராய 'எனது' என்பதில் யான் என்ற பகுதி என் - என்று விகாரப்பட்டது; அ - சாரியை; து - விகுதி. 'நண் ணுரு' எனும் ஈறுகெட்ட பெயரெச்சத்தில் உறு - துணைவினை.] (அக)

அக்க நோக்குளர் பானனு
 வறிதி கண்படை கொண்டுளார்
பக்க னித்திரை பாரிரு
 பண்பு நந்திய நாப்பணைத்
தொக்க கத்தில் விழாதவா
 தூய விண்ணென வேநிறீஇ
எக்க ணுங்கொள வுள்ளதா
 யிலகி னுருழி யறியரோ.

விழித்துக்கொண் டிருப்பார்பால் விழிப்பை (=சகலாவத் தையை) அறிவாயாக. தூங்கிக்கிடப்பார்பால் உறக்கத்தைக் (=கேவ லாவத்தையை) காண்பாயாக. இவ்விரண்டு தன்மையும் ஒழிந்துள்ள நடுத் தன்மையை (=சுத்தாவத்தையை) நிலத்தில் விழாதவாறு உடம்பைச் சுத்த ஆகாயம்போல நிறுத்தி, எவ்விடத்தையுங் கவளீ கரிக்கவுள்ள பரமான்ம மயமாய்ப் பிரகாசிப்பார்பால் அறிவாயாக.

[மேலைச் செய்யுளில் விழிப்பு, உறக்கம், நடுநிகழ் நிட்டை யெனக் கூறப்பட்ட மூன்றனையும் இங்கே காட்சியளவையினுங் காட் டியவாறு. நடுநிகழ் நிட்டையெனுஞ் சுத்தாவத்தையானது மேலைச் செய்யு ளுரையில் விளக்கியவாறு இதயத்தானத் திருந்தவாறே மேனோக்கிச்சென்று பிறங்கிடுவதாகலின், அதனைச் செய்வோரது உடம்பு சிவலிங்காகாரமென நிமிர்ந்தபடியே நிற்குமென்னும் ஏற் புடைத் தீர்வைகொண்டு "தொக்ககத்தில் விழாதவா தூயவிண் ணெனவே நிறீஇ" என்று கூறினர்.

"விக்கிரகம் பிண்டம் மேனி தொக்கு" எனப் பிங்கலநிகண்டு கூறுமாற்றானே தொக்கு= 'உடம்பு' என்க. அகம்=பூமி; ககரவேதுகை காண்க. 'விழாதவா' என்பதில் ஆ - ஆறு என்பதன்விகாரம். நிறீஇ= நிறு த்தி; சொல்லிசைநிறைக்கும் அளபெடை.] (கூ0)

பந்த மாகிய தசையிலே
 பரத்தை யேமறந் துகத்திலே

சொந்த மாக்கொடு நிற்றல்போற்
சுத்த மாமுயிர் வீட்டினும்
நிந்தை சாலுக நினைவுதா
னீங்கி மேலருள் வசத்திலே
சந்த தம்வதிந் தீட்டலே
சச்சி தானந்த வாழ்க்கையே.

(ஒருவன்) பந்தமாகிய தசையிலே பரம்பொருளை மறந்து (இம்) மண்ணுலக காரியங்களைச் சொந்தமாகக்கொண்டு நிற்றல்போலப் பரிசுத்த சீவன்முத்தி தசையிலும் (பெரியோர்களாற் பழிக்கப்படும்) முழுப்பழிப்போடுள்ள உலக நினைவு நீங்கிச் சந்ததமும் மேலான திருவருள் வசப்பட்டிருந்து சிவசம்பத்தைத் தேடிக்கொள்வதே சச்சிதானந்த வாழ்க்கையாகும்.

[முடிந்தது முடித்தலென்னும் உத்தியாற் பெத்த நிலையைத் தானே முத்திநிலைக்கு முவமானமாக்கி மேலும் முடிவுகூறி நின்றது இச்செய்யுள்.

உலகத்தில் - என்னும் ஏழனுருபு இரண்டனுருபாய் மயங்கிற்று. உகம் - உலகம் என்பதன் மரூஉ ; "உகம்பார் தரணி யுலோகந் தாரணி" எனப் பிங்கலநிகண்டுங் கூறிற்று. இவ்வுகத்தில் எனச் சுட்டுவருவிக்க. சொந்தமாக் கொடு - சொந்தமாகக்கொண்டு என்பதன் விகாரம். ஸ்வதந்த்ரம் சொந்த மெனப்பட்டது. சந்ததம் மேலருள் வசத்திலே என மாறுக.] (கூக)

பார்த்த யாவையு மேபரா பரமெ னும்படி தோன்றிடும்
பார்த்த தன்னிச மதுவலாற் பரமெ னச்சொல வாயிலை
பார்த்து நீயது சேரெனப் பரம சற்குரு சொலமகன்
பார்த்து றற்கிய லாமனோர் பண்ண லும்பக ரென்றனன்.

மேற் கூறிய அனுபவத்திற் பார்க்கப்பட்ட யாவையும் மேவிட்டு நிற்கும் பராபரமென்று கூறும்படி தோன்றும். அங்ஙனம் பார்த்த தன்னுண்மையும் அத்வைதமாய் அதன்மயமாய்க் காணப்படு மேயல்லால் அன்னியமென்று சொல்ல வழியில்லை. நீ அதனைத் தரிசித்துப் பரமானுபூதியை யடைவாயாகவென்று பரம சற்குருவான வர் கூற ; சீடனானவன், (அப்படித்) தரிசித்துப் பரமானுபூதி யடைதற்கு இயலாவுலகினர் செய்யத்தக்க வுபாயத்தையுஞ் சொல்லியருள வேண்டு மென்றனன்.

[உரைத்துள்ள அனுபூதி நிலைபையுறுஞ் சீடனுக்குப் பராபர தரிசனம் யாண்டு மொருபடித்தாய்ப் பிறங்குமென் றாசிரிய ரறிவுறுத்தியதைக் காட்டிற்று இச்செய்யுள். இவ் வறிவுறுத்தல்— தேஜோபிந்தூபநிஷதம் (ஈவஂெவெகாரஸஂஜூஶ்ய ஊவஂெவெகாரஸஂஜ மசு ।) "அகண்டைகரஸம்த்ருச்ய மகண்டைகரஸம் ஜகத் !" என்று கூறுதலின் மதுகையுறும். முக்திகோபநிஷத்தில்—

(ஊர்த்வபூர்ணமத: பூர்ணம் மத்யபூர்ணம்ஶிவாத்மகம் ।
ஸாக்ஷாத்விதிமுகோஹ்யேஷ ஸமாதி:பாரமார்த்திக: ॥)

"ஊர்த்வபூர்ணமத: பூர்ணம் மத்யபூர்ணம்சிவாத்மகம் ।
ஸாக்ஷாத்விதிமுகோஹ்யேஷ ஸமாதி:பாரமார்த்திக: ॥"

எனவருவசனமும் இங்கே கருதத்தக்கதே; என்னை? "மேலும் பூரணமாய்க் கீழும் பூரணமாய் நடுவும் பூரணமா யுள்ளது சிவான்மகம் : பாரமார்த்திகமாகிய இச் சமாதி சாக்ஷாது விதிமுகமாயுள்ளது" எனும்பொருளை அது பயத்தலின். சாந்தோக்யோபநிஷத்தின் எ - ம் பிரபாடகத்தில்—

(யத்ர நாந்யத்பஶ்யதி நாந்யச்ச்ருணோதி
நாந்யத்விஜாநாதி ஸ பூமா)

"யத்ரநாந்யபச்யதிநாந்யச்ச்ருணோதி
நாந்யத்விஜாநாதிஸபூமா"

என வருவசனமும் போந்த பொருளை யாதரிப்பதா யுளது. அருத்தம் :— "எங்கே வேறொன்றுங் காணாதவனாய் வேறொன்றுங் கேளாதவனாய் வேறொன்று மறியாதவனாய் ஆகின்றனனோ அது பூமா வெனப்படும்" என்றவாறு. பூமா = அதி யுத்தமமானது. (பூமைவ ஸுகம் _ பூமைவ ஸுகம்=) "பூமாவே ஆனந்தம்" என இந்த உபநிஷத்தே ஓதிபதுண்மையால் அது பரமானந்த சிவமென வறியப்படுகின்றது. அற்றாகலினன்றே சுந்தரமூர்த்திசுவாமிகளது தமிழ்மறையும் திருவாரூர்ப்பதிகத்தில் "இறைகளோ டிசைந்த வின்ப மின்பத்தோ டிசைந்த வாழ்வு" என்று கூறுவதாயிற்று. சிவஜ்ஞானபோதத்தில்—

(ஶிவேநைக்யம் கதஸ்ஸித்த ஸ்ததத்யீநஸ்வவ்ருத்திக: ।
மலமாயாத்யஸம்ஸ்ப்ருஷ்டோ பவதி ஸ்வாநுபூதிமாந் ॥)

" சிவேனைக்யம்கதஸ்ஸித்தஸ் தததீநஸ்ஸவ்ருத்திக: ।
மலமாயாத்யஸம்ஸ்ப்ருஷ்டோ பவதிஸ்வாநுபூதிமாந் ॥ "

எனவரு ஸூத்ரமும் அப்பொருட்டாம். பொருள்:—"சிவனை நீங்காது நின்ற ஆன்மா அச் சிவனது உரிமையிற் றனது விருத்தியுடையனும், மலம் மாயை முதலியவற்றாற் றீண்டப்படாப் பெற்றியனுமாகிச் சுவானுபூதிமானாவன்" எனவாம். சிவஞானசித்தியார் கக - ஞ் சூத்திரத்தில்—"பரஞானத்தாற் பரத்தைத் தரிசித்தோர் பரமே பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார்" எனவும், கந்தரனுபூதியில்—

" ஆனா வமுதே யயில்வே லரசே
ஞானா கரனே நவிலத் தகுமோ
யானா கியவென் னைவிழுங் கிவெறுந்
தானாய் நிலைநின் றதுதற் பரமே. "

எனவும் வருவனவற்றையும் ஈண்டுக் கருதிக் கொள்வதோடு முற்படலத்துக் கூஎ - ன் உரையையும் நோக்குக. தடத்தலக்கண இறைவனது ஆன்ற வனுக்கிரகத்தினாற் சொரூபலக்கண சிவானந்தப் பெருங்கடலிற் படிந்து அம்மயமாகவே கிடக்கத்தக்க இவ்வனுபவம் விதேக முத்திக்கு அணித்தாகு காலத்ததாமென்பதும் முட்டின்றி முடித்தலென்னும் உத்தியாற் கொள்க.

நீ யது பார்த்துச் சேர் என வியையும்.] (கூஉ)

## கூ. உபாயநிட்டை விவரம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்; சந்தம்வேறு.

முற்றுணர்வை நாடுமத லாய்வலிய
கட்டுமல மூல வுடலைப்
பற்றியுள தன்னையு முகத்தினையும்
வேறெனுமொர் பண்பி னொருவி
நற்றலைமை யுள்ளவது வென்றுணர்
விசாரமங னண்ணு றின்மனம்
அற்றநிலை கூடுமத னாலரிய
நிட்டையுறு மற்ற மிலையே.

பதி ஞானத்தை நாடும் மகனே! வலிய பந்தபாசமெனுங் காரண சரீரத்தைப் பற்றிக்கொண்டிருக்குந் தன்னையும் (தனக்கன்னியமாகிய) உலகத்தையும் வேறு வேறென்று சொல்லுமொரு தன்

மையினீங்கி, இவையனைத்தும் நல்ல நாயகத்தன்மை பொருந்திய அந்தப் பரம்பொருளை என்றுணரும் பதித்தலைமைவிசாரம் வரின் மனோலயநிலையெய்தும். அதனாற் கிடைத்தற்கரிய பதிநிட்டை கூடும். குறைவொன்று மின்று.

[இச் செய்யுட்பொருளை— (𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌾𑌨𑍁𑌸𑌂𑌧𑌾𑌨𑌂 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍 𑌸𑌰𑍍𑌵𑌮𑌨𑍍𑌯𑌦𑍁𑌪𑍇𑌕𑍍𑌷𑍍𑌯 𑌸𑍍𑌵𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑍇𑌵 𑌮𑍁𑌕𑍍𑌤𑍋 𑌭𑌵𑌤𑌿) "ஸ்வரூபாநுஸந்தாநம்குர்வந் ஸர்வமநந்யபுத்யாஸ்வஸ்மிந்நேவமுக்தோபவதி" என்னுஞ்சுருதி ஆதரிப்பதாயுளது. நாரதபரிவ்ராஜகோபநிஷத்தின் கூ - ம் உபதேசத்திலுள்ள விதன்றமிழ்:— "யாவற்றையும் அன்னியமென்ப தொழித்துச் சொரூபானுசந்தானஞ் செய்து கொண்டு தன்கண்ணே யே முத்தியடைகின்றனன்" எனவாம்.

சிவத்தோடு உடங்கியைந்துநிற்கும் ஆன்மா இவ்வாறு கொண்டு நின்றக்கால், அவ் வுடங்கியைந்து நிற்குநிலையை யெய்துமாகலின், இத்திறச் சுருதிபலவும் இத்திற வுபாயமுணர்த்துவா னெழுந்தன வாம் (ஏகான்மவாத முணர்த்துவா னெழுந்தன வல்ல) என்பது மிங்கு ணுணர்ந்து கொள்க.

மதலாய் - மகனே யென்னும் விளி. மூலவுடல் = காரணசரீரம். உகம் = உலகம்.] (கூரு)

தன்செயல்வி டுத்தொரு சிவன்செயலி
  னிற்பினுமெய் சாரு மதுதான்
புன்செயல்வி டாதநசை யிற்பகிர்மு
  கத்திலலை புந்தி யைமறித்
தின்சிவமு ணெஞ்சுழை யிருப்பதென
  வந்தர்முக மெண்ணெய் நடைபோல்
வன்செயல்பி றங்கநிலை நிற்பினு
  மனோலயசன் மார்க்க முறுமே.

தன்செயலாய சித்த விருத்திகளைத் தன்னுடையவாகக் கொள்ளுதலைவிட்டு ஒப்பற்ற சிவன்செயலில் நிற்கினும் அந்நிலை— உண்மை நிட்டையைச்சாரும். இலௌகிக காரியங்களை விடாத ஆசையினால் வெளிமுகத்தி லலைகின்ற மனத்தை அந்தர்முக மாமாறு திருப்பிக் கொண்டு, பரமானந்த சிவமானது இருதயகுகையி லிருப்பதென்று அந்தர்முக நாட்டத்தே தைலதாரைபோல உறுதியான வுபாசனை மிக்குற நிலைத்திருப்பினும் மனோலயமாகிய ஞானமார்க்கங் கைகூடும்.

[இருதயகுகை 'நெஞ்சு' எனப்பட்டது. அதிலிருக்கும் பரம் பொருளைப் பாவனையா லுபாசிக்கவென்பதே யிங்கறிவுறுத்தப்பட்ட விடயம். அப்பொருள் சோதிமயமாய்ச் சிவலிங்காகார ஆன்மலிங்கத் தின்கட் பிரகாசிப்பதாகலின் அவ் வாகாரமாகவே பாவித்தல் யதார்த்தபாவனையாம். ஆன்மா சிவலிங்கமென்பதற்குரிய சுருதியாதி பிரமாணங்கள் இப்படலத்து உஎ - ன் உரையுழைக் காட்டப்பட்டன; கடைப்பிடிக்க. அகூ - ஞ் செய்யுளுரைகளையுங் கருதுக. மனோலயங் கைவருமாறு ஆகாயம்போல வடிவிலதாய்ப் பாவித்திடுகவென்றும், சூரியன் சந்திரன் முதலியவற்றைப்போலப் பாவித்திடுகவென்றும், இரு செவிகளையும் விரல்களைக்கொண் டடைத்தனூன்று உட்புலத் துண்டாந் தொனியைக் கருதுகவென்றும் நூல்கணுவற லுண்டு. அவையெல்லாம் மேமேல சொல்லியுள்ள யதார்த்த பாவனையின் பலனைப் பயக்கமாட்டா. என்னை? அச் சரதமனோலயத்தில் ஆணவ மலநீக்கம் பெறீஇ ஞானசாயுச்சியமெய்த யாதானுமொரு தடையெய் தினுஞ் சிவலிங்காகார ரூபாரூபகதியெய்துதல் கூடுமாகலின். அங் ஙனங் கர சரணாதி அவயவம் பிரகாசிக்கச் சிவனைப்பாவித்திடலும் உருவகதியை நல்காதொழிவதின்று. சாயுச்சியத்தினிழிந்த சாரூபம் ஆகாயம் முதலியன போல்வதன்றாகலின் அவ்வித பாவனைகண் மேம்பாடுடையன வல்ல. இருதயங் குகை, அக் குகை வெளியிலிருக் கும் பரம்பொருள் குகன் என்றற்குரிய பிரபலப்பிரமாணங்கள் பாயிரத்து ரு - ன் உரையிற் காட்டப்பட்டன; காண்க. இவ் வுபா சனை சமாதிகூடுங்காறும் வன்மையோ டிடைவிடாது செய்யத்தக்க தென்பார் "எண்ணெய் நடைபோல் வன்செயல்பிறங்க நிலைநிற்பி னும்" என்றார். இவ்வாறு செய்யவேண்டுமென்பதும், செய்யாக் கால் அச்சத்திற் கிடனாமென்பதும்—

(தத்வேவபயம்விதுஷோமந்வாநஸ்ய ।)

"தத்த்வேவபயம்விதுஷோமங்வாநஸ்ய ।"

என்னுந் தைத்திரீயோபநிஷத ஆனந்தவல்லிவாக்கியத் தறியப் படுகின்றன. தமிழ்:— "அறிந்து தியானத்தை விட்டவனுக்கு அந்தத்தியானம் விட்டதே அச்சமாம்" என்றபடி. "அனைத்தும் வேடமா மம்பலக் கூத்தனைத் — தினைத்த னைப்பொழு தும்மறந் துய்வனோ" என்று திருநாவுக்கரசுகளது தமிழ்மறை சாற்றுதலும் அது. அற்போபாசகர்கதி இனைத் தென்பதும் இங்ஙன் வெளிப் பட்டது. இவ்வுபாசனை தகரவித்தையிலே தகரோபாசனையெனவும்

படும். இஃது இந்நூலாசிரியரது தகராலயரகசியத்தில் விளக்கப்பட்டமை மாணப்பெரிதே. இவ் வித்தையை இந்நூலாசிரியர் பிரப்பையெனுங் கேத்திரத் தொருசாராகிய காட்டின்கண் அகழப்பட்ட குழிக்கட் பங்குனி மாதத்திலுற்ற ஒரு சனிவாரந்தொடங்கி நடு - நாள் தனிநிட்டை சாதித்திருந்த ஞான்று, கௌபீனதாரியாய் வெளிப்பட்ட இறைவன் அவர்க்கு ஒரு சொல்லா லுணர்த்தியருளினனென்பதை—

"தொட்டதே பற்றுக நிற்குமன மாய்த்தருட்
டுவெளியை யெவ்விதத்துஞ்
சொந்தப் படுத்தவென வீரமுற் றேயொரு
சுரத்தே தனித்திருந்து
நிட்டைசா தித்தகால்" எனவும்,

"உயரிய வானிழற் கீழா னுரைத்தது மோதெனக் கிறைசொனதும்
பயிலவொண் ணுதவித் தகரவித் தையின்முடி பாமது தகரமெனும்
அயிர்மலி புண்டரி கவுறையு ளோங்குவித் தையெனுமொ ரறிவுவெளி"

எனவும் வரு திருப்பாக் கிளவிகளினும்;

"உள்ளபடி யுன்னுபவ ருள்ளபடி யுய்யவென வுன்னு பெரிய
வள்ளன்முரு கையர்நடு நிற்குநிலை யைச்சொலி மறைந்த விடமும்
வெள்ளைகிளர் புட்டியி லெழுப்புகடல் வெள்ளலைகள் வீசு வளமு
முள்ளவொர் பிரப்பன்வல சைப்பதி யிதேயுலகை யுந்து மனதே."

எனவரு திருவலங்கற்றிரட்டின் க - ங் கண்டத்துச் செய்யுளினு மறிந்துகொள்க.

மோக்க முயற்சிக்கு இலௌகிக காரியம் இழிதொழிலாகலின் அது "புன்செயல்" எனப்பட்டது. 'புன்செயலை' 'தன்செயலை' என இரண்டனுருபுகள் விரித்துரைக்க. அது மெய்சாரும் என மாறுக.] (கூச)

ஈதனைய போதநுவ னூல்களுயர்
கேள்வியினு மென்று மனதைக்
கோதுகெட வைத்தொரு குகேசனுடை
நாமமது கொண்டு ளிடமே
போதொடுசெ பிக்கினுமொ ரைந்தனையு
மோதினும்வெல் போத மொருகாற்
சாதலுறு மேனமறு மாசறுசன்
மார்க்கநிலை தான மையுமே.

இதையொத்த சுபோதத்தைக் கூறு நூல்களிலும் பெரியரிடத்துக் கேட்குங்கேள்வியிலும் எக்காலமும் மனதை ஏதமறும்படி வைத்து ஒப்பற்ற குகேசனுடைய நாம மந்திரத்தை ஆசாரியனிடத்திற்பெற்று விதித்த காலங்களில் உள்ளுக்குள்ளே செபித்து வரினும், (வேத மந்திரங்களுள்) சமானரகித சிவ பஞ்சாக்ஷரியை அவ்வண்ணஞ் செபிக்கினுஞ் சுதந்திர ஈனத்தை நானென்னுந் தற்சுதந்திரத்தால் வெற்றிகொண்டிருந்த சிவபோதமானது பக்குவ விசேடத்திற்கேற்ப ஒருகாலத்தே சிவியாதொடுங்கும். பாவமறும். குற்றமற்ற ஞானமார்க்கநிலை கூடும்.

[பதி, பசு, பாசமாகப் பகுக்கப்படுங் குகேசனுடைய நாம மந்திரஞ் சடக்கரமெனும் ஆறெழுத்தாகவும், சடக்கர நவாக்கரமெனும் ஒன்பதெழுத்தாகவும், சடக்கர தசாக்கரமெனும் பத்தெழுத்தாகவுமுளதென்பது—

"சகரமுத லாறு மாசில் பதியகர மாவ தாவி
சரதநம பாச மாமெலா
நிகழுமொழி மேனி லாவு பொருள்சரவ ணேச ஞன
நிருமல * ன மாவெ ணுகுமே
பகரிவையொ டோமு மேறி னெடியதச மாம்வி சேட
பலனுறவ வாவு மூழுளோர்
புகழுமெதை யேனும் வீர வுறுதியொடு கோடி யேசெய்
புனிதமுறின் வீடு மாள்வரே."

என்னுந் திருவலங்கற்றிரட்டின் உ - ங் கண்டத்துச் செய்யுளினறியக்கிடக்கின்றது. திருப்பரங்கிரிபுராணம் அ - ஞ் சருக்கத்தில் "நவ்வாதிய சவ்வாதி நலஞ்சேரெழுத்தோதி —யெவ்வாறருள் பெற்றார்" என்றியம்புகின்றது. முத்திவிருப்புள்ளோர் இம் முக்கூற்றுச் சடக்கரங்களி லெதனையேனுஞ் செபிக்கத் தக்கவ ராவர். சகரத்தை முன்னே கொண்டுள்ள சடக்கர மனுக்கட்கு முன்னர் ஓங்காரம் முதலிய ஆறக்கரங்களையுங் கூட்டிச் செபிக்கின் அடியில் விளம்பப்படு பலன்களுஞ் சித்திக்கும். அவை.— (ஓ°) ஓம் - பரமாத்மரூபம், (வ°) ஐம் - வாக்கு, (க்லீ°) க்லீம் - ஜகன்மோஹநம், (ஸௌঃ) ஸௌঃ - காயபலம், (ஸ்ரீ°) ஸ்ரீம் - தநம், (ஹ்ரீ°) ஹ்ரீம் - பூமி எனவரும். முற்படலத்து கக0 - ன் உரையில் விளக்கப்பட்டதாயுள்ள ஐந்தெழுத்தெனும் பஞ்சாக்கரம்— 'அதர்வணத்தை யடக்கிக்கொ

* நமঃ 'என்பது நமா' எனச் சந்தநோக்கி விகாரப்பட்டது.

ண்ட இருக்காதி மூன்றுமே புராதனவேதம்' என்று மநுஸ்ம்ருதியின் க-ம் அத்தியாயங் கூறுமாறு அவையற்றின் நாப்பணுள்ள யஜுர் வேதத்து ஏழு காண்டங்களில் ச-ங் காண்டத்தின் நடுவாய ஸ்ரீருத்ரத்தின் மத்தியிலுற்ற (நமஸ்ஸோமாயச) "நமஸ்ஸோமாயச" என்றற்றொடக்கத்து அநுவாகத்தினிடையே (நமச்சிவாயச) "நமச்சிவாயச" எனவரு வாக்கியத்திலுள்ளதாகலின் இதனை, வேத இருதயமென்ப. "வேத நான்கினு மெய்ப்பொரு ளாவது — நாத னாம நமச்சி வாயவே" என்று ஞானசம்பந்தப் பெருமானது தமிழ்மறையு நவின்றது. இந் 'நமச்சிவாய' என்பதைத் தூலபஞ்சாக்கர மெனவும், 'சிவாயநமஃ' என்பதைச் சூக்குமபஞ்சாக்கர மெனவும், 'சிவயவசி' என்பதைக் காரணபஞ்சாக்கர மெனவும், 'சிவ' என்பதை மகாகாரணபஞ்சாக்கர மெனவும், 'சி' என்பதை மகாமனு வெனவுங் கூறுப. அங்ஙனஞ் சூக்குமபஞ்சாக்கரமென்பதை ஒருதலை மாணிக்கமென்றும், காரண பஞ்சாக்கரமென்பதை இருதலை மாணிக்கமென்றும் வழங்குப. உண்மைவிளக்கம்—

"சிவனரு ளாவி திரோதைமல மைந்தும்
அவனெழுத் தஞ்சி னடைவாம்—இவனின்று
நம்முதலா வோதிலரு ணடாது நாடமருள்
சிம்முதலா வோதுநீ சென்று."

என்று கூறுமாறு 'நமச்சிவாய' என்பதை யுச்சரிக்கிற் றிருவருள் பொருந்தாதென லறியப்படுதலின் அஃதருணிலை யவாவுநர் கோடற்பாலதன்றெனின்,— நன்று கூறினாய்; கேட்டி. இப்படிக் கூறுங்கூற்று வடமொழிமறைக்கு விரோத மாதலோடு—

"செல்லல் கெடச்சிவ முத்தி காட்டுவ......
அல்லல் கெடுப்பன வஞ்செ ழுத்துமே" எனவும்,

"அடுக்கற்கீழ்க் கிடக்கினு மருளி னாமுற்ற
நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சி வாயவே" எனவும்,

"பெற்றலும்பிறந்தேனினிப்பிறவாததன்மைவந்தெய்தினேன்.......
நற்றவாவுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே"

எனவும்மியம்புந் தென்மொழிமறைக்கும், அன்ன பிறவாற்றானேது வேறு திருமுறைமாற்றங்கட்கும் விரோதமாம். ஆவதேல், மேலைய உண்மைவிளக்க மாற்றங்களின் கருத்தென்னையெனின்,— 'சிவாயநமஃ' என்பதிற் சிவ=பதி, ய=பசு, நம=பாசம் எனக்

கொள்ளுங் கிரமார்த்தத்தைக் கேட்டு அவ்வழி நிற்போர் 'நம' எனும் பாசத்தை முன்னுறக்கொண்டு உச்சரிக்கிற் பதியருள் இழி நிலையுறு மாகலின் அருள் பொருந்தாதென்பதே அவற்றின் கருத்தா மென்க. இக் கிரமார்த்தத்திலேயே பஞ்சாக்கரி தூலமெனவும், சூக்குமமெனவுஞ் சொல்லப்பட்டது. இவ்வா றின்றி நமஃ= நமற்காரம், சிவாய= சிவன்பொருட்டு= சிவனுக்கு எனும்பொருளைக் கேட்டு அவ்வழி நிற்போர் 'நமச்சிவாய' என்றுச்சரித்துத் திருவருளை யெய்துவ ரென்பதை யறிவுறுத்துவனவாயின அம் மறைகளென்க. நமஃ, ஸ்வாஹா, (ஸ்வயா) ஸ்வதா, வௌஷட், வஷட், (ஹுட்) பட், ஹூம் எனுஞ் சத்தகோடிமந்திரங்களில் நமஃ என்பதுமொன்று. பஞ்சப்ரஹ்மோபநிஷதம்— (பஞ்சாக்ஷரமயம்சம்பும் பரம்ப்ரஹ்மஸ்வரூபிணம்। நகாராதியகாராந்தம் ஜ்ஞாத்வா பஞ்சாக்ஷரம் ஜபேத்॥ =) "சம்பு பஞ்சாக்கரமய பரப்பிரமரூபி: நகாரமுதல் யகார மீறுயுள்ள மந்திரமே (அந்தப்) பஞ்சாக்கரமெனத் தெரிந்துகொண்டு செபித்தல்வேண்டும்" என் றறிவுறுத்தலையும் இம்பர்த் தெளிந்து கொள்க. சைவமஹாபுராண வித்யேச்வர ஸம்ஹிதையின் ௬-ம் அத்தியாயம்— "பஞ்சாக்கரசெபத்தில் 'நமஃ' முன்னேயுறச் செபிப்பது பிராமணர்க்கும், அது பின்னேயுறச் செபிப்பது மற்றை வருணத்தார்க்குமாம்" என்றிசைக்கின்றது. பிராமணர்= பிரமத்தைத் தியானிப்போரென்பதை வராஹம், ஈசாவாஸ்யமெனும் உபநிஷத்துக்களின் ௪-ம் அத்தியாயத்தும் ௭-ம் மந்திரத்தும் (அத்ர கோ மோஹ: க: ஶோக ஏகத்வமநுபஶ்யத:।) "அத்ரகோமோஹஃ கச் சோக ஏகத்வமநுபச்யதஃ।" என வருவசனம் "இங்கே ஏகத்துவ மாயிருப்பதைப் பார்ப்போற்கு மோகம் ஏது சோகம் ஏது" எனு மொண்பொருளையும், முண்டகோபநிஷத்தின் ௩-ம் முண்டகத்தில் (ஸ யோ ஹ வை தத்பரமம் ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி।) "ஸயோஹவைதத்பரமம்ப்ரஹ்மவேத ப்ரஹ்மைவபவதி।" என வருவசனம் "எவன் பிரமத்தை யறிகின்றனனோ அவன் பிரமமே ஆகின்றனன்" எனு நன்பொருளையும் பயத்தலி னறிக. மேலைத் தென்மொழிமறையில் 'நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சிவாயவே' என்றருளிச்செய்த ஆசிரியர் வேளாள மரபினரே; உய்த்துணர்க. இக் கிரமத்திற் குகேசநாம மந்திரம் 'நமச்சரவணபவாய' எனவாம். தைத்திரீயாருணசாகை நாராயணம் (ஸர்வலிங்காய நம:। ஶிவாய நம:॥) "சர்வலிங்காயநமஃ। சிவாயநமஃ॥" என்று கூறி

ணமையின் 'நமஃ' பின்னேயுறச் செபிக்கும் பஞ்சாக்கரம் சைவாகமநிலைத்தே என்பார் கூற்றும் வாளா போயிற்றென்க.

"திருவாய்ப் பொலியச் சிவாய நமவென்று நீறணிந்தேன்
தருவாய் சிவகதி நீபாதி ரிப்புலி யூரரனே" எனவும்,

"நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநம வெனப்பெற்றேன்"

எனவுந் தமிழ்மறையுங் கூறிற்று. பஸ்மஜாபாலோபநிஷத்தில் "வேதாவதக்ஸம்சைவம் பஞ்சாக்ஷரம் ஜபந்தஸ்தாரகக் ஸப்ரணவம் மோதமாநாஸ்திஷ்டந்தி" என வருவாக்கியங்கள் "வேதோக்தமான சைவபஞ்சாக்கரத்தைத் தாரகமாகப் பிரணவத்தோடு செபித்துக்கொண்டு சந்தோடமாக வசிக்கின்றனர்" எனும்பொருள் பயக்கின்றமையின் ஐந்தெழுத்தோடு ஒரெழுத்தெனும் ஓங்காரங்கூட்டிச் செபித்தலுங் கூடுமென்ப தேற்படுகின்றது. அங்ஙனமாயின் இது, பஞ்சாக்கர சடக்கரமாம். ஓங்காரத்தில் அ, உ, ம, பிந்து, நாதமெனும் ஐந்து முள. இவை, ஓங்காரபஞ்சாக்கர மெனப்படும். இவை முறையே மூலாதாரம், நாபி, இருதயம், கண்டம், புருவமத்தியெனுமிடங்களிற் சுழுமுனை வழியாக நிற்குமென்றும் மொழிப. திருக்களிற்றுப்படியாரில் "அஞ்செழுத்து மேயம்மை யப்பர்தமைக் காட்டுதலால்" என் றருளிச்செய்ததில் வரூஉம் அஞ்செழுத்து இவ்வோங்கார பஞ்சாக்கரமாம். நாதத்தின் மீது பரம் (=மேலானது) என்பதையுங் கூட்டியுரைப்பது பிரணவமெனும் வாசகத்துக்கு வாச்சியனாகிய குமாரப்பெருமானது ஓங்கார சடக்கரமாம். பரம் சென்னியிலிருக்கும். ஓங்காரம் பலதிறப் பாகுபாடுடைத்தென்பதை நாரத பரிவ்ராஜகம் முதலிய உபநிஷத்துக்களிற் காண்க. இவ்வோங்கார ஜபமே சன்னியாசிகளும், யோகிகளுஞ் செய்யத்தக்கதென்று அனேகோபநிடதங்கள் கூறுகின்றன.

(𑌓𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌕𑌾𑌕𑍍𑌷𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 𑌶𑌿𑌵𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 ।)

"ஓமித்யேகாக்ஷரம்ப்ரஹ்ம வதந்திசிவயோகிநஃ।"

என்று வாதுளோத்தர சுத்தாக்ய ப்ரணவபேத படலமுங் கூறிற்று.

"திஸ்ரோமாத்ராம்ருத்யுமத்யஃ ப்ரயுக்தா
அந்யோந்யஸக்தா அநவிப்ரயுக்தாஃ।
க்ரியாஸுபாஹ்யாந்தரமத்யமாஸு
ஸம்யக்ப்ரயுக்தாஸுநகம்பதேஜ்ஞஃ॥"

என்னும் பிரச்நோபநிஷத்தின் ரு - ம் பிரச்நவசனம் "ஒன்றோடொன்று சேர்ந்துநிற்கவும் பெரிதும் பிரிந்துநிற்கவும் (இப்பிரணவத்தின் அ, உ, ம எனும்) மூன்று மாத்திரைகளும் மாறுறப் பிரயோகிக்கப்படுமாயிற் கேட்டைத்தரும்: வெளியிலும் உள்ளிலும் நடுவிலுஞ் செயப்படு கிரியைகளில் மூன்று மாத்திரையும் ஒருசேர (ஓமென)ப் பிரயோகிக்கப்படுமாயின் உபாசிப்போன் சலனமடையான்" எனும் பொருள் பயக்கின்றது. மூன்றனையுந் தனித்தனி பிரித்துச்செபித்தல் கேட்டைத் தருவதின்று, உயர்பலன்றராதென்பதூஉம் இங்ஙனுணரக்கிடக்கின்றதால். "ஔம்" என்பது சூத்திரப் பிரணவமென்பதும், "அம்" என்பது பெண்களின் பிரணவமென்பதுஞ் சிலரெழுதிய வடநூல்களிற் காணப்படுகின்றன.

தர்சனோபநிஷதம் (ஜவஸ்துவிவிய꞉வொ꞉ாகொ வாவகொசோநவஸ்யா। "ஜபஸ்துத்விவித꞉ ப்ரோக்தோ வாசகோமாநஸஸ்ததா।" என்று உ - ங் கண்டத்திற் கூறிச் செல்லுமிடத்தே உபாஞ்சு, உச்சையென்பன வாகவுள்ள வாசகசெபபலத்தினும் மனனம், தியானமென்பன வாகவுள்ள மானசசெபபலம் பெரிதும் அதிகமென்பது காணப்படுதலின் அது கருதியும், மானசசெபம் ஆண் பெண்ணெனப்படு மிருபாலாரும் நோய் ஆசூசம் பூப்பு என்பன வுற்றகாலங்களிலும் பல்லிலாக் காலத்திலும் மற்றெக்காலங்களிலுஞ் செபிக்கத் தக்கதொன்றாகலின் அது கருதியும் போந்த சடக்கர பஞ்சாக்கரங்களை உள்ளிடத்தே செபிக்குமா றறிவுறுத்தார். வாயாற்செபியாமே மனத்தாற் செபிப்பதே உள்ளிடத்தே செபித்தல். செபிப்போன் சித்தம் அதன்மாட்டழுந்தவேண்டும். சகவிருப்புளோர் சந்திரகலை நிகழ்போதும், பரவிருப்புளோர் சூரியகலை நிகழ்போதும், சித்தி முத்தி விருப்புளோர் அக்கினிகலை நிகழ்போதும் மந்திரஞ் செபிக்கத்தக்கவராவரெனு நியதியிருத்தலின் எக்காலத்துஞ் செபித்தலோடு இக்காலங்களோர்ந்து முத்திவிருப்பிற்கேற்ப நின்று செபித்தல் விசேடமென்பதையு முணர்த்துவான் அங்ஙனம் "போதொடு செபிக்கினும்" என்றார். இச்செய்யுள் உய்த்துணரவைப்பென்னும் உத்தியின் யாக்கப்பட்டதா யுளது.

'போதொடு உள்ளிடமே செபிக்கினும்' எனவியையும். ஏனம் = பாவம்; மநஸ் - மனமென வாயவாறு ஏநஸ் - ஏனமெனவாயிற்று; ஏந꞉ - என்பது தான் வடசொன் முதல்வேற்றுமை யென்ப.] (கரு)

காமியமி லாதுகுரு தேவடிய
 ரென்னுமெழில் காணு முருவைச்
சாமியெனு நிட்கள பராபர
 மெனப்படர்பு சந்த தமுநல்
நேமமொடு பூசனை புரிந்திடி
 னடங்குமன நேர்மை குறுகும்
நாமிதை யுணர்ந்தபடி சொல்லின
 மெனப்பதி நவின்ற னனரோ.

காமியார்த்தமா யில்லாமல் குரு, தெய்வம், சிவனடியரென்னும் அழகுவாய்ந்த வுருவங்களைச் சுவாமியென் றுரைக்கப்படு நிட்கள பராபரமென நினைத்து எக்காலமு நல்ல நியமத்தோடு பூசித்துவரின் மனம் ஒடுங்குநிலையை யெய்தும். நாம் இம் மார்க்கத்தை அருணெறியின் றறிந்தபடியே யுனக்குபதேசித்தனமென்று ஆசிரியர் கூறியருளினர்.

[ கு - எனும் அந்தகாரத்தை நிரோதித்தருள்வோன் குரு: குருவே பரப்பிரமம் என்பது—

(𑌗𑍁𑌶𑌬𑍍𑌦𑌸𑍍𑌤𑍍𑌵𑌨𑍍𑌧𑌕𑌾𑌰𑌸𑍍𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌰𑍁𑌶𑌬𑍍𑌦𑌸𑍍𑌤𑌨𑍍𑌨𑌿𑌰𑍋𑌧𑌕𑌃 ।
𑌅𑌨𑍍𑌧𑌕𑌾𑌰𑌨𑌿𑌰𑍋𑌧𑌿𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌗𑍁𑌰𑍁𑌰𑌿𑌤𑍍𑌯𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 ॥
𑌗𑍁𑌰𑍁𑌰𑍇𑌵𑌪𑌰𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮)

" குசப்தஸ்த்வந்தகாரஸ்ஸ்யாத் ருசப்தஸ்தந்நிரோதக: ।
அந்தகாரநிரோதித்வாத் குருரித்யபிதீயதே ॥
குருரேவபராம்ப்ரஹ்ம "

எனும் யஜுர்வேத அத்வயதாரகோபநிஷத்தின் வசனங்களிற் பெறப்படுகின்றமையானும்; தைத்திரீயோபநிஷத்தின் சிக்ஷாவல்லி—

(அ) (𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌦𑍇𑌵𑍋𑌭𑌵 ।)

" ஆசார்யதேவோபவ ।"

எனவும், வராஹோபநிஷத்தின் ச - ம் அத்தியாயம்—

(ஆ) (𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌮𑌾𑌰𑍍𑌗𑍇𑌣 𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑍍𑌯𑌾𑌶𑍁𑌸𑍍𑌥𑌿𑌰𑍋𑌭𑌵 ।
𑌶𑌿𑌵𑍋𑌗𑍁𑌰𑍁𑌶𑍍𑌶𑌿𑌵𑍋𑌦𑍇𑌵 𑌶𑍍𑌶𑌿𑌵𑍋𑌵𑍇𑌦𑌶𑍍𑌶𑌿𑌵𑌃𑌪𑍍𑌰𑌭𑍁𑌃 ॥)

" ஆசார்யசாஸ்த்ரமார்க்கேண ப்ரவிச்யாசுஸ்திரோபவ ।
சிவோகுருச்சிவோதேவச் சிவோவேதச்சிவ: ப்ரபு: ॥ " எனவும்,

(இ) (தத்ருஷ்டிகோசராஸ்ஸர்வேமுச்யந்தே ஸர்வபாதகை: ।)
" தத்த்ருஷ்டிகோசராஸ் ஸர்வேமுச்யந்தே ஸர்வபாதகை: ।

எனவுங் கூறுவசனங்கள் (அ) " ஆசாரியனைத் தெய்வமாகப் பாவித்திரு." (ஆ) " ஆசாரியன் சாத்திரம் ஆகிய இம் மார்க்கத்தே பிரவேசித்து அதனில் உறுதியாயிரு : சிவனே குரு சிவனே தேவன் சிவனே வேதம் சிவனே பிரபு." (இ) " தத்துவப்பிரவர்த்தகமுள்ள அவனுடைய பார்வையிற்பட்டாரனைவரும் எல்லாப் பாதகங்களினின் றும் விடுதலையுறுகின்றனர் " எனும் பொருள்களைப் பயக்கின்றமை யானும் ; உண்மைவிளக்கம்— " கற்று மனம்போற் கசிந்துகசிந் தே யுருகி — உற்றுசான் லிங்க முயர்வேடம் — பற்றுக — முத்தித் தலை வர் முழுமலத்தை மோசிக்கும் — பத்திதனி னின்றிடுவர் பார்." என்றுரைக்கின்றமையானும் குரு, தெய்வம், அடியவராகிய மூவுரு வையும் நிட்கள பராபரமாக நினைத்துப் பூசிக்கவேண்டுமென் றுணர்த்துவாராயினர். மூவுருவ வழிபாடு குரு, லிங்க, சங்கம பத்தி யெனப்படூஉமென்பதும் இங்ஙனுணர்ந்துகொள்க. சிவயோகி யின் கால்கழுவிய நீரினது மகிமை " ஜ்ஞாநயோகபராணாந்து பாத ப்ரக்ஷாளிதம் ஜலம் । பாவசுத்யர்த்தமஜ்ஞாநாம் தத்தீர்த்தம்முநிபுங் கவ ॥" எனத் தர்சநோபநிஷத்தின் ச-ங் கண்டத்தில் — " ஆத்ம தீர்த்தம்மஹாதீர்த்த மந்யதீர்த்தம்நிரர்த்தகம் । " என்றதற்குப்பின் னே கூறப்படலாயிற்று. உயிர்ப்பொருள் உயிரில்பொருளாகிய யாவற் றினும் பரவத்து வியாபித்திருப்பினுங் மேற்கிளந்த மூவுருவிலும் அனுக்கிரகார்த்தமாய் அஃதிருத்தலின் அவ்விடங்களில் வழிபடு மாறு கிளக்கும் இந்நியாயம் ஏற்புடைத்தே. உடல், பொருள், ஆவி யெனு மூன்றனையும் ஆசாரியனுக்குக் கொடுத்துவிட்டுச் சுதந்திர ஈன னுப் நிற்குஞ் சற்சீடன் அவ்வாசாரியனது திருமேனியைத்தானே இது நமக்கனுக்கிரகித்த சிவவுருவென இதயத்திருத்தித் தியானித் திருப்பதே ஒல்லையி னிட்டையுதவு முத்திசாதனமாகலிற் குருவென் பதை முற்படக்கூறினர். இம் முடிபினை—

" விரிந்தசஞ்சிதவினைகளன் புடனும் விழிக்கவெந்தனவிரும்புமிப்பிறப்பிற்
பொருந்தும்வல்வினையுட லுடனகலும் புந்திசேரருள்வருவினைபோக்கும்
அருந்துயர்ப்பொருளுயிருடம்புனதே யல்லநம்மனவாகுமிங்ஙனைப்போல்
இருந்தநம்பெருவடிவைநின்கருத்தி லிருத்துவாய்பொருளிதுவெனவுரைத்
[ தார். "

என்று திருவாதவூரர்புராணம் இனிதோதுதலினறிக. இது, திரு வாதவூரடிகளுக்குப் பரமாசாரியமூர்த்தி கூறியருளியதாகவுளது.

உமாபதிசிவாசாரியரது நெஞ்சுவிடுதூது, அருணந்திசிவாசாரியரது இருபாவிருபது முதலியன ஆசாரியரையே சிவனெனக்கொண்டு போற்றியுள்ள பிரபந்தங்களென்பது மறிக. இக்காரியத்திற் றிருத்தியில்லாதார் ஆசிரியனு லுபதேசிக்கப்பட்ட தெய்வவுருவையே தியானிக்கத்தக்கவராகலிற் குருவின்பின்னே தெய்வத்தைக் கூறினர். சிவயோகியினது திருட்டியே தீக்ஷையாயிருக்குமாறு அவரது திருவாக்குந் தீக்ஷையாகலின் அஃதொன்றனையே கொண்டுநிற்றல் விசேடத்தில் விசேடமென்பது மோர்க.

இக் காலத்துள்ள சிவபத்தருட் பெரும்பாலார் அறுபான்மும்மை நாயன்மார் வழிபாடே அடியவர் வழிபாடெனக்கொண்டு நிற்கின்றனர். அந் நாயன்மார் "சிவமான வாபாடி" எனக் கிளந்தவாறு சிவமாகிவிட்டமையானும், வழிபடுவோராற் செயப்படுவனவற்றை அன்னோர் நேராக ஏன்றுகொண்டு மகிழாமையானும், செயப்படுவனவற் றுண்டற் குரியனவற்றைச் செய்யுந் தாமுந் தம்மைச் சார்ந்தாருமே யுண்கின்றமையானும் அஃதடியவர் வழிபாடாவதன்று. அந் நாயன்மாருட் பல்லோரும் அவர்கள் காலத்தேயிருந்த அடியவரைப்பூசித் தருங்கதிக் குரியராயினமை கடுப்ப, இக் காலத்துள்ளோரும் இக்காலத்துள்ள அடியவரைப் பூசித்து அக்கதிக் குரியராய் நிற்றலே தகுதியாகும். விக்கிரகத்தின் முன்னேயே நிவேதனஞ் செய்து செய்துண்பார் செய்கையும் பசுவினது வாய்முகத்தே புல்லைக் கொடாமே கறப்பது மடியன்றோவென நினைத்து அம் மடியிடைப்புல்லைக் கொடுப்பான் செய்கையினையே பொருவும். ஈண்டு, வாய்முகம் சிவனடியர் தானமும், மடி சிவனதுருவத்தானமுமாம். சிறந்த பரமசிவசொரூபத்தை யுணர்ந்த ஞானியெழுந்தருளியிருக்குமிடத்திற்குக் கோடி விற்கிடையளவும், நிறைவுடைக் கங்காநதி விளங்குமெல்லைக்கு அறுபதினுயிரம் விற்கிடையளவும், சிவாலயமிருக்குமெல்லைக்கு முப்பதினுயிரம் விற்கிடையளவும் பாவம் அணுவாதகலுமெனும் பொருளை—

"சிறந்த பரம சிவனுருவந் தெருண்ட பரம சிவஞானி
உறைந்த வெல்லை விற்கோடி யளவும் பாவ மொழிந்துவிடும்
நிறைந்த கங்கை நிகழிடத்து ணீங்கு மயுத மாறளவும்
அறைந்த வளவி னருத்தத்து ளகலும் பாவ மரன்புரிக்கே."

எனுஞ் சிவதருமோத்தராகமச் செய்யுளுணர்த்துதலின், சிவனடியவரை வழிபடுதலே ஆன்மசொரூபலக்கணத்தாற் சிறந்ததென்பது

மறியக் கிடக்கின்றது ; உய்த்துணர்க. சாலகத்தின் வழியேவரு சூரியகிரணத்திற் காணப்படூஉம் நுண்டுகளை மும்முறை யெட்டிற் பெருக்கி னெய்துவ தெத்துணையோ வத்துணையேயாம் (கசாக்ரம்) மயிர்நுனி : மயிர்நுனி அ - கொண்டது (லிக்ஷா) லிகைக்ஷ : லிகைக்ஷ அ - கொண்டது (யூகா) யூகை : யூகை அ - கொண்டது யவம் : யவம் அ - கொண்டது அங்குலம் : அங்குலம் உச - கொண்டது (பாணி) முழம் : முழம் ச - கொண்டது (தநு) வில் : வில் உ - கொண்டது (தண்டம்) கோல் : கோல் உ000 - கொண்டது (க்ரோசம்) குரோசம் என்று மிருகேந்த்ராகமம் அத்வப்ரகரணத்தி லோதுமாற்றானே அவ் விற்கிடை யித்துணைத்தென்பதை யறிக. வில்லென்பதே விற்கிடை. முற்படலத்து உ௬, ௭௮ - ல் இயைபுடைமையிற் குருவைக் குறித்துக் கூறியவற்றையும் ஈண்டுக் கருதிக்கொள்க. எழில்காணுமுரு= வேதாகமோக்தமான சிவசின்னதாரண அழகு வாய்ந்த வுரு ; சைவசமயசரபங் காண்க.

எனும் என்புழிப் படுசொற் றொக்குநின்றது. படர்பு=நினைத்து ; செய்பு எனும் வாய்பாட்டுச் சென்றகால வினையெச்சம். நேமம் - நியமமென்பதன் விகாரம். மனம் அடங்கு நேர்மை என வியையும். நாம் - இயல்புபற்றிய தனித்தன்மைப்பன்மை ; உணர்வைக் கூட்டிக்கொண்ட உளப்பாட்டுத் தன்மைப் பன்மையுமாம்.] (௬௯)

## ௯0. சற்சீடன் சுவானுபூதியடைதல்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம் ; சந்தம்வேறு.

இம்மொழி யெலாமா ணுக்க
  னிருசெவிப் புழையுள் வாங்கி
அம்மநான் பிழைத்தே னிந்த
  வகன்மயல் வாரி நீந்திச்
செம்மைசேர் பொருளைக் கண்டேன்
  றிருவரு ளாக்கம் பெற்றேன்
மம்மரி லாவிக் கோமான்
  மாணருட் டகவா லென்றான்.

சீடன், இவ் வுபதேசமொழிக ளனைத்தையும் "செவிவா யாக நெஞ்சு களனாக" எனக் கூறியவாறு கிரகித்து, அஞ்ஞான மயக்கத்தை யறவேயொழித்த இக்கோமான் (=ஆசிரியர்) உடைய பேரரு

ளால் அம்ம! நான் இந்த விசாலமான மோகசாகரத்தைக் கடந்து பிழைத்தேன். ("செம்பொருள்" என்று திருவள்ளுவ தேவராற் சிறப்பித்துரைக்கப்பட்ட) பரம்பொருளைக் கண்டேன். திருவருட் செல்வத்தையும் பெற்றேன் என்றான்.

[சீடன், தீவிரதர சத்திநிபாத உத்தமத்தன்மை பெய்திஞைத லின் நின்மல சாக்கிரமும் நின்மல சொப்பனமுமாங் கேட்டல், நின் மல சுழுத்தியாஞ் சிந்தித்தல், நின்மல துரியமாந் தெளிதல், நின்மல துரியாதீதமாம் நிட்டையெனு மடைவிலே ஆசிரியரது பேரருளின் அனுபூதிமானாயினன் என்க.

உள் = நெஞ்சு. கோமான் = குரு; "குரவ னையன் கோமான் குருவே" என்று கிளக்கும் பிங்கலநிகண்டு. கோ = கண், மான் = மகான் எனப்படுமாற் றானே ஞானக்கண்ணையுடையான் 'கோமான்' எனப்பட்டனனென்பது மாம். அருட்டகவு = அருட்கருணை; "தகவு கருணை" என்று கூறும் மேலை நிகண்டு. (கஎ)

வலிதிலே ணகியைக் காந்தம்
வலிக்குமா றெனைக்கிஞ் சித்தும்
விலகொணு வணஞ்செய் தோதி
மிகைச்சமு சார பந்த
வலையெலாந் தடிந்து காத்த
மாணருட் கென்கைம் மாறென்
றிலகருட் குரவன் றாள்க
ளிறைஞ்சினன் சீடன் மாதோ.

வலிய தன்மையினால் இகலுள்ளவிரும்பைக் காந்தம் வலித்துக் கொள்வதுபோல, என்னைச் சிறுவரையும் விலகவொட்டாதபடி செய்து போதித்து, மிக்க சமுசாரபந்த வலைகளையெல்லாம் அறுத் துக் காத்தருளிய மாட்சிமைப்பட்ட இவ்வாசிரியரது காருண்ணியத் திற்கு என்னாற் செய்யத்தக்க பிரதியுபகாரம் யாதுளதென்று கூறிப் பிரகாசிக்கும் அவ் வருட்குரவருடைய இரண்டு பாதங்களையும் வணங்கினன் சீடன்.

[எண் அகி = வல்லிரும்பு; 'அகி' இரும்பெனப்படுதல் கககாவேதுகை யிற் காண்க. நூலின் மறுக்கப்பட்டவைகளே வலை. குருவென்னும் எழுவாய் மேலைச்செய்யுளினின்றும் வருவித்துக்கொள்க. மாதோ - அசை.] (கஅ)

ஆரியன் சீடன் றன்னை
யகங்களி கூர நோக்கிச்
சீரிய வாசி கூறிச்
சிவத்தவஞ் செய்த பின்னர்
நீரமர் சலச பன்ன
நீரென விரண்டு பேரும்
பூரண நிலையி லென்றும்
பொருந்தியுய்ந் தார்கண் மாதோ.

ஆசிரியரும் சீடனை மனங்குளிர்ந்து பார்த்தவராய்ச் சிறந்த ஆசீர்வாதங்களை (அவனுக்கு)க் கூறிச் சிவத்துதியுஞ் செய்து நின்ற பின்னர், நீரிலமர்ந்திருக்குந் தாமரையிலையிற் றங்கிய சலம்போல இருவரும் பரிபூரணானந்த நிலையி லெக்காலமும் பொருந்தி வாழ்ந்தார்கள்.

[ சலசபன்னம்=தாமரையிலை. தாமரையிலைப்புலந் தங்கிய நீர் அவ்விலையி லொட்டாதிருத்தல்போல உலக கன்மங்களி லொட்டாதிருத்தல் ஞானியினீர்மை யென்பதை இப்படலத்து ருஅ - ன் உரையிற் பிரமாணிக்கப்பட்டுள்ள சாந்தோக்ய வசனத்தா லறிக. சிவத்தவம் - சிவஸ்தவம் என்னும் வடசொல்லின் விகாரம்; ஸ்தவம்= ஸ்துதி. ஞானிகளுஞ் சிவத்துதி முதலிய செய்பவராகவுள்ளாரென்பதற்குரிய பிரபலப்பிரமாணம் முற்படலத்து ககரு - ன் உரையுழைக் காண்க. ] (கூகூ)

வாழ்த்து.

விழுமிய பொருளாய் நாளு
மிளிர்குகக் கடவுள் வாழ்க
குழுமிய தொழும்பர் வாழ்க
குருவுடன் சீடர் வாழ்க
தொழுகுலத் தவர்கள் வாழ்க
துகளறு தவங்கள் வாழ்க
வழுவறு மறையு மாக
மமுஞ்சொன முடிவு வாழ்க.

ஆன்றோரெல்லாம் பேணு தகராலயரகசிய பரம்பொருளாய் எக்காலத்தும் பிரகாசித்துக்கொண்டிருக்குங் குகப்பிரமம் வாழக்கட

வது. அந்தப் பிரமத்தினுடைய மங்கள குணங்களைக் கூறிக்கொண் டாடுமாறு கூடிய தொண்டர்கள் வாழக்கடவர். சற்குருவுஞ் சற் சீடர்களும் வாழ்வாராக. பாரம்பரியமாகப் பரமதெய்வ வழிபாடு செய்வாரது குடிப்பிறந்த அந்தணர் வாழ்க. குற்றமற்ற தவங்கள் வாழ்வனவாக. தோடமற்ற வேதமுஞ் சைவாகமமுங் கூறிய சமரச முடிபு வாழ்ந்திடுக.

[பரமதெய்வத்தை 'வாழ்க' என வாழ்த்துவது— வாழ்த்து வோன் பெறும் புண்ணியப் பொருட்டேயாம்; நீராடி உண்டுடுத் துத் தற்புகழ்மை கேட்டுய்யாப் பரமதேவிற்கு அவையற்றிற்குரிய பதார்த்த தோத்திரங்களை அன்பிற் சமர்ப்பித்துப் புண்ணியம் பெறுகை புரிவோன் பொருட்டா யிருத்தல்போல. "நமச்சிவாய வாஅழ்க நாதன்றாள் வாழ்க" என்றார் மணிவாசகப்பெருமானாரும். நூலின் முதல், இடை, கடையென்னும் மூவிடத்தும் மங்கலங்கூறு தன் மரபாகலின் வாழ்த்து, வணக்கம், உண்மைப்பொரு ளுரைத்த லெனும் மூவகை மங்கலங்களுண் முதற்கட் கடவுள் வணக்கங் கூறி ஈங்குக் கடைக்கண் வாழ்த்துரைத்தனர். இவற்றினுட்பட்ட நூன்முழுதும் உண்மைப்பொருள்குறித்த லென்னும் மங்கலமாம். ஆகவே "சீர்" என்னும் மங்கல மொழியை முதற்கட்கொண் டெழீஇய இந்நூற்கண் அம்மூவகை மங்கலமுமடங்கியிருத்தலறிக. தைத்திரீயாருணசாகை நாராயணத்தில்— (தவஊதிதவொநாநஸ நாஸவா) "தபஇதிதபோநாநசநாத்பரம்" எனவும், (தவ்ஸாஜெ வாஜெவ காஊ௵ஷ) "தபஸாதேவாதேவதாமக்ரஆயந்" எனவும் வரு வாக்கியங்கள் "தவமென்பது உணவில்லாமையையன்றி வே றின்று" "தவசினல் தேவர்கள் தேவத்தன்மையை முற்காலத்தி லடைந்தார்கள்" எனுந் தமிழைத் தருகின்றமையானும்; மைத்ரா யண்யுபநிஷத்தில்—

(நாதவஸஸ்யாத்ஜ்ஞாநெயிமஃ கஊவிஷிவெத்யஂ ஹாஹதவஸாவூாவ்யதெஸக்ஂ)

"நாதபஸ்கஸ்யாத்மஜ்ஞாநேதிகமஃ கர்மவிஷத்திர்
வேத்யேவம்ஹ்யாஹதபஸாப்ராப்யதேஸத்வம்"

என வருவசனம் "தவசில்லாதாற்கு ஆன்மஞானமுண்டாத லில்லை: கன்மப்பிரயோசன முண்டாதலுமில்லை: ஏனெனின், தவசி னற் சத்துவம் (=சித்தசுத்தி) எய்துகின்றது" எனுந் தமிழைத்

தருகின்றமையானும்; இத்திறத் தவசுகட்கு வேறாக இழிதேவதா சித்திகளை அவாவி புணவொழித் தியற்று துகளுறு விரதங்களும் உலகுழைக் காணப்படுகின்றமையானும் "துகளறு தவங்கள் வாழ்க" என்றார். தபசு தவமெனப்படும். உணவிலேயே யுயிரிருக்கவுற்ற இக்காலத்து மாந்தர் இத்தவத்தை யியன்றவளவே யிழைக்கத் தக்கவராவர். இன்னோர் போன்றாரல்லாதாரே பண்டைக்காலங்களிற் பன்னெடுநாள், பல்லாயிரவாண்டு தவமிழைத்திருந்தார். இவ்விவரம் "உயிரானது க - ம் யுகத்தில் எலும்பிலும், உ - ம் யுகத்திற் றசையிலும், ங - ம் யுகத்தில் உதிரத்திலும், ச - ம் யுகத்திற் சோறு முதலியவற்றிலு மிருக்கும்" என்று பராசரஸ்ம்ருதியின் ஆசார காண்டம் யுகதர்மபேதத்தி லுரைக்குமாற்றா னுணர்க.

குகக்கடவுள் = இருபெயரொட்டுப் பண்புத்தொகை. 'வாழ்க' என்றதில் க - வியங்கோண்முற்று விகுதி.]　　(௪00)

கட்டளைக்கலித்துறை.

அசனக் குழிசியு மாடகப் பேழையு மேயணங்கென்
விசனத் தலைபவர்க் காணையைக் கூறுமிம் மேன்முறையும்
நிசநட் புடனிதைக் கேட்பவ ரோது நிபுணர்களும்
வசனித் துளோரும் வரைந்திட்ட வன்பரும் வாழியவே.

சோற்றுப்பானையுந் திரவியப்பெட்டியுமே தெய்வம்: (அவற்றை விருத்தி செய்துகொள்ள வேண்டுமே) என்னும் விசன வழியிலே அலைந்து திரிவார்க்கெல்லாம் உண்மையைக்கூறும் இம் மேம்பாடான நூலும், சரத விருப்பத்துடன் இந் நூலைக் கேட்பவரும், ஓதும் புத்திமான்களும், இந் நூலைப்பற்றியும் இதனிற் கூறப்பட்ட விடயங்களைப்பற்றியும் வசனித்திருப்போரும், அன்புடன் இதனை யெழுதுவோரும் வாழ்வாராக.

[வரைந்திடுமென்பர் என்று வருங்காலத்தாற் கூறாது "வரைந்திட்டவன்பர்" என்று இறந்தகாலத்தாற் கூறியது விரைவுபற்றி. இவ்வாறு வருவதனைத் தொல்காப்பியனார் "வாராக் காலத்து நிகழுங் காலத்து— மோராங்கு வரூஉம் வினைச்சொற் கிளவி— இறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல்— விரைந்த பொருள வென்மனார் புலவர்." என்று கூறியதனானுணர்க. அணங்கு = தெய்வம். ஆணை = உண்மை. 'வாழிய' என்றதில் ய - வியங்கோண்முற்று விகுதி.]　　(௪0௧)

சிந்தையு ணின்று குகேச்சுர நாமந் திகழவுள்ள
எந்தை யருள்கொடு செய்தவிந் நூன்முடி விற்குக்கலி
ஐந்து சகத்திரந் தன்னி லிரண்டக லாயனத்தின்
வந்த விசய தசமியுந் தாரையும் வாழியவே.

எனது நெஞ்சகத் துண்ணின்று குகேச்சுரனென்னும் பரம ரகசிய நாமமானது பிரகாசிக்கவிருக்கும் என்னுடைய பரமபிதாவின் அருட்சகாயத்தைக்கொண்டு, என்னாற் செய்யப்பட்ட இந்நான் முடிவிற்குக் காலமாக வெப்திய கலியுகம் (சகூகூஅ) நாலாயிரத்துத் தொளாயிரத்துத் தொண்ணூற்றெட்டாம் ஆண்டின் (துர்முகிவருட ஐப்பசி மாதத்து) விஜயதசமியும், நக்ஷத்திரமும் வாழ்வனவாக.

[ முடிவிற்கு வந்த கலி ஐந்து சகத்திரந்தன்னி லிரண்டகல் ஆயனத்தின் எனவியையும். ஆயனம் = ஆண்டு.] (கOஉ)

ஸுப்ரஹ்மண்யோம், ஸுப்ரஹ்மண்யோம், ஸுப்ரஹ்மண்யோம்.

துறவறவிளக்கப்படல முற்றிற்று.

ஆகப் பாயிரமுட்படச் செய்யுள் - உ௲O.



பரிபூரணானந்தபோதமெனு மூலமும்,

சிவசூரியப்பிரகாசமெனு முரையும்

முற்றுற்றன.

குமரகுருபரன் றிருவடி வாழ்க.

திருச்சிற்றம்பலம்.



சிவசூரியப்பிரகாசத்துப்

# பிழை திருத்தம்.



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௧௫ | ௨ | தேவாநாமாநந்தா : | தேவாநாமாநந்தா : । |
| ,, | ௭ | ப்ருஹஸ்பதேராநந்தா : । | ப்ருஹஸ்பதேராநந்த : । |
| ௨௬ | ௨௧ | என்று | என்னும் |
| ௩0 | ௨௬ | தோவதி | தோபவதி |
| ௪௨ | ௫ | ஆவிருதி | ஆவிருதி, |
| ௬௫ | ௧௭ | சிவபோத்தா | சிவபோதத்தா |
| ௬௭ | ௧௮ | விசேடித்த | விசேட |
| | ௧௯ | தாக | மாக |
| ௭௮ | ௨௨ | நீக்கமும் | நீக்கமும், |
| ௮௪ | ௨௪ | ஏககாலதில் | ஏககாலத்தில் |
| ௧0௨ | ௩ | யுணரற்பாற்று | யுணரற்பாற்று. |
| ௧0௬ | ௨௨ | சாககியர் | சாக்கியர் |
| ௧௨௮ | ௧௭ | விரோத்தச்ச | விரோதச்ச |
| ௧௨௯ | ௨௧ | வொருளாயவழி | பொருளாயவழிப் |
| ,, | ௩0 | பொருளைப்பயதே | பொருளைப்பயப்பதே |
| ௧௩௯ | ௨௩ | ஸந்ந்ராஹ: | ஸந்ந்ராஸ: |
| ௧௮௨ | ௨௩ | சுருதியும், | சுருதிவழியே |
| ௧௯௬ | ௧0 | ஜ்ஞானம் | ஜ்ஞாநம் |
| ௧௯௯ | ௩0 | போல பரிபூரணத்தை | போலப் பரிபூரணத்தை |
| ௨௨௫ | ௩௧ | எனும் | எனவரும் |
| ௨௩0 | ௩௨ | புழிபபோல | புழிப்போல |
| ௨௪௧ | ௨௮ | கூட்டிரவு | கூட்டரவு |

# பிழை திருத்தம்.



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௧ | ௨௨ | இடையூரின்றி | இடையூறின்றி |
| ௫ | ௧௪ | வோதவெண் | வோதவொண் |
| ௮ | ௧௦ | வடிகளாவுங் | வடிகளாகவுங் |
| ௨௭ | ௧௦ | யாங்கூற | யான்கூற |
| ௩௭ | ௧௯ | விரயதி | வியாதி |
| ௯௦ | ௩௧ | சொரூப | சொரூப |
| ௯௩ | ௧௭ | போத்தா | போதத்தா |
| ௯௪ | ௨௫ | யேப்ப | யேய்ப்ப |
| ௮௩ | ௨௭ | குறித்தே" | குரித்தே" |
| ௮௪ | ௨௪ | "ஏககாலதில் | "ஏககாலத்தில் |
| ௮௫ | ௨௮ | தமழ்மறை | தமிழ்மறை |
| ௧௮௧ | ௧௯ | வுவர்வீசு | வார்வீசு |
| ௧௮௯ | ௨௦ | பெருமான் | பெருமானின் |
| ௧௯௦ | ௭ | விரண்டுங் | மூன்றுங் |
| ௨௦௧ | ௨௪ | வீயா | வீயா— |
| ௨௧௪ | ௧ | ருளர்வைக் | ருளரிவைக் |
| ௨௧௯ | ௩௨ | ராத்ராங்கபலல | ராத்ராங்கம்பலல |
| ௨௨௮ | ௧௧ | தல். | தல்.] |
| ௨௪௨ | ௧௯ | பரமான்சத்தி | பரமான்மசத்தி |
| ௨௯௪ | ௨௩ | கூழுமின் | கூழுமன் |
| ,, | ௩௦ | கூழுமில்லாமல் | கூழுமல்லாமல் |
| ௨௮௪ | ௧௪ | நிகண்டு. | நிகண்டு.] |



ஓம்குஹேசாய நம:

# தகராலயரகசியமூலமும்,

## சதானந்தசாகரமெனு முரையும்.



ஸ்ரீமத் - குமரகுருதாசசுவாமிகள்;

பாம்பன்.

# தகராலயரகசிய மூலமும்,

அதனுரையாகிய

# சதானந்தசாகரமும்.



இவை

ஸ்ரீமத்-குமரகுருதாசசுவாமிகள்

அருளிச்செய்த

மூலமும், விசேடவுரையும்,

வி. கலியாணசுந்தரம்பிள்ளை பி. ஏ. அவர்கள்



இயற்றிய பொழிப்புரையும்.

ஓம் குஹப்ரஹ்மணேநம:

# தகராலயரகசியமூலமும்,

## சதானந்தசாகரமெனு முரையும்.



திருத்தேவையெனுந் திருவிராமேச்சுரத்தைச் சார்ந்த
பாம்பன்:
ஸ்ரீமத் - குமரகுருதாசசுவாமிகளால்
அருளிச்செய்யப்பட்ட
மூலமும், விசேடவுரையும்,

**First Edition—300 Copies.**

விருத்தாசலம்: தியாகராஜ கவிராயர் குமாரர்
வி. கலியாணசுந்தரம்பிள்ளை (B. A.) பி. ஏ. அவர்களால்
இயற்றப்பட்ட
பொழிப்புரையுமாக வுள.



சென்னை: வைஜயந்தி அச்சுக்கூடத்திலும்,
பிரஸிடேன்ஸிஅச்சுக்கூடத்திலும்
அச்சிடப்பட்டன.



**1916**

இதன் விலை **2—8—0**

# தகராலயரகசியப்பகுப்பு.







முதலாங்காண்டம்.



இரண்டாங்காண்டம்.





சிவமயம்.

ஓம் குஹேஶாயநம:

குமாரகுருதாஸகுருப்யோநம:

# முன்னுரை.

"எவ்வுயிரு நீங்கா துறையு மிறைசிவனேன்
றெவ்வுயிர்க்கு மன்பா யிரு." [சைவசமயநெறி]

இந்நூலிற் கிதனுசிரியர் தாமே நூற்பாயிரம் விசேடவுரைப் பாயிரம் நுவன்றிருக்க, மற்றொரு முன்னுரைவரைய யாம் விழைந்தமை யாதுகருதி யெனின், இவ்வாசிரிய ரருளிச் செய்துள்ள நூல்களுள் இதனை முதலில் வாசிக்கப் புகுவோர், ஆசிரியர் கொள்கைகளில் முக்கியமான சிலவற்றை முன்னர்த் தெரிந்திருப்பது அச்செயற்கொரு துணையாயிருத்தல் கூடுமென்பது குறித்தென்க.

இந்நூலைச் செய்தருளிய சுவாமிகள் வடமொழி தென்மொழிகளிலுள்ள ஞானநூல்களைத் திறம்படத் தெள்ளிதினுராய்ந்துள்ளோர். அன்றியுமிவர், தமது இளமைப்பருவந் தொட்டே இறைவன் மாட்டு மெய்யன்பு செலுத்திவந்து அவனது விசேட அருளுக்கொரு கொள்கலனுய் விளங்கும் பெற்றியர். இவரருளிச்செய்த அரிய பெரிய நூல்கள் பலவுள. அவற்றின் மேம்பாடும் அவை யாக்கப்பட்ட காரணங்களும் பல்லாற்றுனும் பாராட்டத்தக்கவை. இவ்வாறு வெளிவந்த நூல்களுட் "பரிபூரணுனந்தபோதம்" "தகராலயரகசியம்" என்பன பிரமாண முதலியவற்றுன் மிகச்சிறந்தவை என்னலாம். இவ்விரண்டும் சுவாமிகள் துறவொழுக்கம் பூண்டபின்னர் மௌனமாயிருந்தகாலத் தருளிச்செய்யப்பட்டவை. இவற்றுண் முன்னது "இலகு மெய்ஞ் ஞானநூல்கள் பலவுளும் எடுத்தசாரம் சொலுமுறை பொலிந்துநிற்பச் சுருக்கமாய்ச் சொற்றது." பின்னது, அம் முன்னதாகிய பரிபூரணுனந்தபோதத்துத் தொடர்பு நூலாம். இதன்கட் கூறப்படூஉந் தகரவித்தையை, இந்நூலாசிரியர் ஒருகால் "முப்பத்தைந்து நாள், தனிநிட்டை சாதித்திருந்தனுன்று, கௌபீனதாரியாய் வெளிப்

பட்ட இறைவன் அவர்க்கு ஒருசொல்லா லுணர்த்தியருளினன்." இவ் விரண்டு ஞான நூல்கட்கும் முறையே "சிவசூரியப்பிரகாசம்" எனவும், "சதானந்தசாகரம்" எனவும் பெயர்பூண்டொளிருஞ் சீரியவுரைக ளுள் விசேட உரைகளைச் சுவாமிகளே தந்துள்ளார்கள். இந் நூல்களை அவையற்றி னுரையோடு கற்பதே விழுப்பயன்றருவதாகும். அன்றி யும், பரிபூரணானந்தபோதத்தை நன்காராய்ந்த பின்னரே தகராலயரக சியத்தைப் படிக்கத்தொடங்கல் நேர்முறையென்பது மேற்காட்டிய உண்மையால் இனிது விளங்கும். இனி, இவ்விரண்டு சாத்திரங் களினுழைக் காணப்படுங் கோட்பாடுகளிற் சிலவற்றை விளக்கமுயல் வாம்:

முதலிற் சுவாமிகள், தமதுகொள்கைகட்கு எவற்றைப் பிரமாண மாகக் கொண்டுள்ளார் என்பதைப்பற்றிச் சிறிதாராய்தல் பயனுடைத் தாம். வடமொழி நூல்களில் வேதம், சிவாகமம், புராணம், இதி காசம், மிருதி, பிரமசூத்திரம் என்பனவற்றையும், தமிழ் நூல்களில் தேவாரம், திருவாசகம், திருமந்திரம், சித்தாந்தசாத்திரங்கள், அருண கிரியார், தாயுமானூர், பட்டினத்தார் ஆகிய ஞானச்செல்வர்களுடைய திருவாக்குக்கள் என்பனவற்றையும் தந் நூல்களிற் பெரும்பாலும் பிர மாணித்துள்ளார். வேதம் முதலிய வித்தை பதினெட்டுள் வேதத்தின் ஞானகாண்டமாகிய நூற்றெட்டு உபநிடதாதிகளையே தலைமைப் பிர மாணமாகக் கருதியிருக்கின்றாரென்பதூஉம் உணரப்படுகின்றது. இவ ருடைய நாலுரைகளிற் பெரும்பாலும் வேதவாக்கியங்கள் முன்பும், ஆகம உரைகள் பின்பும், எனைய நான் மேற்கோள்கள் இவையற்றைத் தொடர்ந்தும் நிற்பது இதை வலியுறுத்துகின்றது. வேதாகமங்களை இருகண்களாகப் போற்றியுள்ளாரென்பதும் புலப்படுகின்றது. வேத த்தை யிழித்துக்கூறும் ஆகம வாதியர்க்குச் சுவாமிகள், வேதம், சிலர் சொல்லுவதுபோல் யோகத்தோடு நிற்பதொன்றன்றென்றும், உப நிடதவாயிலாக ஞானத்தை விரித்துப்பேசுநூலே என்றும், ஆகம ஞானபாதசாரமுழுவதும் வேதத்திலுள்ளதே என்றும் பிரமாணவாயி லாக அறிவுறுத்துகின்றூர். மேலும் "சித்தாந்தம் வேதஸாரமாயிருக் கின்றமையின்" எனப் பொருள்தரும் ஸுப்ரபேதாகம வசனத்தையும், "இவ் வேதாந்தப் பொருளாகிய ஞானம் பரமசுபமாகிய சித்தாந் தம்" என்னுந் தமிழைத்தரும் மகுடாகம வசனத்தையும், திருமந்தி ரம், சிவஞானசித்தியார், சிவதருமோத்தரம் முதலிய நூல்களின் செய் யுள்களையும், "வைதிகசைவம்" என்னும் பிரயோகம் காமிகாமத்துள்

ளது என்னுமுண்மையையும் எடுத்துக்காட்டி வேதநிந்தை செய்தல் அடாது என்று புலப்படுத்துகின்றார். வேதாகமக்கருத்தொற்றுமையை, இப்போது பேசப்படும் இரண்டு நூல்களிலுந் திருமூலரும் நீலகண்டசிவாசாரியரும் இவ்விடயமாகக் கொண்டகருத்தைத் தழுவி நன்கு விளக்கியுள்ளார். தமிழ் வேதத்தும், அருணகிரிநாதனார் நூலிடத்தும் இவர்க்குள்ள நன்மதிப்பும் வெளிப்படை. மேனோக்காகப் பார்ப்போர்க்கு ஆசிரியர், உபநிடதங்கள்பாற் சிறப்புவகையிற் பற்று வைத்திருப்பது எற்றிற்கெனப் புலப்படாது போதல்கூடும். அந்த நூற்றெட்டாதி நூல்களும் ஒருவகையிற் றம்முள் மாறுபடப் பேசுவனபோலவும், உபாசனை முறைகளிற் பலபடப் பகர்வனபோலவுங் காணப்படினும் அவையாவும், மனோலய வாய்ப்பின்கண்ணே நாட்டமுடையனவாய் அதனையே பலதிறத்தானும் விரித்துரைப்பனவாயுள்ள சுவானுபவ நூல்கள் என்றும், பரதகண்ட பண்டிதர்களான் முதற்பிரமாணமாகக் கொள்ளப்பட்டுளவென்றும் அவரறிந்தவொழுங்கே அப்பற்றிற்குக் காரணமாம். இவ்வாறு பிரமானுபவத்தைக்கூறு நூல்கள் எம்மொழியிலிருப்பினும், எக்காலத்தனவாயிருப்பினும், எந்நாட்டனவாயிருப்பினும் அவையற்றைப் பிரமாணமாகக் கோடற்கு அவர் மனந் துணிந்திருக்கின்றது. அங்ஙனமே முழுமுதற்கடவுளிலக்கணத்திற்கும், பிரமானுபூதிப் பெருஞ்செல்வர்களது ஞானானுபவத்திற்கும் மாறாகவுள்ள கதைகளையுங் கொள்கைகளையுங் கூறும் புத்தகங்கள் வேறெத்துணைப் பழமையையுஞ் சிறப்பையுங் கொண்டனவாயிருப்பினும் அவை தள்ளற்பாலனவே என்று கட்டுரைத்தற்கும் இவர் பின்னிடையார். சில பழைய நூல்களில் அன்னியர் நுழைப்பும் அறிவுக்குறைவா லேற்பட்ட பிரதிபேதங்களும் உள்ளன என்பதும், "முந்து நூல்களில் விதிக்கப்பட்டிருந்த கன்மங்களுட் பலவும் பின்றை நூல்களில் விலக்கப்பட்டவாறே, பின்றை நூல்களுள்ளும் விதிக்கப்பட்டவற்றுட் பலவும் பல்லாயிர வருடங்கட்குப் பிற்பட்ட இஞ்ஞான்றியையுபற்றி விலக்கப்படுதல் ஏற்புடைமையேயாகும்" என்பதுஞ் சுவாமிகட்கு உடம்பாடே.

இனி, சுவாமிகளது தத்துவ விசாரணை எம் முடிபைக்கொண்டுள்ளது, அவர் எச்சமயத்தினர் என்பதைப்பற்றிச் சிறிதெழுதுதல் மிகையாகாது. சாதாரணமாகத் தத்துவ விசாரணையானது மனிதனது பெத்தநிலையில் அவனுக்குக் கிடைத்துள்ள மதிநுட்பத்தைக் கொண்டே நிகழ்வதொன்றும். காரணந் தெரிந்துகொள்ளாது குரு

மொழியென்றோ சமயநூலுரை யென்றோ ஒன்றை நம்புதல் ஒரு சமயச் சார்புபெறுதற்கு வேண்டற்பாலதா யிருப்பினும் அஃது இத்தத்துவ விசாரணைக்குப் பொருத்தமாக மாட்டாது. தத்துவ ஆராய்ச்சியி னியல்பைப்பற்றி மேற்புலத்து நுண்ணறிவாளர் எண்ணி யிருப்பது கீழ்வரு மொழிபெயர்ப்பாய எடுத்துக்காட்டொன்றால் இனிது புலனும். அது வருமாறு:—

"(பலதிறப்பட்ட) அனுபவத்திற்கு நிலைக்களமா யுள்ளவற்றின் தன்மைகளை யறிந்துகொள்ளற்கும், உயிர்வாழ்க்கை அல்லது உண்மைப்பொருள் முழுதும் (அதன் எல்லா அமிசங்களும் உட்பட) இவ்வியல்பிற்றென மனித அறிவாற் கிரகிப்பதற்குஞ் செய்யப்படு முயற்சியே தத்துவ ஆராய்ச்சியாம். இது, சேதனுசேதனப் பிரபஞ்சத் திருப்பிற்குப் போதிய காரணத்தை நம் அறிவிற்குத் திருத்தி தருமாறு கண்டுபிடிக்க முயல்வது. பிரபஞ்சத்தில் உலகம் கடவுள், மனிதன் எனவுள்ள எல்லாப் பகுதிகட்கும் அவைதம் உரிமையைத் தந்து, எல்லாப் பொருள்களையும் அவையற்றின் இயல்பிற்கேற்ப நிரல் படுத்து, அனுபவத்திற்றோன்று முரண்பாடுகளை விளக்கி மினிரவல்லதொரு அறிவுக்குப் பொருத்தமான காரணத்தை விவரமாய்க் கண்டு பிடிப்பது அம்முயற்சியின் நோக்கம்." [Prof. S. Radhakrishnan in *The Monist*.]

இந்நிலைநின்று உலகுயிர் கடவுளைப்பற்றி விசாரிக்குங்கால், எடுத்துக்கொண்ட தத்துவ ஆராய்ச்சிக்குப் பிறப்பிடமாய்நிற்கும் உடல், உலகு, உயிர் என்பனவே முற்றும் "இல்லாப் பொருள்கள்," "சூனியம்," "மித்தை," "வெறும்பாழ்" என்று முடிபுகூறும் விசாரணை போலித் தத்துவவிசாரணையாகத் தோன்றும். உலகுயிர்கள் மித்தையென்று நினைப்பதும், சொல்லுவதும், உலகத்தில் உடம்பொடு கூடிநிற்கும் ஒரு யிரேயன்றோ? இவ்விதவுயிர் அவ்வாறு நினைப்பதுஞ் சொல்லுவதும் "என் தாய் மலடி" என்பான் கூற்றைப் பொருவுவனவே. அவை வெறுந் தோற்றமென்னில், அதற்குக்காரண மென்னோ? என்னுங் கடாவெழும். இம்முடிபு கொள்ளத் தக்கதன்றென்பதற்குப் பெரியோர்காட்டியுள்ள வேறொரு நறு நியாயமு முளது. அஃது 'இக்கொள்கையின்படி ஒரு விநாடிநேரமேனும் சொல்லுகின்ற எவனும் வாழமுடியாது' என்பதே. ஞானிக்கு உலகுயிர் இல்லை(=தோற்றுவதில்லை) என்னும் உண்மை இவ் வவசித்தாந்தத்திற்கு வலிசெய்வதின்று. இவ்வுண்மையை வரம்பு கடந்து வற்புறுத்தியதே இக்காலத் தொருசாராரது நவீன வேதாந்தம் புறப்பட்டதற்குக் காரணம் என்று தோன்றுகிறது. அறிவாற் கொள்ளப்படுதற்கு நேர் முரணு

கவே சொல்லுஞ் செயலும் இன்றியமையாது நிகழவேண்டி யிருத்தல் அக்கொள்கையின் குறைபாட்டைக் காட்டும். அன்றியும், நாம், பெத்த நிலையிலுள்ள மதியினுதவியால் தத்துவ விசாரணை செய்துகொண்டே மேற்செல்லுங்கால், ஒருவர், நாம் கொண்டவொரு கருத்தோ, அதைவிளக்கவெழுந்த உதாரணமோ உண்மைக்கு விருத்தமானது தன்னிற்றானே முரண்படுவது என்று நம்மறிவிற்கு நன்கு புலனுமாறும், நாம் மறுத்துப்பேச இடமில்லாமலும் நமக்கே எடுத்துக் காட்டுங்கால், உடனே அவரைநோக்கி நாம், ஓ! ஓ!! உமக்கு இன்னும் பக்குவம் வரவில்லை நாஞ்சொல்லுமுண்மை அனுபவத்தாலுணரத்தக்கது என்று பகர்வது தத்துவ விசாரணையாகா தென்றல் நிச்சயம்; வேறெதுவா யிருப்பினு மிருக்கலாம். இன்னுமொரு குறிப்பை ஈண்டுக் காட்டி மேற்செல்வாம்: ஆங்கில தத்துவநூல்களிற் சிறிது பழக்கமுடைய நங்நாட்டு முதியோரிற் பலர், தமது வாலிபகாலத்திற் பிரபல தத்துவ ஞானிகளென விளங்கிய ஹெர்பர்ட் ஸ்பென்ஸர் (Herbert Spencer) முதலியோரும் அவரது கருத்து மேம்பாட்டிற்குக் காரணராயிருந்த காண்ட் (Kant) ஸ்பைனோஜா (Spinoza) முதலிய பழைய ஆசிரியர்களுங் கொண்ட கொள்கைகளையே இக்காலத்து ஐரோப்பிய மேதாவியரும் பின் பற்றுகின்றனர் எனத்தோன்றுமாறு பேசுவர். கடந்த 20 - வருடங்கட்குள், உலகப்பொருள்களைப் பற்றியும் உயிரிலக்கணத்தைப்பற்றியும் பல அரிய உண்மைகள் மேனாட்டாரது நுண்ணறிவின் துணையாற் கண்டுபிடிக்கப்பட்டன வாதலின் "தொன்மையவா மெனுமெவையு நன்றாகா இன்று, தோன்றியநூ லெனுமெவையுந் தீதாகா" என்றபடியுணர்ந்து உண்மை யொன்றிற்கே கட்டுப்பட ஒருப்படும் அந்நன்மக்களிற் பலர், மேற்குறித்த ஸ்பென்ஸர் (Spencer) காண்ட் (Kant) முதலியோர் தேர்ந்தெடுத்த முடிபுகள் பல இப்போது கொள்ளத் தக்கனவல்லவெனத் தள்ளி அம்முன்னோர் ஆராய்ச்சியில் வெளியாய கருத்துக்களில் உண்மைக்கு விருத்தமாகாச் சில பகுதிகளையே போற்றி வருகின்றனர். வார்ட் (Dr. Ward), ஜேம்ஸ் (William James), ஷில்லர் (Dr. Shiller), ஸெத் (James Seth), ட்ரம்மண்ட் (Henry Drummond), லாட்ஜ் (Sir Oliver Lodge) முதலிய பெரிய ஆசிரியர்கள் இப்போது நன்கு நாட்டிவருவன உண்மைச் சைவசித்தாந்த முடிபுகளேயன்றி வேறல்ல வென்பது அவருடைய நூல்களை வாசிப்போர்க்கு எளிது புலனும். நிற்க. இது

காறுங் கண்டிக்கப்பட்ட கொள்கையிலுள்ள உண்மை யமிசத்தை மட்டுங் கிரகிக்கமாட்டாச் சாமானியர் வாய்கூசாது, தாமும் பிறரும் நுகருஞ் சுகதுக்கங்களையும் அவற்றின் காரணமாக ஆன்றோர் கூறும் புண்ணிய பாவங்களையும், பந்த முத்திகளையும் அறவே பொய்யெனக் கூறி உலகத்தைக் கெடுக்குங் கொடுமையையும் அறியாதே புரிவர். விரிப்பிற் பெருகும்.

சுவாமிகள் இக்கொள்கையின ரல்லர். பரிபூரணானந்தபோதத்தில் உலகு உயிர் கடவுள் என்னும் மூன்றும் உள்பொருள்களே எனற்கு வேதாகமங்களின் சம்மதத்தைக் காட்டி யுள்ளமையும், தகராலயரகசியத்தில் "ஆபாசப்பட்ட சித்தே சிதாபாசன், அவனே மனம்" என்று மனத்தத்துவஞ் சாதிக்கப் புகுந்தாரை நியாய வாயிலாக மறுத்து, "சீவான்மாவைப் பொய்ப்படுத்தோரான்மாவே சாதிக்கத்துணிதல் சுருதி விரோதமுமாம்" என்று முடிபுகாட்டியுள்ளமையும் இதனை நன்கு விளக்கும். பிரமசூத்திரத்தி லிருந்தும், முண்டக சுவேதாச்வதர சாரீரகாதி உபநிடதங்களி லிருந்தும் இருநூல்களிலுங் காட்டப்பட்டுள்ள மேற்கோள்கள் பெரிதுங் கவனிக்கத் தக்கன. உண்மைக்கு வேறான ஏகான்மவாதத்தை மேற்காட்டிய படியே யன்றி இன்னும் பலவிடங்களிற் சுருதி யுக்தி அனுபவ வாயிலாகச் சுவாமிகள் மறுத்திருப்பதுகொண்டு அவரைத் துவிதவாதி யென்பது கூடாது; துவித சைவத்தையும் நன்கு கண்டித்தி ருக்கியிருத்தலின். மற்றவர்தந் தத்துவவிசாரணை முடிபுதா னென்னையோ? எனின், அஃது "அத்துவிதம்" என்னுஞ்சொற்பொருள் என்னலாம். ஆகவே சுவாமிகளை "அத்துவிதி," "சுத்தாத்துவிதி," "வைதிக சைவர்," "வைதிகசைவ சித்தாந்தி," "உண்மை வேதாந்தி" என்னல் சரதம்.

"சுத்தாத்துவிதம்" என்னுஞ் சொல்லின் பொருளைச் சுருதி வாயிலாக இனிது விளக்குநூலே பரிபூரணானந்தபோதம். அதன்கட் சிறப்பாக முற்படலத்துத் ௬௬ - ன் உரையாயுள்ளது அனைவரும் நடுநிலைநிற்கு நெஞ்சோ டாழ்ந்தாராய்ந்து பாராட்டத்தக்கது. உள் பொருள் ஒன்றோ? இரண்டோ? மூன்றோ? ஒன்றுமின்றோ? என்பார்க்குச் சுவாமிகள் அருளிச்செய்வது: "உண்மைப்பதமாய சோற்றினைக் காணாதார் துவித அரிசியினையும், ஏகக் குழைகூழினையுமே காண்கின்றனர். உண்மைஞானமே வியவகார நெருப்பாற்றின் மயிர்ப்

பாலமாகவும், ஏகமுந் துவிதமுமே அப்பாலத்தின் இருமருங்குமாகவு நிச்சயிக்கப்படுக. மாற்றானே அப்பாலத்தினடந்து முத்திக்கரைசேரச் சாமர்த்தியமிலார் அப்பாலமறும்படி நடைதந்தேனும், மருங்கிரண்டனுள் ஒன்றிற் காலிடுதலாற் றவறுண்டேனும் அவ்வாற்றில் வீழ்குநராவர். அன்னோர் எம்முடைய சுத்தாத்துவித வைதிகசைவசித்தாந்த நூலுரைகளினுட்பமறிதற்குத் தகுதியுடையாரல்லர்." என்பதாம். இதனோடு தகராலயரகசியத்தில் ௧௭௬ - ஆம் பக்கம் முதல் ௧௮௬-ஆம் பக்கங்காறுந் தீட்டப்பட்டுள்ள அரிய விரிவுரையின்கண், முத்திநிலை, சொல்லிற் கெட்டிபதன்றெனற்கு வேண்டிய பலபெரிய பிரமாணங்களை எடுத்துக்காட்டி "அற்றாகலினன்றே கல்லாலநிழற்கண் ணெழுந்தருளியிருந்த பரமாசாரியனும் எல்லாமாய் அல்லவுமாயிருந்த அந்நிலை வாக்காற் சொல்லிமுடிவதன்று; அவ்வழி அது பெறப்படுவது மன்றென்னுங் கருத்திற் சின்முத்திரையாற் றெரித்தருளினன் சனகாதி முனிவர்க்கு. - - - - இவ்வாறு சொல்லொண்ணுதனை யாதானுமொரு முடிவின்பாற்படுத் தோதுதலும் ஒருபுடை யிியைபுநோக்கியேயென்பாம்." என ஆசிரியர் அறிவுறுத்திச் சேறலும், தகராலயரகசியத்தின் ஈற்றுச்செய்யுளுரையில் "வாதமுஞ் சமய பேதமுங் கடந்த மனோலய இன்பசாகரமே— ஏதுமொன் றறியேன் யாதுநின் செயலே இறைவனே ஏகநாயகனே" என்னும் பெரியார் திருவாக்கை நனி வியந்து பாராட்டியிருப்பதுஞ் சரதம்விடுத்துச் சமயவெறி பிடித்தாடுவோர்க்குச் சாந்தியுறப்பெய்யுந் தண்ணீர்போன் றுள்ளன.

இனி, சுவாமிகள் பிரமம் என்னுஞ் சிவபரம்பொருளைப்பற்றி விளக்குங்கால் அது, சீகண்டர் முதலிய பலபேர்படைத்த குணருத்திரரால் வணங்கப்படுஞ் சதுர்த்தப்பொருள் என்பதைப் பெரிதும் வற்புறுத்தியுள்ளார். தைத்திரீயாருணசாகை நாராயண வசனத்திற் காட்டியுள்ளபடி உமாபதியும், பசுபதியும், உருத்திரனும், விசுவரூபமுடைய நெற்றிக்கண்ணனுமாகிய ஒருவனே சந்திபவசனத்திற் சத்திபமாயுள்ள பரப்பிரமம் என்பதைப் பலமுதுநூல் வாயிலாக விளக்கியுள்ளார். குணருத்திரனே பரமசிவன், அவர் பத்தினியே உமாதேவி, அவருடைய புதல்வனே சுப்பிரமணியன் என்று அந்தரங்கத்திற் கொண்டுள்ளோர் கோட்பாடு தகராலயரகசிய இரண்டாங்காண்டத்து ௪௪ - ஞ் செய்யுளின் அகலவுரையிற் செவ்வனே விசாரிக்கப்பட்டுள்ளது. இதுவும் "எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருள்— மெய்ப்பொருள் காண்ப தறிவு." என்னும் நன்னோக்க முடை

யோரால் அமைதியொடு துரபிமானமின்றிக் கருதிக்கொள்ளத்தக்க தே. சுப்பிரமணியத்தைக்குறித்த வியாசத்தை வாசித்தலும் உண்மை தெளிதற்கு உதவும்.

இந்நூலுரைகளில் இறைவனைப்பற்றிப் பேசுமிடங்கள் பலவற்றுள்ளும் "குஹன்," ஸுப்ரஹ்மண்யன்," "குமாரன்" என்னும் பெயர்களே அடுத்தடுத்து வருகின்றன. "துப்புரவு நாடுயிரே சுப்பிரமண் யத்தின்மேல்—எப்பிரம முள்ள தியம்பு." என்றும் ஆசிரியர் பிறிதொருநூலில் வினவியுள்ளார். இதுகொண்டே அவரைக் கௌமார சமயத்தவர் எனல் சிறிதும் பொருந்தாது. என்னை? சிவ பெருமானினுஞ் சுப்பிரமணியன் உயர்ந்தோனென்று பேதப்படுத்திக் கூறுங்கூற்றைக் கண்டித்து,

"சிவஞ்சத்திக் கன்னியமாய்ச் சேயை யுரைப்போர்
பவம்பற்றிப் பாசறைகொள் வார்."

என்று அருளிச் செய்துள்ளா ராகலின் என்க. பரம்பொருளது மூர்த்தநிலையிற் பரமாசாரியனாகிய முருகப்பெருமானது வழிபாட்டினைச் சிறப்பித்துக் கூறினுஞ் சொரூபநிலை வழிபாட்டிற் சிவகுஹ பேதஞ் சிறிதுங் காட்டாது சென்றுள்ளார். இன்னும், சமயச் சண்டைகள் ஒதுக்கற்பாலன என்பதை,

"பன்னிறப்பசுக்களிற்கறந்தபாலின்பான்மையே
என்னமூர்த்திபேதந்தானனந்தமுள்ளவென்னினும்
வின்னமற்றவுண்மையால்விகற்பமின்றெனத்தெளிந்
தென்னையாளுமீசுரன்பதத்தைநாடுவார்நலோர்."

என்னும் போதச்செய்யுள் போதிக்கும்.

"எம்மார்க்க மெவ்வா றியம்பினுஞ் சீவனுன்றூற்
செம்மாக்கு மென்பதென்றன் றீர்வை பரஞ்சோதீ."

என்று அவர் தமதுபாடலிற் பாடியிருத்தலும் அவரது துணிபினை விளக்கும். "ஓதுசமயங்கள் பொருளுணருநூல்கள் ஒன்றோ டொன்றொவ்வாமல் உளபலவும், இவற்றுள் யாதுசமயம்? பொருள்? நூல் யாதிங்கென்னின் இதுவாகும், அதுவல்ல தெனும்பிணக்க தின்றி நீதியினா லிவையெல்லாம் ஓரிடத்தேகாண நின்றதியாது, ஒரு சமயம், அதுசமயம் பொருள், நூல்" எனவரூஉஞ் சிவஞானசித்தித் திருவிருத்தமும், "எடுத்தவெம் மதமு நூல்கள் யாவையுந் தமவாக் கொண்டு—வடித்தநற் பொருளே தேர்ந்து வளம்பட மகிழ்வ தல்லாற்—

படித்தொரு பொருளைப் பற்றிப் பாங்கினி லதிலொ துங்கிப்— பிடித்ததே பிடித்துக் காதும் பேதைமை பெரியோர்க் கின்றே." எனவெழுமிச்செய்புளும் இவண் நினைவிற்கு வருகின்றன. ஆராய்ச்சிசெய்தல் அவசியமே. அங்ஙனம் வாணாள் முழுவதும் பேசிப்பேசி, எண்ணியெண்ணி, எண்ணங்களானே மண்டையை வீங்கவைத்துக்கொண்டான்மட்டும் போதுங்கொலோ? ஆராய்ச்சியின்பயன் அனுபவமன்றோ? அஃதில்வழியுள்ள கொள்கைகள் இருந்தென்? போயென்? சாத்திர ஆராய்ச்சியிற் றமக்கு மிக்காரின்றி வாழும் எத்தனையோ பெயர்கள், இரக்கமில்லா வன்கண்ணராய்க் கூடாவொழுக்கமுடையராய்த் திரியக் காண்கின்றோம்! மேற்காட்டியபடி ஆராய்ச்சிக்களவில்லையாதலால் அவசியமான ஆராய்ச்சியைச்செய்து யாதானுமொரு நன்முடிவைக் கைப்பற்றி அதன்வழி நமது வாணாள் வாழ்க்கையை நடாத்தவேண்டும். இவ்வொழுக்கமாகிய பாறையின்மேல் ஊன்றி நின்றுகொண்டு, முடிவின்றி எழுந்து மோதும் ஐயம் ஆராய்ச்சி என்னும் அலைகளோடு போராடல் இழுக்காகாது. தத்துவவிசாரணை வாயிலாக வத்துநிச்சயஞ் செய்வதோ டமைதலை "இக்கெனு மொழியைத் தானே யிரும்பஞ்ச தாரை யென்று— நக்கிய நினைவை"ப் போன்றதென்று சுவாமிகளும் இழித்துக் கூறியுள்ளார். ஆராய்ச்சியிற்போந்த முழுமுதற்கடவுளை அனுபூதிமுகத்தா லுணர்ந்து வீடுபேறெய்தற்குரிய உபாயங்கள் இருநூல்களிலும் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. பொதுவாக, மேனாட்டுத் தத்துவநூல்களில் இத்தகைய அனுபவ ஞானத்திற்குரிய உபாயங்கள் கூறப்படுதலில்லை. பரதகண்டமாகிய இந்நாட்டிலேயே "பிரமானுபவப் பிரமஞானவிசாரப்பெரியோர்" அதிகமாகத்தோன்றுவர்; தோன்றித் தம்மனுபவத்தை "நான்பெற்ற வின்பம் பெறுகவிவ் வையகம்" என்னுந் தண்ணளிகொண்டு நூன்முகமாகவும் உபதேசவாயிலாகவும் உலகினர்க்குப் பயன்படுத்தியுள்ளார். நம் சுவாமிகளுடைய நூல்களிலும் அத்திறத்த வுபாயங்களும், அனுபவ மறைவுகளும் இனிது வெளியிடப்பட் டுள்ளன.

அவற்றுள், பதித்தலைமைவிசாரம், யதார்த்தபாவனை, குகேசநாம (சடக்கர பஞ்சாக்கர ஓங்கார) மந்திரசெபம், குருதெய்வ அடியருருவ வழிபாடு, பரமனந்தோன்றுங்காறும் இருதயதாமரையிற் குருவைத் தியானித்தல் என்பன தெளிவாய் விவரிக்கப்பட் டுள்ளன. இந்நூல்களுட் சதானந்தசாகரம், வாரி இரைக்கும் ஞான முத்தங்களுள் ஒன்றைப்பெறுதலும் பண்டு அருமையாயிருந்ததென்று கணிக்கவு

மிடமுண்டு. அகத்துறவு பெற்றபின்னர், ஆன்மலிங்கார்ச்சன மென்னுந் தாரணத்தால் மனவிருத்தி ஒடுக்கமும், அதனாற் போதாகாசத் தோற்றமும், அருளிலொடுங்கி நிற்றலால் அப்போதாகாச ஒடுக்கமும், ஆன்ம தரிசனமும், அருட்டரிசனமும், இவற்றாற் பரையோகமும், அதன்மேற்செல்லு மனுபவத்திற் பரைபோகமும், அதன் நீக்கத்திற் சுகாதீதமும் நிகழும் என்று தகராலயரகசியங் கூறும். "அகத்திற் கண்கொண்டுபார்ப்பதே யானந்தம்", "யதியாயுள்ளோன் மறுபிறப் பெய்தாதிருக்குமாறு தனது இருதயபார்ச்சனத்தையே செய்தல்வேண்டும்" என்பனபோன்ற பெரியோர் மொழிவழிநடத்தல் மக்களுட் பெரும்பாலார்க்கு ஒரு பிறப்பிலேயே இயலுவதன்று என்பதுகணித்தே மூர்த்தி தல தீர்த்த வழிபாடுகளு மேற்படுத்தப்பட்டன. சுவாமிகளும், இவைபற்றை யாவர்க்கும் பயனற்றனவெனக் கழித்தாரல்லர்; ஞானத்தின் உயர்வொப்பில்லாமையை விளக்கியபின், "மூர்த்திதலந் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கோர் — வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே." என்னும் அமுதமொழியைத் தழுவியே சரிபை, கிரிபை, யோக மென்பவற்றால் நல்லாசிரியன் வாய்க்குமாறும் பதமுத்திகள் கிடைக்குமாறும் நன்கு விளக்கியுள்ளார். அங்ஙனமே, முத்திவிருப்புடையோன் மூச்சடக்கும் யோகவழிச்சென்று இடர்ப்படாவண்ணம் ஆன்மலிங்க வழிபாட்டிலே தியானயோகம் விதித்துள்ளார்.

இவ்வான்மலிங்க வழிபாட்டைச் செய்தற்குரியார் யாவரென்பதைப்பற்றிச் சுவாமிகள் கூறுவன உன்னிப்பார்க்கத்தக்கவை. இவ்வழிபாட்டை முட்டின்றி இனிது முடிக்கவிழைவோர் ஐம்பெரும்பாதகங்களினின்று நீங்கித் துறவுபூணல் வேண்டும் என்றார். அகத்துறவொன்று சாலாதோ? எனின், "கண்ணன், சனகன் முதலியோரைப்போல முக்குற்றங்களு நீங்கிப் பிறந்தோர்க்குப் புறத்துறவின்றியே அகத்துறவு கைகூடும்; ஏனையோர்க்குப் புறத்துறவு இன்றியமையாததே" என்று நியாயங் கூறியுள்ளார். இல்லறத்திருந்தே ஞானியாய் விளங்கலாகாதோ? என்பார்க்கு, "இல்லறத்து ஞானமது இரும்பில் (பதித்த) மணியாம்," "ஏர்க்கரம் வளார்வசி (= வாள்) பரித்தவர்கள் கொல்லாரென்பதில்லை" என்னும் விடையிறுத்துள்ளார். இவண், "அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற், புறத்தாற்றிற் போஒய்ப் பெறுவ தெவன்?" என்ற திருவள்ளுவர் திருவாக்கையும், "என்விடுதலை உலகத்தைத் துறத்தலிலில்லை, பல்வகைய இனிய பந்

தங்களிற் பந்தநீக்கத்தை யுணர்கின்றேன் - - - - என் புலன்களாகிய வாயில்களை ஒருநாளும் அடைக்க ஒருப்படேன். காண்டல் கேட்டல் தொடுதல்களால் விளையுமின்பம் நினதின்பத்தைத் தாங்கக்கூடியதே. ஆம், யானனுபவிக்கும் பொய்த்தோற்றங்கள்யாவும் இன்ப அறிவாய்ப் பிரகாசிக்கும்; என்னுடைய விருப்பங்களெல்லாம் அன்பெனும் பழமாப்க்கனியும்" என்று கீதாஞ்சலியிற்பாடிய (Sri Rabindra nath Tagore) ஸ்ரீ ரவீந்திரநாத் டாகோருடைய போக்கையும் "அறந்தானிபற்று மவனிலுங் கோடி யதிகமில்லங்— துறந்தானவனிற் சதகோடி யுள்ளத் துறவுடையோன்" என்ற பெரியார் கருத்தொடு பொருத்திப்பார்த்து அவைகளைக்கொள்ளுமாறு கொள்ளன் முறைமை. இனி, புறத்துறவை எக்காலத்து மேற்கொள்வது? என்னும் வினாவிற்கு நம் ஆசிரியர் "எந்தநாளில் விரத்திதோன்றிற்றோ அந்தநாளிற்றானே துறவறங்கொள்க" என்னும் உபநிடத வசனத்தை எடுத்துக் காட்டி விடையளித்துள்ளார். நான்காம்வருணத்தா ரெனப்படுவார் சன்னியாசிகளாதற் குரியரல்லர் எனவெழுங்கூற்றுச் சாதிபாமானத் தானிடைக்காலத்தெழுந்த ஓர்முடிபென்று சுருதிமிருதிகளைக்கொண்டே நாட்டினர்.

தகரோபாசனைக்கதிகாரிகளாவார் உட்டுறவும் முத்திவிருப்பும் பெற்ற ஆண்மக்கள் பெண்மக்களனைவருமே என்பதையும், பிறந்த தேசம், சாதி முதலியவற்றாலேயே இவ்வுபாசனைக்கு எவருந் தகுதியிலராக மாட்டார்களென்பதையும் ஆசிரியர் மறுத்தற்கேலா ஏதுக்களால் விளக்கியருளியுள்ளார். "தள்ளற் பாலது சாதி விகற்பமே" எனவெழுந் தகராலயரகசியப் பாயிரத்தின் ௩ - ஆஞ் செய்யுளும் உரையும், நூலின் ஈற்றுச் செய்யுளும் உரையும், பரிபூரணானந்த போதகத்துத் துறவறவிளக்கப்படலத்தின் ௩௧ - ஆஞ் செய்யுளுரையும் "பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்கும்" என்பதைமறந்து, சிவத்தைப் பணி செய்தியிலுங் கோத்திரமுங் குலமுஞ் சிரேட்டமெனக் கொண்டாடிச் சாத்திரம் பலபேசுஞ் சாமிகட்கு நல்லறிவு போதிக்க வெழுந்துள்ளன. சுத்ததர்ம மண்டலத்தாரென்பார் இப்போது வெளியிட்டு வரு நூல்களு மிவண் கருதத்தக்கன. ஞானத்திலேறுதற்கு ஒன்றற்கொன்று சோபானமாயுள்ள சரியை முதலிய மூன்றில் "யாதொரு சோபானத்தில் ஒவ்வொருவரும் ஆயுள்காறும் நிற்கவேண்டுமென்னு நியதியை யேற்படுத்திக்கொண்டக்கால், ஒருவரும் ஒருசன்மத்தும் உயர்கதி யடைவதின்றென லேற்படுதலின் அந்நியதி கூடாது; என்

னையும் என் முதலையும் அறியவேண்டும் ; மேலிருங்கதி யுறுதல்வேண்டு மெனுந் துணிபு பிறந்துளார் யாவரும் இப் பிறப்பிற்றனே மேனிலை பற்றலாம்" என்று ஆசிரியர் கூறியிருப்பதும் ஈண்டு நனிவிழைந்து நோக்கற்பாலது.

சைவர்கள் சிறப்புவகையான்வழிபடுஞ் சிவபரம்பொருளைச் சைவ சமய குரவர்களே "முத்தமிழு நான்மறையு மானன் கண்டாய்", "ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்" எனத் துதித்திருத்தலால், நம்மனோர் இருமொழிகளில் ஒன்றற்கு உயர்வும் மற்றதற்குத் தாழ்வுங் கற்பித்துக் களிகூர்தன் முறைமையாகாது. வடமொழிப்பற்று மிகுந்துள்ளோர் ஆரியருழைத் தமிழர் ஞானங் கற்றார்களென்பர். ரிச்சர்ட் கார்ப் (Prof. Richard Garbe) முதலியோர் பிராமணவகுப்பைச் சேராத இராஜன்யர்பால் பிராமணர் பிரமவித்தையை உணர்ந்தனர் என்றுரைப்பர். ஒருவர்பாலொருவர் கற்றதின்று, இருகூட்டத்தாரும் இறைவனருளாலே தனித்தனி உண்மையுணர்த்தப் பெற்றார் எனச் சிலர் சொல்லுவர்போலும். சரித்திரவாராய்ச்சிக் கெட்டியமட்டில், ஆரியர் திராவிடர் எனத் தனித்தனி இருவேறு கூட்டத்தார் இந்நாட்டிலெக்காலத்தேனும் வதிந்ததுண்டோவென் றையுறுவர் மற்றும் பலர். இவ்விருகூட்டத்தாரு மிவ்வாறிருந்தார்களெனக்கொண்டு "திராவிடர்களது கற்பனை வன்மையும், அழகு, இன்னிசை, அன்பென்பவற்றால் நெகிழுநெஞ்சும், ஆரியர்களது சுத்த ஞானமுங் கலந்ததன்மையே இந்துக்களின் சமயவுயர்விற்குக் காரணம்" என்பர் ஸ்ரீ ரவீந்திரநாத் டாகோர் (Sri Rabindranath Tagore). இக்காலத்தே இவைகளில் எக்கருத்தைச் சரியென்று உறுதியாகச் சொல்ல முடியும்? (முடியாதென்பதே ஏற்படும்போலும்.) இனி, வடமொழி தென்மொழிகளின் தோற்றத்தை விவகரிக்கப்புகுந்து, வடமொழியே உலகிலுள்ள எல்லா மொழிகட்குந் தாய் என்று சிலர் வடமொழி மதம்பிடித்துக் கூத்தாடாநிற்ப, இதற்கு விடையிறுக்குமுகத்தாற் சிலர் "செந்திறத்த தமிழோசை வடசொல்" ஆயிற்றென்றும், (Lemuria) லெமூரியா (= குமரி) நாடிருந்தகாலத்து மேருவும் வடவிந்தியாவுங் கடற்கீழ்க் கிடப்ப, இவ்வுலகின்கண் மக்கள் முதன்முதற்றோன்றி வாழ்ந்தது தமிழகமாகிய அக்குமரிநாட்டிலேயே யாகலின் தமிழ்தான் மற்றெல்லாமொழிகட்குந் தாயென்றுஞ் செறுக்குடன் செப்புவர். இவ்விசாரத்தில் நாம் நிச்சயமாய்ச் சொல்லக்கூடியது அதிகமன்று. தகாலயரகசியவுரையில் எடுத்துக் காட்டப்பட்டுள்ள,

"மந்திபோற்றிரிந்தாரியத்தொடுசெந்தமிழ்ப்பயனறிகிலா
அந்தகர்க்கெளியேனலேன் திருவாலவாயரனிற்கவே"

என்னுந் தமிழ்வேதப்பகுதியை உய்த்துணரின், இருமொழிகளு மிருகண்கள் போன்றவையென்பதும், அவையிரண்டுமில்லோர் குருடர்போல்வர் என்பதும், ஒன்றேயுடையோர் ஒற்றைக்கண்ணரை நிகர்ப்பர் என்பதும் ஞானசம்பந்தப் பெருமானது திருவுளக்கிடக்கை என்று நன்கு விளங்கும். இருமொழிகளும் பண்டைப் பெருமொழிகளே. அவை வெவ்வேறு பாடைகளென்றே துணிவு கூறலாம்.

ஆன்மலாபத்திற்குரிய ஆராய்ச்சியைச்செய்ய முற்பட்டோர்க்கு இவ் விவாதங்கள் வேண்டற்பாலன வல்ல. "'அறி' என்னும் அருத்தந்தருமொரு வடமொழித் தாதுவினடியாகப் பிறந்த 'வேதம்' என்னுஞ் சொல், இந்துக்களுடைய (வடமொழி நூல்களின்) பிரதம உரையாசிரியர் கருத்தின்படி, இன்றுகாறும் வெளியிடப்பட்டதும், இனி வெளிப்படுவதுமாகிய ஐம்புலன்கட்கெட்டா அறிவு என்று பொருள்படும். இவ்வறிவைப் பேணிவந்த நூல்களுக்கு வேதங்கள் என்னும் பெயர் பிற்காலத்திற் கொடுக்கப்பட்டது. இஞ்ஞானம் இந்துக்களுக்குமட்டு மன்று, ஏனையோர்க்குங் கிடைக்கக்கூடியதொன்றே; இவர்தம் மனுபவங்களையும் வேதங்கள் என்றே கருதல்வேண்டுமென்று மேற்குறித்த (உரையாசிரியராய) வேதபாஷ்யகாரர் பின்னுங்கூறிச் செல்லுகின்றார்." என்பர் சுவாமி - சாரதானந்தர் (Swami Saradananda). உண்மை இஃதாயின் வேதங்கள் எம்மொழியிலிருந்தாற்றானென்னை? பலமொழிகளினுமுள்ள நல்லகருத்துக்களை விரும்பிப்போற்றலே நன்மக்கள் கடமையாம். ஆங்கிலத்திலுள்ள "The Sacred Books of the East" என்னும் புத்தகங்கள் எவ்வாறு வெளியாயின என்பதையும் நோக்குவோமாக.

மேற்கூறிய வாற்றால், நம் தமிழ்நாட்டுச் சைவ நன்மக்கள் தமிழையும் ஆகமங்களையுங் கற்றன்மாத்திரையே நில்லாமல் வடமொழிக்கணுள்ள ஏனைய உயர்நூல்களையும் இயன்றவளவும் பயிலவேண்டுமென்பதும், அவ்வாறே வடமொழி கற்றோர் தம்மாலியன்றவரையும் தமிழ்மொழிக்கண் விளங்கும் உயரிய நூல்களையுங் கற்றல்வேண்டுமென்பதும் வலியுறுத்தப்பட்டன. இவ்வாறுசெய்வதால் அறிவு விசாலமும், தெளிவும், இந்துக்களுக்குள் ஒற்றுமையும் பிறக்கும். இக்காலத்து மேனாட்டு ஆசிரியருட் பலருடைய பரந்த கல்வி கேள்வி

களும், உண்மை தெளியுமாற்றலும், ஒருமொழியே கற்றுத்தேர்ந்த
நந்நாட்டு வித்துவ சிரோமணிகள் பலருடைய குறுகிய அறிவும்,
குழப்பமும் பலர்க்குந் தெரிந்தவையே. வடமொழி தென்மொழி
களிலுள்ள நல்ல ஞானநூல்களனைத்தையுங் கற்க விருப்பமிருந்தும்
ஆற்றலும் ஏற்புடையுதவிகளுமில்லாது வருந்துவோர்க்கு நம்முடைய
சுவாமிகள் அருளிச்செய்துள்ள நூல்கள் பெரும்பயன் தருவனவாம்.
தமிழிலுள்ள சிறந்த ஞானநூல்களைத் திருவாய்மலர்ந்தருளிய பெரி
யோர் வேதாகமாதி சாத்திரங்களையு முணர்ந்தவரென்பது மலையிலக்
கே. ஆயினும், "வேதாந்தத் தெளிவாம் சைவசித்தாந்தம்" என்னு
முண்மையை இனிதெடுத்து விரிவாகவுந் தெளிவாகவும் விளக்குவன
சுவாமிகளுடைய நூல்களேயன்றி, அப்பண்டைத் தமிழ்நூல்களிலு
முரைகளிலும் பலவிருப்பனவாகத் தெரியவில்லை. அச்சியந்திரம்
நமதுநாட்டினை யெய்துமுன்னரே, தமிழ்நூல் செய்யப்புக்கோர் வேத
வசனங்களை மிகவுமெடுத்தாளாது விடுத்தமைக்குப் போதிய காரணங்
கள் முன்னிருந்தனவாகலாம். சுவாமிகளுடைய நூல்கள் வேதத்திற்
சைவர்கட்கிருக்கு முரிமையை இனிது புலப்படுத்தியதுபோலவே
தமிழ்நன்குணரா வடமொழிவாணர்க்குத் தமிழ்நாட்டு ஞானிகளதனு
பவமும் உபநிடதமோதிய பெரியாரதனுபவமும் ஒன்றேயென்றறிவுறு
த்துமாற்றானே தமிழ் முதுமக்களின் பெருமையையு முணர்த்துந்
திறத்தனவாம். இதுவேயுமன்றிச் சுவாமிகளுடைய வுரைகள் இரு
மொழிகளிலுமுள்ள ஞானசாத்திரங்களைக் கற்குங்கால் மனத்தெழூஉம்
பலதிறப்பட்ட ஐயங்களென்னும் பனித்திரள்களை யோட்டுஞ் சூரிய
னாகவும், அத்திற ஐயமொருவியவிடத்தே பெருகு நித்திய வின்பக்
கடலாகவு மிருக்குமென்பதில் ஆசங்கையில்லை. இக்காலத்துப் பல
ராலுந் திரிபுறக்கொள்ளப்படும் உபநிடத உபமானங்களை உண்மை புல
ப்படவிளக்கினமையும், திருவாசக இருதய சுலோகத்திற்கும், "சோதி
யே, சுடரே, சூழொளி விளக்கே" என்னும் விளிகட்கும், "மரத்தை
மறைத்தது" "பொன்னை மறைத்தது" எனவரு மந்திரங்கட்கும்
விரிவுரை செய்துள்ளமையும், சிவசம்பந்தத்திற்கு இருவித அக்கினி
உவமை கூறினமையும், அடியார்பூசையி னுண்மை யீதென விளக்கி
னமையும், இன்னோரன்னபிறவும் ஆசிரியருடைய மதிநுட்பத்தினையும்
நூலாராய்ச்சியினையு மினிது விளக்குவனவாம். சுவாமிகள் இவ்வாறு
சைவசித்தாந்தத்திற் காதாரமான பிரபலச்சுருதிகளை அதிகமாகவெடுத்
துதவிப் பிரமசூத்திரமும் நீலகண்டபாடியமுஞ் சைவசமயக் கோட்

